# சாதக சிந்தாமணி

| | சூரி<br>செ | சுக் | புதன் |
|---|---|---|---|
| சந்<br>ராகு | இராசி | | சனி |
| | | | கே |
| | குரு | | ல |



தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

சரசுவதி மகால் நூலகம்
மற்றும் ஆய்வு மையம்

தஞ்சாவூர்

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண். 525

# சாதக சிந்தாமணி

## (கால நிகண்டு, காரக நிகண்டு)

*மூலமும் உரையும்*

**இரண்டாம் பாகம்**

சிறப்புக்கேண்மைப் பதிப்பாசிரியர் மற்றும் உரையாசிரியர்

***முனைவர் திருமதி. சத்தியபாமா காமேஸ்வரன்,***

எம்.ஏ.,எம்.ஃபில்.,எம்.எட்.,பிஎச்.டி.,

சோதிடவியல் பட்டயம், சுவடியியல் பட்டயம்.



*தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்*

**சரசுவதி மகால் நூலகம்,**

தஞ்சாவூர்.

2009]                                   [ விலை ரூ. 140-00

*சாதக-மு-1*

# நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு


| | |
|---|---|
| நூற்பெயர் | : சாதக சிந்தாமணி இரண்டாம் பாகம் |
| பதிப்பாசிரியர் | : முனைவர். திருமதி. சத்தியபாமா காமேஸ்வரன் |
| வெளியிடுபவர் | : இயக்குநர், சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர். |
| வெளியீட்டு எண். | : 525 |
| மொழி | : தமிழ் |
| பதிப்பு | : முதல் பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : 2009 |
| தாள் | : TNPL 18.6 கி. கி |
| நூல் அளவு | : 24 x 14 செ. மீ. |
| பக்கங்கள் | : 416 |
| படிகள் | : 1000 |
| எழுத்து | : 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : ஒளி அச்சு, சரசுவதி மகால் நூலகம். |
| புத்தகக்கட்டு | : லேமினேசன் அட்டை |
| பொருள் | : சோதிடம் |
| விலை | : ரூ. 140-00 |

# வெளியீட்டாளர் முகவுரை

தஞ்சையில் அமைந்து தரணி முழுமைக்கும் பயன்பட்டுக்கொண்டிருக்கும் அரும்பெரும் நிறுவனம் சரசுவதி மகால் நூலகம். சுவடிக்கருவூலமாகவும், பன்மொழி நூற்களஞ்சியமாகவும், பன்மொழி ஆய்வுமையமாகவும் திகழும் சரசுவதி மகால் நூலகம் ஆற்றிவரும் தொண்டு அளப்பரியது. இந்நூலகத்தைத் தமிழகத்தினர் மட்டுமின்றிப் பிற மாநிலத்தவரும், பிறநாட்டினரும் பயன்படுத்தி வருகின்றனர். தமிழகத்தில் உள்ளோர் முன்னிலும் கூடுதலான அளவில் தற்போது இந்நூலகத்தைப் பார்வையிட்டும் பயன்படுத்தியும் வரும் மேம்பாடும் நிகழ்ந்து வருகிறது.

நமது நூலகத்தில் சற்றேறக்குறைய ஐம்பதாயிரம் பன்மொழிச்சுவடிகள் பாங்குறக் காக்கப்பட்டு வருகின்றன. இச்சுவடிகளிலிருந்து இதுவரை 524 நூல்கள் வெளியிடப்பட்டுள்ளன. இவ்வரும்பணி தொடர்ந்து நடைபெற்று வருகிறது. இந்நூலகத்தில் வராகர் ஓரா சாத்திரம், காலச்சக்கரம், சினேந்திரமாலை, சாதகலங்காரம், சகாதேவ நிமித்த சூடாமணி, நட்சத்திர சிந்தாமணி, பஞ்சபட்சி சாஸ்திரம், குமாரசுவாமியம், சூடாமணி உள்ளமுடையான், சாதக பாரிஜாதம், சர்வார்த்த சிந்தாமணி முதலான தமிழ் சோதிட நூல்கள், ஓலைச்சுவடிகளில் இருந்து பதிப்பிக்கப்பட்டு வெளியிடப்பட்டுள்ளன.

தற்போது இந்நூலக சுவடி எண்கள் 783 மற்றும் 784 ஆகிய இரு சோதிடச் சுவடிகளிலிருந்து சாதக சிந்தாமணி எனும் சோதிடப் பாடல்களை சிறப்புக் கேண்மைப் பதிப்பாசிரியர் திருமதி. சத்தியபாமா காமேஸ்வரன் அவர்கள் மிகச் சிறப்பாகவும், செம்மையாகவும் பதிப்பித்துள்ளார். சாதகத்தை விரிவாகக் கூறும் இந்நூல் விரிவஞ்சி தற்போது இரு பகுதிகளாகப் பிரித்து பதிப்பிக்கப் பட்டுள்ளது. முதற்பகுதி இந்நூலக 515ம் எண் வெளியீடாக கொணரப்பட்டது. தற்போது இரண்டாம்பகுதி 525ம் எண் வெளியீடாக வெளியிடப்படுகிறது. இதன் மூன்றாம் தொகுதி விரைவில் வெளியிடப்படும்.

சாதக சிந்தாமணி எனும் இந்நூலாசிரியர் தில்லை நாயகப் புலவர் என அறியலாகிறது. இப்பதிப்பாசிரியர் இது தொடர்பாக இந்நூலிலிருந்து பல மேற்கோளைச் சுட்டிக் காட்டி விளக்கியுள்ளார்.

சாதக சிந்தாமணி என்பதற்கு, சாதகம் கூறும் நூல்கள் யாவற்றிலும் சிறந்த அற்புதமணி என்பது பொருள். சாதகம் குறித்து அறிய விரும்பும் யாவருக்கும் அனைத்து செய்திகளையும் கூறும் விரிவான நூலாகவும் ஒப்பற்ற நூலாகவும் விளங்குகின்ற தன்மையால் இப்பெயர் பெற்றது போலும். சாதக சிந்தாமணியில் முதலில் காப்புச் செய்யுட்களும் பாயிரப்பாடல்களும் அமைந்துள்ளன. நூலின் தொடக்கத்தில் சோதிடத்தை அறிந்து கொள்வதற்கான அடிப்படைச் செய்திகள், காலநிகண்டு,காரக நிகண்டு என்னும் தலைப்புகளில் அமைந்துள்ளன.

இரண்டாம் பாகமாக தற்போது வெளிவரும் இந்நூல், பன்னிரு பாவங்களுக்கான பலன்களில் ஒன்று முதல் ஆறு வரையிலான பாவங்களின் பலன்களை விரிவாக எடுத்துரைக்கிறது. முதல் பாவத்தில் 163 பாடல்களும், இரண்டாம் பாவத்தில் 153 பாடல்களும், மூன்றாம் பாவத்தில் 48 பாடல்களும், நான்காம் பாவத்தில் 88 பாடல்களும், ஐந்தாம் பாவத்தில் 93 பாடல்களும், ஆறாம் பாவத்தில் 150 பாடல்களும் அமைந்து ஒன்று முதல் ஆறுபாவம் வரையில் 695 பாடல்கள் காணப்படுகின்றன. பாவங்களின் பலன்களைக் கூறும் இந்நூல், சோதிடத்தைக் கற்க விரும்புவோருக்கும் சோதிட ஆர்வலர் களுக்கும், சோதிட ஆராய்ச்சியாளர்களுக்கும் மிகவும் பயனுள்ளதாகும்.

நம் முன்னோர்களின் வானியல் அறிவு எந்த அளவிற்கு ஆழ்ந்து பரந்து விரிந்து இருந்தது என்பதற்கு இந்த நூலில் எடுத்துக்காட்டப்படும் பாடல்களே சிறந்த சான்று. சிறப்புமிக்க இந்நூல் வெளிவர நிதியுதவி நல்கிய நடுவண் அரசுக்கும், இந்நூல் கணினி அச்சில் வெளிவர கணினி பிரிவில் பணியாற்றியவர் களுக்கும், நிருவாக அலுவலர் மற்றும் வெளியீட்டுமேலாளர் (பொறுப்பு) வகிக்கும் திரு. சாமி. சிவஞானம் அவர்களுக்கும் எனது பாராட்டுதலைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

***எம். எஸ். சண்முகம்,*** இ.ஆ.ப.,

*மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும்*

*இயக்குநர்,*

சரசுவதி மகால் நூலகம்.

தஞ்சாவூர்,

18 - 5-2009

# பதிப்புரை

தெய்வீகக் கலையான சோதிடக்கலை மக்களால் பெரிதும் விரும்பப்படும் கலையாகும். ஒருவனுடைய பிறந்த நேரம், கோள்களின் நிலை ஆகியவற்றை அடிப்படையாகக்கொண்டு, அவனுடைய வாழ்வில் ஏற்படக்கூடிய இன்ப துன்பங்களைக் கணித்துக் கூறுவதால் என்றைக்கும் இக்கலைக்கு வரவேற்பு அதிகம். இக்கலைக்கு ஆதாரங்களாக விளங்குவன சோதிடநூல்கள். சென்ற நூற்றாண்டின் தொடக்கம்வரை தமிழ்நூல்கள் ஓலைச்சுவடிகளில் எழுதப் பட்டிருந்தன. அவற்றுள் பல இன்று அச்சேறிவிட்டன. இன்னும் சில ஓலைச்சுவடிகளிலேயே உறங்கிக் கிடக்கின்றன. பதிப்பிக்கப்பட்டு அச்சேறிய அச்சுநூல்கள் பலவும் இன்று கிடைப்பதில்லை. எனவே, ஓலைச்சுவடிகள் நம்முன்னோர் நமக்கு விட்டுச்சென்ற கலைக் கருவூலங்கள் என்பதைக் கருத்தில்கொண்டு, பல நிறுவனங்கள் இவற்றைப் பாதுகாத்து, தக்கவர்களைக் கொண்டு இந்நூல்களைப் பதிப்பித்து வெளியிட்டு வருகின்றன.

அத்தகைய நூல்வெளியீட்டு நிறுவனங்களில் ஒன்றாக விளங்கும் தஞ்சை சரசுவதி மகால் நூலகம் ஓலைச்சுவடிகளில் உள்ள சோதிட நூல்கள் பலவற்றையும் வெளியிட்டு வருகிறது. அதிகமான சோதிடச் சுவடிகளைத் தன்னகத்தே கொண்டுள்ள நூலகம் என்ற சிறப்பினை உடையது. தமிழ் மொழியையன்றி வடமொழியில் உள்ள சோதிட நூல்களையும் அச்சிட்டு வெளியிடுவது இந்நூலகத்தின் தனிச்சிறப்பாகும்.

இந்நூலகத்தில் வராகர் ஓரா சாத்திரம், காலச்சக்கரம், சிநேந்திரமாலை, சாதகாலங்காரம், சகாதேவ நிமித்த சூடாமணி, நட்சத்திர சிந்தாமணி, பஞ்சபட்சி சாஸ்திரம், குமாரசுவாமியம், சூடாமணி உள்ளமுடையான், சாதக பாரிஜாதம், சர்வார்த்த சிந்தாமணி முதலான தமிழ் சோதிட

நூல்களும் ஓலைச்சுவடிகளில் இருந்து பதிப்பிக்கப் பட்டு வெளியிடப்பட்டுள்ளன. மேலும், இப்பணி தொடர்ந்து நடைபெற்று வருகிறது. இந்நூலகத்தில் பாதுகாக்கப்பட்டு வரும் ஓலைச்சுவடிகளில் **சாதக சிந்தாமணி** என்ற நூலும் ஒன்று.

**சாதக சிந்தாமணி சுவடிகள்**

தஞ்சை சரசுவதி மகால் நூலகத்தில் சாதக சிந்தாமணி என்ற தலைப்பில் சுவடிகள் (சுவடி எண்கள் 783, 807, 1102, 1103, 1887a) கிடைத்தன. அந்த ஐந்து சுவடிகளையும் ஆய்வு செய்தபொழுது, இந்த ஐந்து சுவடிகளில் வெவ்வேறு மூன்று நூல்கள் இருப்பது கண்டறியப்பட்டது. சுவடி எண்கள் 807, 1102, 1103 ஆகியவை ஒத்த நூல்கள். இவை **சாதக நூல்** என்ற நூலாகும். சிறந்த நூல் என்பதைக் குறிக்க சாதகமாம் சிந்தாமணி என்ற தொடர் இருந்ததால், சாதக சிந்தாமணி எனத் தலைப்பிட்டு சுவடிகள் விவர அட்டவணையில் அமைத்துள்ளனர். சுவடி எண். 1887a இல் அமைந்துள்ள நூல் சாதக கணிதாமிர்தம் என்ற நூலாகும். இந்நூலுக்கும் சாதக சிந்தாமணி என்றே தலைப்பிடப்பட்டுள்ளது. இவையன்றி, சுவடி எண். 783இல் சாதக சிந்தாமணி என்ற நூல் காணப் படுகிறது. இந்நூல், தில்லைநாயகப் புலவர் என்பவரால் எழுதப்பட்ட சாதக சிந்தாமணி என்ற நூலாகும். இச்சுவடியில் சாதக சிந்தாமணியின் தொடக்கம் முதல், முதலாம் பாவம் வரையில் மட்டுமே பாடல்கள் அமைந்துள்ளன. இந்நூலகத்தின் பிற சோதிடச்சுவடிகளை ஆய்வு செய்த பொழுது, இரண்டாம் பாவகப் பலன் (சுவடி எண். 784) என்ற தலைப்பிலமைந்த சுவடியில் இரண்டாம் பாவம் முதல் பன்னிரு பாவங்கள் வரை சாதக சிந்தாமணியின் தொடர்ச்சியான பாடல்கள் இருந்தது கண்டறியப்பட்டது. அதன் விளைவாக சுவடி எண். 783, 784 ஆகிய இரு சோதிடச் சுவடிகளில் இருந்த சோதிடப்பாடல்கள் பதிப்புப் பணிக்கு எடுத்துக்கொள்ளப்பட்டது. இந்நூலில் பாயிரப் பாடல் களோடு சேர்த்து 1563 விருத்தப்பாக்கள் உள்ளன.

சாதகத்தைப்பற்றி விரிவாகக் கூறும் நூலாக இது விளங்குகிறது. இந்நூலின் விரிவு கருதி, மூன்று பகுதிகளாகப் பிரித்துப் பதிப்பிக்கப்பட்டுள்ளது. முதல் பாகத்தில் சோதிடம் தொடர்பான அடிப்படைச் செய்திகளாக காலநிகண்டு, காரக நிகண்டு ஆகியவை அமைந்துள்ளன. இப்பகுதியில் பாயிரப் பாடல்களோடு சேர்த்து 260 விருத்தப் பாடல்கள் உள்ளன. இரண்டாம் பகுதியில் இலக்கன பாவம் முதல் ஆறாம் பாவம் வரையில் உள்ளது. மூன்றாம் பகுதியில் ஏழாம் பாவம் முதல் பன்னிரண்டாம் பாவம் வரையில் பதிப்பிக்கப்பட்டுள்ளது. ஓலைச் சுவடியில் மூலம் மட்டுமே அமைந்திருந்தது. படிப்போருக்கு எளிமை கருதி, பதிப்பாசிரியரால் இப்பாடல்களுக்கு உரை எழுதப்பட்டுள்ளது.

**நூலாசிரியர்**

சாதக சிந்தாமணி என்ற இந்நூலின் ஆசிரியர் தில்லைநாயகப் புலவர். தமிழிலக்கிய வரலாற்றினை எழுதிய கா. சுப்பிரமணியப்பிள்ளை பத்தொன்பதாம் நூற்றாண்டுப் புலவர் வரிசையில், திருவானைக்காத் தில்லைநாயக சோதிடர் என்பவர் சாதக சிந்தாமணி என்னும் சோதிட நூலை இயற்றினார் என்று எழுதியுள்ளார். தில்லைநாயகர் திருவானைக்கா என்னும் பதியிலே பிறந்தார் என்பதற்குச் சான்றாகச், சாதக சிந்தாமணியில்,

அம்புவனப் பொரியோர்பால் சாதகசிந் தாமணியென்
றடியேன் சொல்லச்
சம்புவன நாதர்பங்கில் அகிலாண்ட தேவியவர்
சரணம் காப்பாம். (சாதகசிந்தாமணி; பாயி: 3)

என்ற பாடலடிகள் அமைந்துள்ளன. சம்புவன நாதரையும் அகிலாண்ட தேவியையும் துதித்திருப்பதால், இவர் திருவானைக்காவில் பிறந்தவராக இருக்கலாம் என்று கருதினார் போலும். ஆனால் இவர் இயற்றிய காலச்சக்கரம் என்ற நூலின் சிறப்புப் பாயிரத்தில்,

"அருணெறி தழைக்குந் தொண்டைநன் னாட்டில்
அணிதிகழ் நந்திமா நகர்வாழ்
இருநிதி யானையான் அருந்தவ னாதன்
இசைந்தருள் தில்லைநா யகனே" (காலச்சக்கரம்;பாயி:2)

என வருவதைக்கொண்டு இவர் தொண்டை நாட்டில் நந்திமா நகரில் பிறந்தவர் என்பது புலனாகிறது. மேலும் இந்நூலாசிரியரின் தந்தையார் பெயர் அருந்தவநாதன் என்பதயைும் அறியலாம்.

"திரைகொடா வழுதிப் புகழ்தொண்டை நாடன்
தில்லை நாயக மகபதியே"

என்ற யோக மஞ்சரி நூலின் இறுதிப் பாடலும் இவர் தொண்டை மண்டலத்தைச் சார்ந்தவர் என்பதைக் கூறும் சான்றாக விளங்குகிறது.

"காராளன் புகழ்தொண்டை வளநாட்டில் நந்தியர்கோன்
கமழும் காவித்
தாராளன் பெருபற்றப் புலியூரான் கனகசபை
தன்னைப் போற்றும்
ஏராளன் அருந்தவன்சேய தில்லைநாய கன்கணிதத்
தியற்கை யாயும்
சீராளன் சாதகசிந் தாமணியென் பொருள்விளங்க
செப்பி னானால்" (சாதக சிந்தாமணி;பாயிரம்:10)

என்ற பாயிரப்பாடலால் அருந்தவநாதன் வேளாளர் குலத்தைச் சேர்ந்தவர் என்பதையும் பெரும்பற்றப் புலியூரில் எழுந்தருளியுள்ள கனகசபையைப் போற்றுபவர் என்பதால் இவர் சைவ சமயத்தைச் சார்ந்தவர் என்பதையும் இவருடைய புத்திரரே தில்லைநாயகன் என்பதையும் அறியலாம். மேலும் 'அட்டகவர்க்கம்' என்ற நூலின் பாயிரத்தில்,

"அருந்தவன் செல்வன் தில்லைநா யகவேள்
அரும்பொருள் விரித்துரைத் தனனே"
(அட்டவர்க்கம் பாடல் எண்: 107)

என்று கூறப்பட்டுள்ளது. இதில் அருந்தவநாதனின் மைந்தன் தில்லை நாயகவேள் என்று சுட்டப்பட்டிருப்பதைக் காணலாம்.

> "தொல்லைநா யகன்வஞ்செய் சிவகாம வல்லிபதம்
> தொழுது போற்றித்
> தில்லைநாயக னடியேன் சாதகசிந் தாமணியைச்
> செப்ப லுற்றேன்"

*(சாதக சிந்தாமணி பாயிரம்: 11)*

என்ற பாடலடிகள் தில்லைநாயகப் புலவர், தில்லை நாயகனான சிவபெருமான் மீது எல்லையற்ற அன்பு பூண்டவர் என்பதையும் இவர் சைவ சமயத்தைச் சார்ந்தவர் என்பதையும் காட்டுகின்றன.

**ஆசிரியர்**

தில்லைநாயகப்புலவர், ஆசிரியர், ஞானாசிரியர் இரண்டு ஆசிரியர்களைப் பெற்றவர். சாதக சிந்தாமணியில்,

> "உண்ணிறைந்த இருள்நீக்கிப் பொருளிதென உணரவைத்த
> உண்மை ஞானக்
> கண்ணிறைந்த வேங்கடா சலசாமித் திருவடிதன்
> கருத்துள் வைப்பாம்
> எண்ணிறந்த எழுத்தறிவித் தியல்பாகக் கண்கருத்தும்
> இலங்கச் செய்த
> பண்ணிறைந்த அம்மையப்ப பூபாலன் துணைமலர்த்தாட்
> பணிதல் செய்வாம்"

(சாதகசிந்தாமணி; பாயிரம்:5)

என்று கூறப்பட்டிருப்பதன் வாயிலாக இவருடைய ஞானாசிரியர் வேங்கடாசலசாமி என்பதையும், இருவருக்கு எண்ணும் எழுத்தும் அறிவித்த ஆசிரியர் அம்மையப்ப பூபாலர் என்பதையும் அறியலாம்.

**வடமொழி ஆசிரியர்**

தில்லைநாயகப் புலவர் தமிழில் நல்ல தேர்ச்சி உடையவர். அதைப் போலவே வடமொழியிலும் நல்ல தேர்ச்சி பெற்று விளங்கியுள்ளார்.

"திருந்திய பாரிலே அஷ்டக வர்க்கச்
சிறப்பினைக் கங்கைவார் சடையோன்
முருந்துறழ் முறுவல் உமையவட குரைத்த
முதுமறை தனைமுனி வரர்தம்
பொருந்திய பொருளால் வடமொழி யதனாற்
புகன்றன றதனைச்செந் தமிழால்
அருந்தவன் செல்வன் தில்லைநா யகவேள்
அரும்பொன் விரித்துரைத் தனனே."
(அஷ்ட வர்க்கம்; பாயிரம்: )

வடமொழியிலமைந்த நூலைத் தமிழில் மொழிபெயர்த்து எழுதியுள்ளமைப் புலனாகும். மேலும்,

"நறைகமழ் கமலப் பொருட்டில்வீற் றிருக்கும்
நான்முகக் கடவுள்தான் படைத்த
நிறையுள மாந்தர் வினைப்பய னதனால்
நிலையெனு யோகமஞ் சரியாம்
உரையென வழங்கும் வடமொழி யதனை
தூயசெந் தமிழினாற் செய்தான்
திரைகொடா வழுதிப் புகழ்தொண்டை நாடன்
தில்லை நாயக மகபதியே"
(யோகமஞ்சரி பாயிரப்பாடல்)

என்ற இவர் செய்த மற்றொரு நூலும் வடமொழியிலிருந்து மொழிபெயர்த்துத் தமிழில் எழுதியதைச் சுட்டுகிறது. இதையன்றி,

"திருவுடன் பிறந்த குழவிவெண் டிங்கட்
செஞ்சடைக் கடவுளம் பிகைக்கே

பொருள்விரித் துரைத்த காலசக் கரத்தைப்
புதியசெந் தமிழாற் செய்தோன்''

*(காலச்சக்கரம்; பாயிரம் 2)*

என்ற பாடலால் காலச்சக்கரத்தை வடமொழியில் இருந்து மொழிபெயர்த்துள்ளதும் புலனாகும்.

இவற்றால் தில்லைநாயகப்புலவர் வடமொழியில் நல்ல தேர்ச்சிப் பெற்றிருந்ததை அறியமுடிகிறது. வடமொழியில் உள்ள நூல்களை மொழிபெயர்த்துவைக்க இவருக்குப் பேருதவி புரிந்த பெரியார் அந்தணர் குலத்தில் வடமர் என்னும் குடியில் பிறந்த ஈசுரையர் புதல்வர் அண்ணா சாஸ்திரியார் என்பவராவார்.

*நறையிருக்கும் சத்தளபங் கயத்தாமன் வடமரமச*
*நாக ரீகன்*
*நிறையிருக்கும் ஈசுரையன் செல்வனண்ணா சாஸ்திரிகள்*
*நெடுநீர் வைப்பின்*
*மறையிருக்கும் சோதிடமாம் வடமொழியைப்பெயர்த்துரைக்க*
*வருமீ ராறு*
*துறையிருக்கும் சாதகசிந் தாமணிஎன் றேதமிழாற்*
*சொல்வன் மாதோ!*

*-(சாதக சிந்தாமணி; பாயிரம்; பாடல்7)*

என்ற பாடல் இதனை உணர்த்தும். மேலும் பன்னிரு துறைகளை உடையதாக இந்நூலின் உள்ளமைப்பையும் ஆசிரியர் கூறியுள்ளதை அறியலாம்.

இவையன்றி, "திரைகொடா வழுதிப் புகழ்தொண்டை நாடன் தில்லை நாயக மகபதியே" (யோகமஞ்சரி; பாயிரப் பாடல்) "தில்லை நாயக வேள் அரும்பொருள் விரித்துரைத் தனனே" (அஷ்டவர்க்கம்; பாயிரப்பாடல்) ஆகிய பாடலடிகளில் தில்லைநாயகரை மகபதி; வேள் என்று கூறியிருப்பதால் இவர் தொண்டைநாட்டின் சிற்றரசனாக இருந்திருக்கக்கூடும் என்று கருதலாம்.

**சாதக சிந்தாமணி பெயர்க்காரணம்**

தமிழில், அனுபவ நட்ட சாதக சிந்தாமணி, சுந்தரானந்தர் கர்ப்ப சிந்தாமணி, கௌசிக சிந்தாமணி, சமர சிந்தாமணி, சர்வயோக தயாபர சிந்தாமணி, சோதிட கிரக சிந்தாமணி, சோதிட கோட்சார சிந்தாமணி, தசாபுத்தி சிந்தாமணி, நட்சத்திர சிந்தாமணி, நவக்கிரக சிந்தாமணி எனச் சிந்தாமணி என்ற பெயரில் பல சோதிட நூல்கள் உள்ளன. அவற்றுள் ஒன்றாக விளங்குவது சாதக சிந்தாமணி. சாதக சிந்தாமணி என்பதற்கு, சாதகம் கூறும் நூல்கள் யாவற்றிலும் சிறந்த அற்புதமணி என்பது பொருள். சாதகம் குறித்து அறிய விரும்பும் யாவருக்கும் அனைத்து செய்திகளையும் விரிவான நூலாக ஒப்பற்ற நூலாக விளங்குகின்ற தன்மையால் இப்பெயர் பெற்றது போலும். நன்னூலில், முதனூல் என்னும் சூத்திரவுரையில் தன்மையாற் பெயர்பெற்றன சிந்தாமணி, சூளாமணி, நன்னூல் முதலாயின என்று மயிலைநாதர் எழுதியிருப்பது இங்கு எண்ணத்தக்கது.

**நூலமைப்பு**

சாதக சிந்தாமணியில் முதலில் காப்புச் செய்யுட்களும் பாயிரப்பாடல்களும் அமைந்துள்ளன. நூலின் தொடக்கத்தில் சோதிடத்தை அறிந்து கொள்வதற்கான அடிப்படைச் செய்திகள், காலநிகண்டு,காரக நிகண்டு என்னும் தலைப்பு களில் அமைந்துள்ளன. இதனையடுத்துப் பன்னிரு பாவங் களின் பலன்களும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. ஒவ்வொரு பாவத்திற்கும் தனித்தனியாகப் பலன்களைக் கூறும் பன்னிரு பகுப்புகள் அமைந்துள்ளன. நூல் அளவில் பெரிதாகக் காணப்பட்டதால், மூன்று பாகங்களாக நூல் பிரிக்கப் பட்டுள்ளது. சோதிடத்தை அறிந்துகொள்ள உதவும் அடிப்படைச் செய்திகள் சாதக சிந்தாமணி - முதல்பாகமாக வெளிவந்துள்ளது.

சாதக சிந்தாமணி - இரண்டாம் பாகமாக வெளிவரும் இந்நூல், பன்னிரு பாவங்களுக்கான பலன்களில் ஒன்று முதல் ஆறு வரையிலான பாவங்களின் பலன்களை விரிவாக எடுத்துரைக்கிறது. முதல் பாவத்தில் 163 பாடல்களும், இரண்டாம் பாவத்தில் 153 பாடல்களும், மூன்றாம் பாவத்தில் 48 பாடல்களும், நான்காம் பாவத்தில் 88 பாடல்களும், ஐந்தாம் பாவத்தில் 93 பாடல்களும், ஆறாம் பாவத்தில் 150 பாடல்களும் அமைந்து ஒன்று முதல் ஆறுபாவம் வரையில் 695 பாடல்கள் காணப்படுகின்றன.

பாவங்களின் பலன்களைக் கூறும் இந்நூல், சோதிடத்தைக் கற்க விரும்புவோருக்கும் சோதிட ஆர்வலர் களுக்கும், சோதிட ஆராய்ச்சியாளர்களுக்கும் மிகவும் பயனுள்ளதாகும். தில்லை நாயகப் புலவரால் எழுதப்பட்ட இந்நூலுக்குப் பழைய பதிப்புகள் சில உள்ளன. அவை முறையான பதிப்பு நெறிமுறைகளோடு பதிப்பிக்கப்பட வில்லை. மேலும், இந்நூலுக்கு இதுவரை உரை எதுவும் எழுதப்படவில்லை. படிப்போருக்கு எளிமை பயக்கும் வண்ணம், பதிப்பாசிரியரால் இந்நூலுக்கு உரையெழுதும் முயற்சி மேற்கொள்ளப்பட்டுள்ளது.

சிறப்புக் கேண்மைப் பதிப்பாசிரியர் பணியை எனக்கு வழங்கி, "சாதக சிந்தாமணி" என்னும் இந்நூலைப் பதிப்பிக்க அனுமதித்து ஆணை வழங்கிய முன்னாள் மாவட்ட ஆட்சித் தலைவர் மற்றும் முன்னாள் சரசுவதி மகால் நூலக இயக்குநர் உயர்திரு சா. விஜய ராஜ்குமார், இ.ஆ.ப., அவர்களுக்கும், இந்நூல் நல்ல முறையில் வெளிவர துணைநின்ற மாவட்ட ஆட்சித்தலைவர் மற்றும் சரசுவதி மகால் நூலக இயக்குநர் உயர்திரு எம். எஸ். சண்முகம், இ.ஆ.ப., அவர்களுக்கும், நூலக நிருவாக அலுவலர் மற்றும் வெளியீட்டு மேலாளர் (பொறுப்பு) திரு. சாமி. சிவஞானம், எம்.ஏ., அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூலினைச் சிறப்பாக அச்சிட்டுத்தந்த நூலகக் கணினிப்பிரிவினருக்கும், நூற்கட்டுப் பிரிவினருக்கும் என் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

இந்நூலின் உரை குறித்துக் கருத்துக்கள் இருப்பின், தெரிவிக்க வேண்டுகிறேன்.

**கா. சத்தியபாமா**

சிறப்புக்கேண்மைப் பதிப்பாசிரியர்.



# பொருளடக்கம்

பக்க எண்

**மூன்றாம் பாவம்**

**நான்காம் பாவம்**

**ஆறாம் பாவம்**

# சாதக சிந்தாமணி

## (இரண்டாம் பாகம்)

# இலக்கன பாவம்

*தன்னிரண்டும் அறியாதான் சாதகசிந் தாமணியிற்*
*பன்னிரண்டு பாவபலன் பைந்தமிழால் எடுத்துரைக்க*
*முன்னிரண்டு பின்னிரண்டு மூதறிவும் தந்தபிரான்*
*மின்னிரண்டுக் கதிமோக வெற்றிவேல் காப்பாமே.* *(1)*

*(இ-ள்.) தன்னுடைய நிகழ்காலத்தில் நடந்துகொண்டு, இருப்பனவற்றைப் பற்றியும் எதிர்காலத்தில் நடக்க இருப்பனவற்றைப் பற்றியும் அறியாதவனுக்கு அவன் அறியும் வகையில் சாதகசிந்தாமணி என்ற நூலின் வாயிலாக, அவனுடைய சாதகத்தில் பன்னிரண்டு பாவங்களின் பலன்களையும் பைந்தமிழால் எடுத்துரைப்பதற்கு,* நல்வினை, தீவினை இரண்டையும் இப்பிறவி, மறுபிறவி இரண்டையும் நல்லறிவையும் தந்தவனும் மின்கொடியாராகிய வள்ளி, தெய்வானைக்கு அதிக விருப்பத்தைத் தருபவனுமாகிய வெற்றிவேல் முருகன் காப்பாக அமைய வேண்டும்.

### மேட இலக்கனத்தில் பிறந்தவர்கள்
### அரசன்

மேடலக் கனத்திற் செவ்வாய்
வெண்மதி கடக மாக
வேடவிழ்ச் சிலையிற் பொன்னோன்
இருந்திடின் மன்ன னாவான்
மாடதில் உதய மாலும்
அந்தணன் கடகத் தோங்கத்
தேடரும் மகரச் செவ்வாய்
சேர்ந்திடின் மன்ன னாமே. (2)

(இ-ள்.) மேட இலக்கனத்தில் செவ்வாய் இருந்தாலும் கடக இலக்கனத்தில் முழு சந்திரன் இருந்தாலும் தனுசு இலக்கனத்தில் குரு இருந்தாலும் அச்சாதகன் மன்னனாவான். இடப இலக்கனத்தில் புதன் இருந்தாலும் கடக இலக்கனத்தில் குரு இருந்தாலும் மகர இலக்கனத்தில் செவ்வாய் இருந்தாலும் அச்சாதகன் மன்னனாக விளங்குவான்.

**அரசன், சல கண்டம் உடையவன்**

ஆமறி உதயம் திங்கள்
அமைந்துற அமைச்சன் பார்க்கின்
மாமகி பதிச மானன்
மறியிற்பா னுதய மாகிற்
பூமனுஞ் சுபரே பார்க்கிற்
புவிமன்ன னாமே டத்திற்
காமுறுஞ் சனியு திப்பக்
கண்டிடிற் சலகண் டம்மே. (3)

(இ-ள்.) சாதகன் மேட இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தில் சந்திரன் இருக்க, இதனை குரு பார்க்க, இவன் மன்னனுக்கு நிகரான சிறப்புக்களை உடையவனாக விளங்குவான். சாதகன், மேட இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தில் சூரியன் நிற்க, அதனை சுபக்கோள்கள் பார்க்க, இவன் மன்னனுக்குச் சமமான சிறப்புக்களைக் கொண்டவனாக இருப்பான். சாதகன் மேட இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தில் சனியிருக்க அல்லது இலக்கனத்தைச் சனி பார்த்தால் இவனுக்கு நீரினால் கண்டம் ஏற்படும்.

**துன்பங்களை அடைபவன்**

கண்டமே டத்தின் மூன்றாங்
கனதிரே காணம் தோன்ற
கொண்டலக் கனத்தைக் கீர்த்தி
குரிசிலைப் பாபர் பார்க்கின்
விண்டிடக் கூடங் காவல்
விடபயம் சிறையிற் கட்டுத்
துண்டுடுங் கருவித் தீயாற்
சோரரால் வாதை தானே. (4)

(இ-ள்.) சாதகன் மேட இலக்கனத்தின் மூன்றாம் திரேகாணத்தில் தோன்ற, இலக்கனத்தையும் பத்தாம் இடத்திற்கு அதிபதியையும் பாவக்கோள்கள் பார்த்தால் விஷ பயம் உண்டாகும். சிறைக்குச் செல்ல நேரும். கருவிகளாலும் தீயாலும் திருடர்களாலும் துன்பம் நேரிடும்.

## இரண்டாம் வயதில் கண்டம்

தானசம் உதய மாகச்
சனிதேளின் வக்கிரம் எய்த
மானசேய் காண ரெண்டாம்
வருடத்தில் அரிட்டம் காட்டும்
மானவா டுதிப்பப் பொன்னே
மூாகச்சுன் பார்வை அன்றி
மோனமா மதியன் பார்க்கின்
மூன்றாண்டில் அரிட்டம் எய்தும். (5)

(இ-ள்.) சாதகன், மேட இலக்கனத்தில் பிறக்க, சனி, விருச்சிகத்தில் வக்கிரம் கொண்டு நிற்க, இதனைச் செவ்வாய் காண, இவனுக்கு இரண்டாம் வருடத்தில் அரிட்டம் நேரிடும். சாதகன், மேட இலக்கனத்தில் பிறக்க, குரு, இலக்கனத்திற்கு ஏழாம் இடத்தில் இருக்க, சனியின் பார்வை இல்லாமல் சந்திரன் பார்க்க அரிட்டம் நேரிடும்.

குறிப்பு: அசம் - அஜம் (ஆடு). இங்கு மேட இலக்கனம்.

## கண்டம், குய்ய விரணம்

எய்திய கொண்டற் தோன்ற
ஏழிற்தேய் மதியைப் பொன்னோன்
வெய்துறப் பார்ப்பா னாயின்
விளங்கும்ஆண் டேழெட் டொன்பான்
செய்துறில் அரிட்டம் காட்டும்
செழுங்குரு உதிப்ப ஆறில்
கொய்துறு பாவர் பார்க்கிற்
குய்யத்திற் விரணம் தோன்றும். (6)

(இ-ள்.) சாதகன், மேட இலக்கனத்தில் பிறக்க, ஏழாமிடத்தில் தேய்பிறைச் சந்திரன் நிற்க, இவனை குரு பார்க்க, இவனுக்கு ஏழு, எட்டு, ஒன்பது ஆண்டுகளில் அரிட்டம் ஏற்படும். மேட இலக்கனத்தில் சாதகன் பிறக்க, இலக்கனத்தில் குரு நிற்க, ஆறாம் இடத்தில் பாவர் இருந்து பார்க்க, குய்யத்தில் புண் தோன்றும்.

**கண்டம், தீய நடத்தையுடைய மனைவி**

*தோன்றுமை உதிப்ப ஐந்திற்*
*சொல்லொன்பான் தனிற்பொன் னிற்ப*
*கான்றதோர் கேந்தி ரத்திற்*
*குசனிற்கில் உடன்அ ரிட்டம்*
*ஈன்றதோர் வருடை தோன்ற*
*ஏழிற்சுக் கிரனே மேவிற்*
*கூன்றரு விபசா ரத்தைக்*
*கூர்களத் திரமே வாய்க்கும்.* (7)

(இ-ள்.) சாதகன், மேட இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்திற்கு ஐந்தாமிடம் ஒன்பதாமிடம் இவற்றில் ஒன்றில் குரு நிற்க, கேந்திரத்தில் செவ்வாய் நிற்கில், இவனுக்கு உடனே அரிட்டம் நேரிடும். சாதகன், மேட இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்திற்கு ஏழாம் இடத்தில் சுக்கிரன் இருக்க, தீய நடத்தையுடைய மனைவி அமைவாள்.

**குள்ளம், குறைந்த புத்திரர்கள்**

*வாய்ந்திடும் தகரில் காரி*
*மருவுறு உதய மாகப்*
*பூத்தரு மூன்றிற் நாலிற்*
*புதனிற்கப் பாவர் பார்க்கின்*
*கூற்றனிக் குறளை யாவன்*
*கொச்சையே உதிக்கப் பாவர்*
*பார்த்திடின் அற்ப புத்திராள்*
*பங்கய முகமின் னாளே!* (8)

(இ-ள்.) தாமரை மலர்போன்ற முகத்தையுடைய பெண்ணே! மேட இலக்கனத்தில் காரி இருக்க, அதற்கு மூன்று அல்லது நான்காமிடத்தில் புதன் நிற்க, அவனைப் பாவக்

கோள்கள் பார்க்கப் பிறந்த சாதகன், குள்ளனாகப் பிறப்பான். மேட இலக்கனத்தில் தோன்றி, அந்த இலக்கனத்தைப் பாவர்கள் நோக்க குறைந்த குழந்தைகள் பிறப்பர்.

### வயோதிகத்தில் குழந்தை, சிவந்த கண்கள்

*மின்னரும் அசம்உ திப்ப*
*மிகுமைந்திற் எட்டிற் பாவர்*
*துன்னிடிற் காலாந் திரத்திற்*
*தோன்றிடும் புத்திர யோகம்*
*அன்னிலை மேடம் தோன்ற*
*அருக்கனைச் சனிசேய் பார்க்கின்*
*வண்ணப்பூ பட்ட கண்ணன்*
*வனமில்செம் பட்டைக் கண்ணன். (9)*

(இ-ள்.) மேட இலக்கனத்தில் பிறக்க, ஐந்தாமிடம், எட்டாமிடம் ஆகிய இடங்களில் பாவக்கோள்கள் இருப்பின், வயோதிகத்தில் பிள்ளைகள் பிறப்பர். மேட இலக்கனத்தில் பிறக்க, சூரியனைச் சனி, சேய் முதலான பாவக்கோள்கள் பார்க்க, பூவிழுந்த கண்களைப் பெற்றிருப்பான். அல்லது அழகில்லாத சிவந்த கண்களை உடையவனாக இருப்பான்.

### முகத்தில் தழும்பு, தெத்துப் பற்கள்

*கண்ணகு மேடம் தோன்றக்*
*கடியகோள் அதனிற் நிற்கத்*
*தண்ணரும் இரண்டிற் பாவர்*
*சனியுடன் கூடி நாசி*
*விண்ணடு முகவி ரோக*
*மேயவி ரணந்த ழும்பு*
*முண்ணகு வாக்குப் பேதம்*
*உரைத்திடும் அசம தந்தம். (10)*

(இ-ள்.) சாதகன் மேட இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தில் பாவக்கோள் இருக்க, இரண்டாமிடத்தில் சனி, பாவக்கோளுடன் கூடி இருக்க, அவனுக்கு மூக்கில், முகத்தில் நோய், காயம், தழும்பு உண்டாகும். பேச்சில் தடுமாற்றம் இருக்கும். தெத்துப்பற்கள் காணப்படும்.

### பாம்புவித்தை காட்டுபவன்

தந்தமே டத்தின் முந்தத்
தருந்திரே காணந் தோன்ற
வந்தரெண் டுடையோன் பாம்பை
மருவிலக் கனத்தில் மன்ன
உந்துபத் துடையோன் பார்க்கில்
ஒளிர்சர்ப்ப வித்தை யாலே
பந்தமாய்ச் சீவ னந்தான்
பண்ணுவன் கமலத் தேனே! (11)

*(இ-ள்.)* தாமரையில் விளங்கும் இனிய தேன் போன்ற பெண்ணே ! சாதகன், மேட இலக்கனத்தின் முதல் திரேகாணத்தில் பிறக்க, இரண்டாம் இடத்திற்கு உடையவனும் பாம்பும் சேர்ந்து இலக்கனத்தில் இருக்க, இவர்களைப் பத்தாம் இடத்திற்கு அதிபதி பார்க்க, இவன் பாம்பு வித்தை காட்டித் தொழில் நடத்துபவனாக இருப்பான்.

## இடப இலக்கனத்தில் பிறந்தவர்கள்

### அரசன்

தேனமர் இடபம் தோன்றச்
செழுமதிக் குருவும் நிற்க
தானபாக் கியத்தின் வெள்ளி
தானிற்க அலது சுங்கன்
ஈனமாம் நீச மூடம்
இயற்சனி ரவிவர்க் கத்தில்
ஆணவ மன்றி நிற்கில்
அம்புவிக் கரச னாவன். (12)

*(இ-ள்.)* சாதகன் இடப இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தில் பூரணச் சந்திரனும் குருவும் நிற்க, ஒன்பதாம் இடத்தில் சுக்கிரன் அல்லது சுங்கன் நீச மூடம் இல்லாமல் வலிமை பெற்றிருக்க, சனி, சூரிய வர்க்கத்திற் நிற்க, பூமிக்கு அரசாக விளங்குவான்.

## இதுவுமது

ஆவதாம் ஏறு திப்ப
அம்புலி நிற்கச் சீவன்
தாவதாய்ப் பார்க்கில் ராச
சமானனாம் மற்றோர் பார்க்கில்
தேவரால் வாலி பத்தில்
சிறப்புள்ள மன்ன னாவான்
பாவலர்க் கமிர்த மாகும்
பசுங்கிளி மொழியி னாளே! (13)

(இ-ள்.) தமிழ்ப் பாக்களில் வல்ல புலவர்களுக்கு அமிர்தத்தைப் போன்று இனிமையைப் பயக்கக் கூடிய பசுங்கிளியின் மொழியை ஒத்த இனிய மொழியைப் பேசுகின்ற பெண்ணே! சாதகன், இடப இலக்கனத்தில பிறக்க, இலக்கனத்தில் சந்திரன் நிற்க, இலக்கனாதிபதி அவனைப் பார்க்கில், இவன், மன்னனுக்குச் சமமான சிறப்புகளைப் பெற்று விளங்குவான். மற்ற கோள்கள் அந்தச் சந்திரனை நோக்க, வாலிபத்தில் சிறப்புள்ள மன்னவனாக விளங்குவான்.

### கண்டங்கள்

மொழியுஞ்சேய் உதய மாக
உந்திய திரேகா ணத்திற்
தெளிவொடு பிறந்த மூர்த்திச்
செய்யலக் கனத்தி னானும்
அழிவுறும் பாவ வர்க்க
மாயிடில் கருவி சோரர்
பழியுறு விடந்தீ யானும்
பயமுண்டாம் பகருங் காலே. (14)

(இ-ள்.) சாதகன், இடப இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தில் செவ்வாய் இருக்க, முதல் திரேகாணத்தில் இலக்கனாதிபதி பாவவர்க்கத்தில் கூடி இருக்க, ஆயுதங் களால், கள்ளரால், விடத்தால், தீயால் கண்டங்கள் ஏற்படும்.

## குறைந்த குழந்தைகள்

பகர்முதி உதிக்க ஏழிற்
　　பானுவும் மதியும் நிற்க
திகழ்க ளத்திர விரோதத்
　　தினிலவ மான னாவன்
புகலிட பந்தான் தோன்றப்
　　பொறிவொடு பாவர் பார்க்கில்
அகலிடம் தன்னில் மாதே!
　　அற்பபுத் திரரென் றோதே! (15)

(இ-ள்.) சாதகன், இடப இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்திற்கு ஏழில் சந்திரனும், சூரியனும் கூடி நிற்க, இவன் மனைவியை விரோதியாக எண்ணக் கூடியவனாக விளங்குவான். சாதகன், இடப இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தைப் பாவக்கோள்கள் பார்க்க, இவனுக்குப் பிள்ளைகள் ஒரு சிலரே பிறப்பர் என்பதைப் பெண்ணே! கூறுவாயாக.

## தைரியம் உடையவன்

ஓதிட இடபம் தோன்ற
　　ஒருமூன்றிற் சுபரி ருக்கிற்
பாதியாம் வயதின் மேலே
　　பலபல துக்கம் உண்டாம்
நீதியாம் விடையு திப்ப
　　நிலவுறச் செவ்வாய் கூடப்
பேதியா தெதிரே பார்க்கிற்
　　பலந்தை ரியமுண் டாகும். (16)

(இ-ள்.) சாதகன், இடப இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் சுபக்கோள் இருக்கில் வாலிப வயதிற்கு மேல் இவனுக்குப் பலப்பல துக்கங்கள் உண்டாகும். சாதகன், இடப இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தில் செவ்வாய் நிற்க, அல்லது செவ்வாய் அந்த இடத்தைப் பார்க்க, இவன் தைரியவானாக விளங்குவான்.

**மனைவிக்கு அழிவு, தீய நடத்தையுடைய மனைவி**

ஆகுநல் இடபம் தோன்ற
அதற்கேழிற் சுங்கன் நிற்கில்
வாகுள தாரம் நாசம்
மகிழ்களத் திரவீ னம்தான்
ஏகுபுல் லுதிப்ப ஏழில்
இந்துறில் அநேக தாரம்
வேகமாம் செவ்வாய் நிற்கின்
விபசார களத்திர மாதே ! (17)

(இ-ள்.) சாதகன், இடப இலக்கனத்தில் தோன்ற, இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் சுக்கிரன் நிற்கில் மனைவிக்கு அழிவு நேரும். ஏழாமிடத்தில் சந்திரன் நிற்க, பல மனைவிகள் இவனுக்கு இருப்பர். ஏழாமிடத்தில் செவ்வாய் நிற்க, தீய நடத்தையுடைய மனைவி அமைவாள்.

**முன்தள்ளிய கண், முகநோய்கள் உடையவர்கள்**

மாதுறும் இடபம் தோன்ற
மன்னும்ஆ தித்தன் நிற்பக்
கோதுறு சனிசேய் பார்க்கிற்
குந்தந்தள் ளியகண் ணாகும்
ஏதகு புல்லு திப்ப
இரண்டில்தீக் கோளே சாரின்
மேதகு மசமத் தந்த
விழிரோக முகரோ கம்மே. (18)

(இ-ள்.) சாதகன், இடப இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தில் சூரியன் இருக்க, அந்தச் சூரியனை சனி, செவ்வாய் முதலான பாவக்கோள்கள் பார்க்கின், முன்தள்ளிய கண்களை உடையவனாக விளங்குவான். சாதகன், இடப இலக்கனத்தில் பிறக்க, இரண்டாமிடத்தில் பாவக்கோள்கள் நிற்பின், பற்கள் சீராக அமையாது, கண்நோய், முகநோய் போன்றவை உண்டாகும்.

### பாம்பு வித்தை, விடத்தால் மரணம்

முதல்வருமாம் இடபத்தின் முந்துதிரே காணமதின்
முனையே தோன்ற
மிகவிரண்டுக் குடையோன்பாம் புடன்கூட இலக்கனத்தின்
மேவப் பத்தோன்
அகமகிழ்ந்து பார்க்கின்விட வித்தையினாற் சீவனமாம்
ஆறோன் பார்க்கிற்
றுகளனைய சர்ப்பபய மெட்டுடையோன் பார்க்கின்விட
தோடச் சாவாம். (19)

(இ-ள்.) சாதகன், இடப இலக்கனத்தின் முதல் திரேகாணத்தில் பிறக்க, இரண்டாமிடத்திற்கு அதிபதி பாம்புடன் கூடி இலக்கனத்தில் நிற்க, பத்தாம் இடத்திற்கு அதிபதி இவர்களைப் பார்க்க, விஷம் தொடர்பான வித்தையைக் கொண்டு தொழில் செய்வான். ஆறாம் இடத்திற்கு அதிபதி இவர்களைப் பார்த்தால் பாம்பினால் கண்டம் உண்டாகும். எட்டாம் இடத்திற்கு அதிபதி இவர்களைப் பார்க்க, விஷத்தினால் இவன் மரணமடைவான்.

### மிதுன இலக்கனத்தில் பிறந்தவர்கள்
### அரசன் காட்டு விலங்கால் பயம்

அஞ்சய மகளு திப்ப
அறிஞனே இருக்க நல்லோர்
வாஞ்சையாய்ப் பார்க்கிற் பாரின்
மன்னவர் சமான னாவான்
பாஞ்சதண் டுதிப்ப எட்டிற்
பகைசெயும் பாவர் கூடிற்
காஞ்சநல் வர்க்கம் பெற்றாற்
கான்மிரு கத்தால் அச்சம். (20)

(இ-ள்.) சாதகன், மிதுன இலக்கனத்தில் பிறக்க, அதில் புதன் இருக்க, இலக்கனத்தைச் சுபக்கோள்கள் பார்த்தால், அவன் மன்னர்களுக்குச் சமானமானவனாக வாழ்வான். மிதுன இலக்கனத்தில் சாதகன் தோன்ற, இலக்கனத்திற்கு எட்டா மிடத்தில் பாவக்கோள்கள் பகையுடன் இருப்பினும், நல்ல வர்க்கம் பெறினும் காட்டு விலங்குகளால் பயம் ஏற்படும்.

**கண்டம், யோகி**

*அச்சமில் யாழு திப்ப*
*ஆறில்வக் கிரமாய்க் காரி*
*வச்சுற செவ்வாய் பார்க்கின்*
*வருடம்ரெண் டினில்அ ரிட்டம்*
*சச்சிய மிதுனம் தோன்ற*
*உதயத்தோன் பலவா னாகிற்*
*கச்சணி முலையாய் கேளாய்!*
*கனசதா யோகி யாவன்.* *(21)*

*(இ-ள்.)* மார்புக் கச்சணிந்துள்ள தனங்களைக் கொண்ட பெண்ணே ! சாதகன், மிதுன இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் சனி வக்கிரமாக இருக்க, இதனைச் செவ்வாய் பார்க்க, இவனுக்குப் பிறந்த இரண்டு ஆண்டுகளில் அரிட்டம் நேரிடும். சாதகன், மிதுன இலக்கனத்தில் பிறக்க, இலக்கனாதிபதி புதன் பலவானாகில் இவன் யோகியாக விளங்குவான்.

**காமம் மிக்கவன், மூத்திர கிரிச்சனம் உடையவன்**

*யோகியாம் யாழு திப்பப்*
*புகர்நிற்கில் பார்க்கிற் காமி*
*ஆகுமியாழ் உதய மாக*
*அந்தணன் இருக்கப் பார்க்கிற்*
*சேகிலாத் தேகம் வத்தித்*
*திரண்மூத்திரக் கிரிச்ச னத்தான்*
*பாகினிற் சிறந்த தீஞ்சொற்*
*பவளவாய் மடநல் லாளே!* *(22)*

*(இ-ள்.)* கரும்பின் பாகைக் காட்டிலும் இனிமையான சொற்களைப் பேசக்கூடிய பவளம்போல் சிவந்த வாயை யுடைய மடப்பம் பொருந்திய நல்ல பெண்ணே ! சாதகன், மிதுன இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தில் சுக்கிரன் இருக்க, அல்லது இலக்கனத்தைப் பார்க்க, காமம் மிக்கவனாக விளங்குவான். சாதகன், மிதுன இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தில் குரு இருக்க, அல்லது இலக்கனத்தைப் பார்க்க, இவனுக்கு உடல்வற்றி, மூத்திர கிரிச்சனம் ஏற்பட்டு வருந்துவான்.

### மூத்திர கிரிச்சனம், மேக நோய் உடையவர்கள்

நல்லயாழ் உதய மாக
நவிலும்சுக் கிரனைப் பாவர்
மல்லுறக் கூடிப் பார்க்கின்
வருமூத்திரக் கிரிச்ச னந்தான்
ஒல்லுமால் கேந்திர கோணம்
உறவாறில் சலக்கோள் நிற்க
கெல்லுற நோக்கின் மூத்ரக்
கிரிசனம் மேக ரோகம். *(23)*

(இ-ள்.) சாதகன், மிதுன இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தைச் சுக்கிரனோடு பாவக்கோள்கள் சேர்ந்து பார்க்க, இவனுக்கு மூத்திரக் கிரிச்சன நோய் உண்டாகும். புதன் கேந்திர கோணங்களில் இருக்க, ஆறாமிடத்தில் சலக்கோள் நிற்க, அல்லது நோக்க, இவனுக்கு மூத்திரக் கிரிச்சனம், மேகநோய் முதலானவை உண்டாகும்.

### இரட்டைப் பெண்குழந்தைகள், கண்நோய்

மேகமாம் தண்டு திப்ப
வெள்ளிசேய் மதியும் கூடப்
போகிய பாவர் பார்க்கப்
புதன்கேந்தி சேரரெட் டைப்பெண்
ஏகமாம் மிதுனம் தோன்ற
இரண்டுபன் னிரண்டிற் பாவர்
மோகமாய்ப் பார்க்கின் மாதே!
மொழிந்திடு நேத்ர ரோகம். *(24)*

(இ-ள்.) சாதகன், மிதுன இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தில் சுக்கிரன், செவ்வாய், சந்திரன் ஆகிய கோள்கள் சேர்ந்திருக்க, அவற்றைப் பாவக்கோள்கள் பார்க்க, புதன் கேந்திரத்தில் இருக்க, அவனுக்கு இரட்டைப் பெண் குழந்தைகள் பிறக்கும். சாதகன், மிதுன இலக்கனத்தில் பிறக்க, இரண்டு, பன்னிரண்டு ஆகிய இடங்களில் பாவக்கோள்கள் இருக்க, அல்லது அந்த இடங்களைப் பாவக்கோள்கள் பார்க்க, கண்களில் நோய் உண்டாகும்.

## இரட்டை ஆண்குழந்தைகள், ஆண்பெண் இரட்டை

*நேத்தியாம் யாழு திப்ப*
*நிலவுசேய் பொன்மால் பானு*
*சேர்த்தியாய்க் கூடி நிற்கிற்*
*செப்பிடும் ஆண்இ ரட்டை*
*வாய்த்திடும் பாவ ரோடு*
*மாலுறச் சுபர்பார்த் தாலும்*
*பார்த்தருட் கமல மாதே!*
*பகரும்ஆண் பெண்ணி ரட்டை.* *(25)*

*(இ-ள்.)* தாமரை போன்ற கண்களால் அருள் பொழியும் பெண்ணே! சாதகன், மிதுன இலக்கனத்தில் பிறக்க, சந்திரன், செவ்வாய், குரு, புதன், சூரியன் ஆகியோர் அதில் கூடி இருக்க, அவனுக்கு இரட்டை ஆண் குழந்தைகள் பிறக்கும். புதன் பாவக்கோள்களோடு சேர்ந்து இருந்தாலும் சுபக்கோளால் பார்க்கப்பட்டாலும் இரட்டைக்குழந்தைகள் பிறக்கும். அவற்றில் ஆண் குழந்தை ஒன்று, பெண்குழந்தை ஒன்றாக இருக்கும்.

## இரட்டைக் குழந்தைகள்

*பெண்ணிகர் மிதுனம் தோன்றப்*
*பிணிமுக னுடன்வி யாழன்*
*நண்ணிய கேந்திரம் ஏற*
*நவிற்புதன் இவர்கள் அங்கிசம்*
*எண்ணுறக் கூடி னாலும்*
*எதிரெதிர்ப் பார்த்திட் டாலும்*
*கண்ணகன் ஞான மீது*
*கருதும்ஆண் இரட்டை என்றே.* *(26)*

*(இ-ள்.)* சாதகன் மிதுன இலக்கனத்தில் பிறக்க, சனி, குரு இவர்கள் இருவரும் கேந்திரங்களில் நிற்க, புதன் இவர்களுடைய அங்கிசம் ஏறி இருப்பினும், கூடி இருந்தாலும், இவர்களால் பார்க்கப்பட்டாலும், இவனுக்கு இரட்டை ஆண் குழந்தைகள் பிறக்கும்.

## ஆண், பெண் இரட்டைக் குழந்தைகள்

என்றிடு மிதுனம் தோன்ற
இரவிபொன் மதியும் கூடி
நின்றிடப் புதன்கேந் திரிக்கின்
நிகழ்த்துவர் ஆண்இ ரட்டை
மன்றயாழ் உதிப்பச் செவ்வாய்
மதிவெள்ளி கூடிப் பாவர்
சென்றுறப் பார்க்கின் மால்கேந்
திரமுறில் இரட்டைப் பெண்ணே. *(27)*

*(இ-ள்.)* சாதகன், மிதுன இலக்கனத்தில் பிறக்க, சூரியன், குரு, சந்திரன் ஒன்று கூடி இருக்க, புதன் கேந்திரத்தில் இருக்க, அவனுக்கு இரட்டை ஆண்குழந்தைகள் பிறக்கும். சாதகன் மிதுன இலக்கனத்தில் பிறக்க செவ்வாய், சந்திரன், சுக்கிரன் கூடியிருக்க, அவர்களைப் பாவக்கோள்கள் பார்க்க புதன் கேந்திரத்தில் இருக்க, அவனுக்கு இரட்டைப் பெண் குழந்தைகள் பிறக்கும்.

## மூலநோய், ஆசனநோய், பட்சி தோடம் உடையவர்கள்

இரட்டையாம் உதய மாக
எட்டினிற் பாவர் சேரில்
அரத்திய மூல ரோகம்
ஆசன ரோகம் உண்டாம்
திரப்படு மிதுனம் ரெண்டாம்
திரேகாணம் பிறக்கில் மின்னே!
மரத்துள பட்சி தோடம்
வகுத்திடும் வண்மை பாரே. *(28)*

*(இ-ள்.)* சாதகன், மிதுன இலக்கனத்தில் பிறக்க, எட்டாமிடத்தில் பாவக்கோள்கள் இருப்பின், மூலநோய், ஆசனநோய் முதலியன உண்டாகும். மிதுன இலக்கனத்தின் இரண்டாம் திரேகாணத்தில் சாதகன் பிறக்க, இவனுக்கு பட்சி தோடம் ஏற்படும் என்று சோதிடக்கலை வல்லுநர்கள் ஆராய்ந்து வகுத்துள்ளார்கள்.

## பாக்கியவான், அதிக மனைவியர்

*பாரில்யாழ் உதய மாகப்*
*பகலவன் இருக்க ஞெண்டிற்*
*சீரிய மதியும் நிற்கிற்*
*றிரள்சவுக் கியமுண் டாகும்*
*பேரியாழ் அதனில் வெள்ளி*
*பலத்திடில் வெகுக ளத்திரம்*
*நாரிகள் திருட னாக*
*நவின்றனர் கணித நூலோர். (29)*

*(இ-ள்.)* சாதகன், மிதுன இலக்கனத்தில் பிறக்க, அதில் சூரியன் இருக்க, கடகத்தில் சந்திரன் இருக்க, மிகுந்த பாக்கியங்கள் கிடைக்கும். மிதுன இலக்கனத்தில் பிறந்த சாதகனுக்கு, இலக்கனத்தில் சுக்கிரன் பலம் பெற்று விளங்க, அதிகமான பெண்களை மணந்து கொள்வான் என்று சோதிட நூல் வல்லுநர்கள் கூறியுள்ளனர்.

## தீய நடத்தையுடைய கணவன், மனைவி

*நூலுரை மிதுனம் தோன்ற*
*நுவலுமேழ் உடையோன் சுங்கன்*
*ஏலுங்கேந் திரகோ ணத்தில்*
*இருந்திடப் பாவர் நீசர்*
*மேலுறப் பார்க்கின் மாதே!*
*விபச்சார களத்திர னாவான்*
*மாலுள வெகுதா ரம்தான்*
*தருந்தாசி பரனாம் சொன்னோம். (30)*

*(இ-ள்.)* சாதகன், மிதுன இலக்கனத்தில் பிறக்க, ஏழாமிடத்திற்கு உடையவன், சுக்கிரன் ஆகியோர் கேந்திர திரிகோணங்களில் இருக்க, இவ்விரு கோள்களையும் பாவக் கோள்கள், நீசக்கோள்கள் பார்க்க, தீய நடத்தை உடைய மனைவி கிடைப்பாள். இவன் பலபெண்களை மணப்ப தோடு, பரத்தையர் வீட்டிற்குச் செல்பவனாக விளங்குவான்.

### அதிக மனைவியர், மனைவியை இழப்பவன்

சொல்லிய தண்டு திப்பச்
சுபர்நிற்கச் சுபரே பார்க்கின்
நல்லதாம் வெகுக ளத்திரம்
நட்டமாம் பாவர் காணிற்
புல்லிய களத்திர வீனன்
புகலும்வே சியர்பிர சங்கன்
அல்லியம் பொகுட்டில் மீதே
அரசிருந் தருளும் தேனே! (31)

(இ-ள்.) அல்லியம் பொகுட்டில் அரசியாக வீற்றிருக்கும் இனிமையானவளே! சாதகன், மிதுன இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தில் சுபக்கோள் நிற்க, அதனை சுபக்கோள்கள் நோக்க, அதிகமான மனைவியரை உடையவனாக விளங்குவான். இலக்கனத்தில் இருக்கும் சுபக்கோளைப் பாவக்கோள்கள் பார்க்க, மனைவியை இழப்பவனாக இருப்பான்.

### கடக இலக்கனத்தில் பிறந்தவர்கள்
### அரச சமானன்

அருளுஞெண் டுதய மாக
அதனுக்கோர் இரண்டிற் பத்திற்
தருமதி யுற்றான் ஈசன்
தானுமன் னவர்ச மானன்
அருள்கட கம்உ திப்ப
மறையவன் இருக்கப் பார்க்கத்
திருமதி கேந்தி ரத்திற்
செகமன்னர் சரிச மானன். (32)

(இ-ள்.) சாதகன், கடக இலக்கனத்தில் பிறக்க, இரண்டாமிடம், பத்தாமிடம் ஆகியவற்றுள் ஒன்றில் சந்திரன் நிற்க, அவன் மன்னனுக்கு நிகரான சிறப்புடன் வாழ்வான். சாதகன் கடக இலக்கனத்தில் பிறக்க, அதில் குரு இருக்க, அல்லது இலக்கனத்தை குரு பார்க்க, சந்திரன் கேந்திரத்தில் இருக்க, அவன் மன்னனுக்குச் சமமான பெருமையுடன் வாழ்வான்.

## மிருக கண்டம்

மானமெனுண் டுதய மாகி
　　வருமூன்றாம் திரேகா ணத்திற்
தானது பாவர் கூடிச்
　　சருவியே எதிராய்ப் பார்க்கின்
மேனைநன் மயக்கால் நாற்கால்
　　மிருகத்தாற் பயமுண் டாகும்
பானலந் தெரிந்த தீஞ்சொற்
　　பாவலர் உரைத்த வாறே ! (33)

(இ-ள்.) சாதகன் கற்கடக இலக்கனத்தில் பிறக்க, மூன்றாம் திரேகானத்திற் பாவர் கூடி இருக்க, அல்லது பாவரால் பார்க்கப்பட பெண்களால், நாற்கால் மிருகத்தால் இவனுக்குப் பயம் உண்டாகும் என்று, செய்யுள் பாக்களின் இனிய சொற்களைக் கற்றுவல்ல பெரியோர்கள் கூறியுள்ளார்கள்.

## பாம்பினால் விஷத்தால் கண்டம்

உரைசெய்கற் கடகந் தானே
　　உதிக்கமுன் திரேகா ணத்திற்
றரையினிற் பிறக்க வோரைந்
　　தருமிலக் கனந்தோன் றானும்
நிரையுறு பாவ வர்க்கம்
　　நின்றிடிற் சர்ப்ப பீடை
விரைவுறு விடத்திட் டத்தான்
　　மிகுபயம் உண்டு கொம்பே ! (34)

(இ-ள்.) சாதகன், கற்கடக இலக்கனத்தின் முதல் திரேகாணத்தில் பிறக்க, இலக்கனாதிபதி ஐந்தாமிடத்தில் பாவ வர்க்கத்துடன் கூடி நிற்க, இவனுக்கு பாம்பினால் கண்டம் உண்டாகும். விஷத்தால் மிகுந்த பயம் உண்டாகும்.

## தீய நடத்தையுடைய, கலகம் செய்யும் மனைவி

கொம்பிலா ஞெண்டு திப்பக்
கொடுஞ்சனி ஏழில் நிற்கின்
விம்பமாம் வெகுக ளத்திரம்
விபசாரம் களத்திர மல்லால்
வம்புசெய் களத்தி ரத்தால்
வரும்அபி மானம் ஈனம்
அம்பரிப் பரந்து மைதோய்ந்
தழகிய கண்ணி னாளே! (35)

(இ-ள்.) சாதகன் கடக இலக்கனத்தில் பிறக்க, ஏழாமிடத்தில் சனி நிற்க, அதிகமான பெண்களை மணப்பான். மனைவியர் தீயநடத்தையை உடையவர்களாக விளங்குவர். கலகம் செய்யும் அம் மனைவியரால் மரியாதைக்கு ஈனம் நேரும் என்பதை அம்பை ஒத்த பெரிய மைபூசப்பட்ட கண்களையுடைய பெண்ணே! அறிவாயாக.

## நல்ல மனைவி, அற்பாயுள்

ஆழுறு கடகந் தோன்ற
அம்புலி செவ்வாய் கூடி
ஏழினில் இருக்க நல்ல
களத்திரம் எய்தும் என்பர்
பாழுஞெண் டுதிப்ப ஆறு
பன்னிரண் டெட்டிற் பானும்
தாழுறு மதியும் கூடிற்
றரித்திரன் அற்பாயு வாமே. (36)

(இ-ள்.) சாதகன், கடக இலக்கனத்தில் பிறக்க, சந்திரன், செவ்வாய் இருவரும் ஏழாம் இடத்தில் கூடியிருக்க, இவனுக்கு நல்ல மனைவி கிடைப்பாள். சாதகன், கடக இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்துக்கு ஆறாமிடம் எட்டாமிடம், பன்னிரண்டாம் இடங்களில் ஒன்றில் சூரியனும் சந்திரனும் கூடியிருக்க, இவன் தரித்திரனாகவும் அற்பாயுள் உடையவனாகவும் விளங்குவான்.

## மனைவி தோடம், அவமான மனைவி

ஆயுஞெண் டுதயம் காரி
அம்புலி கூடிற் புத்ராள்
தோயுமக் களத்ர தோடம்
சொலுங்களத் திரகி லேசம்
ஏயுஞெண் டுதிப்ப ராகும்
இரவியும் கூடி நின்றாற்
சாயுறு களத்தி ரத்தாற்
றனநாசம் அவமா னந்தான். (37)

*(இ-ள்.)* சாதகன், கடக இலக்கனத்தில் பிறக்க, அதில் சந்திரனும் சனியும் கூடியிருக்க, குழந்தைகள், மனைவிக்குத் தோடம் உண்டாகும். மனைவியால் இவன் கவலைக் குள்ளாவான். சாதகன், கடக இலக்கனத்தில் பிறக்க, இராகுவும் சூரியனும் அதில் கூடியிருந்தால், மனைவியால் பொருள் அழிவும் அவமானமும் உண்டாகும்.

## குறைந்த புத்திரர்கள்

மானமாம் கடகம் தோன்ற
மதிநிற்கில் ஐந்தில் எட்டிற்
தானமாம் செவ்வாய் சேரிற்
சதுரதுர்ப் பலமே யாகும்
மோனமாம் ஞெண்டு திப்ப
மூர்க்கராம் பாவர் நிற்கின்
ஈனமாம் புத்திர ரல்லால்
இயலற்ப புத்திர யோகம். (38)

*(இ-ள்.)* கடக இலக்கனத்தில் சாதகன் பிறக்க, அதில் சந்திரன் இருக்க, ஐந்து, எட்டாம் இடங்களில் ஒன்றில் செவ்வாய் நிற்க, தீய பலன்கள் உண்டாகும். சாதகன், கடக இலக்கனத்தில் பிறக்க, அதில் தீயக்கோள்கள் நிற்க, புத்திரர்களுக்கும் அழிவுண்டாகும் அல்லது இவனுக்குக் குறைந்த புத்திரர்கள் பிறப்பார்கள்.

## சிம்ம இலக்கனத்தில் பிறந்தவர்கள்-அரச சமானன்

யோகமாம் அரியிற் பாவர்
உதயமாய்ச் சுபரே பார்க்கின்
வாகைமன் னவர்ச மானன்
வன்புலி உதிக்க வெய்யோன்
ஏகுசுன் அங்கிசம் ஏற
இரண்டில்மா லிருக்கில் நீச
மாகிய கர்மம் செய்யும்
அரசனென் றரைவர் கற்றோர். (39)

(இ-ம்.) சாதகன், சிம்ம இலக்கனத்தில் பிறக்க, அதில் பாவக்கோள் இருக்க, இதனைச் சுபக்கோள்கள் பார்க்க, மன்னருக்குச் சமமான சிறப்புடன் விளங்குவான். சாதகன், சிம்ம இலக்கனத்தில் பிறக்க, சூரியன், சனியின் அங்கிசத்தில் ஏற, இரண்டாமிடத்தில் புதன் இருக்க, தீய செயல்களைச் செய்யும் அரசனாக விளங்குவான் என்று சோதிடம் கற்ற வல்லவர்கள் கூறியுள்ளார்கள்.

### அரசன், பட்சிதோடம் உள்ளவன்

கற்றறி புலியு திப்பக்
கடியசேய் உறைய வேந்தன்
உற்றிடப் பார்க்கின் மன்னர்
முயற்சிக்க உதய மாகத்
தெற்றிடும் ஒன்றாம் ரெண்டாம்
திரேகாணம் பிறக்க பாவர்
பற்றிடப் பார்க்கக் கூடப்
பட்சிதோ டந்தான் உண்டாம். (40)

(இ-ள்.) சாதகன், சிம்ம இலக்கனத்தில் பிறக்க, அதில் செவ்வாய் நிற்க, அதனோடு குரு சேர அல்லது அதனை குரு பார்க்க, மன்னனாக இவன் விளங்குவான். சாதகன், சிம்ம இலக்கனத்தில் ஒன்றாம் இரண்டாம் திரேகாணத்தில் பிறந்து அதில் பாவர் இருக்க, அல்லது பாவக்கோள்கள் பார்க்க, இவனுக்குப் பட்சிதோடம் உண்டாம்.

## கண்டம், தீய நடத்தையுடைய மனைவி

*உண்டரி உதய மாக*
*உறுதியாம் காரி நிற்க*
*நண்டினின் மதியைச்சாமி*
*நாட்டமாய்ப் பார்ப்பா னாகில்*
*அண்டிய வருடம் ஆறில்*
*அரிட்டமாம் அரிக்கோ ரேழிற்*
*றிண்டிரற் சனியி ருக்கிற்*
*றெரிவிப சார தாரம்.* *(41)*

*(இ-ள்.)* சாதகன், சிம்ம இலக்கனத்தில் பிறக்க, அதில் சனி இருக்க, கடகத்தில் இருக்கும் சந்திரனை இலக்கனாதிபதி பார்த்தால், இவன் பிறந்த ஆறாம் ஆண்டில் அரிட்டம் உண்டாகும். சாதகன், சிம்ம இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் சனி வலிமையுடன் இருக்க, மனைவி தீய நடத்தை உடையவளாக விளங்குவாள்.

## கண்டம், துன்பம் தரும் மனைவி

*தாரணி புலியு திப்பத்*
*தருநண்டிற் உறையும் மாலைப்*
*பாரணி வாவித் திங்கள்*
*பார்க்கில்நா லாண்டிற் கண்டம்*
*ஏரணி சிங்கம் தோன்ற*
*இரண்டுபன் னிரண்டிற் பாவர்*
*சீரணிந் திருக்கில் காலாந்*
*திரமைந்தர் துயர்க ளத்திரம்.* *(42)*

*(இ-ள்.)* சாதகன், சிம்ம இலக்கனத்தில் பிறக்க, கடக இராசியில் உறைந்திருக்கும் புதனைச் சந்திரன் பார்க்க, இவனுக்கு நான்காம் ஆண்டில் கண்டம் ஏற்படும். சாதகன், சிம்ம இலக்கனத்தில் பிறக்க, இதற்கு இரண்டு, பன்னிரண்டாம் இடங்களில் பாவக்கோள்கள் பலமின்றி இருந்தால், வயோதிகத்தில் மைந்தர் தோன்றுவர். மனைவி துன்பத்தைத் தரக்கூடியவளாக இருப்பாள்.

## வறுமையும் பகையும் உடையவன்

திரமுறும் யாளி தோன்றச்
செப்பிடும் இரண்டிற் சுங்கன்
முரம்பெறும் மூன்றில் வெய்யோன்
ஓரைந்திற் செவ்வாய் பத்தில்
வரம்பெறு வியாழன் நிற்க
மதிபாவ ருடனே கூடில்
விரிந்ததா ரித்தி ரன்றான்
வெகுசன விரோதி என்பார். *(43)*

*(இ-ள்.)* சாதகன், சிம்ம இலக்கனத்தில் பிறக்க, அதற்கு இரண்டாமிடத்தில் சுக்கிரன் இருக்க, மூன்றாமிடத்தில் சூரியன் இருக்க, ஐந்தாமிடத்தில் செவ்வாயும், பத்தாமிடத்தில் குருவும் நிற்க, சந்திரன் பாவக்கோளுடன் சேர்ந்து இருக்க, இவன் தரித்திரவானாகவும், அனைவரையும் விரோதித்துக் கொள்பவனாகவும் விளங்குவான்.

## குறைந்த புத்திரர்கள்

என்பர்பொற் புலியு திப்ப
எதிர்ப்பவர் பார்க்க அல்லால்
அன்புடன் இரவி தோன்ற
அற்பபுத் திரனென் றோதும்
மென்புரை சிங்கம் தோன்ற
வெய்யவன் இலாபம் மேவ
இன்பமாம் மைந்தர் அற்பம்
என்றனர் கணிதர் தாமே. *(44)*

*(இ-ள்.)* சாதகன், சிம்ம இலக்கனத்தில் தோன்ற, இலக்கனத்தைப் பாவக்கோள் பார்க்க அல்லது இலக்கனத்தில் சூரியன் இருக்க, இவனுக்கு பிள்ளைகள் சிலரே பிறப்பர். சாதகன், சிம்ம இலக்கனத்தில் பிறக்க, சூரியன் பதினோராம் இடத்தில் நிற்க, குறைவான மைந்தர்கள் பிறப்பார்கள் என்று சோதிடத்தில் வல்லவர்கள் கூறியுள்ளனர்.

**கண் பார்வை குறைவு, மாலைக்கண்**

*தாமரி உதய மாகச்*
*சந்திரன் இரவி கூடப்*
*பாமரு சனிசேய் கூடிப்*
*பார்ப்பரேற் குருட னாவன்*
*காமரு சிங்கம் தோன்றக்*
*கதிரவன் இருக்கின் பார்க்கின்*
*வேமரு மாலைக் கண்ணாம்*
*ஏந்திளங் கொங்கை மாதே! (45)*

(இ-ள்.) இளமை பொருந்திய தனங்களை ஏந்தியுள்ள பெண்ணே! சாதகன், சிம்ம இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தில் சூரியனும் சந்திரனும் சேர்ந்திருக்க, இவர்களைச் சனியும் செவ்வாயும் கூடிப்பார்க்க, இவன் கண்பார்வை அற்றவனாக விளங்குவான். சாதகன் சிம்ம இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தில் சூரியன் இருக்க, அல்லது சூரியன் இலக்கனத்தைப் பார்க்க, இவனுக்கு மாலைக்கண் நோய் உண்டாகும்.

**முன் தள்ளிய கண்**

*கொங்கலர் புலியு திப்பக்*
*கொழுங்கதிர் இருக்கத் தீயோர்*
*பங்கமிற் சுபரும் கூடிற்*
*பரிவுடன் பாவர் பார்க்கிற்*
*சங்குபோல் உருண்ட குந்தம்*
*தள்ளிய கண்ண னாவன்*
*அங்குசன் கரும்பு விற்போல்*
*அழகிய நுதலி னாளே! (46)*

(இ-ள்.) காமனின் கரும்பு வில்லை ஒத்த அழகுமிகு நெற்றியைக் கொண்ட பெண்ணே! சாதகன், சிம்ம இலக்கனத்தில் பிறக்க, அதில் சூரியன் இருக்க, அதில் தீயக்கோள்களும் சுபக்கோள்களும் சேர்ந்திருக்க, இவர்களைப் பாவக்கோள்கள் நோக்க, சங்கு போன்று உருண்டையான முன் தள்ளிய கண்களை உடையவனாக இவன் விளங்குவான்.

## கன்னியா இலக்கனத்தில் பிறந்தவர்கள் அரசசமானன்

ஆள்வதோர் கன்னி தோன்ற
 அனுவழி உறைய நல்லோர்
தாழ்வின்றிப் பார்க்கின் ராச
 சமானனாம் பெண்ணு திப்ப
மீள்வதாய் இரவி நிற்க
 மிகும்ஏழிற் சனியன் மேவிற்
சூழ்வதாந் தார நாசந்
 துடியிடை மடநல் லாளே! *(47)*

(இ-ள்.) துடிபோன்ற இடையையுடைய மடப்பம் பொருந்திய நல்ல பெண்ணே! சாதகன் கன்னியா இலக்கனத்தில் பிறக்க, அதில் சுபக்கோள்கள் நிற்க அல்லது இலக்கனத்தைச் சுபக்கோள்கள் பார்க்க, இவன் மன்னனுக்கு நிகரான சிறப்புடன் விளங்குவான். சாதகன், கன்னியா இலக்கனத்தில் பிறக்க, அதில் சூரியன் நிற்க, இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் சனி நிற்க, இவனுடைய மனைவிக்கு அழிவுண்டாகும்.

## களத்திரம், அழிவு, அண்டரோகம், விசய ரோகம்

நல்லபெண் உதய மாக
 நவிலேழிற் செவ்வாய் வெள்ளி
சொல்லுறக் கூடி நிற்கிற்
 றிறமுறு களத்ர நாசம்
அல்லது சனிசேய் கூட
 அதிகமாம் பாவர் பார்க்கிற்
கொல்லுறும் அண்ட ரோகம்
 கூடிய விசய ரோகம். *(48)*

(இ-ள்.) சாதகன், கன்னியா இலக்கினத்தில் பிறக்க, அதற்கு ஏழாமிடத்தில் செவ்வாய், சுக்கிரன் சேர்ந்திருக்க, இவனுடைய மனைவி மரணமடைவாள். அல்லது கன்னியா

இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் சனி, செவ்வாய் சேர்ந்திருக்க, இவர்களைப் பாவக்கோள்கள் பார்க்கில், அண்டரோகமும் விசயரோகமும் உண்டாகும்.

### இரண்டு, மூன்றாம் ஆண்டுகளில் கண்டம்

விசையப்பெண் ணுதிப்ப எட்டின்
மென்சனி வக்கிர மாகி
இசைவுறச் செவ்வாய் பார்க்கில்
இரண்டாண்டில் அரிட்ட மாகும்
அசைவிலந் தணனி ருக்க
வரும்புகர் நோக்கா ராயின்
வசையிலா மதியும் பார்க்கின்
வருடமூன் றினில்அ ரிட்டம். (49)

(இ-ள்.) சாதகன், கன்னியா இலக்கனத்தில் பிறக்க, அதற்கு எட்டில் சனி வக்கிரமடைந்து நிற்க, அதனை செவ்வாய் பார்க்கில் இவனுக்கு இரண்டாமாண்டில் அரிட்டம் உண்டாகும். கன்னியா இலக்கனத்தில் குரு இருக்க, அதனைச் சுக்கிரன் நோக்க, வளர்பிறைச் சந்திரனும் பார்க்க, இவனுக்கு மூன்றாம் ஆண்டில் அரிட்டம்.

### ஆறாம் ஆண்டில் கண்டம்

இட்டமாம் பெண்ணு திப்ப
ஈராறில் சுங்கன் மேவச்
சட்டமாம் வருடம் ஆறிற்
சாற்றிடும் அரிட்டம் என்பர்
மட்டவிழ் பெண்ணிற் செவ்வாய்
மலிவுறச் சனியே பார்க்கிற்
றொட்டதோர் ஆறில் எட்டிற்
சொல்லுமீ ராறிற் கண்டம். (50)

(இ-ள்.) சாதகன், கன்னியா இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் வீட்டில் சுக்கிரன் இருக்க, இவனுக்கு ஆறாவது வயதில் அரிட்டம் ஏற்படும் என்பர். சாதகன், கன்னியா இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தில் செவ்வாய் நிற்க, அதனைச் சனி பார்த்தால் ஆறு, எட்டு, பன்னிரண்டு ஆகிய வயதுகளில் கண்டம் ஏற்படும்.

## கண்டம், குறைந்த புத்திரர்கள்

கண்டபெண் ணுதிப்பப் பொன்னோன்
கலந்திட உடன்அ ரிட்டம்
விண்டது தப்பு மாயின்
மிக்கபன் னிரண்டிற் கண்டம்
கொண்டமின் உதய மாகக்
கொடும்பாவர் பாரா ராகில்
உண்டெனும் அற்ப புத்திர
யோகமென் றறையும் நூலே. *(51)*

(இ-ள்.) சாதகன், கன்னியா இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தில் குரு இருக்க, உடன் அரிட்டம் ஏற்படும். அதில் தப்புமாயின் பன்னிரண்டாம் வயதில் கண்டம் ஏற்படும். சாதகன், கன்னியா இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தைப் பாவக்கோள்கள் பார்க்காமல் இருந்தால் இவனுக்கு ஒருசில பிள்ளைகளே பிறப்பார்கள்.

## இரத்த காசத்தால் மரணம்

நூலிட மின்னு திப்ப
நோய்முகன் பாவ ரோடே
கோலியே மிக்க எட்டுக்
குடையவன் தன்னைப் பார்க்க
வாலிபந் தன்னி லேதான்
வரும்ரத்த காசம் தன்னாற்
காலிபோல் அலறி வீழ்ந்து
காயத்தை விடுவன் தானே. *(52)*

(இ-ள்.) சாதகன், கன்னியா இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தில் சனி, பாவக்கோள்களுடன் சேர்ந்திருந்து, எட்டாம் இடத்ததிபனைப் பார்க்க, வாலிப வயதிலேயே இரத்த காசநோய் உண்டாகி அதனால் மரணமடைவான்.

### இரட்டைப் பெண் குழந்தைகள்

விடுகன்னி உதய மாக
வெண்மதி செவ்வாய் வெள்ளி
கொடுமையாம் பாவ ரோடே
கூடிநின் றிடவே ஏழிற்
அடுபுதன் இருப்பா னாகில்
ஆகும்பெண் ணிரட்டை என்பார்
கடுவிடம் அமுதி ரண்டும்
காட்டிய கயற்கண் மின்னே! (53)

(இ-ள்.) கொடிய நஞ்சின் இயல்பையும், இனிய அமுதின் இயல்பையும் தன்னிரு கண்களில் காட்டும் கயல்மீன் போன்ற கண்களை உடைய ஒளி பொருந்திய பெண்ணே! சாதகன் கன்னியா இலக்கனத்தில் பிறக்க நிறைந்த சந்திரன், செவ்வாய், சுக்கிரன் ஆகியவை பாவக் கோள்களுடன் சேர்ந்து இருக்க, இலக்கனத்திற்கு ஏழா மிடத்தில் புதன் நிற்பானாகில், இவனுக்கு இரட்டைப் பெண் குழந்தைகள் பிறக்கும்.

### பாம்பு வித்தை, பாம்பினால் கண்டம்

மின்னியபெண் ணுதயத்தின் முதற்றிரே காணமைந்தன்
விளங்கத் தோன்றப்
பன்னியதோர் பாம்புடனே பத்துடையோன் றான்கூடிப்
பார்க்க வேதான்
றன்னிகருஞ் சர்ப்பவித்தை சீவனமா றோன்பார்க்கிற்
சர்ப்பத் தோடம்
மன்னியவெட் டோன்கூடிப் பார்க்கில்சர்ப்பத் தோடத்தால்
மரண மாமே. (54)

(இ-ள்.) சாதகன், கன்னியா இலக்கனத்தில் பிறக்க, அதன் முதல் திரேகாணத்தில் ஐந்தாமிடத்திற்கு உரியன் இருக்க, பத்தாமிடத்திற்கு உரியவன் பாம்புடன் சேர்ந்து பார்க்க, பாம்பைக் கொண்டு வித்தைகள் செய்து, அதனால்

வருமானம் ஈட்டி வாழ்வான். ஆறாமிடத்துக்கு உரியவன் பார்க்க, பாம்பினால் தோடம் உண்டாகும். எட்டாமிடத்திற்கு உரியவன் பார்க்க, பாம்பினால் மரணம் ஏற்படும்.

## ஆண், பெண் இரட்டை, இரட்டை ஆண் குழந்தைகள்

*மரபுள பெண்ணு திப்ப*
*மதிகுரு இரவிசெவ் வாயும்*
*திரமுடன் கூடி நிற்கிற்*
*செப்பும்ஆண் பெண்ணி ரண்டாம்*
*சரசமன் னுதிக்க மந்திரி*
*சனிகூடிக் கேந்தி ரிக்கக்*
*கரவின்மால் பார்த்தே அங்கிசம்*
*வந்திடில் ஆணி ரண்டாம்.* *(55)*

(இ-ள்.) சாதகன், கன்னியா இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தில் சந்திரன், குரு, சூரியன், செவ்வாய் ஆகியோர் வலிமையுடன் கூடி இருந்தால், இவனுக்கு இரட்டைக் குழந்தைகள் பிறக்கும். அவற்றில் ஆண் குழந்தை ஒன்று. பெண் குழந்தை ஒன்று. சாதகன் கன்னியா இலக்கனத்தில் பிறக்க, குரு, சனி இருவரும் கேந்திரங்களில் கூடியிருக்க, இவர்களைப் புதன் பார்க்க, இவர்கள் புதன் அங்கிசம் ஏற இவனுக்கு இரட்டை ஆண் குழந்தைகள் பிறக்கும்.

## புதல்வர் அழிவு, வறுமையுடையவன்

*ஆணிமின் னுதய மாக*
*ஐந்தினிற் குருவே நிற்கிற்*
*காணிடும் புத்ர நாசம்*
*கன்னியே உதய மாக*
*வாணிரை வெள்ளி தானே*
*வர்க்கோத்த மாங்ச மேறின்*
*நாணிய தரித்திர னாவான்*
*நறைமலர்க் குழற்பொற் பாவாய்!* *(56)*

(இ-ள்.) நறுமணம் மிக்க மலர்களைச் சூடிய கூந்தலைக் கொண்ட பொன் போன்று பொலிவினை உடைய பெண்ணே! சாதகன், கன்னியா இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்திற்கு ஐந்தாம் இடத்தில் குரு இருக்க, இவனுடைய புதல்வர் களுக்கு அழிவு நேரிடும். சாதகன், கன்னியா இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தில் சுக்கிரன் நின்று வர்க்கோத்தமாங்கிசம் ஏறின், இவன் வறுமையுடன் வாழ்வான்.

## துலா இலக்கனத்தில் பிறந்தவர்கள் பிறந்த ஒரு மாதத்தில் ஒரு ஆண்டில் கண்டம்

பாவுங்கோல் உதய மாகப்
பரிந்தெட்டில் மந்தன் செவ்வாய்த்
தேவியர் வெய்யோன் கூடிற்
திங்களொன் றினில ரிட்டம்
ஏவுமில் லிடத்திற் பாவர்
இருந்திடிற் இரவி பார்க்கின்
வாவுறும் அரிட்டம் தானோர்
வருடத்திற் காட்டுங் கற்பாய்! (57)

(இ-ள்.) சாதகன், துலா இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் செவ்வாய், சனி, சூரியன் ஆகியோர் கூடியிருக்க, இவனுக்குப் பிறந்த ஒருமாதத்தில் அரிட்டம் ஏற்படும். இலக்கனத்தில் பாவக்கோள்கள் இருக்க, இலக்கனத்தை சூரியன் பார்க்க, இவனுக்குப் பிறந்த ஒரு வருடத்தில் அரிட்டம் ஏற்படும்.

## விஷத்தை உண்பவன், பட்சி தோடம் உடையவன்

கற்புறு கோல்உ திப்பக்
கடுநாலிற் பாம்பு தோன்ற
வெற்புறு சனிசேய் கூடி
எதிர்பார்க்கின் விஷத்தை உண்பன்
சிற்பமாந் துலாத்தின் ரண்டாந்
திரேகாணம் பிறக்கப் பாவர்
பொற்புடன் கூடிப் பார்க்கிற்
புகல்பட்சி தோடஞ் சாரும். (58)

(இ-ள்.) சாதகன் துலா இலக்கனத்தில் பிறக்க, அதற்கு நான்காமிடத்தில் இராகு அல்லது கேது நிற்க, மேலும் இவ்விடத்தில் சனி, செவ்வாய் ஆகிய கோள்கள் சேர்ந் திருப்பின், இவன் விஷத்தைக் உண்பான். சாதகன், துலா இலக்கனத்தில் இரண்டாம் திரேகாணத்தில் பிறக்க, பாவக் கோள்கள் கூடியிருக்க அல்லது பாவக்கோள்கள் பார்க்க, பட்சிதோடம் உண்டாகும்.

### புத்திரர் மரணம், வறுமை

சாருங்கோல் உதய மாகத்
தருமஞ்சேய் பாவ வர்க்கம்
நேருமேற் புத்திர நாசம்
நிறையுங்கோல் உதிப்பக் காரி
சாருமேற் புத்திர நாசம்
தரித்திரன் என்பர் கற்றோர்
வாருறு களபக் கொங்கை
மயிலுக்கு மயிலன் னாளே! (59)

(இ-ள்.) சந்தனம் பூசப்பட்ட தனங்களைக் கொண்ட மயிலுக்கு மயிலாக விளங்கக் கூடிய ஒயிலான நடையினை யுடைய பெண்ணே! சாதகன், துலா இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தில் செவ்வாயுடன் பாவக்கோள்கள் கூடியிருக்க, இவனுக்குப் புதல்வர்கள் பிறந்து இறப்பர். சாதகன், துலா இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தில் சனி நிற்க, இவனுக்குப் புதல்வர்கள் தோன்றி இறப்பர். மேலும் இவன் வறுமையுடன் விளங்குவான் என்று சோதிடக்கலை வல்லுநர்கள் கூறியுள்ளார்கள்.

### தீய நடத்தையுடைய மனைவி, குறைந்த புத்திரர்கள்

அன்னகோல் உதய மாக
அதற்கேழிற் செவ்வாய் நிற்கின்
வின்னமாம் பாவர் பார்க்கின்
விபசார களத்திர மாகும்

*பன்னுதே ளுதயம் பாவர்*
*பார்ப்பரேல் அற்பப் புத்திரர்*
*சொன்னதேள் உதயம் சொன்னேன்*
*சொல்விப சார தாரம்.* *(60)*

(இ-ள்.) சாதகன், துலா இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் செவ்வாய் நிற்க, பாவக் கோள்கள் பார்க்க, கீழான நடத்தையுள்ள மனைவி இவனுக்கு வாய்க்கும். சாதகன் விருச்சிக இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தைப் பாவக்கோள்கள் பார்க்க, இவனுக்கு ஒருசில புதல்வர்களே பிறப்பர். மேலும் மனைவி தீய நடத்தை உள்ளவளாக இருப்பாள்.

**விருச்சிக இலக்கனத்தில் பிறந்தவர்கள்**
**விஷ பயம் உடையவன்**

*தாரமாம் விருட்சி கத்திற்*
*றகுமூன்றாம் திரேகா ணத்தில்*
*ஆரவே பிறக்கப் பாவர்*
*அழகுறக் கூடப் பார்க்கிற்*
*கோரநாற் காலாற் றுன்பங்*
*கூர்முதற் றிரேகா ணத்தில்*
*வீரமாய்ப் பிறக்கின் மாதே!*
*விடயம் விடதிட் டம்மே!* *(61)*

(இ-ள்.) சாதகன், விருச்சிக இலக்கனத்தில் மூன்றாம் திரேகாணத்தில் பிறக்க, பாவக்கோள்கள் சேர, அல்லது அந்த இடத்தைப் பாவக்கோள்கள் பார்க்க, நான்கு கால் விலங்குகளால் துன்பம் உண்டாகும். சாதகன், விருச்சிக இலக்கனத்தில் முதல் திரேகாணத்தில் பிறக்க, இவனுக்கு விஷத்தால் பயம் உண்டாகும்.

**இரண்டு, ஏழு, எட்டு, ஒன்பது வயதில் கண்டங்கள்**

*திட்டமாம் தேளு திப்பத்*
*தேய்மதி ஏழில் நிற்க*
*இட்டபொன் பாரா தாயின்*
*ஏழெட்டொன் பதில்அ ரிட்டம்*

மட்டவிழ் தெருக்காற் றோன்றில்
வக்கிரச் சனிஇ ருக்க
விட்டிடுஞ் செவ்வாய்ப் பார்க்கின்
அரிட்டமாம் இரண்டாம் ஆண்டில். *(62)*

*(இ-ள்.)* சாதகன், விருச்சிக இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் தேய்ந்த சந்திரன் இருக்க, குரு பார்வை இல்லாமல் இருந்தால், இவனுக்கு ஏழு, எட்டு, ஒன்பதாம் வயதாகும் காலங்களில் அரிட்டம் ஏற்படும். சாதகன், விருச்சிக இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தில் வக்கிரசனி இருக்க, இதனைச் செவ்வாய் பார்க்க, இவனுக்கு இரண்டாம் வயதில் அரிட்டம் ஏற்படும்.

**தீய நடத்தையுடைய மனைவி, முதல்தாரம் மரணம்**

ஆண்டதேள் உதய மாகில்
ஐந்தொன்பான் குருவி ருக்க
நீண்டபொன் கேந்திரச் செவ்வாய்
நின்றிடில் உடன்அ ரிட்டம்
பூண்டதேள் உதிப்ப ஏழிற்
புகர்நிற்கின் விபசா ரத்தை
வேண்டிய தாரம் புந்தி
மேவின்முற் றார நாசம். *(63)*

*(இ-ள்.)* சாதகன், விருச்சிக இலக்கனத்தில பிறக்க, இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்திலாவது ஒன்பதாம் இடத்திலாவது குரு இருக்க அல்லது கேந்திரத்தில் இருக்க, இக்குருவோடு செவ்வாய் சேர இவனுக்கு உடனே அரிட்டம் ஏற்படும். சாதகன் விருச்சிக இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் சுக்கிரன் இருக்க தீய நடத்தையை உடைய மனைவி இவனுக்கு வாய்ப்பாள். ஏழாமிடத்தில் புதன் இருக்க, இவனுடைய முதல் தாரம் மரணமடைவாள்.

### புத்திரர்கள், மனைவி மரணம்

நாசமிற் றெறுக்காற் றோன்ற
நாட்டிய ஐந்தெட் டுள்ளோர்
நேசமாய் உதயம் நிற்கில்
நிகரிலாப் புத்திர நாசம்
வாசமாங் களத்திர நாசம்
வருவது திண்ணம் என்பார்
கேசரி அமருங் கூந்தற்
கெண்டையங் கண்ணி னாளே! (64)

(இ-ள்.) வண்டுகள் அமர்ந்து தேனைப் பருகுகின்ற மலர்கள் சூடிய கூந்தலையும் கெண்டை மீன்களைப் போன்ற கண்களையும் உடைய பெண்ணே! சாதகன், விருச்சிக இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்திற்கு ஐந்தாம், எட்டாம் வீட்டுக்கு அதிபர்கள் இலக்கனத்தில் நிற்க, இவனுக்குப் பிறந்த புதல்வர்களுக்கு அழிவு உண்டாகும். மேலும் இவன் மனைவிக்கும் மரணம் நேரிடும்.

### தனுசு இலக்கனத்தில் பிறந்தவர்கள் அரசன், விஷபயம்

கண்ணதாம் தனுவு திப்பக்
கடுங்குசன் இருப்ப நற்கோள்
திண்ணமாய் எதிரே பார்க்கிற்
றிருவுறை மன்ன னாவன்
வண்ணமின் முதற்றிரே காணம்
மலிவுறப் பாவர் பார்க்க
உண்ணயத் துடனே கூடில்
உயர்விட பயமுண் டாமே. (65)

(இ-ள்.) சாதகன், தனுசு இலக்கனத்தில் பிறக்க, அதில் செவ்வாய் இருக்க, அதனை நல்ல கோள்கள் பார்க்க, செல்வம் நிறைந்த மன்னவனாக விளங்குவான். சாதகன், தனுசு இலக்கனத்தில் முதல் திரேகாணத்தில் பிறக்க, பாவக்கோள் களால் பார்க்கப்பட, சுபக்கோள்களுடன் கூடி இருக்க, விஷத்தால் பயம் உண்டாகும்.

## நான்கு வயதில் அரிட்டம், அற்பாயுள்

*உண்டதனு உதிப்பஎட்டிற் புதனிருக்கப் பாவர்*
*உடன்பார்க்க நாலாண்டில் அரிட்டமது தப்பிற்*
*கொண்டிடுமற் பாயுளந்தயம் திரேகாணம் உதிக்கிற்*
*குளிர்மதியம் எட்டின்மால் உறச்சனிதான் பார்க்க*
*விண்டகுரு கேந்திரத்தில் அற்பாயு வாகும்*
*வெய்யவா யுதமரணம் வில்லிற்புகர் உதிப்பக்*
*கண்டஎட்டிற் சனியிருக்க எட்டுடையோன் உதயம்*
*கலந்திருக்கில் அற்பாயுள் காமருபூங் குழலே ! (66)*

*(இ-ள்.) நறுமணமிக்க மலர்களைக் கூந்தலில் சூடியுள்ள பெண்ணே! சாதகன் தனுசு இலக்கனத்தில் பிறக்க, அதற்கு எட்டாம் இடத்தில் புதன் இருக்க, அதனைப் பாவக் கோள்கள் பார்க்க, இவனுக்கு நான்காவது வயதில் அரிட்டம் ஏற்படும். இதில் தப்பினால் அற்பாயுள் என்று சொல்ல வேண்டும். தனுசு இலக்கனத்தில் திரேகாணத்தில் சாதகன் பிறக்க, இலக்கனத்தில் சந்திரனும், இலக்கனத்திற்கு எட்டாம் இடத்தில் புதனும் நிற்க, இதனை சனி பார்க்க, குரு கேந்திரத்தில் இருக்க அற்பாயுளாகும். இவனுக்கு ஆயுதத்தால் மரணம் உண்டாகும். சாதகன், தனுசு இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்திற்கு எட்டில் சனியிருக்க, எட்டுக்குடையவன், இலக்கனத்தில் அமர இவனுக்கு அற்பாயுளாகும்.*

## மகர இலக்கனத்தில் பிறந்தவர்கள் - அரசன்

*காமரு மானு திப்பக்*
*கரியபாம் பிருக்க ஏழின்*
*மாமதி இருக்க ஒன்பான்*
*மந்தனுற் றிடவீ ராறில்*
*வேமரு கதிரோன் நிற்கின்*
*மிகுமனோ சஞ்ச லத்தாற்*
*பூமகிழ் மன்ன னாவன்*
*புரிகுழல் அரம்பை அன்னாய் ! (67)*

(இ-ள். சாதகன், மகர இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தில் கரிய பாம்பாகிய இராகு இருக்க, இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் சந்திரனும் ஒன்பதாமிடத்தில் சனியும் பன்னிரெண்டாம் இடத்தில் சூரியனும் நிற்க, மிகுந்த மனக்குழப்பத்தோடு இவ்வுலகை ஆளும் மன்னனாக விளங்குவான் என்பதை சுருண்ட கூந்தலை உடைய அரம்பையை ஒத்த அழகுடைய பெண்ணே! அறிவாயாக.

## இடி, காட்டு விலங்கால் துன்பம், நல்ல மனைவி

அன்னமக ரந்தனிலே முதற்றிரே காணம்
அவதரிக்கத் தீக்கோட்கள் கூடவன்றிப் பார்க்கிற்
சொன்னஇடி யாற்பயமூன் றாந்திரே காணம்
தோன்றினாற் கான்மிருகம் பயமகரந் தன்னிற்
பொன்னவனுற் றிடவேழிற் சனியனே நிற்கிற்
புகழுடைய களத்திரமாம் அற்பபுத் திரராந்
தன்னின்வய தாந்திரத்திற் துக்கமே உண்டாந்
தளதளென அசையவிரு தனமிலங்கு மயிலே ! (68)

(இ-ள்.) செழிப்புடன் அசையக்கூடிய இரு தனங்களைக் கொண்ட மயில் போன்ற சாயல் உடைய பெண்ணே ! சாதகன், மகர இலக்கனத்தில் முதல் திரேகாணத்தில் பிறக்க, பாவக்கோள்கள் அதில் சேர அல்லது பாவக்கோள்கள் அதனைப் பார்க்க, இடியினால் துன்பம் நேரும். மூன்றாம் திரேகாணத்தில் சாதகன் பிறக்க, காட்டு விலங்குகளால் துன்பம் நேரும். அதில் குரு இருந்து, ஏழாம் இடத்தில் சனி இருந்தால் புகழுடைய மனைவி அமைவாள். சில பிள்ளைகள் பிறப்பர். ஆனால் வயோதிகத்தில் துக்கம் உண்டாகும்.

## மனைவியால் அவமானம்

தனிக்குமான் உதிக்க ஏழிற்
சந்திரன் செவ்வாய் கூடின்
வனித்திடுங் களத்திரம் எய்தும்
மதிசனி உடனி ருக்கிற்

*கனிக்குநேர் களத்திர தோடம்*
*கதிரவன் இராகு சேரில்*
*அனித்திய களத்தி ரத்தால்*
*அவமானம் தனமும் நட்டம்.* (69)

குறிப்பு: வனித்திடும் - பொருள் விளங்கவில்லை.

*(இ-ள்.)* சாதகன், மகர இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்திற்கு ஏழாம் வீட்டில் சந்திரனும் செவ்வாயும் சேர்ந்து இருக்க, இவனுக்கு வனித்திடும் மனைவி கிடைப்பாள். சந்திரனும் சனியும் ஒன்றாக இருக்க, இவன் மனைவிக்கு தோடம் உண்டாகும். சூரியனும் இராகுவும் சேர்ந்து இருப்பின், இவனுக்கு மனைவியால் அவமானம் ஏற்படுவதோடு பொருள் இழப்பும் உண்டாகும்.

## கண் பார்வை குறைபாடு

*நட்டமிற் சுறவு திப்ப*
*நளிர்மதி பாவ ரோட*
*இட்டமாய்க் கூடி யோரார்*
*எட்டுபன் னிரண்டில் நிற்க*
*பட்டமாய்ச் செவ்வாய் காரி*
*பார்த்திடில் நேத்திர ரோகி*
*வட்டமா நேத்திர வீனம்*
*வருமென்பர் மகிமை உள்ளோர்.* (70)

*(இ-ள்.)* சாதகன், மகர இலக்கனத்தில் பிறக்க, சந்திரன் பாவக்கோள்களோடு சேர்ந்து, இலக்கனத்திற்கு எட்டு, பன்னிரண்டு முதலான தீய வீடுகளில் நிற்க, இவர்களைச் செவ்வாய், சனி ஆகிய தீயக்கோள்கள் பார்த்திட, இவன் கண் நோய் உடையவனாக விளங்குவான். இவனுக்குக் கண்களில் குறைபாடு வரும் என்று சோதிடநூல் கற்றுணர்ந்த வல்லுநர்கள் கூறுவார்கள்.

## கும்ப இலக்கனத்தில் பிறந்தவர்கள்-பட்சி தோடம்

உள்ளதோர் குடம்உ திப்ப
உயர்முதற் திரேகா ணம்தான்
விள்ளிரண் டாந்திரே காணம்
விளங்கிடப் பார்க்கப் பாவர்
எள்ளுறக் கூடப் பார்க்கில்
இலங்கிய பட்சி தோடம்
தெள்ளுறு பட்சி பீடை
தனிற்பயம் உண்டாம் தேனே! (71)

(இ-ள். சாதகன், கும்ப இலக்கனத்தில் முதற் திரேகாணத்தில் பிறந்தாலும் இரண்டாம் திரேகாணத்தில் பிறந்தாலும், பாவக்கோள்கள் கூடியிருக்க அல்லது பார்க்க, பட்சி தோடம், பட்சியினால் தீமை, பட்சியினால் பயம் உண்டாகும் என்பதைத் தேன் போன்ற இனிய மொழியைப் பேசக்கூடிய பெண்ணே அறிவாயாக!

## நான்காம், ஆறாம் வயதுகளில் கண்டம்

தேனிறை குடமு திப்பச்
சிந்தைகூ ரியன்ஆ றாக
வானிற்றேய் மதியம் பார்க்கின்
வருடநான் கதில ரிட்டம்
நீணிறை வெள்ளி ஆறில்
நின்றிட ஆறாம் ஆண்டின்
மேனியே அரிட்ட மாகும்
வெய்யவேல் விழியி னாளே! (72)

(இ-ள்.) கொடுமையான வேல்போன்று ஆடவரின் மனதைக் கொல்லும் விழிகளைஉடைய பெண்ணே! சாதகன், கும்ப இலக்கனத்தில் பிறக்க, புதன் ஆறாமிடத்தில் இருக்க, இதனைத் தேய்பிறை சந்திரன் நோக்க, இவனுக்கு நான்கு வயதில் அரிட்டம் ஏற்படும். சுக்கிரன் ஆறாம் இடத்தில் நிற்க, ஆறாம் ஆண்டில் இவனுக்கு அரிட்டம் உண்டாகும்.

**மீன இலக்கனத்தில் பிறந்தவர்கள்**
**மனைவி மரணம், சாதகன் மரணம்**

*விழியிலா மீனு திப்ப*
*வேதியன் ஏழில் பாவர்*
*வழிவிலா நாலிற் பாவர்*
*அமர்ந்திடிற் களத்திர நாசம்*
*தெழிவில்மீன் உதிப்ப மூன்றாம்*
*தினத்தினிற் இரவி யாக*
*ஒழிவிலா பத்திற் றிங்கள்*
*உரைந்திடில் உடன்அ ரிட்டம்.* *(73)*

*(இ-ள்.)* சாதகன், மீன இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்திற்கு ஏழாம் இடத்தில் குரு நிற்க, நான்காம் இடத்தில் பாவக்கோள் இருக்க, இவனுடைய மனைவிக்கு அழிவு நேரிடும். சாதகன், மீன இலக்கனத்தில் பிறக்க, ஸ்தானத்தில் சூரியன் இருக்க, பத்தாமிடத்தில் சந்திரன் இருக்க இவனுக்கு உடனே அரிட்டம் நேரிடும்.

**பிறந்தவுடன், ஆறாம் நாளில் கண்டம்**

*அரிட்டவிண் மீனு திப்ப*
*ஐந்தினிற் செவ்வாய்த் தானே*
*தெரிவர்க்கோத் தமமே யாகிற்*
*செனித்தநாள் தானே கண்டம்*
*முரிவிலா மயிலைத் தோன்ற*
*மூன்றதாம் க்ஷேத்தி ரத்தில்*
*விரிகதிர் மதியும் நிற்கில்*
*இருமூன்றாம் நாளிற் கண்டம்.* *(74)*

*(இ-ள்.)* சாதகன், மீன இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் செவ்வாய் இருந்து, அது வர்க்கோத்தமம் பெற்றிருந்தால், இவனுக்குப் பிறந்தநாள் அன்றே கண்டம். மீன இலக்கனத்தில் சாதகன் பிறக்க,

இலக்கனத்திற்கு மூன்றாம் இடத்தில் சூரியனும், சந்திரனும் ஒன்றுகூடி இருப்பின், இவனுக்கு பிறந்த ஆறாம் நாளில் கண்டம்.

### ஒருமாதத்தில், ஒரு வருடத்தில் கண்டம்

கண்டமீன் உதிப்ப எட்டிற்
 காரிசேய் இரவி கூடின்
வண்டணி குழலாய்! கேளாய்!
 மாதமொன் றினில ரிட்டம்
விண்டவ ருடனே பாவர்
 மேவிடக் கதிரோன் பார்க்கில்
அண்டரும் வருடம் ஒன்றில்
 அரிட்டமே அடைவன் தானே. *(75)*

(இ-ள்.) வண்டுகள் மொய்க்கின்ற மலர்களைச் சூடியிருக்கக் கூடிய குழலை உடைய பெண்ணே! சாதகன், மீன இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்திற்கு எட்டாம் இடத்தில் சனி, செவ்வாய், சூரியன் ஆகிய மூன்று கிரகங்களும் ஒன்றாக சேர்ந்து இருப்பின், இவனுக்கு ஒரு மாதத்தில் அரிட்டம் ஏற்படும். இலக்கனத்தில் பாவக்கோள் இருக்க, அதனைச் சூரியன் நோக்க, இவனுக்கு ஒரு வருடத்தில் அரிட்டம் ஏற்படும்.

### ஆறாம் வருடத்தில் கண்டம்

அடைவுறு மீன்உ திப்ப
 ஆறிற்சுக் கிரனி ருக்கில்
இடைவிடா வருடம் ஆறில்
 எய்திடும் அரிட்ட மீனே
தடையிலா துதிக்கப் பானு
 சந்திரன் கூடி நிற்க
விடையுள புகரே ழாயின்
 மின்கணாய் மரணம் நல்கும். *(76)*

(இ-ள்.) மின்னலை ஒத்த ஒளியுடைய விழிகளை யுடைய பெண்ணே ! சாதகன், மீன இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்திற்கு ஆறில் சுக்கிரன் இருக்கில், இவனுக்கு ஆறாம் வருடத்தில் அரிட்டம் ஏற்படும். சாதகன், மீன இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தில் சூரியனும் சந்திரனும் கூடியிருக்க, ஏழாமிடத்தில் சுக்கிரன் இருக்க, மரணம் ஏற்படும்.

### நீரால், நான்குகால் விலங்கால் கண்டம்.

நல்குமீன் உதிப்பத் திங்கள்
ஞாயிறும் இருக்கப் பாவர்
மல்குறப் பார்க்கில் நீரால்
வருபயம் சலத்தாற் கண்டம்
செல்குமீன் உதிப்ப மூன்றாம்
திரேகாணம் பிறக்கத் தீயோர்
வெல்குறப் பார்க்கிற் கூடின்
விடநாற்காற் பயமுண் டாமே. (77)

(இ-ள்.) சாதகன், மீன இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்தில் சூரியனும், சந்திரனும் இருக்க, பாவக் கோள்கள் பார்க்க, இவனுக்கு நீரால் பயம் தோன்றும். சலத்தால் கண்டம் ஏற்படும். சாதகன், மீன இலக்கனத்தின் மூன்றாம் திரேகாணத்தில் பிறக்க, பாவக்கோள்கள் பார்க்க, இவனுக்கு நான்குகால் விலங்குகளால் பயம் ஏற்படும்.

### புத்திரர்கள் மரணம்

பயமுறு மீனு திப்பப்
பகருமைந் திடமே தீக்கோள்
இயலுறு வர்க்க மாகில்
இலங்கிய புத்திர நாசம்
கயலைமா வடுவை வண்டைக்
காமபா ணத்தை வேளைச்
செயமுறு தடங்கண் நல்லாய் !
செப்பினர் கணித நூலார். (78)

*(இ-ள்.)* கெண்டை மீன்களையும், மாவடுக்களையும், வண்டுகளையும் போன்ற வெற்றியை உடைய பெரிய கண்களால் ஐவகை மலரம்புகளையும் கொண்ட காமனை வெல்லும் ஆற்றலுடைய நல்ல பெண்ணே ! சாதகன், மீன இலக்கனத்தில் பிறக்க, இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்திற்கு அதிபதி, பாவக்கோள் வர்க்கமாக இருப்பின், இவனுடைய புதல்வர்களுக்கு அழிவுண்டாகும்.

**சுகானுபவத்தின் காலம்**

*நூலாயும் உதயத்தி னாலொன்ப துடையோர்*
*நோக்கமுடன் கூடிநிற்க மூன்றுடையோன் உச்சம்*
*மேலாகில் ஓராண்டு மேன்மூன்று வருடம்*
*மிகுந்தசுகம் அடைவனுத யத்திலுச்சக் கோளே*
*பாலாக உறையச்சேய் பார்க்கஒன்ப துடையார்*
*பகர்மூன்றி லேயிருக்கிற் பன்னிரெண்டாண் டின்மேற்*
*சேலாக மூன்றாண்டு சுகமடைவன் கண்டாய் !*
*திலதநுதல் களபமுலைச் சேயரிக்கண் மயிலே ! (79)*

*(இ-ள்.)* திலகமணிந்த நெற்றியையும், சந்தனம் பூசப்பட்ட கொங்கைகளையும், மானின் கண்களை ஒத்த சிவந்த விழிகளையும் மயிலின் சாயலையும் கொண்டு விளங்கும் பெண்ணே! சென்ம இலக்கனத்தில் நாலாமிடம், ஒன்பதாம் இடத்திற்கு அதிபதிகள் வலிமைபெற்று விளங்க, மூன்றாமிடத்திற்கு அதிபதி உச்சம்பெற்று இருப்பின், பிறந்த ஓராண்டிற்குப் பிறகு, மூன்றாண்டுகள் மிகுந்த சுகத்தை அடைபவனாக விளங்குவான். சென்ம இலக்கனத்தில் உச்சத்தைப் பெற்ற கோள் நிற்க, அக்கோளைச் செவ்வாய் பார்க்க, ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி மூன்றாம் இடத்தில் அமர, பிறந்த பன்னிரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு மூன்றாண்டுகள் இவன் மிகுந்த சுகமடைவான்.

## இதுவுமது

*அரியவுதய யந்திரமாய் வெள்ளிநிற்க உதயத்*
*தந்தணர்மே விடச்சாமி அதிகபல மாயிற்*
*றெரியவரும் வயதுபதி னைந்தின்மேல் மானே!*
*தேகமுள்ள நாளளவுஞ் சிறந்தசுகம் உடையன்*
*புரியமிலக் கினஞ்சுபமாய் உச்சர்நிற்கப் பொன்னோன்*
*புகலுங்கேந் திரமாகச் சாமிகேந்தி ரத்தின்*
*பரிவிலயி ராவதாங் கிசமதுறின் வயதே*
*பதினாறின் மேலாயுள் உள்ளமட்டும் சுகமே! (80)*

*(இ-ள்.) சென்ம இலக்கனம் திர இலக்கனமாக இருக்க, இலக்கனத்தில் சுக்கிரனும் குருவும் நிற்க, இலக்கனாதிபதி மிகுந்த பலவானாக இருக்க, இவனுடைய பதினைந்து வயதிற்கு மேல் ஆயுள் உள்ளவரை மிகுந்த சுகத்தை உடையவனாக இருப்பான். சென்ம இலக்கனத்தில் சுபக்கோள் உச்சம் பெற்று விளங்க, குரு கேந்திரத்தில் இருக்க, இலக்கனாதிபதியும் கேந்திரத்தில் இருக்க, சாதகன் பதினாறு வயதிற்கு மேல் ஆயுள் உள்ளவரை மிகுந்த சுகத்தை அனுபவிப்பான்.*

## இதுவுமது

*சுகஉதயம் வர்க்கோத்த மாங்கிசமே ஏறச்*
*சுவாமிஒன்பான் நிற்கமதிக் கொன்பதிற்பொன் னாகி*
*நிகர்வருடம் பதினாறின் மேல்மூன்று வருடம்*
*நிறைந்தசுகம் உதயத்துக் கைந்தோனும் புகரும்*
*அகமகிழ்ந்து கூடிநிற்க இலாபேசன் நட்பில்*
*ஆட்சியுச்சம் கேந்திரகோ ணங்கடனில் இருக்கில்*
*இகமதனில் இருபதாம் வருடமதின் மேலே*
*எட்டுவரு டஞ்சுகமுண் டேந்துதன மயிலே! (81)*

*(இ-ள்.) தனங்களை ஏந்திய மயில் போன்ற சாயலுடைய பெண்ணே! இலக்கனம் வர்க்கோத்த மாங்கிசம் ஏற, இலக்கனாதிபதி ஒன்பதாம் இடத்தில் நிற்க, சந்திரனுக்கு*

ஒன்பதாம் இடத்தில் குரு இருக்க, சாதகன் பிறந்து பதினாறு ஆண்டுகளுக்குப் பிறகு மூன்று ஆண்டுகளுக்கு மிகுந்த சுகத்தை அடைபவனாக விளங்குவான். இலக்கனாதிபதிக்கு ஐந்தாமிடத்து அதிபதியும் சுக்கிரனும் கூடிநிற்க, பதினோராம் இடத்திற்கு அதிபதி ஆட்சி, நட்பு, உச்சம் இவற்றுள் ஒன்றையடைந்து கேந்திர திரிகோணங்களில் இருக்க, சாதகன், இருபது வயதிற்குமேல் எட்டு ஆண்டுகள் மிகுந்த சுகத்தினை அனுபவிப்பான்.

## இதுவுமது

ஏய்ந்தஇலக் கனம்சரமாய் நிசியுதிக்கப் பத்தோன்
இந்துவுட னேகூடி ஏழிலுச்ச மாகில்,
ஆய்ந்தவய திருபத்தைந் தானதற்கு மேலே
ஐந்துவரு டஞ்சுமுகமுண் டாகுமுத யத்தில்
பாய்ந்தகர்மா திபனிருக்கச் சாமியொன்ப தாகப்
பத்தினில்இ ராகுநிற்கில் பண்புடைய புவிமேற்
றோய்ந்திருபத் தொன்றின்மேல் ஆயுளுள்ள மட்டுஞ்
சுகத்தையனு பவிப்பனெனச் சொற்றனர்கற்
றுணர்ந்தோர். *(82)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனம் சரராசியாக இருக்க, அதில் சந்திரன் நிற்க, பத்தாம் இடத்திற்கு அதிபதி சந்திரனுடன் ஒன்றுகூடி ஏழாமிடத்தில் உச்சம்பெற்று விளங்க, இச் சாதகனுக்கு இருபத்து ஐந்து வயதிற்கு மேல் இருபது ஆண்டுகளுக்கு மிகுந்த சுகம் உண்டாகும். சென்ம இலக்கனத்தில் பத்தாம் இடத்திற்கு, அதிபதி இருக்க, இலக்கனாதிபதி ஒன்பதாமிடத்தில் இருக்க, பத்தாம் இடத்தில் இராகு நிற்க, இச்சாதகன் தன் இருபத்தொரு வயதிற்கு மேல் ஆயுள் உள்ளவரை மிகுந்த சுகத்தை அனுபவிப்பவனாக விளங்குவான் என்று சோதிடத்தை நன்கு கற்ற வல்லவர்கள் கூறியுள்ளார்கள்.

### இதுவுமது

உணரும் உதயம் தனிலிரண்டோன்
உறையச் சாமி நான்காகக்
கணமில் பத்தோன் பாக்கியத்திற்
கலக்கில் இருபத் தைந்தின்மேற்
றணவி லைந்து வருடந்தான்
சதிராய்ச் சுகத்தை அனுபவிப்பன்
குணரஞ் சிதபங் கயமயிலே
குயிலே அமுத குஞ்சரமே ! (83)

(இ-ள்.) இனிய குணத்தையும், தாமரை மலர் போன்ற முகத்தையும், மயிலின் சாயலையும், குயிலின் இனிய குரலையும் கொண்டு அமுதம் போன்ற இனிய மொழிகளைப் பேசக்கூடிய பெண் யானை போன்றவளே! சென்ம இலக்கனத்தில் இரண்டாம் இடத்திற்கு அதிபதி அமர, இலக்கனாதிபதி நான்காம் இடத்தில் இருக்க, பத்தாம் இடத்திற்கு அதிபதி ஒன்பதாம் இடத்தில் இருக்க, சாதகனுக்குப் பிறந்த இருபத்தைந்து வயதிற்குமேல் ஐந்து ஆண்டுகள் மிகுந்த சுகம் கிடைக்கும் .

### இதுவுமது

சரந்தான் உதய மாகவைந்திற்
சாற்றும் ஏழிற் பன்னொன்றில்
விரங்கூர் இரவி மதிசனியும்
இருக்க எட்டிற் குருவெள்ளி
நிரந்தா னாகப் புதன்கடகம்
நிற்கில் இருபத் தேழின்மேல்
வரந்தான் வருடம் பதினாறு
மன்னும் சுகத்தை அனுபவிப்பான். (84)

(இ-ள்.) சென்ம இலக்கனம் சர இராசியாக இருக்க, ஐந்தாமிடம், ஏழாமிடம், பதினோராமிடம் ஆகியவற்றில் ஒன்றில் சூரியன், சந்திரன், சனி ஆகியவை கூடியிருக்க, எட்டாமிடத்தில் குருவும் சுக்கிரனும் ஒன்றுகூடி நிற்க, புதன்

கடக இராசியில் நிற்க, இச்சாதகனுக்கு இருபத்துஏழு வயதிற்கு மேல் பதினாறு வருடங்கள் மிகுந்த சுகம் உண்டாகும்.

## இதுவுமது

*பன்னும் உதய அங்கிசத்திற்*
*பத்தோன் இருக்க இவனங்சம்*
*தன்னில் சாமி இருக்கஇவர்*
*தம்மை வியாழந் தான்பார்க்க*
*உன்னும் வருட முப்பதின்மேல்*
*ஒன்பான் வருடம் சுகமுடையன்*
*பொன்னின் மணிமே கலையிலங்கும்*
*பொற்றேர் அல்குல் பூங்கொடியே! (85)*

(இ-ள்.) பொன்னில் செய்யப்பட்ட மணிகள் பதிக்கப் பட்ட மேகலையை அணிந்து பொன்தேர் போன்ற வடிவுடைய பரந்த அல்குலைக் கொண்ட பூங்கொடியைப் போன்ற பெண்ணே! இலக்கன அங்கிசத்தில் பத்தாம் இடத்திற்கு அதிபதி இருக்க, பத்தாம் இடத்ததிபதியின் அங்கிசத்தில் இலக்கனாதிபதி இருக்க, இவரைக் குரு பார்க்க, சாதகன் பிறந்து முப்பது வயதிற்கு மேல் ஒன்பது வருடங்களுக்கு மிகுந்த சுகம் உண்டாகும்.

## இதுவுமது

*கொடியே உதயம் திரமாகக்*
*கூர்பாக் கியத்தோன் தானிருக்கப்*
*படியாம் ஐந்தோன் இரண்டிலுறப்*
*பகரும் இரண்டோன் பத்திநிற்க*
*துடியாம் பன்னொன் றினுக்கிறைவன்*
*துய்ய இலாபம் தனிலாயின்*
*வடிலா முப்பத் தாறதின்மேல்*
*வருடம் எட்டும் சுகமுள்ளோன். (86)*

*(இ-ள்.)* இலக்கனம் திரமாக இருக்க, அதில் ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி இருக்க, இரண்டாம் இடத்தில் ஐந்தாம் இடத்திற்கு அதிபதி இருக்க, இரண்டாம் இடத்திற்கு அதிபதி பத்தாம் இடத்தில் இருக்க, பதினோராம் இடத்திற்கு அதிபதி பதினோராம் இடத்தில் இருக்க, இச்சாதகன் தன் முப்பத்து ஆறாவது வயதிற்கு மேல் எட்டு ஆண்டுகள் மிகுந்த சுகமுள்ளவனாக விளங்குவான்.

## இதுவுமது

உள்ளுதயம் வர்க்கோத்த மாங்கிசமே யாக
உயர்குருவும் சுக்கிரனும் பார்க்கஒன்ப துடையோன்
கொள்ளுமுச்ச மாயிருக்கிற் பத்தைந்தின் மேற்தான்
கூறுமொன்ப தாண்டும்பாக் கியமுடையன் உதயத்
தெள்ளுருமே ழுக்கிறைவ னுறச்சுபரே பார்க்க
விரண்டிடத்தில் மதிநிற்கச் சாமியுடன் குருவும்
விள்ளுமொரு பத்தில்நிற்கில் லறுபத்து மூன்றின்
மேல்மூன்று வருடமுமே மிக்கசுகம் பெறுவன். *(87)*

*(இ-ள்.)* இலக்கனம் வர்க்கோத்தமாங்கிசமாக, அதனை குருவும், சுக்கிரனும் பார்க்க, ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி உச்சமாக இருக்க, இச்சாதகன் பதினைந்து வயதிற்குமேல் ஒன்பது ஆண்டுகள் மிகுந்த சுகம் உள்ளவனாக விளங்குவான். இலக்கனத்தில் ஏழாமிடத்திற்கு அதிபதி இருக்க, அவரைச் சுபக்கோள்கள் பார்க்க, இரண்டாமிடத்தில் சந்திரன் இருக்க, இலக்கனாதிபதியுடன் குருவும் சேர்ந்து பத்தாம் இடத்தில் இருக்க இச்சாதகன், அறுபத்து மூன்று வயதிற்குமேல் மூன்று வருடம் மிகுந்த சுகமுடையவனாக விளங்குவான்.

## இதுவுமது

பெறுமுதயம் தனிற்புதனும் ஒன்பதினிற் குருவும்
பிரசுரன்பூ ரணமதியும் பிரியமுடன் கூடத்
திறமுடையன் சுவாமிகேந் திரமிருக்கப் புவிமேற்
சென்மித்த நாள்முதலாய்ச் சிறந்தசெல்வம் உடையன்

மறுவறும்லக் கனத்துடனே சுவாமிசுபர் நடுவின்
மலிவுறவே சுவாமிசுப கேந்திரகோணத்தில்
உறுதிபெறில் செனனமுத லாயுளுள்ள மட்டும்
யோகவான் ஆவனென உரைத்தனர்பூங் குயிலே! (88)

(இ-ள்.) பூஞ்சோலையில் அமர்ந்துள்ள குயிலைப் போன்ற இனியமொழி பேசும் பெண்ணே! சென்ம இலக்கனத்தில் புதனும், இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்தில் குருவும் பூரணச் சந்திரனும் ஒன்றுகூடி இருக்க, இலக்கனாதிபதி கேந்திரத்தில் இருக்க, இச்சாதகன் இவ்வுலகில் தோன்றிய நாள் முதல் மிகுந்த செல்வனாக இருப்பான். சென்ம இலக்கனத்துடன் இலக்கனாதிபதியும் சுபக்கோள்களுக்கு நடுவே விளங்க, இலக்கனாதிபதி, கேந்திர திரிகோணங்களில் அமர, இச்சாதகன் பிறந்தநாள் முதல் ஆயுள் உள்ளவரை யோகவானாக விளங்குவான் என்று சோதிடக்கலையில் வல்லவர்கள் கூறியுள்ளார்கள்.

**இதுவுமது**

குயிலே உதயம் சுபமாகக்
கூறும் உதயம் வியஇலாபத்
தியலுஞ் சுபருற் றிடச்சாமி
இனிய குருவும் சுபகேந்திரம்
பயிலும் கோணம் தனிலிருக்கிற்
பகரும் வயதில் ஆதிநடுத்
துயரமன்றிச் சுகமடைவன்
சூதை வருத்துந்துணைமுலையாய்! (89)

(இ-ள்.) குயில்போன்ற இனிய குரலையும், சூதாட்டக் காய்களைக் காட்டிலும் அழகு மிகுந்த தனங்களையும் உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திலும் பதினோராம் இடத்திலும் பன்னிரண்டாமிடத்திலும் சுபக்கோள்கள் இருக்க, இலக்கனாதிபதியும் குருவும் கேந்திர திரிகோணங் களில் இருக்க, அச்சாதகன் பிறந்தது முதல் நடுத்தர வயதை அடையும்வரை துன்பமின்றி சுகமடைபவனாக விளங்குவான்.

**பெண்களால் சுகமடைபவன்**

துணையாம் உதயம் சுபமாகச்
சொல்லும் உதயம் இரண்டொடுமூன்
றிணையாம் தானம் சுபரிருக்க
இயலுஞ் சாமி யுடன்புகரும்
அணையும் சுபகேந் திரிகோணம்
அதனில் இருக்க வந்தத்திற்
கணையாற் சுகத்தை அனுபவிப்பன்
களபந் திமிர்ந்த தனத்தாளே! (90)

(இ-ள்.) சந்தனம் பூசப்பட்ட திமிர்ந்தெழுந்த கொங்கைகளை உடைய பெண்ணே! சென்ம இலக்கனம், இலக்கனத்திற்கு இரண்டாமிடம், மூன்றாமிடம் ஆகிய வற்றில் சுபக்கோள்கள் இருக்க, இலக்கனாதிபதியுடன் சுக்கிரன் சேர்ந்து, கேந்திர திரிகோணங்களில் இருக்க, பெண்களால் இன்பத்தை அடைவான்.

**சுகமும் துக்கமும் உடையவன்**

தனதாம் உதயம் சுபரிருக்கத்
தனத்தில் ஏழில் நான்குபத்தில்
வினவுந் தீயோ ருறச்சாமி
விளங்கும் உத்த மாங்கிசத்திற்
கனமுற் றிருக்கில் ஆதியிலே
காண்பான் சுகத்தைப் பின்புதுக்கம்
சினமிற் கருவி விரணபயம்
தீக்குஞ் சொற்பக் கிலேசமுண்டே! (91)

(இ-ள்.) இலக்கனத்தில் சுபக்கோள் இருக்க, இரண்டாமிடத்தில், ஏழாமிடத்தில், நான்காமிடத்தில், பத்தாமிடத்தில் பாவக்கோள்கள் நிற்க, இலக்கனாதிபதி உத்தமாங்கிசம் ஏறி இருக்க, இச்சாதகன் பிறந்தது முதல் சுகத்தை அனுபவிப்பான். பின்பு அவனுக்கு மன துக்கமும் கருவியால் காயங்களும் சிறிதளவு மனக்கவலையும் உண்டாகும்.

## வாலிபத்தில் சுகமும் வயோதிகத்தில் துன்பமும் அடைபவன்

*உண்டுதய இலக்கனத்தைச் சுபர்பார்க்கச் சாமி*
*உயர்கேந்திர கோணமுறின் நடுவயதிற் சுகமாம்*
*திண்டிறலாம் உதயத்தில் பாவர்நிற்க மூர்த்தித்*
*தேவலோ காங்கிசத்திற் சேரவொன்பான் தன்னில்*
*அண்டியொரு கிரகநிற்கின் வாலிபத்திற் சுகமாம்*
*அருளுதயஞ் சுபமாக வெள்ளிநிற்கச் சுடரே*
*கண்டிடிற்பூ ருவம்பாதிச் சுகமாய்ப்பிற் பாதி*
*கவலையுடன் உறும்பலனே காணுவன்தேன்*
*மொழியே!(92)*

*(இ-ள்.)* தேன்போன்ற இனிய மொழியைப் பேசக் கூடிய பெண்ணே! சென்ம இலக்கனத்தைச் சுபக்கோள் பார்க்க, இலக்கனாதிபதி கேந்திர கோணங்களில் நிற்க, வாலிப வயதில் இச்சாதகனுக்குச் சுகம் உண்டாகும். சென்ம இலக்கனத்தில் பாவக்கோள்கள் இருக்க, இலக்கனாதிபதி தேவலோகங்கிசத்தில் சேர, ஒன்பதாம் இடத்தில் ஏதேனும் ஒரு சுபக்கோள் நிற்கின், வாலிப வயதில் இச்சாதகனுக்குச் சுகம் உண்டாகும். சென்ம இலக்கனத்தில் சுக்கிரன் நிற்க, அச் சுக்கிரனைச் சூரியன் பார்க்க, அச்சாதகன் தன் வாழ்நாளின் முதல்பாதியில் சுகங்களை அனுபவித்துப் பிற்பாதியில் கவலையுடன் காலத்தைக் கழிப்பான்.

## செல்வன்

*மொழியுமிலக் கனங்கடகம் வில்மகர மாகி*
*முனைகதிரோன் இருந்தக்கால் முற்றுந்தன முடையோன்*
*ஒழிவில்சிலை மீன்மிதுனம் கோலுதய மாக*
*ஒளிர்மதியம் இருக்கஒன்பான் இரவிநிற்க வல்லால்*
*அழிவில்பாக் கியத்ததிபன் சூரியனே யாகில்*
*ஆதித்தன் முன்னிடப மேயுதய மாகப்*
*பொழியும்வளர் மதியிருக்கச் சுபர்கூடப் பார்க்கிற்*
*பொருந்துதனம் உடையவனாம் புவியினிளங்*
*கொடியே! (93)*

*(இ-ள்.)* இளம்பூங்கொடி போன்று விளங்குகின்ற பெண்ணே! சென்ம இலக்கனம், கடகமாகவோ தனுசுவாகவோ மகரமாகவோ இருந்து, இலக்கனத்தில் சூரியன் இருந்தால் செல்வம் உடையவனாக விளங்குவான். சென்ம இலக்கனம் தனுசுவாகவோ மீனமாகவோ, துலாமாகவோ, மிதுனமாகவோ இருந்து, இலக்கனத்தில் நிறைந்த சந்திரன் இருக்க, ஒன்பதாம் இடத்தில் சூரியன் இருக்க அல்லது ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி சூரியனாக இருந்தாலும் இச்சாதகன் பெருந்தனம் உடைய செல்வனாக விளங்குவான். இடப இலக்கனத்தில் சூரியன் இருக்க, அதனுடன் வளர்பிறைச் சந்திரன் இருக்க, இவர்களைச் சுபக்கோள்கள் பார்க்க, பெருந்தனம் உடைய செல்வனாக இச்சாதகன் விளங்குவான்.

## இதுவுமது

*கொடியிடையே! லக்கினத்தில் இருந்தவியா ழத்தைக்*
*குலவியசாமி யைத்தனத்தோன் குளிர்நோக்கிற் றனவான்*
*நெடியதனு வுதயத்திற் இரவியுறப் பத்தில்*
*நிலவுசெவ்வாய் இருந்திடினும் நிறைவுபெறும் தனவான்*
*படிபுகலும் உதயத்தில் ஆதித்தன் உறைய*
*பத்தோனும் சாமியுமே பணபரத்தி லாக*
*வடிவுடைய பணபரத்தோன் பதினொன்றில் நிற்கின்*
*மருவுதனம் உடையனென்பர் மதர்நெடுங்கண் மயிலே! **(94)***

*(இ-ள்.)* கொடிபோன்ற இடையையும், பெரிய நெடிய கண்களையும் மயிலைப் போன்ற சாயலையும் உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்தில் இருந்த குருவை, இலக்கனாதிபதி, ஐந்தாம் இடத்திற்கு அதிபதி ஆகியோர் நோக்க, சாதகன், செல்வன். சென்ம இலக்கனம் தனுசுவாக, அதில் சூரியன் இருக்க, இலக்கனத்திற்குப் பத்தாமிடத்தில் செவ்வாய் இருந்தாலும் சாதகன் செல்வன். சென்ம இலக்கனத்தில் சூரியன் இருக்க, பத்தாமிடத்தோனும் இலக்கனாதிபதியும் 2, 5, 8, 11 ஆகிய இடங்களில் நிற்க, பணபரத்தோன் பதினோராம் இடத்தில் இருக்க, இச்சாதகன் செல்வன்.

## அரச சமானன்

கண்ணுதயம் புதனிருக்க மூர்த்தியொன்பா னாகிற்
கனமான வித்தையுண்டா கும்மிதுனம் உதிப்ப
விண்ணின்மணி இருக்கஞெண்டின் மதியுறையப் பெண்ணின்
வீறுபுதன் இருக்கில்பல வித்தையுள னாகும்
பண்ணுதயந் தனையிரண்டு மூன்றுகோள் பார்க்கிற்
பண்புசவுக் கியமுள்ள பார்த்திபச மானன்
நண்ணுதயம் தனிலுச்சர் உறச்சுபரே பார்க்கில்
நரபதிபூ சிதமுடைய சுமுகதன வானே! *(95)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் புதன் இருக்க, இலக்கனாதிபன் ஒன்பதாம் இடத்தில் இருக்க, நல்ல வித்தை உடையவனாக விளங்குவான். மிதுனம் சென்ம இலக்கனமாக இருக்க, கடகத்தில் சந்திரன் நிற்க, கன்னியில் புதன் இருக்க, பல வித்தைகளைக் கற்றவனாக விளங்குவான். சென்ம இலக்கனத்தை இரண்டு அல்லது மூன்று சுபக்கோள்கள் பார்க்க, இச்சாதகன் அனைத்து பாக்கியங்களையும் பெற்ற, அரசனுக்கு நிகரான சிறப்புக்களைப் பெற்றவனாகத் திகழ்வான். சென்ம இலக்கனத்தில் உச்சக்கோள் விளங்க, அதனைச் சுபக்கோள் பார்க்க, அரசனுக்கு நிகரான சிறப்புக்களைப் பெற்றவனாக விளங்குவான்.

## வாலிப வயதில் பாக்கியவான்

தனமருவு இலக்கனத்தில் வெள்ளிநிற்க நான்கிற்
சளப்படுத்தும் பாவர்நிற்கில் வாலிபபாக் கியவான்
தனமுதயங் குருவிருக்கச் சாமிசுப கேந்திரம்
தருங்கோணம் தனிலிருந்தே உச்சாங்கம் ஏறிற்
செனனமுதற் பாக்கியவான் இலக்கனத்திற் பொன்னோன்
சென்றிருக்கச் சாமிகேந்திர கோணத்தில் இருக்க
வினவுகின்ற இலாபம்வியஞ் சுபவர்க்க மாயின்
வேல்விழியாய்! வாலிபத்திற் பாக்கியவான்
என்பார். *(96)*

*(இ-ள்.)* வேல் போன்ற கூரிய பார்வையை உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்தில் சுக்கிரன் நிற்க, நான்காமிடத்தில் பாவக்கோள்கள் இருக்க வாலிபத்தில் அனைத்து பாக்கியங்களையும் பெற்றவனாக இச்சாதகன் விளங்குவான். சென்ம இலக்கனத்தில் குரு இருக்க, இலக்கனாதிபதி கேந்திர கோணங்களில் இருந்து உச்சாங்கிசம் பெற்று விளங்க, இச்சாதகன் இவ்வுலகில் தோன்றியது முதல் பாக்கியவானாக விளங்குவான். சென்ம இலக்கனத்தில் குரு இருக்க, இலக்கனாதிபதி கேந்திர கோணங்களில் இருக்க, பதினோராமிடம், பன்னிரண்டாமிடம் சுபவர்க்கமாக இச்சாதகன் வாலிப வயதில் அனைத்து பாக்கியங்களையும் பெற்றவனாக விளங்குவான்.

**வாலிப வயதிற்குப்பின் பாக்கியவான்**

*என்பருத யந்தனிலே பாபர்நிற்கச் சாமி*
*இயல்கோண கேந்திரத்தில் இருக்கரண்டாம் இடமே*
*வன்பில்சல ராசியாய்ச் சலகிரகத் துடனே*
*மன்னுசுபர் இருக்கின்வா லிபமுதற்பாக் கியனாம்*
*தன்பரிவில் உதயத்தில் சாமிநிற்க இலாபம்*
*தன்னிலே இலாபேசன் றானிருக்கப் பொன்னோன்*
*இன்பமுட னேபார்க்கில் நெடுங்கால சுகத்தை*
*எய்துவன்பொற் குரும்பைமுலை இலங்குமிளங்*
*கொடியே.(97)*

*(இ-ள்.)* பொன் குரும்பைப் போன்ற கொங்கைகளைக் கொண்டு விளங்கும் இளங்கொடி போன்ற பெண்ணே! சென்ம இலக்கனத்தில் பாவக்கோள்கள் நிற்க, இலக்கனாதிபதி திரிகோண கேந்திரத்தில் இருக்க, இலக்கனத்திற்கு இரண்டாம் இராசி சல இராசியாக, சலகிரகத்துடன் இருக்க அவர்களுடன் சுபக்கோள்கள் கூடி இருக்க, வாலிப வயது முதல் அனைத்து பாக்கியங்களையும் பெற்றவனாக இச்சாதகன் விளங்குவான். சென்ம இலக்கனத்தில்

இலக்கனாதிபதி இருக்க, பதினோராம் இடத்தில் பதினோராம் இடத்திற்கு அதிபதி இருக்க, இதனை குரு நோக்க, நீண்ட காலம் அனைத்துவிதமான சுகங்களையும் அனுபவிப் பவனாக இச்சாதகன் விளங்குவான்.

குறிப்பு: சல இராசிகள் - கடகம், கும்பம், மகரம், மீனம், விருச்சிகம், இடபம், துலாம்.

*சல இராசிகள் - சுக்கிரன், சந்திரன், இராகு*

## நடுத்தர வயதில் பாக்கியவான்

*இலங்குமிலக் கனந்தனிலே சுபரிருக்க இரண்டில்*
*இகல்பாவர் இருக்கில்வா லிபமட்டுஞ் சுகவான்*
*பலங்கொள்இலக் கனத்தில்சுபர் இருக்கரெண்டு கேந்திரம்*
*பாபர்நிற்க மூர்த்திபலம் படைக்கில்நடு வயதிற்*
*றுலங்குசெல்வன் இலக்கனத்திற் சுபரிருக்கச் சாமி*
*சொற்கோபு ராங்கிசத்திற் சூழ்ந்துநிற்கச் சுங்கன்*
*இலங்கிளருந் தேவலோ காங்கிசத்தில் நிற்கில்*
*நடுவயதிற் பாக்கியவான் நளினமலர்த் தேனே! (98)*

(இ-ள்.) தாமரை மலரில் உள்ள தேனைப் போன்ற இனிமையான பெண்ணே! சென்ம இலக்கனத்தில் சுபக்கோள் இருக்க, இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் பாவக்கோள் இருக்க, வாலிப வயதுவரை இச்சாதகன் செல்வனாக விளங்குவான். சென்ம இலக்கனத்தில் சுபக்கோள் இருக்க, இலக்கனத்திற்கு இரண்டாமிடத்திலும் கேந்திரங்களிலும் பாவக்கோள்கள் இருக்க, இலக்கனாதிபதி பலவானாக இருக்க, இச்சாதகன் நடுத்தரவயதில் செல்வன். சென்ம இலக்கனத்தில் சுபக்கோள் இருக்க இலக்கனாதிபதி கோபுராங்கிசத்தில் ஏறி நிற்க, சுக்கிரன் தேவலோகாங் கிசத்தில் ஏறி இருக்க இச்சாதகன், நடுவயதில் அனைத்து பாக்கியங்களையும் பெற்றவனாக விளங்குவான்.

## பாக்கியவான், செல்வன், சிவார்ச்சனை, செய்பவன்

தேனாரும் உதயமுமே சரராசி யாகத்
திரச்சாமி சரகேந்திரத் திருக்கஅந்த கிரகம்
தானாகப் பார்க்கவே சஞ்சாரம் அதனாற்
தழைத்திடுபாக் கியனுதயம் தனிற்சுபர்தாம் இருக்க
வேனாகும் நான்குபத்திற் பாவரே இருக்கின்
மிகுசெல்வம் முதற்பாதி பிற்பாதி துக்க
மானாலும் உதயத்தில் இராகுநிற்க ஏழுக்
கதிபதியைப் பொன்பார்க்கிற் சிவார்ச்சனை
செய்வன். (99)

(இ-ள்.) சென்ம இலக்கனம் சர இராசியாக இருக்க, இலக்கனாதிபதி சர இராசியான கேந்திரத்தில் இருக்க, சர கிரகத்தால் பார்க்கப்பட, இச்சாதகனுக்குப் பல இடங்களுக்கும் பயணம் செய்வதால் அனைத்து விதமான பாக்கியங்களும் கிடைக்கும். இலக்கனத்தில் சுபக்கோள் நிற்க, இலக்கனத்திற்கு நான்காம் இடத்திலும், பத்தாம் இடத்திலும் பாவக்கோள்கள் இருக்க, அச்சாதகனின் வாழ்க்கையில், முதல்பாதியில் மிகுந்த செல்வம் கிடைக்கும். மறுபாதியில், துக்கமான நிகழ்வுகளால் வருந்த நேரிடும். சென்ம இலக்கனத்தில் இராகு இருக்க, இலக்கனத்திற்கு ஏழாம் இடத்திற்கு அதிபதியைக் குரு பார்க்க, இச்சாதகன் சிவ அர்ச்சனையைச் செய்பவனாக விளங்குவான்.

## தேசாந்திரி, அரச சமானன்

செய்யஉத யம்சாமி இரவிபத்து ளோனும்
தெரிந்தசர வர்க்கஞ்ச ராங்கிசமே இருக்கில்
வெய்யதரித் திரன்தேசாந் திரமேற்சஞ் சாரன்
மிகஉதய மதிலிருக்க ஒன்பான்பத் தினிலே
எய்யுறுசெவ் வாயிருக்கின் மன்னவர்ச மானன்
இலக்கனத்தில் உச்சக்கோள் இருக்கஅல்லர் பார்க்கில்
ஐயமிலாச் சாமிகேந் திரகோணம் இருக்கில்
அரசர்சமா னன்பசுந்தேன் அனையமொழி அனமே! (100)

*(இ-ள்.)* புதிய இனிய தேனை ஒத்த இனிய மொழிகளைப் பேசும் அன்னம் போன்ற நடையை உடைய பெண்ணே! சென்ம இலக்கனம், இலக்கனாதிபதி, சூரியன், பத்தாமிடத்திற்கு அதிபதி ஆகியோர் சரவர்க்கமாக அல்லது அங்கிசத்தில் இருக்க, இச்சாதகன் நாடுநாடாகச் சுற்றித் திரியக்கூடியவனாக இருப்பான். சென்ம இலக்கனத்தில் சந்திரன் இருக்க, இலக்கனத்திற்கு ஒன்பதாமிடம், பத்தாம் இடங்களில் ஒன்றில் செவ்வாய் இருந்தால் அச்சாதகன் மன்னனுக்கு நிகரான சிறப்புக்களை உடையவனாக விளங்குவான். இலக்கனத்தில் உச்சமடைந்த கோள் இருக்க அல்லது இலக்கனத்தை உச்சக்கோள் பார்க்க, இலக்கனாதிபதி கேந்திர திரிகோணங்களில் இருக்க, மன்னனுக்குச் சமமான சிறப்புக்களைப் பெற்றவனாக விளங்குவான்.

## அரச சமானன்

அன்ன வுதயத் தெழுங்குருவை
அப்போ தொருநீ சன்பார்க்கின்
மன்னர் சமானன் இலக்கனத்தை
மகிழ்ந்து மூன்று கோள்பார்க்க
சொன்ன மூர்த்தி கேந்திரத்திற்
சொல்லுந் திரிகோ ணந்தன்னில்
உன்னும் பெலன்பெற் றிருத்தக்கால்
உலகில் மன்னர் சரியாவன். *(101)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்தில் நிற்கும் குருவை, நீசக்கோள் ஒன்று பார்க்குமாயின், இச்சாதகன், மன்னருக்குச் சமமான சிறப்புக்களை உடையவனாக விளங்குவான். சென்ம இலக்கனத்தை மூன்று சுபக்கோள்கள் பார்க்க, இலக்கனாதிபதி கேந்திர திரிகோணத்தில் முழுபலத்துடன் விளங்க இச்சாதகன், மன்னனுக்குச் சமமான சிறப்புக்களைப் பெற்றவனாக விளங்குவான்.

**அரசன்**

*சரியுத யத்திற் சாமியும் நான்கிற் றலைவோனும்*
*தெரிவுற நோக்கக் கூடவெந் நாடுந் திரைகொள்வான்*
*புரியுத யத்திற் குருவுற நான்கிற் புகராகப்*
*பரிவொடு பத்திற் சேயும் இருக்கிற் பார்வேந்தன். (102)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்தில் இருக்கும் இலக்கனாதி பதியும் நான்காமிடத்திற்கு அதிபதியும் ஒருவரை ஒருவர் நோக்க, அல்லது ஒன்று கூடி இருக்க, எந்த நாட்டிலும் திரை பெறுபவனாக பார்வேந்தனாக அச்சாதகன் விளங்குவான். சென்ம இலக்கனத்தில் குரு இருக்க, நான்காமிடத்தில் சுக்கிரன் இருக்க, பத்தாமிடத்தில் செவ்வாய் இருக்க, இச்சாதகன் உலகையாளும் மன்னனாக விளங்குவான்.

**அரச சமானன்**

*பாருதயம் சாமிநிற்கச் சாமியுச்ச மாகிற்*
*பார்த்திபனாம் இலக்கனமே சுபராசி யாக*
*வீரமழு கோளேழும் பார்க்கின்மன்ன னாவன்*
*வினவியலக் கனமுதலாய் இடையிடைவிட் டேதான்*
*நீரமிகுங் கோளேழும் இருக்கிற்பார்த் திபனாம்*
*சீருதயம் தனிற்சாமி இருந்திடமற் றோர்கள்*
*ஓர்தருமோ ரைந்துதொட்டு நிரையாக இருக்கின்*
*உலகாளும் மன்னவனாம் உவமையிலா அமுதே! (103)*

*(இ-ள்.)* ஒப்புமையில்லா இனிய அமுதம் போன்ற பெண்ணே! சென்ம இலக்கனத்தில் இலக்கனாதிபதி உச்சம் பெற்று இருக்க, இச்சாதகன் மன்னனுக்குச் சமமானவனாக விளங்குவான். சென்ம இலக்கனம் சுப இராசியாக ஏழுகோள்களும் அதனைப் பார்க்க, இச்சாதகன் மன்னனுக்குச் சமமானவனாக விளங்குவான். சென்ம இலக்கனத்தில் இருந்து ஒரு இராசி விட்டு ஒரு இராசி என்ற நிலையில் ஏழு கோள்களும் நிற்க, மன்னனுக்குச் சமமானவனாக

விளங்குவான். சென்ம இலக்கனத்தில், இலக்கனாதிபதி இருக்க, ஐந்தாம் இடத்திலிருந்து வரிசையாக நிற்க, இச்சாதகன் உலகையாளும் மன்னனாக விளங்குவான்.

**அரசன்**

*உவமான வுதயமதி வர்க்கமிலா திருக்க*
*உயர்சாமி வர்க்கோத்த மாங்கிசமே யாக*
*நவமாக மற்றோர்கள் மூன்றுகேந் திரத்தில்*
*நயந்துநிற்கில் கொற்றவனாம் நாடுமுத யத்திற்*
*பவமிலாச் சாமிநிற்க ஆறேழில் எட்டைப்*
*பரிந்துசுப ரேநெருங்கிற் பார்புரக்கும் மன்னா*
*மவமிலுத யத்திரண்டு மந்திரிநா லோனும்*
*மாகநிரை மதிபார்க்கில் அரசனாம் அழகாய். (104)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனம், சந்திரனின் வர்க்க மில்லாமல் இருக்க, இலக்கனாதிபதி வர்க்கோத்த மாங்கிசம் பெற்று விளங்க, கோள்களில் மூவர் கேந்திரங்களில் நிற்க, இச்சாதகன் மன்னனாக விளங்குவான். சென்ம இலக்கனத்தில் இலக்கனாதிபதி சுபபலம் பெற்று விளங்க, இலக்கனத்திற்கு ஆறாமிடம், ஏழாமிடம், எட்டாமிடம் ஆகிய இடங்களில் சுபக்கோள்கள் நிற்கில், இச்சாதகன், உலகைக் காக்கும் மன்னவனாக விளங்குவான். சென்ம இலக்கனத்தில் இரண்டாமிடத்ததிபதி, குரு, நான்காமிடத்திற்கதிபதி ஆகியோர் நிற்க, இவர்களை நிறைந்த சந்திரன் பார்க்க இச்சாதகன் மன்னனாக விளங்குவான்.

**இதுவுமது**

*அழகியலக் கனம்சுபமாய் நான்கில்மதி வெள்ளி*
*பார்க்கரவிக் கைந்தெட்டில் ஒன்பதிற்பொன் மேவப்*
*பழகியபொன் னவனுக்கைந் தெட்டுசுத்த மாகிற்*
*பார்த்திபனாம் இலக்கனத்தில் ஆறேழெட் டுடையோர்*
*இளகியபண் புடன்கூட நான்குடையோன் பார்க்கில்*
*இறைவனாம் உதயத்தில் ஒன்றிரண்டில் இலாபம்*
*குளகமுற்றுக் கூடலா பேசனுச்ச மாகிக்*
*குறிப்பாக வேபார்க்கிற் கோமானென் றுரையே.(105)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனம் சுபமாய், இலக்கனத்திற்கு நான்காம் இடத்தில் சந்திரன், வெள்ளி கூடி இருக்க, சூரியனுக்கு ஐந்தாமிடம், எட்டாமிடம், ஒன்பதாமிடம் இவற்றில் ஒன்றில் குரு இருக்க, இச்சாதகன் மன்னனாக விளங்குவான். சென்ம இலக்கனத்தில் ஆறாமிடம், ஏழாமிடம், எட்டாமிடத்திற்கு உரியவர்கள் ஒன்றுகூடி இருக்க, இவர்களை நான்காமிடத்திற்கு உடையவன் பார்க்க இச்சாதகன் மன்னவனாவான். சென்ம இலக்கனத்தில் இலக்கனாதிபதி, தனத்தாதிபதி, இலாபாதிபதி ஒன்றுகூடி இருக்க, அல்லது இலாபாதிபதி உச்சம்பெற்று இவர்களைப் பார்க்க, இச்சாதகன் மன்னனாக விளங்குவான்.

### இதுவுமது

உரைகொளிலக் கனந்தனிலே சாமிகுரு கூட
ஒன்பதுடை யோன்பார்க்க வியம்வெள்ளி வீடாய்
நிரைத்தசுங்க னிருக்கின்மன் னாமுதயத்தைப் பொன்னோன்
நேர்பார்க்க நான்கில்சனி மதியுடனே கூடப்
புரைகொள்வெள் ளிபார்க்கில் வேந்தாமு தயமுபயம்
பொருந்தவெள்ளி மதிசனிசேய் கேந்திரங்கள் எய்த
வரைவிலக்க னந்தனிலே சாமிநிற்கப் பார்க்கின்
மன்னவனாம் குரும்பைமுலை வாட்டடங்கண்
மயிலே! *(106)*

*(இ-ள்.)* குரும்பை போன்ற கொங்கைகளையும் வாளைப் போன்ற கூரிய பார்வையினையுடைய பெரிய கண்களை யும், மயிலின் சாயலையும் உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்தில் இலக்கனாதிபதியும் குருவும் கூடி இருக்க, இவர்களை ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி பார்க்க, பன்னிரண்டாம் இடம் சுக்கிரனின் வீடாக இருந்து, அதில் சுக்கிரன் இருக்க, இச்சாதகன் மன்னனாக விளங்குவான். சென்ம இலக்கனத்தை குரு பார்க்க, இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் சனி, சந்திரனுடன்கூடியிருக்க, அவர்களைச் சுக்கிரன் பார்க்க, இச்சாதகன் மன்னனாக விளங்குவான். இலக்கனம் உபய இராசியாக இருக்க, சுக்கிரன், சந்திரன், சனி, செவ்வாய் முதலான கோள்கள் கேந்திரங்களில் இருக்க,

இலக்கனத்தில் இலக்கனாதிபதி நிற்க அல்லது இலக்கனாதிபதி இலக்கனத்தைப் பார்க்க, இச்சாதகன் மன்னனாக விளங்குவான்.

## இதுவுமது

*வாட்டமிலா உதயமிக்கச் சாமியுமங் கிசமு*
*மருவுமங்கி சாதிபருஞ் சரமாகச் சாமி*
*ஈட்டியகேந் திரகோணத் திருக்கநான் கைந்தோ*
*டிரண்டுடையோர் பார்க்கின் மன்னர் உதயமேற் குருவும்*
*தாட்டிகமாம் சாமிகேந் திரகோணத் துறையச்*
*சாமியை இலக் கனத்தைஒரு நீசக்கோள் பார்க்க*
*நாட்டியவைந் தொன்பதுள்ளோர் ஒன்றாகக் கூடில்*
*நானிலமேல் மன்னவனாம் நறைமலர்ப்பூங்*
*குழலே! (107)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனமும், இலக்கனாதிபதி நின்ற அங்கிசமும், அங்கிசாதிபதியும் சர இராசியாக இருக்க, இலக்கனாதிபதி கேந்திர திரிகோணங்களில் இருக்க, இலக்கனத்திற்கு நான்கு, ஐந்து, இரண்டாமிடத்திற்கு உடையோர் இலக்கனாதிபதியைப் பார்க்க, இச்சாதகன், மன்னனாக விளங்குவான். சென்ம இலக்கனத்தில் குரு இருக்க, இலக்கனாதிபதி கேந்திர திரிகோணங்களில் இருக்க, இலக்கனத்தையும் இலக்கனாதிபதியையும் நீசக்கோள் ஒன்று பார்க்க, இலக்கனத்திற்கு நான்காமிடத்திற்கு அதிபதியும் ஒன்பதாம் இடத்திற்கு அதிபதியும் ஒன்றாகச் சேர்ந்திருந்தால், இச்சாதகன் இவ்வுலகில் சிறந்த மன்னனாக விளங்குவான் என்பதை நறுமணம் மிக்க மலர்களைக் கூந்தலில் சூடியுள்ள பெண்ணே! அறிவாயாக.

## அரசர்க்கு அரசன்

*மலரு முதயத் திறைகேந்திர*
*மருவும் கோணம் தனிலிருக்க*
*விலகு நான்கு கிரகமுச்சம்*
*இருக்கச் சனிதான் கும்பநிற்கில்*

*நலமன் புவிக்கி ராசாதி*
*ராச னாவான் நளினமலர்க்*
*குலவுங் குயிலை நிகரான*
*கொம்பே! சோதி மின்கொடியே !* *(108)*

(இ-ள்.) மலரைப் போன்ற மென்மையுடன் இனிய மொழி பேசும் குயிலை ஒத்த மொழியினை உடைய பூங்கொடி போன்றும் ஒளிபொருந்திய மின்கொடி போன்றும் விளங்கும் பெண்ணே! இலக்கனாதிபதி கேந்திர திரிகோணங் களில் இருக்க, நான்கு கிரகங்கள் உச்சம் பெற்று விளங்க, கும்ப இராசியில் சனி அமர, இச்சாதகன், உலகை ஆளக்கூடிய இராசாதிராசனாக விளங்குவான்.

## இதுவுமது

*மின்னிய சாமி தானே*
*மிகுசுப கோண கேந்திரந்*
*தன்னிலே இருக்க நன்மை*
*தருமூன்று கிரகம் உச்சம்*
*உன்னிடக் கடகம் தன்னில்*
*ஒளிர்மதி இருக்கின் மாதே !*
*நன்னிலம் முழுதும் ஆளும்*
*இராசாதி ராச னாவன்.* *(109)*

(இ-ள்.) இலக்கனாதிபதி கேந்திர திரிகோணங்களில் இருக்க, மூன்று சுபக்கோள்கள் உச்சம் பெற்று இருக்க, கடக இராசியில் நிறைந்த சந்திரன் இருக்க, இச்சாதகன் உலகம் முழுவதையும் ஆளும் இராசாதிராசனாக விளங்குவான் என்பதைப் பெண்ணே! நீ அறிவாயாக.

## இதுவுமது

*ஆவதாம் மூர்த்தி உச்சம்*
*ஆகியே கேந்திரம் ஏறத்*
*தாவரும் புந்தி ஆறிற்*
*றமனியன் ஏழின் மிக்கப்*

பூவரும் வெள்ளி எட்டிற்
பொருந்திடில் உலகம் எல்லாந்
தேவனென் றேத்தச் செங்கோல்
செலுத்துமன் னவனாம் என்றே. (110)

(இ-ள்.) இலக்கனாதிபதி உச்சம் பெற்று கேந்திரங்களில் ஏற, இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் புதனும் ஏழாமிடத்தில் சனியும், எட்டாமிடத்தில் சுக்கிரனும் பொருந்த இச்சாதகன், இவ்வுலகமெல்லாம் தேவன் என்று போற்றும் வண்ணம் செங்கோலோச்சும் சிறந்த மன்னவனாக விளங்குவான்.

**சாதகனின் பிறப்பு**

என்ற ஐந்திற் குளிகனிற்க
வியலும் ஐந்தோன் எட்டாக
குன்று மதிய இராகுவுடன்
கூடுற் றாலும் தேன்மொழியாய் !
மன்று ளைந்தில் இரவியுற
மலியும் ஐந்தோன் இராகுவுடன்
தோன்ற மதிபொன் பார்த்திலையேல்
ஓதும் பரவிந் தெனுமாதே ! (111)

(இ-ள்.) தேன் போன்ற இனிய மொழியை உடைய பெண்ணே ! இலக்கனத்திற்கு ஐந்தாம் இடத்தில் குளிகன் நிற்க, ஐந்தாமிடத்திற்கு அதிபதி எட்டாமிடத்தில் அமர, சந்திரன் இராகுவுடன் கூடி இருப்பினும், இலக்கனத்திற்கு ஐந்தாம் இடத்தில் சூரியன் இருக்க, ஐந்தாமிடத்திற்கு அதிபதி இராகுவுடன் சேர்ந்திருக்க, இவர்களைச் சந்திரன், குரு ஆகியோர் பார்க்கவில்லையென்றால், இச்சாதகனின் பிறப்பு சந்தேகத்திற்குரியது.

**மாரகாதிபர்கள்**

மாதியன்மே டந்தனக்கு வெள்ளிசனி புந்தி
மாரகராய் இரவிகுரு சுபர்மற்றோர் சமனாம்
போதிடபந் தனக்குமதி வெள்ளிபொன் மாரகராம்
போற்றிரவி சனிசுபர்மற் றுள்ளவர்கள் சமனாம்

கோதிலியாழ் தனக்குச்சேய் பொன்கதிர்மா ரகராம்
கூறுபுகர் சுபன்மற்றை யோர்களெல்லாம் சமனாம்
தீதில்கட கந்தனக்குப் புகர்புதன்மா ரகராம்
சேய்பொன்னன் சுபர்மற்றோர் தான்சமனாம் திருவே. (112)

(இ-ள்.) மேட இலக்கனத்திற்குச் சுக்கிரன், சனி, புதன் மாரகர்கள்; சூரியன், குரு சுபர்; சந்திரன், செவ்வாய் சமம்; இடப இலக்கனத்திற்குச் சந்திரன், சுக்கிரன், குரு மாரகர்கள்; சூரியன், சனி சுபர், செவ்வாய், புதன் சமம்; மிதுன இலக்கனத்திற்குச் செவ்வாய், குரு, சூரியன் மாரகர்கள், சுக்கிரன் சுபர்; சந்திரன்,புதன், சனி சமன்; கடக இலக்கனத்திற்குச் சுக்கிரன், புதன் மாரகர்கள், குரு, செவ்வாய் சுபர்; சந்திரன், சூரியன், சனி ஆகியோர் சமம்.

## இதுவுமது

திருபுலிக்குப் புதன்வெள்ளி மாரகர்சேய் சுபனாம்
செப்புமற்றோர் தான்சமனாங் கன்னிகுரு சேயும்
வருமார கன்வெள்ளி புதன்சுபர்மற் றோர்கள்
மன்னுசமன் கோலுக்கே இரவிகுரு செவ்வாய்
அருகின்மா ரகர்சனிமால் சுபர்மற்றோர் சரிதேட்
கானபுதன் குசன்வெள்ளி கேதுமா ரகராம்
தரும்இந்து சுபன்மற்றோர் சமன்சிலைக்கு வெள்ளி
சங்காரன் இரவிகுசன் சுபர்மற்றோர் சமனே. (113)

(இ-ள்.) சிம்ம இலக்கனத்திற்குப் புதன், சுக்கிரன், மாரகர்கள்; செவ்வாய் சுபன்; சந்திரன், சூரியன், சனி ஆகியோர் சமம்; கன்னி இலக்கனத்திற்குக் குரு, செவ்வாய் - மாரகர்கள். சுக்கிரன், புதன் சுபர்கள்; சந்திரன், சூரியன், சனி சமம்; துலா இலக்கனத்திற்குச் சூரியன், குரு, செவ்வாய் மாரகர்கள்; சனி, புதன் சுபர்; சந்திரன், சுக்கிரன் சமம்; விருச்சிக இலக்கனத்திற்குப் புதன், செவ்வாய்,சுக்கிரன் மாரகர்கள்; சந்திரன் சுபன்; சந்திரன், சூரியன், குரு சமம்; தனுசு இலக்கனத்திற்குச் சுக்கிரன் மாரகன்; சூரியன், செவ்வாய் சுபர், சந்திரன், புதன், குரு, சனி சமம்.

## இதுவுமது

*சமனே மகரம் சேயுமதி*
*சனிபொன் னவனும் மாரகராம்*
*அமரும் வெள்ளி புதன்சுபராம்*
*மற்றை யோர்கள் சமனாகும்*
*திமிரும் கும்பம் தனக்குச் சேய்*
*நிலவும் குருவே மாரகமாம்*
*திமிர வெள்ளி சுபன்மற்றைக்*
*கிரகம் யாவும் சமனென்பார். (114)*

*(இ-ள்.) மகர இலக்கனத்திற்கு செவ்வாய், சந்திரன், சனி, குரு ஆகியோர் மாரகர்கள்; புதன், சுக்கிரன் சுபர்; சூரியன் சமம்; கும்ப இலக்கனத்திற்கு செவ்வாய், குரு மாரகர்கள், வெள்ளி சுபன்; சந்திரன், சூரியன், புதன், சனி சமன்.*

## இதுவுமது

*என்பர் மீனத்துக் கேவரு மாரகன்*
*வன்புறுஞ் சனிமா லும்கதிர் சுங்கன்*
*அன்பு றுஞ்சுபர் அம்புலி வக்கிரன்*
*பொன்புள மற்றோர் பொருந்திட சமபலம். (115)*

*(இ-ள்.) மீன இலக்கனத்திற்கு சனி, புதன், சூரியன், சுக்கிரன் மாரகர்கள்; சந்திரன், செவ்வாய், குரு சுபர்; மற்றவர்கள் சமன்.*

குறிப்பு: சென்ம இலக்கனங்களுக்குப் பிற சோதிட நூல்களில் மாரகர்கள், சுபர்கள், சமன் போன்றவற்றில் மாற்றங்கள் காணப்படுகிறது.

## பெருத்த நாபியன், கூனன், பிணியாளன்

*உதயத்திற் காரி பாம்பு*
*உற்றிடர் பெரிய நாபி*
*சிதைவிலாச் சனிமால் கூடிச்*
*சென்மத்தில் நிற்கில் கூனாம்*

சிதையராச் சேயும் கூட
இராகுவும் சனியும் கூட
சுதைமதி முகத்தாய் ஓரைத்
தோன்றும்சேய்ப் பிணிய னாமே. (116)

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் சனியும் பாம்பு சேர்ந்திருக்க, பெரிய நாசியை உடையவனாகச் சாதகன் விளங்குவான். சென்ம இலக்கனத்தில் சனியும் புதனும் ஒன்றுகூடி இருக்க சாதகன் கூனனாக விளங்குவான். சென்ம இலக்கனத்தில் பாம்பும் செவ்வாயும் சேர அல்லது இராகுவும் சனியும் சேர்ந்திருக்க, அச்சாதகன் எந்நாளும் நோயாளனாக விளங்குவான்.

## இடக்கண் குருடு, வலக்கண் குருடு, இருகண் குருடு

வாக்கினிற் செவ்வாய் ஆறின்
மதிநிற்கில் இடக்கண் ஊனம்
வீக்கிய எட்டிற் பானு
வியத்தினிற் சனிதான் நிற்கிற்
போக்கிடும் வலக்கண் தன்னைப்
புகழ்மதி இரவி தானும்
தாக்கிட வியத்தில் நிற்கிற்
தானிரு கண்போம் என்பார். (117)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் செவ்வாய் நிற்க, இலக்கனத்திற்கு ஆறாம் இடத்தில் சந்திரன் இருக்க, இச்சாதகனுக்கு இடக்கண் ஊனமாகும். சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் சூரியன் இருக்க, பன்னிரண்டாம் இடத்தில் சனி இருக்க, இச்சாதகனுக்கு வலக்கண் ஊனமாகும். சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் இடத்தில் சூரியனும் சந்திரனும் கூடி இருக்க, இச்சாதகனுக்கு இரண்டு கண்களும் கெட்டுப்போகும் என்பர் கணித நூல் வல்லோர்.

**வலக்கண் குருடு, இடக்கண் குருடு, சிறிது பார்வை**

*இனியலக் கினத்தில் ஏழில்*
*இரவியும் இருக்கத் தானும்*
*சனியனும் இராகு கூடத்*
*தான்பார்க்கின் வலக்கண் ஊனம்*
*கனிவில்சேய் இராகு பார்க்கக்*
*கலந்திடில் இடக்கண் போகும்*
*பனிமொழி! நற்கோள் பார்க்கிற்*
*பார்வைசற் றுண்டாம் என்னே!* *(118)*

(இ-ள்.) குளிர்ந்த மொழியை பேசக்கூடிய பெண்ணே! சென்ம இலக்கனத்தில் அல்லது இலக்கனத்திற்கு ஏழாம் இடத்தில் சூரியன் இருக்க, சனியும் இராகுவும் சேர்ந்திருக்க அல்லது பார்க்க, இச்சாதகனுக்கு வலக்கண் ஊனமாக இருக்கும். சேயும் இராகுவும் சேர்ந்திருக்க அல்லது பார்க்க இச்சாதகனுக்கு இடக்கண் பார்வை போகும். சுபக்கோள்கள் பார்த்தால் பார்வை சிறிது உண்டு.

**கர்ப்ப சத்திரத்தாற் சனித்தவன்**

*பொற்புறும் உதயம் தன்னிற்*
*பொருந்தவே செவ்வாய் நிற்கச்*
*சிற்பமாம் தேளிற் காரி*
*சிறப்புடன் இருக்க இராகு*
*முற்பட நிற்கப் பாவர்*
*மூர்க்கமாய்ப் பார்ப்பா ராயின்*
*கர்ப்பம்விட் டுதிக்கும் காலம்*
*கர்ப்பசத் திரத்தால் மின்னே!* *(119)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் செவ்வாய் நிற்க, விருச்சிக இராசியில் சனி இருக்க, இராகுவும் இருக்க, பாவக்கோள்கள் பார்க்க, இச்சாதகன் பிறக்கும் காலத்தில் அவனுடைய தாய்க்கு ஆயுத உதவியினால் பிரசவம் நடந்திருக்கும்.

## பாலாரிட்டம் நீங்கல்

*ஆறுபன்னிரண்டிற் பாவர்*
*ஆயிடிற் சிசுவ ரிட்டம்*
*வீறுள பத்திற் செவ்வாய்*
*வெண்மதி கூடி நிற்கின்*
*மாறிய வியத்திற் செவ்வாய்*
*வருங்காலம் மகவுக் காகா*
*கூறிய நற்கோள் நோக்கிற்*
*கொடியநோய் வந்து தீரும்.* *(120)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடம், பன்னிரண்டாமிடம் ஆகியவற்றில் பாவக்கோள்கள் இருக்க, இக்குழந்தை பிறந்தவுடன் அரிட்டம் நேரிடும். சென்ம இலக்கனத்திற்குப் பத்தாம் இடத்தில் செவ்வாய், நிறைந்த சந்திரன் கூடி இருக்கில் அல்லது பன்னிரண்டாம் இடத்தில் செவ்வாய் இருக்கில் பிறக்கும் குழந்தைக்குத் தீங்குண்டாகும். நற்கோள்கள் நோக்கில் கொடியநோய் வந்து போகும்.

## பாலாரிட்டம்

*சுருக்கமின் மிதுனம் கன்னி*
*துலாங்கும்பம் தன்னிற் றிங்கள்*
*இருக்கச்சேய் இரவி மந்தன்*
*இலங்கவே பார்க்கப் பின்பு*
*தருக்கிலா மதிதான் நின்ற*
*தானத்தின் அதி மீ னுற்றான்*
*மருக்கிளர் வடுநேர் கண்ணாய்*
*வளர்ந்திடு மகவ ரிட்டம்.* *(121)*

*(இ-ள்.)* மிதுனம், கன்னி, துலாம், கும்ப இலக்கனங் களில் சந்திரன் இருக்க, செவ்வாய், சனி, சூரியன் ஆகிய கோள்கள் பார்க்க, சந்திரன் நின்ற வீட்டில் அதிமீனுற்றால், மாவடுவை ஒத்த கண்களையுடையவளே! இச்சாதகனுக்கு அரிட்டம் நேரிடும்.

குறிப்பு: அதிமீன் என்பதன் பொருள்விளங்கவில்லை.

## இதுவுமது

ஆடுதேள் உதய மாக
　　ஐந்தொன்பான் தனிற்பொன் னுக்கே
நீடுகேந் திரத்திற் செவ்வாய்
　　நிற்கிற்பா லனுக்க ரிட்டம்
பாடுமொன் றைந்தே ழெட்டு
　　பகர்பனி ரண்டோன் தன்னில்
ஓடுதேய் மதியைப் பாவர்
　　உற்றிடில் அரிட்டம் தானே. (122)

(இ-ள்.) மேடம், விருச்சிகம் ஆகிவற்றில் ஒன்று சென்ம இலக்கனமாக, இலக்கனத்திற்கு ஐந்தாமிடம் ஒன்பதாமிடம் இவற்றில் குரு நிற்க, செவ்வாய் கேந்திரத்தில் இருக்கில், பிறந்த குழந்தைக்கு அரிட்டம் நேரிடும். இலக்கனம், ஐந்தாமிடம், ஏழாமிடம், பன்னிரண்டாமிடம், ஒன்பதாம் இடம் இவற்றில் இருக்கக் கூடிய சந்திரனைப் பாவக் கோள்கள் பார்க்கப் பிறந்த குழந்தைக்கு அரிட்டம் நேரிடும்.

## இதுவுமது

தினகரன் உதயம் நிற்கத்
　　தீயக்கோள் கூடப் பார்க்க
வினவுசேய் சனிபத் தாக
　　மேவிடிற் சிசுவ ரிட்டம்
கனகமீன் உதய மாகக்
　　கடகத்தின் அங்கி சத்திற்
தனமிகு செவ்வாய் நிற்கின்
　　மகப்பெறில் உடனே சாவாம். (123)

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் சூரியன் நிற்க, பாவக் கோள்கள் அதனுடன் கூடியிருக்க அல்லது அதனைப் பார்க்க, பத்தாமிடத்தில் செவ்வாய், சனி ஆகிய கோள்கள் கூடி இருக்கில், பிறந்த குழந்தைக்கு அரிட்டம் நேரிடும். மீன இலக்கனத்தில் சந்திர அங்கிசத்தில் செவ்வாய் நிற்கப் பிறக்கும் பிள்ளைக்கு உடனே மரணம் நேரிடும்.

## குழந்தை மரணம்

சனியனோர் ஏழில் நிற்கச்
சலராசி உதய மாகப்
பனிமிக் கீட ராசிப்
பதிந்திடச்சுபர்கேந் திரத்தில்
இனியதோர் குழவி சாவாம்
மேலொன்றிற் பாவ ரோடும்
குனிபிறை மேவ நற்கோள்
குளிர்பார்வை யற்றான் சாவாம். (124)

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஏழில் சனி நிற்க, இலக்கனம் சல இராசியாக இருக்க, சனி கீட இராசியில் பதிந்திருக்க, சுபக்கோள்கள் கேந்திரத்தில் இருக்கப் பிறந்த குழந்தை மரணம் அடையும். சென்ம இலக்கனத்தில் பாவக் கோள்களோடு சந்திரன் சேர்ந்திருக்க, இவர்களை சுபக் கோள்கள் பார்க்காவிடில் பிறந்த குழந்தைக்கு மரணம் நேரிடும்.

## இதுவுமது

பன்னிரண் டெட்டோ டொன்றிற்
பாவரும் மதியும் கூட
மன்னிய சுபர்கேந் திரிக்க
மதலைக்கே அரிட்டம் காட்டும்
தென்னிகர் பாவர் எட்டாய்த்
தேய்மதி கேந்தி ரிக்கில்
உன்னிய மதலை சாவாம்
ஒளிதிகழ் வேற்கண் நல்லாய்! (125)

*(இ-ள்.)* ஒளிபொருந்திய வேல் போன்ற கூரிய கண்களைப் பெற்று விளங்கும் நல்ல பெண்ணே !. சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டு, எட்டு, ஆகிய இடங்களிலும் இலக்கனத்திலும் பாவக்கோள்களுடன் சந்திரன் சேர்ந்து இருக்க, சுபக்கோள்கள் கேந்திரங்களில் இருக்க, அச்சாதக னுக்கு அரிட்டம் நேரிடும். பாவக்கோள்கள் இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் நிற்க, தேய்பிறைச் சந்திரன் கேந்திரங்களில் இருக்க, பிறந்த குழந்தைக்கு அரிட்டம் நேரிடும்.

## இதுவுமது

அருக்கன்சேய் சனியும் கூடி
ஆறெட்டில் இருக்க நற்கோள்
உருக்குறப் பார்ப்பா ராகில்
உற்றசந் ததிதான் சாவாம்
வருத்துகெண் டாந்த மான
மதியினைப் பாவர் பார்க்கிற்
பெருத்தெழுந் தனத்தி னாளே!
பிறந்தசேய் இறந்து போமே. (126)

(இ-ள்.) பருத்த திமிர்த்த கொங்கைகளை உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடம் அல்லது எட்டாம் இடத்தில் சூரியன், செவ்வாய், சனி முதலான கோள்கள் கூடியிருக்க, இவர்களைச் சுபக்கோள்கள் பார்த்தால், பிறந்த பிள்ளை மரணம் அடையும். கெண்டாந்தமான சந்திரனைப் பாவக்கோள்கள் பார்க்க, பிறந்த பிள்ளை இறந்துவிடும்.

## இதுவுமது

கெண்டாந்த மதியைப் பாவர்
கூடிலும் நோக்கி லுந்தான்
தண்டிலக் கனத்திற் பானு
சந்திரன் இருக்கத் தீயோர்
உண்டாமெட் டைந்தொன் பானில்
உற்றிடப் பிறந்த பாலன்
வண்டார்பூங் குழன்மின் னாளே!
மரித்திடும் என்று சொல்லே! (127)

(இ-ள்.) வண்டுகள் மொய்க்கக்கூடிய பூக்களைச் சூடிய கூந்தலையும் மின்னலை ஒத்த இடையினையும் உடைய பெண்ணே! கெண்டாந்த சந்திரனோடு பாவக்கோள்கள் கூடியிருக்க, அல்லது அதனைப் பார்க்க, அல்லது சென்ம இலக்கனத்தில் சூரியனும் சந்திரனும் கூடி நிற்க, தீயக் கோள்கள், இலக்கனத்திற்கு எட்டாமிடம், ஒன்பதாம் இடங்களில் இருந்திடப் பிறந்த குழந்தை, இறந்துபடும்.

## மூன்று நாட்களில் அரிட்டம், மரணம்

*நாட்டுமீன் உதிப்பச் சென்ம*
*நாளுக்கு மூன்றாம் நாளில்*
*நீட்டுவெண் மதியும் பானு*
*நிற்குநாள் மூன்றிற் கண்டம்*
*வாட்டுமோ ரைந்தொன் பானின்*
*மதிநிற்க நாலோ டெட்டில்*
*மூட்டுஞ்செங் கதிரோன் நிற்கின்*
*மூன்றாம்நாள் மரண மாமே. (128)*

(இ-ள்.) சென்ம இலக்கனம் மீனமாக, பிறந்த நாளுக்கு மூன்றாம் நாளில் பிறைச்சந்திரனும் மதியும் சேர்ந்து இருக்கும் நாளுக்கு மூன்றாம் நாளில் உயிருக்குக் கண்டம் ஏற்படும். சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடம், ஒன்பதாமிடம் ஆகிய இடங்களில் ஒன்றில் சந்திரன் இருக்க, நான்காமிடம் எட்டாமிடம் இவற்றில் ஒன்றில் சூரியன் இருக்க, குழந்தை பிறந்து மூன்றாம் நாளில் மரணம்.

## நான்கு நாட்களில் அரிட்டம், மரணம்

*வலியமீன் உதிப்ப மூன்றின்*
*மார்த்தாண்டன் மதியு திக்கில்*
*நலியும்நோய் வருத்தத் தாலே*
*நாலாநாள் மரணம் எய்தும்*
*மெலிவுறு மதிக்கோ ணத்தும்*
*வெய்யோன்நா லெட்டில் நிற்கில்*
*பலிகொள்நோய் அதனால் நாலாம்*
*பகல்தனில் அரிட்ட மாமே. (129)*

(இ-ள்.) சென்ம இலக்கனம் மீனமாக, இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் சூரியன் சந்திரனுடன் சேர்ந்திருக்கப் பிறந்த குழந்தை, நோயினால் நான்காம் நாளே மரணம் அடையும். சென்ம இலக்கனத்திற்குத் திரிகோணத்தில் தேய்பிறைச் சந்திரன் நிற்க, நான்காமிடம் அல்லது எட்டாமிடத்தில் சூரியன் இருக்கப் பிறந்த குழந்தை நான்காம் நாள் நோயினால் மரணமடையும்.

### பத்து நாட்களில் அரிட்டம்

எழின்மேடம் முதலாய் ஆறில்
இலக்கன மாக நான்கிற்
கழியதிக் கோட்கள் நிற்கத்
துலாமுதல் ஆறில் திங்கள்
வழிபட எட்டிற் பாவர்
வாய்த்தபின் பத்து நாளில்
அழியுமே குழவி என்றார்
அளப்பரு நோயி னாலே. *(130)*

(இ-ள்.) சென்ம இலக்கனம், மேடம் முதல் கன்னி வரையிலான ஆறு இராசிகளில் அமைய, இலக்கனத்திற்கு நான்காமிடம் அதிக கோள்கள் இருக்க, அல்லது சென்ம இலக்கனம், துலாம் முதல் மீனம் வரையிலான இராசிகளில் அமைய, இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் பாவக்கோள்கள் நிற்க, குழந்தை பிறந்து பத்து நாட்களில் குழந்தைக்கு நோயினால் மரணம் ஏற்படும்.

### பதினாறு, பதினெட்டு நாட்களில் அரிட்டம்

தருமிலக்கனத்திற் பாவர்
சனியுடன் கலந்து நிற்கில்
ஒருபதி னாறு நாளில்
ஒண்மக வரிட்ட மாகும்
அருண்மதி நான்கில் நிற்ப
ஆறினில் இரவி நிற்கின்
மருவிய பதினெட் டாம்நாள்
மகவுக்கே அரிட்ட மாமே. *(131)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் பாவக்கோள் சனியுடன் சேர்ந்து இருக்கப் பிறந்த குழந்தைக்குப் பதினாறு நாட்களில் அரிட்டம் நேரிடும். சென்ம இலக்கனத்திற்கு நான்கா மிடத்தில் சந்திரன் நிற்க, ஆறாமிடத்தில் சூரியன் நிற்க பிறந்த குழந்தைக்குப் பதினெட்டு நாட்களில் அரிட்டம் நேரிடும்.

## இருபத்து ஐந்து நாட்கள், ஒரு மாதத்தில் அரிட்டம்

*கதிர்மதி எட்டில் நிற்கக்*
*காரிசேய் கூடிப் பார்க்கத்*
*திதிதினம் இருபத் தைந்திற்*
*செனித்தநன் மகவு சாவாம்*
*சதிருடன் இலக்க னத்திற்*
*சனிஇரவி இருப்ப நற்கோள்*
*எதிருறப் பார்ப்பா ராயின்*
*எழின்முப்பான் நாளிற் சாவே.* *(132)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் சூரியனும் சந்திரனும் இருக்க, சனியும் செவ்வாயும் ஒன்றுகூடி இவற்றைப் பார்க்கப் பிறந்த குழந்தை, பிறந்து இருபத்து ஐந்தாம் நாளில் மரணம் அடையும். சென்ம இலக்கனத்தில் சனியும் சூரியனும் இருக்க, இவற்றை நற்கோள்கள் பார்க்கப் பிறந்த குழந்தை, பிறந்து முப்பது நாளில் மரணம் அடையும்.

## ஒரு மாதத்தில் அரிட்டம்

*வெள்ளியோர் எட்டி லாக*
*வெய்யவன் சனிசேய் கூடிற்*
*றள்ளிய மாதம் ஒன்றிற்*
*சந்ததிக் கரிட்ட மாகும்*
*ஒள்ளிய சாமி இராகு*
*வுடன்கூடில் மாதம் ஒன்றில்*
*அள்ளிலை வேற்கண் நல்லாய்!*
*அருண்மகன் அரிட்ட மாமே.* *(133)*

*(இ-ள்.)* அள்ளிலையைப் போன்றும் வேலைப் போன்றும் கண்களையுடைய நல்ல பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு எட்டில் சுக்கிரன், சூரியன், சனி, செவ்வாய் ஆகியவை சேர்ந்திருக்கப் பிறந்த குழந்தைக்கு ஒரு மாதத்தில் அரிட்டம் நேரிடும். இலக்கனாதிபதி இராகுவுடன் சேர்ந் திருக்கப் பிறந்த குழந்தைக்கு ஒருமாதத்தில் அரிட்டம் வரும்.

## இரண்டு மாதத்தில் அரிட்டம்

*ஓங்குத யத்தி னிற்கே*
*துதித்திடப் பாவர் பார்க்க*
*பாங்குள எட்டில் ஆறிற்*
*பனிமதி நிற்க நற்கோள்*
*ஆங்குறப் பாரா ராகில்*
*அங்கம்மேல் விரண நோயாய்ப்*
*பூங்கொடி மாதம் ரெண்டிற்*
*புனர்சென்மம் ஆகும் தானே. (134)*

*(இ-ள்.) பூங்கொடி போன்ற மெல்லிய இடையினை உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்தில் கேது நிற்க, இதனைப் பாவக்கோள் பார்க்க, இலக்கனத்திற்கு ஆறாமிடம், எட்டாமிடம் ஆகியவற்றில் ஒன்றில் சந்திரன் நிற்க, இதனைச் சுபக்கோள்கள் பார்க்கவில்லை என்றால் உடல் முழுதும் புண் ஏற்பட்டு, பிறந்த குழந்தையானது இரண்டு மாதத்தில் மரண வாயிலுக்குச் சென்று திரும்பும்.*

## எட்டுமாதம், ஓர் ஆண்டில் அரிட்டம்

*இரண்டுபன் னிரண்டா றெட்டில்*
*ஏற்றிடும் பாவர் நிற்கத்*
*திரண்டுநற் கோட்கள் பாரா*
*துறின்மாதம் எட்டிற் சாவாம்*
*முரண்டகோல் இடபம் எட்டாய்*
*முனிவொடு பாவர் நிற்கின்*
*மிரண்டுசெங் கதிரோன் பார்க்கின்*
*மேன்மக வாண்டிற் சாவே. (135)*

*(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாமிடம் இவற்றில் பாவக் கோள்கள் நிற்க, இவர்களைச் சுபக்கோள்கள் பாராமல் இருக்கப் பிறந்த குழந்தை, பிறந்த எட்டாவது மாதத்தில் மரணம் அடையும். துலாம், இடபம் ஆகியவற்றுள் ஒன்று இலக்கனத்திற்கு எட்டாமிடமாக அதில் பாவக்கோள் நிற்க, அதனைச் சூரியன் பார்க்கப் பிறந்த குழந்தை, பிறந்து ஓராண்டில் மரணமடையும்.*

## ஆண் தன்மை அற்றவன்

ஒளியுறுங் கன்னி தண்டே
உதயமே யாக மாலோன்
அழிவிலாறா மிடத்தி லாக
அல்லதா றோனைக் கூடிற்
தெளியுறும் புருடன் தோன்றிற்
சிகண்டியாம் பெண்ணே யாகில்
நளிருறு முகத்தின் மீசை
தாடியும் உண்டாம் என்னே. *(136)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனம், கன்னி அல்லது மிதுனமாக இருக்க, இலக்கனாதிபதியாகிய புதன் ஆறாம் இடத்தில் இருக்க, அல்லது ஆறாம் இடத்திற்கதிபனோடு சேர்ந்து இருக்க, ஆண் குழந்தை பிறக்க, அவன் ஆண்மைத்தன்மை அற்றவனாக இருப்பான். ஆயினும் ஆணைப்போன்று முகத்தில் மீசை, தாடி உடையவனாக விளங்குவான்.

## இதுவுமது

ஓதுமூன் றுடையோன் பாவ
ருடன்கூட மூன்றிற் பாவர்
போதுற உதயம் தொட்டுப்
புகலாறில் இராசிக் கப்பால்
ஏதுவாம் இராசி மூன்றுக்
கிறைவரில் ஒருவர் நீச
மீதுறின் வீரி யந்தான்
விழுந்துபோம் தரணி மீதே. *(137)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்திற்கு உடையவன் பாவக்கோள்களுடன் சேர்ந்திருக்க, இலக்கனத்திற்கு மூன்றாம் இடத்தில் பாவக்கோள்கள் நிற்க, இலக்கனத்திற்கு ஆறு இராசிகளுக்குப் பிறகு, இலக்கனத்திற்கு மூன்றாமிடத்திற்கதிபதி, இராசிக்கு மூன்றாமிடத்திற்கதிபதி இவர்கள் நீசம் பெற்று இருக்கப் பிறந்த சாதகனின் வீரியம் விழுந்துபோகும்.

## நாற்காற் பலிதம், பூமி பலிதம், தானிய பலிதம், பட்சிபலிதம்

*அதிகலா பத்தில் சேயும்*
*ஐந்தொன்பான் இரவி நிற்கில்*
*எதிரிலா ஆடு மாடும்*
*எருமைபூ ஆட்சி உண்டாம்*
*சதிருடன் இவர்க ளோடே*
*தருமாந்தி இராகு கூடில்*
*பதிநவ தானி யங்கள்*
*பலபட்சி மிருகம் உண்டே.* *(138)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்தில் பதினோராமிடத்தில் செவ்வாய் நிற்க, ஐந்தாமிடம், ஒன்பதாமிடம் ஆகியவற்றில் ஒன்றில் சூரியன் இருக்க, ஆடு, மாடு, எருமை முதலான கால்நடைகளும் விளைநிலங்கள், மனைகள் உடையவனாக இச்சாதகன் விளங்குவான், இவர்களோடு மாந்தி, இராகு ஆகியவை சேர, நவதானியங்கள் மிக்கவனாக, பறவைகள், மிருகங்கள் போன்றவற்றை உடையவனாக இச்சாதகன் விளங்குவான்.

## உடல் குறைபாடு

*இலக்கனத் திரேகா ணத்துக்*
*கேழொன்பான் திரேகா ணத்திற்*
*சலத்துறு பாவர் நிற்கிற்*
*தலைகைகால் குறையாய்த் தோன்றும்*
*சொலற்படு மகரந் தன்னிற்*
*சூரியன் சனியன் திங்கள்*
*பலத்துடன் உதய மாகப்*
*பிறந்தவன் குறளை யாவன்.* *(139)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு முதல் திரேகாணத்தில் அல்லது இலக்கனத்திற்கு ஏழாமிடம், ஒன்பதாமிடம்,

திரேகாணம் ஆகியவற்றில் பாவக்கோள்கள் இருப்பின், தலை, கை, கால் முதலான உடல் உறுப்புகளில் ஒன்றில் சாதகனுக்குக் குறைபாடு ஏற்படும். சென்ம இலக்கனம் மகரமாக, அதில் சூரியன், சனி, சந்திரன் ஆகியவை இருக்கப் பிறந்த சாதகன், குள்ள உருவினனாக விளங்குவான்.

### தரித்திரன்

*ஆக்கிய உதயம் வெள்ளி*
*ஐந்தினில் செவ்வாய் ஒன்பான்*
*தேக்கிய மதியும் பத்திற்*
*செய்யலா பத்திற் பொன்னோன்*
*றாக்கிய நீச மாயிற்*
*றரித்திர யோகம் என்பார்*
*பாக்கிய முடையோ னேனும்*
*உளபொருட் சேத மாமே.* *(140)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் சுக்கிரன் இருக்க, இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் செவ்வாய் நிற்க, ஒன்பதாமிடத்தில் சந்திரன் அமர, பத்தாமிடத்தில் அல்லது இலாபத்தானமாகிய பதினோராமிடத்தில் குரு நீசமடைந்து இருந்தால், இச்சாதகன் தரித்திரம் உடையவனாக இருப்பான். செல்வங்கள் இருப்பினும் அப்பொருட்கள் அழிந்து போகும்.

### புத்திரர் அழிவு, வறுமை

*நீண்ட கதிரோன் நீசத்தில்*
*நீசாங் கிசம்பெற் றிடிற்றுன்பம்*
*பூண்ட தனம்போம் தரித்திரமாம்*
*புதல்வர் நாசம் கிலேசமதாம்*
*ஆண்ட புகரோன் சேத்திரத்தில்*
*அதிக நீசாங் கிசமேறில்*
*வேண்ட வேண்டும் பதியிழந்து*
*மிகவும் தாரித் திரமாமே.* *(141)*

(இ-ள்.) சூரியன் நீசமடைந்து, நீசாங்கிசத்தைப் பெற்றிருப்பின் இச்சாதகனுக்குத் துன்பமாகும். செல்வம் கைவிட்டுப் போய் தரித்திரம் உண்டாம். இவனுடைய புதல்வர்கள் அழிவார்கள். மனதில் கவலை நிறைந்திருக்கும். சுக்கிரன் ஆட்சிபெற்று, நீசாங்கிசத்தில் நிற்பின் தன்னுடைய வாழிடத்தை இழந்து தரித்திரனாக இச்சாதகன் விளங்குவான்.

## அங்கப் பழுதினன், தந்த விகாரி

கரியவன் அரவுடன் அல்லதுசேய் பார்க்கக் கலந்தேழிற்
பரிவுற வேபெற னற்றிடில் அங்கப் பழுதாவன்
றெரிசர மேறுமி லக்கன மாகத் தீயோர்கள்
முரிவொடு பார்க்கிற் தந்த விகாரி மொழிவீரே. *(142)*

(இ-ள்.) சனி, இராகுவுடன் சேர்ந்திருக்க, அல்லது சனியைச் செவ்வாய் பார்க்க, அல்லது இவை இரண்டும் இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் கூடி இருந்தால், உடல் உறுப்புக் குறைபாடு உடையவனாக இருப்பான். சென்ம இலக்கனம் சர இராசியாக இருக்க, பாவக்கோள்கள் அதனைப் பார்க்க, அவலட்சணமான பற்களை உடைவனாக விளங்குவான்.

## இரட்டைத் தலையன், கை காற்களிற் குறையுள்ளவன்

சேரும் உதயத் திரேகா ணத்தினிலிற் திகழ்செவ்வாய்
சாரும் சனிரவி பார்த்திட இரட்டைத் தலையாவன்
ஆரும் உதிப்புக் கைந்தாந் திரேகா ணச்சேயைக்
கூறும் அருக்கன் சனிபார்க் கிற்கால் கைக்குறையே. *(143)*

(இ-ள்.) உதயத் திரேகாணத்தில் செவ்வாய் இருக்க, இதனைச் சனி, சூரியன் ஆகியோர் பார்த்திட இச்சாதகன் இரட்டைத்தலையினை உடையவன். இலக்கனத்திற்கு ஐந்தாம் திரேகாணத்தில் உள்ள செவ்வாயைச் சூரியன், சனி ஆகியோர் பார்க்க, இச்சாதகன் கால் கைகளில் குறை உடையவனாக விளங்குவான்.

## அங்கப் பழுதினன், காலிற் குறையுள்ளவன்

*சித்துள ஏழிற் சேயும் இரண்டிற் றிகழ்பானு*
*பத்தினில் இந்துற முற்றிடில் அங்கம் பழுதாவன்*
*ஒத்திடு கடக லக்கன மல்லா தொருபத்தா*
*யத்திடு மதியைச் சனிதான் பார்க்கிற் றாலூனம். (144)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் செவ்வாய் இருக்க, இரண்டாமிடத்தில் சூரியன் நிற்க, பத்தாம் இடத்தில் சந்திரன் நிற்க, இச்சாதகன் உடல்குறைபாடு உடையவனாக இருப்பான் - கடக இலக்கனத்தையன்றி, மற்றவை சென்ம இலக்கனங்களாகப் பத்தாம் இடத்தில் உள்ள சந்திரனைச் சனிபார்க்கில் இச்சாதகன் உடல்குறைபாடு உடையவனாக இருப்பான்.

## அதிக விரல்

*அற்புத லக்கனம் ஐந்தினில் ஒன்பதிற்*
*பொற்புள புந்தி பொருந்துற மற்றவர்கள்*
*துர்ப்பல மாயிடிற் றோன்றுங் கால்களிற்*
*கற்பில் அதிக விரல்களைக் காட்டுமே. (145)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடம், ஏழாமிடம் இவற்றில் ஒன்றில் புதன் நிற்க, மற்ற கோள்கள் அனைத்தும் தீயபலம் உடையவர்களாக இருப்பின், அந்தச் சாதகனின் கால்களில் ஐந்திற்கு மேற்பட்ட விரல்கள் இருக்கும்.

## ஊமை, ஊமையாகப் பிறந்து சிறிது நாட்களில் பேசுபவன்

*விடையினின் மதிதான் இருந்திட மீனம்*
*விருட்சிகம் கடகவங் சத்திற்*
*கடைபடு கின்ற நவாங்கிசம் அதனிற்*
*கருதிய மூன்றினிற் கடுங்கோள்*

*இடைவிடா திருக்கப் பிறந்திடும் செல்வன்*
*எண்ணமில் ஊமையாம் நற்கோள்*
*அடைவுற நோக்கிற் சிறிதுநாட் கழித்து*
*பின்னர்வாக் குண்டென அறையே.* (146)

(இ-ள்.) இடப இலக்கனத்தில் சந்திரன் இருந்திட, மீன, விருச்சிக, கடக நவாம்சங்களில் இலக்கனத்திற்கு மூன்றாம் இடத்தில் பாவக்கோள்கள் இருக்க, இச்சாதகன் செல்வனாக இருப்பான். ஆனால் ஊமையாக இருப்பான். நற்கோள்கள் பார்க்க, சிறிது நாட்கள் சென்றபின் பேசும் சக்தியைப் பெறுவான்.

**ஊமை, மத்திய வயதில் ஊமை**

*அழிவுறு தீக்கோள் திசையினிற் பொசிப்பில்*
*அலவனிற் சிங்கத்திற் சந்திரன்*
*பழிபடு பாவர் நிற்கினும் ஊமை*
*பகருங்கா லத்தி லேதான்*
*வழிபடும் தேளில் வில்லினிற் சந்திரன்*
*மன்னிய குழவியே தோன்றிற்*
*றெளிவொடு வாழ்ந்து மத்திய வயதில்*
*செய்யவாய் அடைத்திடும் என்பர்.* (147)

(இ-ள்.) தீயக்கோள்களின் திசைகளில், புத்திகளில் கடக இலக்கனத்தில், சிங்க இலக்கனத்தில் நின்ற சந்திரனுடன் பாவக்கோள்கள் நின்றால், இச்சாதகன் ஊமையாக விளங்குவான். அதைப்போல விருச்சிக இலக்கனத்தில், தனுசு இலக்கனத்தில் சந்திரன் இருக்கப் பிறந்த குழந்தைக்கு நடுத்தர வயதில் வரும் தீயக்கோள்களின் திசைகளில் அல்லது புத்திகளில் வாய் ஊமையாகும்.

## ஐந்து வயதில் பேசமுடியாமல் போனவன்

*சதிருள மீனம் மேடத்தின் நடுவாம்*
*சந்தியிற் கொடியகோள் நிற்க*
*மதியுடன் பிறந்த பாலகன் றனக்கே*
*வரும்வய தைந்தினில் வாய்போம்*
*முதிகொடுங் கோள்கள் ஓரைசந் தியிற்கான்*
*முளைபெறிற் குளறும்வாய் சற்றே*
*அதில்வெகு கிரகம் நிற்கினும் ஊமை*
*ஆமெனச் செப்புவர் அணங்கே !* *(148)*

*(இ-ள்.)* மீன, மேட இராசிகளுக்கு இடையில் சந்திரனுடன் பாவக்கோள்கள் நிற்கப் பிறந்த குழந்தைக்குப் ஐந்தாம் வயதில் வாய் ஊமையாகும். கொடிய கோள்களுக்கு இடையே உள்ள இராசியில் பிறந்த சாதகனுக்கு வாய் குளறும். அதிகக் கோள்கள் அந்த இராசியில் இருந்தாலும் இச்சாதகன் ஊமையாவான் என்று கூறுவார்கள் என்பதைப் பெண்ணே நீ அறிவாயாக !

## பல்லுடன் பிறப்பன்

*அரும்பிய மிதுனம் கன்னியிற் புந்தி*
*அங்கிசம் தனிற்செவ்வாய் காரி*
*இருந்துதான் உதயம் செய்திடப் பிறந்தோன்*
*இலக்கனம் இன்றியே அடுக்காய்த்*
*திருந்திய வாயிற் பல்லுடன் பிறக்கும்*
*சேய்சனி உச்சமே யாகிற்*
*பெரும்பல்ல தாக நிரம்பிய வாயாய்ப்*
*பிறந்திடும் பேடிளம் மயிலே !* *(149)*

*(இ-ள்.)* இளமையான பெண் மயிலின் சாயலை யுடைய பெண்ணே! மிதுனம்,கன்னி இராசிகளில் புதனிருக்க, இலக்கனத்தில், புதனின் அங்கிசத்தில், செவ்வாய், காரி ஆகிய இரண்டும் இருக்கப் பிறந்த குழந்தைக்கு ஒழுங்கின்றி அடுக்கடுக்காய் வாயில் பற்கள் நிறைந்திருக்கும். செவ்வாய், சனி ஆகிய இரு கோள்களும் உச்சமாக இருக்கப் பிறந்த குழந்தைக்கு வாயில் பற்கள் இருக்கும்.

## முதுகில் வளைவு உடையவன்

கலைமதி தன்னைச் சேயெதிர் பார்க்கக்
கடகந்தான் இலக்கன மாகக்
குலவிடப் பிறந்தோன் கூனனே யாவன்
குறித்திடு மதிசெவ்வாய் சனியன்
அலைவிலா மீனம் தன்னையே நோக்க
வாங்கது உதயமாய்ப் பிறந்தோன்
சிலைகவர் நுதலாய் ! கூனனாம் என்னச்
செப்பினர் கணிதநூ லவரே ! (150)

(இ-ள்.) வில்போன்ற அழகான நெற்றியை உடையவளே ! சென்ம இலக்கனம் கடகமாக இருக்க, அதிலுள்ள நிறைந்த சந்திரனை செவ்வாய் பார்க்கப் பிறந்த சாதகன், கூனனாக விளங்குவான். மீன இலக்கனத்தைச் சந்திரன், செவ்வாய், சனி ஆகிய கோள்கள் பார்க்கப் பிறந்தவன், கூனனாக இருப்பான் என சோதிட நூல் கற்ற வல்லுனர்கள் கூறியுள்ளார்கள்.

## செவிடன், குறளன்

மீனம்தேள்கடகம் வந்ததின் மதிதான்
மிகுபாவர்தன்னுடன் நிற்க
தானது உதய மாகவே பிறந்தோன்
றரணியிற் செவிடனே யாவன்
வானுறு கதிரோன் மதிசனி பார்க்க
மகரலக் கனந்தனிற் பிறந்தோன்
நானில மீதிற் குறளனாய்ப் பிறப்பன்
நறைகமழ் கமலமின் கொடியே ! (151)

(இ-ள்.) மணம் நிறைந்த தாமரை போன்ற முகத்தையும், மின்னலை ஒத்த இடையையும் உடைய பெண்ணே ! மீன, விருச்சிக, கடக இலக்கனங்களில் சந்திரன் பாவக்கோள்களுடன் கூடி நிற்கப் பிறந்தவன் இவ்வுலகில்

செவிடனாக வாழ்வான். மகர இலக்கனத்தைச் சூரியன், சந்திரன், சனி ஆகியோர் பார்க்கப் பிறந்த சாதகன், இவ்வுலகில் குள்ளனாக இருப்பான்.

## துடையின்கீழ் குறைவு, உடல் குறைபாடு

*ஆமக ரத்திற் பிறந்திடச் சனியன்*
*அருக்கனும் நோக்கிடிற் றுடைக்கீ*
*ழேமிகக் குறைவாம் மதிசனி கதிரும்*
*எதிருற நோக்கிடிற் றானே*
*கோமள மான அவையவங் களிலே*
*குறையுண்டாம் இவர்களே பெலக்கிற்*
*றாமிவர் பெலமே இல்லையே யாகிற்*
*சங்கம்வந் தெய்திடும் என்பார்.* *(152)*

*(இ-ள்.)* சாதகன், மகர இலக்கனத்தில் பிறந்திட, சனி, சூரியன் இருவரும் அதனை நோக்க, துடைக்குக் கீழ் உடல் குறைபாடு இருக்கும். பலம் பெற்ற சந்திரன், சனி, சூரியன் மூவரும் கூடி நோக்க, உடல் குறைபாடு உடையதாக இருக்கும். இவர்கள் பலமற்று இருக்கில், சங்கம் வந்து சேரும் என்பார்கள்.

## உடல் குறைபாடு

*எண்ணமார் ஐந்தொன் பானில்*
*இராசியின் திரேகா ணத்தும்*
*வண்ணமாம் உதயத் துந்தான்*
*வலியதீக் கோள்கள் நிற்கிற்*
*திண்ணமாம் அவய வங்கள்*
*செப்பிய குறையாம் என்பர்*
*வெண்ணில வதனைப் போல*
*விளங்கிய முகத்தி னாளே!* *(153)*

*(இ-ள்.)* நிறைந்த சந்திரனைப் போன்ற ஒளிபொருந்திய முகத்தை உடைய பெண்ணே! இலக்கனத்திலும் இலக்கனத்

திற்கு ஐந்தாமிடம், ஒன்பதாமிடம் ஆகியவற்றிலும் இராசிக்குத் திரேகாணத்திலும் பாவக்கோள்கள் நிற்கில், இச்சாதகன் குறையுடைய உடல் உறுப்புகளைப் பெற்றவனாக இருப்பான்.

**சப்பாணி**

செப்பிய மேடம் இடபந்தண் டதனிற்
திரேகாணம் ஒன்பது தன்னில்
ஒப்பமாம் மேடம் தன்னிலே ஒன்றில்
உயரிட பத்தினில் இரண்டிற்
றப்பிலா மிதுனம் தன்னிலே தானே
தானதி லக்கன மாக
இப்புவி வந்தோன் பாரிற்சப் பாணி
இனியவர் நோக்கிடில் நடப்பான். *(154)*

(இ-ள்.) மேட, இடப, மிதுன இராசிகள் திரேகாணமாக ஒன்பதாமிடத்தில், மேட இலக்கனத்தில், பத்தாமிடத்தில், இரண்டாமிடத்தில், மிதுன இலக்கனத்தில் இருக்கப் பிறந்த சாதகன் இவ்வுலகில் சப்பாணியாக விளங்குவான். இவ்விடங்களைச் சுபக்கோள்கள் நோக்கிடில் நன்றாக நடப்பான்.

**கைகால்களில் ஊனம், சிறியதலை**

சென்றவைந் தாமி ராசித்
திரிகோணம் மூன்றிற் பாவர்
நின்றிடிற் கால்கை ஊனம்
நிகரொன்பான் மூன்றிற் பாவர்
ஒன்றிற்கால் குறைந்தி ருக்கும்
உதயத்தின் மூன்றில் பாவர்
ஒன்றிடிற் தலைசி றுக்கும்
ஒளிமதி முகத்தி னாளே! *(155)*

*(இ-ள்.)* ஒளிர்கின்ற நிறைந்த சந்திரனைப் போன்ற முகத்தையுடைய பெண்ணே ! ஐந்தாம் இராசியான திரேகாணத்திற்கு மூன்றாமிடத்தில் பாவர் இருக்க, சாதகனின் கால், கை முதலானவற்றில் ஊனம் இருக்கும். ஒன்பதாமிடம், மூன்றாமிடம் ஆகியவற்றில் பாவர் இருக்க, இச்சாதகனுக்கு ஒருகால் இல்லாமல் இருக்கும். இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் பாவக்கோள் நிற்க இச்சாதகனுக்குத் தலை சிறியதாக இருக்கும்.

## தோஷ நிவர்த்தி

நாளும்தீக் கோட்கள் கூட
நண்ணிய சுபர்நோக் காரேற்
சூழுமிப் படிப்ப லிக்குஞ்
சொலுந்தீயோர் பலமே குன்றி
வீழுற நற்கோள் பார்க்கின்
விளங்கிய மகவங் கத்திற்
கோளுறு வியாதி தன்னைக்
குறிப்பறிந் துரைக்க லாமே. *(156)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்தில் தீயகோள்கள் நிற்க, சுபக்கோள்கள் பார்க்கவில்லை என்றால், இச்சாதகனுக்குக் காலில் ஊனம் ஏற்படும். தீயக்கோள்கள் பலம் குன்றி இருக்க, சுபக்கோள்கள் நோக்கில் பிறந்த குழந்தையின் உடலில் தோன்றும் வியாதியைக் குறிப்பறிந்து உரைக்க வேண்டும்.

## கால் முன்னாய் பிறப்பன், கொடி நின்று பிறப்பன்

பாம்புத யத்தில் நிற்கப்
பத்தினிற் சாமி மேவிற்
தேம்பிகால் முன்னாய்த் தோன்றும்
செய்யகேந் திரத்தோன் பாம்பு
மாம்பரி யுடனே கூடி
ஆனலக் கனத்தில் நிற்கிற்
றாம்பருங் கொடியே சுற்றித்
தரணியில் பிறக்கும் சொல்வாம். *(157)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் இராகு அல்லது கேது இருக்க, பத்தாமிடத்தில் இலக்கனாதிபதி விளங்க அக்குழந்தை பிறக்கும்பொழுது கால் முதலில் வெளிவரும். கேந்திரத்தோன் இராகு அல்லது கேதுவுடன் கூடி இலக்கனத்தில் நிற்க, அக்குழந்தை இவ்வுலகில் கொடி சுற்றிப்பிறக்கும்.

## கொடி சுற்றிப் பிறப்பன்

*குறித்தலக் கனத்தில் இராகு*
*குளிகனும் கூடி நிற்க*
*வெறித்தலக் கனத்தோன் எட்டாம்*
*இடத்துடை யவனும் கூடிச்*
*செறிப்புறு குரூர ராசித்*
*திரேகாணம் தன்னில் நிற்கிற்*
*புறப்படுங் கொடியே சுற்றிப்*
*பிறந்திடும் என்று சொல்வார். (158)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் இராகுவும், குளிகனும் கூடி நிற்க, இலக்கனாதிபதி, எட்டாமிடத்ததிபதியுடன் கூடி, குரூர ராசியான திரேகாணத்தில் நிற்கில், அக்குழந்தை இவ்வுலகில் பிறக்கும் காலத்தில் கொடிசுற்றிப் பிறக்கும் என்று சொல்வார்கள்.

## இதுவுமது

*அனையசர்ப் பத்திரே காண*
*மாலைக் கனத்திரே காணம்*
*புனையிலக் கனேசன் தானே*
*பொருந்திய திரேகா ணந்தான்*
*தனையிலக் கனம தாகத்*
*தருநல்லோர் பாரா ராகில்*
*வனையுறு கொடியே சுற்றி*
*மண்ணின்மேற் பிறக்கும் என்பார். (159)*

*(இ-ள்.) அழகுறு பூங்கொடியைப் போன்ற பெண்ணே! இலக்கனத் திரேகாணம், பாம்பின் திரேகாணமாக இருக்க, இலக்கனேசன் பொருந்தியுள்ள திரேகாணம் இலக்கனமாக இருக்க, நற்கோள்கள் பார்க்கவில்லையென்றால், அக் குழந்தை இப்புவிமேல் பிறக்கும் காலத்தில் கொடிசுற்றிப் பிறக்கும்.*

**இதுவுமது**

*சிந்தைகூ றிடப மேடம்*
*சிங்கமே உதய மாகப்*
*புந்தியும் சனியும் கூடப்*
*பொருந்திடும் மகவே தோன்றிற்*
*கொந்தவிழ் உடலில் பின்னிக்*
*கொடிசுற்றிப் பிறக்கும் என்பார்*
*அந்தரம் மின்னைப் போலும்*
*அழகிய இடையி னாளே. (160)*

*(இ-ள்.) வானில் மின்னக்கூடிய ஒளிபொருந்திய அழகான இடையை உடையவளே ! சென்ம இலக்கனம், மேடம் , இடபம், சிம்மம் இவற்றில் ஒன்றாக இருக்க, புதனும் சனியும் ஒன்றாக அதிலிருக்க, குழந்தை பிறக்கும் பொழுது அதன் உடலில் கொடி சுற்றி இருக்கும்.*

**இதுவுமது**

*விரவிஇலக் கனத்திற் பாவர்*
*மேவிடக் கொடியோர் பார்க்கக்*
*கரியராக் கேது கூடிக்*
*கடியகோள் வீடு தானே*
*பரவியக் கனம தாகிற்*
*பண்புறு தேகம் மீதிற்*
*றரணியின் மாலை யிட்டுத்*
*தான்கொடி சுற்றும் தானே. (161)*

*(இ-ள்.) சென்ம இலக்கனத்திற் பாவக்கோள்கள் நிற்க, இவற்றைப் பாவக்கோள்கள் பார்க்க, இராகு அல்லது கேது*

கூடி இருக்க, இலக்கனம் பாவக்கோள்களின் வீடாக இருக்க, குழந்தை பிறக்கும்பொழுது அதன் உடலில் கொடி சுற்றி இருக்கும்.

**இதுவுமது**

நடக்கும்லக் கனத்தீக் கோட்கு
நடுவாகப் பாம்பு நிற்கத்
தொடுத்தலக் கனத்தைச் செவ்வாய்
சூரியன் பார்க்கிற் றானும்
வடுத்தவி ருதயந் தன்னை
மந்தன்சேய் பார்க்கு மேனும்
தடுத்திடாக் கொடியே சுற்றித்
தரணியிற் பிறப்பன் மாதே! *(162)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் தீயகோள்களுக்கு நடுவே பாம்பு நிற்க இலக்கனத்தைச் செவ்வாய், சனி ஆகிய கோள்கள் பார்த்தாலும், சென்ம இலக்கனத்தை சனி, செவ்வாய் ஆகிய கோள்கள் பார்த்தாலும், குழந்தை பிறக்கும் பொழுது கொடி சுற்றி இருக்கும்.

**ஞானி, குருவருள் உடையவன்**

கன்மநா யகன்தன் னோடே
காட்சியாம் மூன்று கோட்கள்
தன்மையாய்க் கூடி நின்றால்
சன்யாசி யோகம் உண்டாம்
பொன்மையால் ஒருகோள் கூடிற்
பொருந்திய ஞானி யாவன்
இன்மையிற் குருகடாட் சத்தில்
இனிதறிந் துரைத்தல் வேண்டும். *(163)*

(இ-ள்.) பத்தாமிடத்திற்கு அதிபதியுடன் மூன்று கோள்கள் ஒன்றுகூடி இருந்தால் இச்சாதகன், சன்யாசி ஆவான். இதனுடன் ஒருகோள் கூடி இருக்க, இச்சாதகன் ஞானியாக இருப்பான் அல்லது குருவருள் பெற்றவனாக உபதேசிப்பவனாக விளங்குவான் என்று கூறுதல் வேண்டும்.

இலக்கன பாவம் முற்றிற்று.

## இரண்டாம் பாவம்

### செல்வன்

*அரியுதயத் திரவிநிற்க சுபர்பார்க்கு மேனும்*
*ஆனரெண்டுக் கிறைசாமி யுடன்கூடு மேனும்*
*சரியிரண்டோன் இலக்கனத்தைத் தான்பார்க்கு மேனும்*
*தனம்வியத்தோ ரேகூடி நாலொன்ப துறினும்*
*பிரிவில்சேய் சனிகூடி இரண்டைந்து பத்திற்*
*பலத்திடினும் ஒன்பதிற்பொன் மூன்றில்மதி வெள்ளி*
*தெரிவுடன்கூடி டினும்ஒன்பான் தன்னினுச்சர் நிற்க*
*சிறக்குமிறை வன்பலக்கிற் செய்யதன முளனே. (164)*

(இ-ள்.) சிம்ம இலக்கனத்தில் சூரியன் நிற்க, சுபக் கோள்கள் பார்த்தாலும் இரண்டாம் இடத்திற்கு அதிபதி இலக்கனாதிபதியுடன் கூடி இருக்குமாயினும், இரண்டா மிடத்திற்கு உடையவன் இலக்கனத்தைப் பார்த்து நிற்குமாயினும், இரண்டாமிடத்தோன், பன்னிரண்டா மிடத்திற்கதிபதியோடு கூடி, நான்காமிடம், ஒன்பதாமிடம் இவற்றில் இருந்தாலும், செவ்வாய், சனி கூடி, இரண்டாமிடம், ஐந்தாமிடம், பத்தாமிடம் இவற்றில் பலம் பெற்று இருக்குமாயினும் ஒன்பதாமிடத்தில் குரு, மூன்றாமிடத்தில் சந்திரன், சுக்கிரன் இவர்கள் கூடியிருப்பினும் ஒன்பதாமிடத்தில் உச்சம்பெற்ற கோள் இருக்க, இலக்கனாதிபதி பலம் பெற்று இருந்தாலும் இச்சாதகன் மிகுந்த செல்வத்தை உடையவனாக இருப்பான்.

### இதுவுமது

ஆகிய உதயம் தன்னில்
ஆனதோர் சாமி நிற்க
வேகிய இரண்டு தொட்டே
வியன்மற்றோர் நிறையாய் நிற்கில்

வாகினில் உடைய னான
மன்னிய தனவா னாவன்
பாகினில் கலந்த செந்தேன்
பாலையும் பழிக்கும் சொல்லாய். (165)

(இ-ள்.) சர்க்கரைப் பாகுடன் செந்தேனையும் பாலையும் கலந்த இனிமையைப் பழிக்கும் இனிய மொழியை உடைய பெண்ணே ! சென்ம இலக்கனத்தில் இலக்கனாதிபதி இருக்க, இரண்டாமிடம் பன்னிரண்டா மிடம் வரை மற்றக்கோள்கள் அனைத்தும் நிற்க, இச்சாதகன் நிலைபெற்ற தனவானாக விளங்குவான்.

## இதுவுமது

இரவியொரு மூன்றின்மதி ஐந்தினிற்பொன் ஒன்பதினில்
இருக்கு மேனும்
கரவின்மதி மூன்றினிற்பக் குருவைந்தில் ஒன்பதினிற்
கதிர்நின் றாலும்
பரவியவில் லுதயத்திற் பானுநிற்கச் சேயுமதி
பத்தின் மேவ
விரவியபாக் கியத்தனவான் விற்பொருதும் பொற்புருவ
விழிமின் னாளே. (166)

(இ-ள்.) வில்லை தோற்கடிக்கச் செய்யும் பொன் போன்று விளங்கும் புருவங்களையும் மின்னலை ஒத்த இடையையும் உடைய பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் சூரியன், இருக்க, ஐந்தாம் இடத்தினில் சந்திரன் இருக்க, ஒன்பதாம் இடத்தில் குரு இருக்க அல்லது சந்திரன் மூன்றில் நிற்க, குரு ஐந்தில் நிற்க, ஒன்பதாம் இடத்தில் சூரியன் நின்றாலும், தனுசு சென்ம இலக்கனமாக அதில் சூரியன் நிற்க, செவ்வாயும் சந்திரனும் பத்தாமிடத்தில் கூடி நிற்க, இச்சாதகன் சகல பாக்கியங்களையும் உடையவனாக விளங்குவான்.

## ஆயிரம் பொன் உடையவன்

*ஈண்டுமிரண் டாமிடத்துக் கிறைவன்லா பத்திருக்க*
*வியலா பத்தோன்*
*வேண்டிலக் கனத்திருக்கில் லக்கனேசன் கேந்திரகோணம்*
*மேவ வேதா*
*ருண்டுகந்த குருவெள்ளி பார்க்கிலா யிரம்பொன்னை*
*ஆசிப் பானே*
*நீண்டுபணா முடிக்கொளிசெய் நாகமணி இருக்குமல்குல்*
*தேரி னாளே!* *(167)*

*(இ-ள்.)* நீண்டு பெரிய பாம்பின் படத்திற்கு அழகு சேர்க்கும் நாகமணியையொத்து ஒளிரும் அல்குலையும் தேரின் அசைவைப் போன்ற நடையினையும் உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்திற்கு அதிபதி இலாபத்தில் இருக்க, பன்னிரண்டாம் இடத்திற்கு அதிபதி, இலாபத்திற்கு அதிபதியான பதினோராம் இடத்திற்கு அதிபதி இலக்கனத்தில் இருக்க, இலக்கனாதிபதி கேந்திர திரிகோணங்களில் இருக்க, குரு, சுக்கிரன் பார்க்க இச்சாதகன் ஆயிரம் பொன்னுக்கு உரிமையுடையவனாக விளங்குவான்.

## இதுவுமது

*உருக்கும் கதிரோன் றெண்டுக்*
*குடையோர்மித் திரராய் இரண்டில்*
*இருக்கிலொன் பதிலா பத்துக்*
*கிறையவ ருடனே கூடிப்*
*பெருக்குக்கேந் திரகோ ணத்திற்*
*பெட்புறில் ஆயி ரம்பொன்*
*வருக்கமாய்த் தேட வல்லன்*
*வளரிள முலையி னாளே.* *(168)*

*(இ-ள்.)* வளர்கின்ற இளமைமிகு கொங்கைகளை உடைய பெண்ணே! சூரியனும் சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் நட்போடு ஒன்றுகூடி இருக்க அல்லது ஒன்பதாம் இடத்தில், பதினோராம் இடத்திற்கு

அதிபதியுடனே கூடி, கேந்திர திரிகோணங்களில் பலம் பெற்று விளங்க, இச்சாதகன் ஆயிரம் பொன்னைத் தேட வல்லவனாக இருப்பான்.

## இரண்டாயிரம் பொன் தேடுபவன்

*இசையும் உத்த மாங்கிசத்தில் ஏற்றதனா திபனிருக்க*
*திசையிலா பத்தி றையைத் தேவகுரு தான்கூடி*
*நசையி ருக்குஞ் சிங்காச னங்கிசத்தி லேயிருக்கில்*
*வசையிலா னாகி இரண்டா யிரம்பொன் தேடுவனே. (169)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்திற்கு அதிபதி உத்தமாங்கிசத்தில் இருக்க, பத்தாம் இடத்திற்கு அதிபதியோடு குரு கூடி சிங்காசனாங்கிசத்தில் இருக்க, இரண்டாயிரம் பொன்னைத் தேடி, சம்பாதிப்பவனாக இச்சாதகன் விளங்குவான்.

## இதுவுமது

*ஊனமில் தனமே சன்தானுற் றிருந்த வங்கிசபதி*
*தானி ருந்த ராசித் தலைவன் சனியிருந்த*
*வீனமில் சத்தாங் கிசத்தில் இவர்பெலக்கப் பொன்வெள்ளி*
*ஆனஎதிர்ப் பார்க்கில் இரண்டா யிரம்பொன் தேடுவனே. (170)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்திற்கு அதிபதி இருந்த அங்கிசாதிபதி நின்ற இராசியாதிபதி சனியிருந்த சப்தாங்கிசத்தில் பலம்பெற்று விளங்க, குரு, சுக்கிரன் பார்க்க, இச்சாதகன் இரண்டாயிரம் பொன்னைத் தேடிச் சேகரிப்பவனாக விளங்குவான்.

## மூவாயிரம் பொன் தேடுபவன்

*எண்ணிய இரண்டி ரண்டுக் கிறைசுப வர்க்க மாக*
*நண்ணிடக் கேந்திர கோணம் நற்சுப வர்க்க மாகத்*
*திண்ணமாம் தீக்கோ ளானோர் சேராமல் எதிர்ப்பா ராமற்*
*பண்ணில திருக்கும் மாதே படைப்பன்மூ வாயி ரம்பொன். (171)*

(இ-ள்.) பெண்ணே! ஜென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடம், இரண்டாமிடத்திற்கு அதிபதி சுபவர்க்கமாக இருக்க, கேந்திர கோணங்களில் சுபக்கோள்கள் இருக்க, பாவக் கோள்கள் இவற்றோடு சேராமலும் பார்க்காமலும் இருக்க, இச்சாதகன் மூவாயிரம் பொன்னைத் தேடிச் சேகரிப்பான்.

**இதுவுமது**

*ஏற்றிய மூர்த்தி ரெண்டில்*
*இருக்கலா பேசன் பத்திற்*
*தோற்றிடத் தனத்தோன் நின்ற*
*தூயஅங் சாதி பன்றான்*
*ஆற்றியம் சவுமி யன்தா*
*னாகியே பார்ப்பா ராகிற்*
*சேற்றிடும் அடைவே தேடிச்*
*சேர்ப்பான்மூ வாயி ரம்பொன். (172)*

(இ-ள்.) ஜென்ம இலக்கனாதிபதி இரண்டில் இருக்க, இலாபாதிபதி பத்தாமிடத்தில் நிற்க, இரண்டாமிடத்திற்கு அதிபதி நின்ற அங்கிசாதிபனை நற்கோள்கள் நோக்கு வாராகில், இச்சாதகன் மூவாயிரம் பொன்னைத் தேடிச் சேர்ப்பவனாக விளங்குவான்.

**நாலாயிரம் பொன் தேடுபவன்**

*ஐயமில் தனத்தோ னோடே*
*அந்தணன் இரவி திங்கள்*
*செய்யவை சேடி காங்கசத்*
*தினிலுற நல்லோர் தன்னைப்*
*பையலா பேசன் கூடிப்*
*பார்த்திடில் இவர்கேந் திரங்கள்*
*உய்யகோ ணத்தின் மீதிற்*
*தொகுப்பனா லாயி ரம்பொன். (173)*

(இ-ள்.) ஜென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்திற்கு அதிபதியுடன் குரு, சூரியன், சந்திரன் ஆகியோர் சேர்ந்து வைசேடி காங்கிசத்தில் இருக்க, பதினோராம்

இடத்திற்கு அதிபதி சுபக்கோள்களுடன் கூடி இருக்க, அல்லது அவர்களைப் பார்க்க, இக்கோள்கள் கேந்திர திரிகோணங்களில் இருக்க, இச்சாதகன் இவ்வுலகில் நான்காயிரம் பொன்னைத் தேடிச் சேர்ப்பவனாக விளங்குவான்.

## ஐயாயிரம் பொன் தேடுபவன்

ஒளிகொதனத் தோனிருந்த திரேகாண அதிபன்
உற்றவங்கி சாதிபதி உத்தமாங் கிசத்திற்
தளிர்கொள்சுப வர்க்கமுறில் அமுதநகை மாதே!
தானையா யிரம்பொனுளன் உதயநா யகன்தான்
மொழியிரண்டி லிருக்கலா பத்துடையோன் பத்தின்
முற்றிநிற்க தனத்தோனும் அங்கிசனும் பார்க்க
வழியிலகு முடனிருக்கிற் தானையா யிரம்பொன்
மாசித்தி யுடையனென்பர் மதர்நெடுங்கண் மயிலே!. (174)

(இ-ள்.) மதர்த்த நீண்ட கண்களையும் மயில்போன்ற சாயலையும் உடைய பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்திற்கு அதிபதி இருந்த திரேகாண அதிபனின் அங்கிசாதிபதி உத்தமாங்கிசத்தில் இருந்து சுபவர்க்கமுறில், இச்சாதகன் ஐயாயிரம் பொன்னை உடையவனாக விளங்குவான். சென்ம இலக்கனாதிபதிக்கு இரண்டாமிடத்திற்கு அதிபதி இரண்டாம் இடத்தில் இருக்க, பதினோராம் இடத்திற்கு அதிபதி பத்தாமிடத்தில் நிற்க, தனத்தோனும் செவ்வாயும் பார்க்க, இவர்களுடன் சனியும் சேர்ந்திருக்க, இச்சாதகன் ஐயாயிரம் பொன்னை உடைவனாக விளங்குவான்.

## ஆறாயிரம் பொன் தேடுபவன்

ஓதிய உதயம் ரெண்டுக்
குள்ளவர் கோபு ராங்கமேறி
தீதிலாக் கேந்தி ரத்திற்
திரிகோணம் தனிலி ருக்க

வேதிலா ஒன்பான் பத்து
இறையவர் மகிழ்ந்து பார்க்கிற்
போதிலா றாயி ரம்பொன்
புதைத்திடும் சதுர்த்த னாமே. *(175)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்தில் இரண்டாம் இடத்திற் கதிபதி நின்று கோபுராங்கிசத்தில் ஏறி இருக்க அல்லது கேந்திர, திரிகோணங்களில் ஏறி இருக்க, ஒன்பதாம் இடத்தை அல்லது பத்தாம் இடத்தை இலக்கனாதிபதி நோக்க, இச்சாதகன் ஆறாயிரம் பொன்னைத் தேடிச் சேகரிக்கும் சாமர்த்தியம் உடையவனாக விளங்குவான்.

## ஏழாயிரம் பொன் தேடுபவன்

கருதுதயம் தனலாப பாக்கியத்துக் கதிபர்கடான்
காட்சி யாக
மருவுசத்தாங் கிசத்துடையோர் சுபவர்க்கந் தனையடைந்து
வலியும் மீறி
இருமைதரு சிங்காச னாங்கிசம்பெற் றிடிலேழா
யிரம்பொன் னுண்டாம்
பொருகடமா னின்கவைகாற் குளம்பனைய வகலல்குற்
பூவை மாதே. *(176)*

*(இ-ள்.)* சண்டையிடுகின்ற மானின் பிளவுபட்ட குளம்பினை ஒத்த அல்குலையும் பூவைப்போன்ற மென்மை யினையும் கொண்ட பெண்ணே! சென்ம இலக்கனம், இரண்டாமிடம், பதினோராமிடம் ஆகியவற்றிற்கு அதிபதிகள், சப்தாங்கிசம் உடையவர்கள் சுபவர்க்கத்தை அடைந்து வலிமையுடன் சிங்காசனாங்கிசம் ஏறிட, இச்சாதகன் ஏழாயிரம் பொன்னைத் தேடிச் சேகரிப்பவனாக விளங்குவான்.

## எட்டாயிரம், பத்தாயிரம் பொன் தேடுபவன்

காணும் இரண்டா மங்கிசத்துக்
கதிப ரிவரே கலந்திருக்கிற்
நாணும் படிக்கெண் ணாயிரம்பொன்
னுடைய நிவர்க டாங்கிசத்தைப்
பூணும் இவர்கள் இவ்வண்ணம்
பொருந்திற் பதினா யிரம்பொன்னுளன்
கோணும் சிலையை இளம்பிறையைக்
குறிக்கும் புருவ வில்லனமே. (177)

(இ-ள்.) வளைந்த வில்லையும் இளம்பிறையையும் ஒத்த அழகான புருவங்களையும் அன்னம் போன்ற நடையினையும் உடைய பெண்ணே! இரண்டாமிடத்திற்கு அங்கிசத்துக் கதிபருடன் இலக்கனம் இரண்டாமிடம், பதினோராமிடம் இவற்றுக்கு அதிபதிகள் கலந்திருக்க இச்சாதகன், எட்டாயிரம் பொன்னைத் தேடிச் சேகரிப்ப வனாக இருப்பான். குருவினுடைய அங்கிசத்துக் கதிபருடன் இலக்கனம், இரண்டாமிடம், பதினோராமிடம் இவற்றுக்கு அதிபதிகள் சேர்ந்திருக்க, இச்சாதகன் பதினாயிரம் பொன்னைத் தேடிச்சம்பாதிப்பவனாக விளங்குவான்.

## முப்பாதாயிரம் பொன் தேடுபவன்

கீணமாய் வியத்தில் சுன்னும்
கிளத்திய தனத்திற் பொன்னும்
வாண்மையாம் சாமி தானும்
வைசேடி காங்சம் மேவ
பாண்மையாம் தரும லர்பதத்
பறபாற் றிடிலார்ச் சிப்பன்
உண்மையில் லாமல் முப்ப
தாயிரம் பொன்னைத் தானே. (178)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் இடத்தில் சனியும் சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்திற் குருவும் இருக்க, இலக்கனாதிபதி வைசேடி காங்கிசம் ஏற, இச்சாதகன் முப்பதாயிரம் பொன்னைச் சம்பாதிப்பவனாக விளங்குவான்.

## இருபதாயிரம் பொன் தேடுபவன்

கிட்டிய தசாங்கி சத்தோர்
 கிளருமே சாங்கி சத்தை
ஒட்டிய அங்கி சத்தோர்
 உகந்திவ்வா றிருப்பா ராகில்
எட்டிய புவியின் மீதே
 இருபதி னாயி ரம்பொன்
மட்டினிற் புதைப்பன் கண்டாய்
 வடுவகிர் நிறைகண் ணாளே!. (179)

(இ-ள்.) மாவடுவைப் பிளந்தது போன்ற அழகு நிறைந்த கண்களை உடைய பெண்ணே! தசாங்கிசத்தோரில் மேஷ அங்கிசத்தை உடைய அங்கிசத்தோர் இலக்கனம், இரண்டாமிடம், பதினோராமிடம் இவற்றிற்கு அதிபதி களோடு சேர்ந்திருப்பின், இச்சாதகன், இவ்வுலகியில் இருபதினாயிரம் பொன்னைத் தேடி புதைப்பான்.

## ஐம்பதாயிரம் பொன் தேடுபவன்

குறிப்பொடு தனத்திற் சாமியும் பொன்னும்
 கூறும்வை சேடிகாங் கிசத்தில்
நெறிப்புடன் இருக்க தனத்தினுக் கதிபன்
 நீடிய லாபத்தி லிருக்கச்
செறிப்பொடு லாபத் திறைஇலக் கனத்திற்
 சென்றுற இருப்பனே யாகிற்
பொருப்பினைம் பதினா யிரம்பொன்னை உடையவன்
 புளகிதப் பூண்முலை அனமே. (180)

(இ-ள்.) அணிகலன்களை அணிந்த முலையையும் அன்ன நடையையும் உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் இலக்கனாதிபதியும் குருவும் வைசேடியாங்கிசத்தில் இருக்க, இரண்டாமிடத்திற்கு அதிபதி, பதினோராமிடத்தில் இருக்க, பதினோராமிடத்திற்கு அதிபதி இலக்கனத்தில் இருப்பா னாகில், இச்சாதகன் ஐம்பதினாயிரம் பொன்னைத் தேடிச் சம்பாதிப்பவனாக இருப்பான்.

## நூறாயிரம்பொன் தேடுபவன்

*கூறியதோர் கருமத்தோன் இருந்ததிரே காண*
*குரிசில்வங் கிசபதினா யிரம்பொன்னே உடையன்*
*மீறியதோர் புரோகிதத்தோன் பலமுடைய னாகி*
*மிகுந்தசுப கேந்திரகோ ணத்தனிலி ருந்து*
*தேறியலா பேசனுடன் ஒன்றாகக் கூடி*
*செப்பரிய வைசேடி காங்கிசமே இருக்கில்*
*ஊறியநீர் பிரவாக மாகுவதே போல*
*ஒருநூறா யிரம்பொனுண்டாய் உகந்திருப்பன்*
*மாதே! (181)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பத்தாம் இடத்திற்கு அதிபதி இருந்த திரேகாணம் குரிசில் அங்கிசமாக இருந்தால் இச்சாதகன் பதினாயிரம் பொன்னை உடையவனாக விளங்குவான். குரு பலமுடையவனாக சுபகேந்திர கோணங்களில், பதினோராம் இடத்திற்கு அதிபதியோடு ஒன்றுகூடி வைசேடிகாங்கிசம் பெற்றிருக்கில், இச்சாதகன், நிலத்தினடியில் ஊறியநீர் பெருவெள்ளமாகப் பெருகு வதைப் போல நூறாயிரம் பொன்னைத் தேடிச் சம்பாதித்து மகிழ்ச்சியுடன் விளங்குவான்.

குறிப்பு: குரிசில் பொருள் விளங்கவில்லை.

## இருநூறாயிரம் பொன் தேடுபவன்

*கெதியான கேந்திரங்கள் நான்கில்சுபர் இருக்க*
*கிளருமொன்று ரெண்டுடையோர் பாராவ தாங்சம்*
*பதியாக லாபபாக் கியத்துடையோர் உச்சம்*
*பண்புடன்நட் பாட்சிகேந் திரகோணத் திருந்து*
*புதிதான குருவர்க்கந் தனையடைந்து நிற்கிற்*
*புவிமீதில் ரண்டுலட்சம் பொன்பெறுவன் என்பார்*
*விதியாலும் எழுதரிய அதிரூப மான*
*விண்ணரசர்க் கரசான பெண்ணரசுக் கரசே! (182)*

(இ-ள்.) விதியாலும் எழுதுவதற்கு அரிய மிகுந்த அழகினையுடைய, தேவர்களுக்கெல்லாம் அரசாக விளங்கும் பெண்ணரசிகளுக்கெல்லாம் அரசியாக விளங்கக் கூடிய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்குக் கேந்திரங்களாகிய இலக்கனம், நான்காமிடம், ஏழாமிடம், பத்தாமிடம் ஆகிய இடங்களில் சுபக்கோள்கள் நிற்க, இலக்கனாதிபதி, இரண்டாமிடத்திற்கதிபதி பர்வதாங்கிசம் ஏறி இருக்க, பதினோராமிடத்திற்கதிபதி, ஒன்பதாமிடத்திற்கு அதிபதி உச்சம், நட்பு, ஆட்சி பெற்று கேந்திர திரிகோணங்களில் இருக்க, குரு வர்க்கத்தை அடைந்து இருக்க, இச்சாதகன் இவ்வுலகில் இரண்டு இலட்சம் பொன் தேடி சம்பாதிப்பான்.

## மூந்நூறாயிரம் பொன் தேடுபவன்

கேடிலா வித்தேசன் தனக்குலா பேசன்
கேண்மையாம் சதுர்த்தகேந் திரந்தன்னில் இருக்க
நீடியபாக் கியத்திறைவன் பலனுடைய னாகி
நிறைவான வைசேடி காங்கிசமே பெற்று
மூடியகேந் திரகோணம் தன்னிலே இருக்கின்
மூன்றுலட்சம் பொன்னுடையான் முசிப்பில்லா னாவன்
தேடியவே தப்பொருளின் வடமொழியாற் கணிதம்
தெரிந்துணர்ந்த பெரியோர்கள் செப்பியதிவ்
வகையே. (183)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத் ததிபதிக்குப் பதினோராம் இடத்ததிபதி நான்கு கேந்திரங் களில் ஒன்றில் இருக்க, ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி பலவானாக வைசேடிகாங்கிசம் பெற்றுக் கேந்திர திரிகோணங்களில் இருப்பின், இச்சாதகன் மூன்று லட்சம் பொன்னைத் தேடி சம்பாதிப்பவனாக விளங்குவான். இதனை வேதங்களின் பொருளை வடமொழியால் அறிந்து, கணிதம் கற்றுணர்ந்த வல்லோர்கள் கூறியுள்ளார்கள்.

## நானூறாயிரம் பொன் தேடுபவன்

கையுறு தனத்தி னானும்
காட்சியாம் இலாபத் தானும்
மெய்யுறு கிரகம் மாற
மிகுமூர்த்தி நான்கில் எய்தில்
எய்யுறு தேவ லோகாங்
கிசத்தினில் இருப்பா னாகிற்
பொய்யிலை நான்கு லட்சம்
பொன்னைஅர்ச் சிப்பன் மாதே. *(184)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்திற்கு அதிபதியும் பதினோராமிடத்திற்கு அதிபதியான இலாபாதிபனும் கிரக வர்த்தனைப் பெற்றிருக்க, இலக்கனாதிபதி நான்கில் நின்று, தேவலோகாங்கிசத்தில் இருப்பாராகில் இச்சாதகன், நான்கு இலட்சம் பொன்னைத் தேடிச் சம்பாதிப்பவனாக விளங்குவான்.

## ஐநூறாயிரம் பொன் தேடுபவன்

கொடிதன்றித் தனலா பத்தோர்
கூறிய கிரகம் மாற
வடிவுள உதய நாதன்
மந்திரி வர்க்கம் உற்றே
அடிதொழ தேவ லோகாங்
கிசம்பெற்றே ஐந்தில் நிற்கிற்
படிமிசை ஐந்து லட்சம்
பசும்பொன்னைப் படைப்பன் தானே. *(185)*

(இ-ள்.) இரண்டாமிடத்திற்கு அதிபதி பதினோராம் இடத்திற்கு அதிபதியான இலாபாதிபதி இருவரும் கிரகம் மாற (பரிவர்த்தனை) இலக்கனாதிபதி குருவர்க்கம் பெற்று, தேவலோகாங்கிசம் அடைந்து, ஐந்தாமிடத்தில் இருக்கில், இச்சாதகன் ஐந்து லட்சம் பொன்னைத் தேடிச் சம்பாதிப் பவனாக விளங்குவான்.

### பத்து நூறாயிரம் பொன் தேடுபவன்

கோதறு மூர்த்தி தானே
கூறிய தனலா பத்தை
ஓதிய பாக்கி யத்தை
உடையவர் தன்னைக் கூட
மாதிரப் பலன்கள் பெற்று
வைசேடி காங்சம் ஏறிற்
போதவே பத்து லட்சம்
பொன்னினைப் படைப்பன் தானே. *(186)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனாதிபதி, இரண்டாமிடம், பதினோராமிடம், ஒன்பதாமிடம் இவற்றிற்கு அதிபதி களோடு கூடியிருக்க, அல்லது பலம் பெற்று வைசேடி காங்கிசத்தில் ஏற, இச்சாதகன், பத்து இலட்சம் பொன்னைத் தேடிச்சம்பாதிப்பவனாக இருப்பான்.

### முப்பது நூறாயிரம் பொன் தேடுபவன்

கவுரியமந் தன்ராசன் வைசேடிகாங் சமேறக்
கனஇலாபத் திறைதேவ லோகாங்ச மாகத்
தவறில்பாக் கியத்தண்ணல் சிங்காச னாங்சம்
சாமியே ஐயிராவ தங்கிசமே பெற்று
நவமான நட்பாட்சி உச்சகேந் திரத்தில்
நலமான திரிகோணந் தன்னிலது நிற்கிற்
குவலயத்தின் முப்பதுநூ றாயிரம்பொன் படைப்பன்
குரும்பைமுலை அரும்புநகை கொஞ்சுங்கிளி
மொழியே! *(187)*

*(இ-ள்.)* குரும்பை போன்ற கொங்கைகளையும், முல்லை போன்ற பற்களையுடைய புன்னகையுடனும் கொஞ்சுகின்ற கிளியின் இனிய மொழியையும் உடைய பெண்ணே! சனியும் இலக்கனாதிபதியும் வைசேடிகாங்கிசம் ஏற, இலாபாதிபதியான பதினோராமிடத்திற்கு அதிபதி

தேவலோகாங்கிசமாக, ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி சிங்காசனம் ஏற அல்லது இலக்னாதிபதி ஐராவதாங்கிசம் பெற்று நட்பு அல்லது ஆட்சி, உச்சம் பெற்றுக் கேந்திர திரிகோணங்களில் இருந்தால், இச்சாதகன் இவ்வுலகில் முப்பது நூறாயிரம் (முப்பது இலட்சம்) பொன்னைச் சம்பாதிப்பவனாக விளங்குவான்.

## ஐம்பது நூறாயிரம் பொன் தேடுபவன்

*சரியாகும் இவர்நால்வர் வைசேடி காங்சம்*
*சாற்றறிய ஐராவ தாங்கிசமு மாகி*
*அரிதான கேந்திரகோ ணந்தனிலே இருக்கில்*
*அன்பதுநூ றாயிரம்பொன் அர்ச்சிப்பன் கண்டாய்*
*உரியவிவர் ஐராவ தாங்கிசத்தில் ஏறி*
*உன்னியதோர் நட்பாட்சி உச்சத்தில் இருக்கிற்*
*பரிவுடனே கோடிசெம்பொன் தன்னையர்ச் சிப்பன்*
*பட்டுடைக்கு நெட்டாவின் பணவல்குல் திருவே. (188)*

(இ-ள்.) நீண்ட பெரிய பாம்பின் படத்தை ஒத்த அல்குலைப் பட்டுடையால் போர்த்திய திருமகள் போன்ற அழகான பெண்ணே! சனியும், இலக்னாதிபதியும், இரண்டா மிடத்திற்கு அதிபதியும், ஒன்பதாம் இடத்திற்கு அதிபதியும் வைசேடிகாங்கிசமும் ஐராவதாங்கிசமும் ஏறி, கேந்திர திரிகோணங்களில் இருப்பின், இச்சாதகன் ஐம்பது நூறாயிரம் (ஐம்பது இலட்சம்) பொன்னைச் சம்பாதிப்பவனாக இருப்பான். மேற்சொன்ன கோள்கள் ஐராவதாங்கிசத்தில் ஏறி, நட்பாட்சி உச்சத்தில் இருந்தால் இச்சாதகன், ஒரு கோடி பொன்னைத் தேடிச் சம்பாதிப்பான்.

## வெகுகோடி பொன் தேடுபவன்

*சாற்றிஒன் றிரண்டோடொன் பதுபன் னொன்றைச்*
*சாருமிவர் நால்வருந்தான் ஐராவ தாங்சம்*
*ஏற்றமுடன் பெற்றுநின்றே உதயஇரா சிக்கு*
*இயலாகும் தங்கடங்கள் திரிகோணம் தனக்குத்*

*தோற்றியமூ லத்திரிகோ ணம்தனக்கும் பலமாய்ச்*
*சொல்லுமுச்ச கோணகேந் திரமாக இருந்தால்*
*ஆற்றலன்றிக் கணக்கில்லாத் திரவியமார்ச் சிப்பன்*
*அம்புயத்தில் உயர்கண்ணி அமர்ந்தருள்கண் மயிலே!(189)*

*(இ-ள்.) செந்தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளைப் போன்ற கருணைக் கண்களையும் மயில் போன்ற சாயலையும் உடைய பெண்ணே ! இலக்கனம், இரண்டாமிடம், ஒன்பதாமிடம், பதினோராமிடம் ஆகிய இடங்களில் உள்ள நால்வரும் ஐராவதாங்கிசம் பெற்று, சென்ம இலக்கனத்திற்குத் திரிகோணம், மூலத்திரிகோணம் ஆகியவற்றிற்கு உச்ச திரிகோண கேந்திரங்களைப் பெற்று விளங்க, இச்சாதகன் கணக்கில்லாத செல்வங்களைத் தேடிச் சம்பாதிப்பான்.*

## இதுவுமது

*சிறப்புடைய உதயத்தோன் சுபனாகி தனத்திற்*
*சென்றிருக்கக் குருபார்க்க வக்கிரன்கேந் திரிக்க*
*நிறைத்தன்மிகு தனத்திறைவன் வைசேடி காங்சம்*
*நின்றக்கால் நிட்சேபம் நேரேவந் தெய்தும்*
*குறைத்தலிலா தனுமீனிற் சனிசெவ்வாய் நிற்கக்*
*கும்பமக ரந்தனிலே மற்றுள்ளோர் நிற்கின்*
*மறைப்பதன்றி கணக்கில்லா வெகுகோடி செம்பொன்*
*வையமேற் பெற்றிருப்பன் மழலைஇளங் குயிலே. (190)*

*(இ-ள்.) மழலை போன்றும் குயில் போன்றும் இனியமொழி பேசும் பெண்ணே! இலக்கனாதிபதி சுபக் கோளாகி இரண்டாமிடத்தில் இருக்க, இவனைக் குரு பார்க்க, செவ்வாய் கேந்திரங்களில் இருக்க, இரண்டா மிடத்திற்கு அதிபதி வைசேடிகாங்கிசம் ஏறி இருப்பின், இச்சாதகனுக்குப் புதையல் கிடைக்கும். தனுசு அல்லது மீனத்தில் சனி, செவ்வாய் நிற்க, கும்ப, மகரங்களில் மற்றுள்ள கோள்கள் இருக்கில், இச்சாதகன் கணக்கற்ற வெகுகோடி செம் பொன்னை இவ்வுலகில் பெற்று விளங்குவான்.*

## இதுவுமது

*சீராக நிறைந்தமதி இலக்கனத்தில் இருக்க*
*செப்பிடுவா ரேழெட்டிற் புந்திகுரு வெள்ளி*
*நேராக இருக்கவே மற்றவர்கள் எல்லாம்*
*நிகர்மூன்று பத்துப்பதி னொன்றினிலே இருந்த*
*பேரான வைசேடி காங்கிசம்பெற் றாலும்*
*பெருமையாய் ஐயிராவ தாங்கிசம்பெற் றாலும்*
*மேரான மாகவே கணக்குவழக் கின்றி*
*எண்ணிறந்த கோடியேபொன் என்றுமுடை யானே. (191)*

(இ-ள்.) பூரணச் சந்திரன் சென்ம இலக்கனத்தில் இருக்க, இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் அல்லது எட்டாமிடத்தில் புதன், குரு, சுக்கிரன் இருக்க, மற்றக் கோள்களெல்லாம் மூன்றாமிடம், பத்தாமிடம், பதினோராம் இடங்களில் வைசேடிகாங்கிசம் பெற்று இருந்தாலும் ஐயிராவதாங்கிசம் பெற்று இருந்தாலும் இச்சாதகன், கணக்கு வழக்கின்றி கோடி பொன்னைச் செல்வமாகப் பெற்றிருக்கக் கூடியவன்.

## வித்துவான்

*சுத்தமாகி யதனத்திற் சனிபுதன்கூ டிடினும்*
*சூரியனம் புலிபுதனுங் கூடியிருந் தாலும்*
*வைத்தபுதன் இரவிபொன்னோன் கூடியிருந் தாலும்*
*மதிஇரவி சேய்வெள்ளி கூடிநின்றா ரேனும்*
*சித்தமுற குருபுந்தி கூடிடினும் மதிமால்*
*சேர்ந்துறினும் இலக்கனத்திற் திங்கள்புதன் கூடி*
*ஒத்துறவாய் நின்றாலும் இரவிமதி பொன்னோன்*
*ஒன்றாகக் கூடிடினும் வெகுவித்தை என்பார். (192)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்தில் சனி, புதன் ஆகிய இரண்டு கோள்கள் சேர்ந்திருப்பினும் சூரியன், சந்திரன், புதன் ஆகியகோள்கள் கூடி இருந்தாலும், புதன், சூரியன், குரு ஆகியோர் கூடியிருந்தாலும் சந்திரன், சூரியன், செவ்வாய், சுக்கிரன் ஆகியோர் கூடியிருந்தாலும்

குரு, புதன் கூடினாலும், சந்திரன், புதன் சேர்ந்திருப்பினும் இலக்கனத்தில் சந்திரன், புதன் ஆகியவை கூடி நின்றாலும் சூரியன், சந்திரன், குரு ஆகிய கோள்கள் ஒன்றாகக் கூடியிருப்பினும் இச்சாதகன் பல வித்தைகளைக் கற்றவனாக விளங்குவான்.

## இதுவுமது

*சூரியன்மால் கூடிநிற்கக் குருபார்க்கு மேனும்*
*சுங்கன்சேய் குருசோமன் சனிகூடு மேனும்*
*நேரியல்சுக் கிரன்புந்தி இரவிகூ டிடினும்*
*நிறைந்தமதி இரண்டினிற்க ஐந்தெட்டிற் புந்தி*
*சீரியதாய் நின்றிடினும் தனத்தின்மதி இருக்கச்*
*செய்யபத்திற் குருவிருக்க லாபத்தா னத்தில்*
*வீரியமாம் புதனிருக்க வித்தைமிக உண்டாம்*
*மீனகேதன் செங்கோல் விளங்கியபெண் ணரசே. (193)*

(இ-ள்.) சூரியன், புதன் இவர்கள் சேர்ந்து நிற்க குரு பார்க்கும் என்றாலும் சுக்கிரன், செவ்வாய், குரு, சந்திரன், சனி கூடி நின்றாலும் சுக்கிரன், புதன், சூரியன் கூடி இருப்பினும், நிறைந்த சந்திரன் இரண்டாம் இடத்தில் நிற்க, ஐந்தாமிடத்தில் அல்லது எட்டாமிடத்தில் புதன் நின்றாலும் இரண்டாமிடத்தில் சூரியன் இருக்க, பத்தாமிடத்தில் குருவிருக்க, பதினோராமிடத்தில் புதன் இருக்க, பத்தாமிடத்தில் குருவிருக்க, பதினோராமிடத்தில் புதன் இருக்க, இச்சாதகன் பல வித்தைகளைக் கற்று வல்லவனாக விளங்குவான்.

## வித்துவான், ஆசார கிருத்தியன்

*செய்யரெண்டிற் சாமிநிற்க இலக்கனத்தில் நிறைத்து*
*செழித்தமதி இருக்கப்பாக் கியத்தில்வெள்ளி மேவ*
*வெய்யசத் துருத் தானத்தில் இராகுவிருந் தாலும்*
*மிக்கலக்க னாதிபனும் புதனுமே கூடித்*

*துய்யகேந் திரகோணம் தன்னிலிருந் தாலும்*
*சொலுமுதயம் புதனிருக்க சுவாமிபார்த் தாலும்*
*ஐயமில்லா வித்தையுளன் தனத்தின்மால் இருக்க*
*அதற்கிறைவன் கேந்திரிக்கில் ஆசாரன் என்பார். (194)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடததில் இலக்கனாதிபதி இருக்க, இலக்கனத்தில் நிறைந்த சந்திரன் இருக்க, பதினோராமிடத்தில் சுக்கிரன் இருக்க, ஆறாமிடத்தில் இராகு இருந்தாலும், இலக்கனாதிபதியும் புதனுமே கூடி கேந்திர திரிகோணங்களில் இருக்க, இலக்கனத்தில் புதன் இருக்க, இவனை இலக்கனாதிபதி பார்த்தாலும் இச்சாதகன் மிகுந்த வித்தைகளைக் கற்று விளங்குவான். இரண்டா மிடத்தில் புதன் இருக்க, இரண்டாமிடத்திற்கு அதிபதி கேந்தரங்களில் நின்றால் ஆசாரவான்.

**வித்துவான், சபா பிரசங்கி**

*சேதமிலாத் தனத்தோனும் புதனுமே கூடிச்*
*செப்பரிய நான்கினிற்க வெகுவித்தை உடையன்*
*ஏதமில்லாச் சாலகன்மாச் சபையில்வல்ல னாகும்*
*இரவிபுதன் கூடியே விக்கிரமத் திருக்கக்*
*கோதியாப் பாக்கியத்திற் பொன்னவனே இருக்கிற்*
*கூறும்வாய்ச் சாலகனாம் வித்துவா னாவன்*
*ஆதவன்சந் திரனடுவில் புதன்நிற்கில் வித்துவான்*
*ஆனசபா வல்லவன் வாய்ச் சாலகனென் றுரைப்பார். (195)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு இரண்டா மிடத்திற்கு அதிபதியும் புதனும் கூடி நான்காமிடத்தில் நிற்க, இச்சாதகன் பல வித்தைகளைக் கற்றுத் தேர்வான். சிறந்த பேச்சாளனாக விளங்குவான். சூரியனும் புதனும் கூடி மூன்றாம் இடத்தில் இருக்க, ஒன்பதாம் இடத்தில் குரு இருக்க, இச்சாதகன் பேச்சில் வல்லவனாகவும் வித்துவானாகவும் விளங்குவான். சூரியன், சந்திரன் ஆகியோர் இருவருக்கிடையில் புதன் இருந்தாலும் இச்சாதகன் பேச்சாற்றல் மிக்கவனாகத் திகழ்வான்.

## இதுவுமது

சைவமாங் குருவுக் கைந்தெட்டில் மதிமால்
சல்லியன் கூடிநின் றாலும்
பொய்வரும் ஆறில் கேதுவும் நான்கிற்
புதன்நிற்க உதயத்திற் குருவும்
மெய்வழி யாக நிற்கினும் நான்கின்
மீந்ததோர் கர்மத்தில் புதனும்
உய்வழி யான சாமியும் நிற்கில்
உரைக்கும் வாய்ச் சாலகன் புலவன். *(196)*

(இ-ள்.) குருவுக்கு ஐந்தாமிடம் அல்லது எட்டா மிடத்தில் சந்திரன், புதன், சுக்கிரன் ஆகியோர் கூடி நின்றாலும் ஆறாமிடத்தில் கேதுவும் நான்காமிடத்தில் புதனும் நிற்க இலக்கனத்தில் குரு நின்றாலும், நான்காமிடத்தில் அல்லது பத்தாமிடத்தில் புதனும் இலக்கனாதிபதியும் கூடி நின்றாலும் இச்சாதகன் புலவனாகவும் தன் பேச்சினால் மற்றவர்களைக் கவரக்கூடிய ஆற்றல் மிக்கவனாகவும் விளங்குவான்.

## இதுவுமது

சொல்லிய இரண்டுக் கிறையும்சா மியுமே
தூயநட் பாககேந் திரத்திற்
புல்லிய கோணம் தன்னிலே இருக்கிற்
புராண காவியமுத லான
நல்லசொற் கவிஞன் மகாசபை துதிக்கும்
நலம்பெறு வசனப்பிர சங்கன்
வெல்லுமொன் பதின்மால் குருவெள்ளி நிற்கில்
வித்தைவாய்ச் சாலகன் என்பார். *(197)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்திற்கு அதிபதியும், இலக்கனாதிபதியும் நட்பாகக் கேந்திர திரிகோணங்களில் இருந்தால், இச்சாதகன் காவியம், புராணம் முதலானவற்றைக் கற்றுத் தேர்ந்து சபைகளிலே அனைவரும் போற்றும் வண்ணம் எடுத்துரைப்பான். இலக்கனத்திற்கு ஒன்பதாமிடத்தில் குரு, சுக்கிரன் சேர்ந்து நிற்க, இச்சாதகன் வித்தைகளிலும் பேச்சிலும் வல்லவன்.

### இதுவுமது

சோதியாங் குருவும் புதனுஞ்சுக் கிரனும்
துய்யபாக்கியத் தினில்நின் றாலும்
ஆதியாங் குருமால் பூரண மதியும்
அன்புறும் புகரும்ஒன் பானில்
நீதியாய் இருக்கிற் சபையில்வல் லவனாம்
நிறைந்தவாய்ச் சாலகன் புலவன்
கோதிலா வமுதக் குணபயோ ததியே!
கோட்டிளம் பிறைநுதற் திருவே! *(198)*

(இ-ள்.) குற்றமற்ற பாற்கடலைப் போன்ற இனிமையான குணத்தையும் வளைந்த இளம்பிறையைப் போன்ற நெற்றியையும் உடைய திருமகளை ஒத்த அழகுடைய பெண்ணே! குரு, புதன், சுக்கிரன் ஆகிய கோள்கள் ஒன்பதாம் இடத்தில் நின்றாலும் குரு, புதன், பூரணச்சந்திரன், சுக்கிரன் ஆகிய கோள்கள் ஒன்பதாமிடத்தில் நின்றாலும் இச்சாதகன் சபையில் பேச்சாற்றலில் வல்லவனாகவும் சிறந்த புலவனாகவும் விளங்குவான்.

### இதுவுமது

ஞமலியஞ் சாய லாக்கேள்!
நண்ணும் பூரண மதிக்குத்
தமதெனப் பத்திற் புந்தி
சல்லியன் கூடி நிற்கிற்
கமலைதன் பீட மாகிக்
கனப்பிர பந்த வாக்கி
இமகரன் உள்ள மட்டும்
யாப்பு சொல்வித் வானே. *(199)*

(இ-ள். மயில் போன்ற அழகான சாயலை உடைய பெண்ணே! கேட்பாயாக. நிறைந்த சந்திரனுக்குப் பத்தாமிடத்தில் புதனும், சுக்கிரன் கூடி இருக்க, இச்சாதகன் பிரபந்தங்களை எடுத்துக்கூற வல்லவனாகவும் தனக்கிறுதி நேரும் வரையில் அனைவருக்கும் யாப்பினை எடுத்துரைக்கும் வித்துவானாகவும் விளங்குவான்.

## இதுவுமது

ஞானமாஞ் சனிசேய் திங்கள்
நலம்பெறக் கூடி ரெண்டிற்
தானமாம் இருக்கில்ஈன சொல்லன்
தரும்பிர பந்த வாக்கி
மானமாம் மதிபொன் புந்தி
வக்கிரன் தானும் கூடி
ஆனதோர் பத்தில் நிற்கில்
அநேகவித் தையுமுன் டாமே. (200)

(இ-ள்.) சனி, செவ்வாய், சந்திரன் ஆகிய கோள்கள் ஒன்றுகூடி இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் இருக்க, இச்சாதகன் தீய சொற்களைப் பேசக்கூடியவன். இலக்கியங் களைக் குறித்துப் பேசுபவனாவான். சந்திரன், குரு, புதன், செவ்வாய் ஒன்றுகூடி பத்தாம் இடத்தில் இருக்கில் பல வித்தைகளைக் கற்றவனாக விளங்குவான்.

## இதுவுமது

ஞிமிறுசுற் றியபூங் கூந்தல்
நெட்டிலை வேற்கண் நல்லாய்
நிமிர்கட கந்தேள் தண்டில்
இயல்வினைக் குருபார்த் தாலும்
திமிரந்தீர் வெள்ளி புந்தி
சீவனுங் கூடு மேனும்
அமிர்தவாக் கிபிர சண்டன்
ஆகிய வித்து வானாம். (201)

(இ-ள்.) வண்டுகள் மொய்க்கின்ற தேன் நிறைந்த மலர்களைச் சூடியுள்ள நெட்டிலிங்க இலையினையும் வேலையும் ஒத்த கூர்மையான கண்களையுடைய நல்ல பெண்ணே ! கடகம், விருச்சிகம், மிதுனம் ஆகிய இலக்கனங்களை குரு பார்த்தாலும் சுக்கிரனும், புதனும் இலக்கனாதிபதியும் ஒன்றுகூடி இருந்தாலும் இச்சாதகன் இனிமையான பேச்சாற்றல் மிக்கவன். அனைத்துக் கலைகளிலும் வல்லவனாக விளங்குவான்.

## இதுவுமது

ஞெகிழிதீ ருதயந் தண்டாய்
　　ஞெமுங்கிடா வெய்யோன் நிற்கப்
புகழுங்கர்க் கடகந் தன்னில்
　　பூரண மதியி ருக்க
மகிழுநான் காமி டத்தின்
　　மாலவன் இருப்பா னாகில்
அகிலமேல் நானா வித்தை
　　அறிந்திடும் வித்து வானாம். (202)

(இ-ள்.) சென்ம இலக்கனம் மிதுனமாக, மேஷத்தில் சூரியன் நிற்க, விருச்சிகத்தில் நிறைந்த சந்திரன் இருக்க, நான்காமிடத்தில் புதன் இருப்பானாகில் இவ்வுலகில் பற்பல வித்தைகளையும் கற்று சிறந்துவிளங்கும் வித்துவானாவான்.

## இதுவுமது

ஞொள்கா நுடங்கும் நுண்ணிடையாய்!
　　நுவலும் உதய நாயகன்தான்
வெள்கார் மூன்று கோளுடனே
　　விரைந்து கூடிச் சுபகேந்திரம்
தெள்கார் மூலத் திரிகோணத்
　　தினிலே இருக்கிற் தெளிவுடையோர்
கொள்காட் சியதாம் பிரபந்தம்
　　கூறு நானா வித்தையுளன். (203)

(இ-ள்.) மெலிந்து துவளும் நுண்ணிய இடையை யுடைய பெண்ணே! இலக்கனாதிபதி மூன்று கோள்களுடன் சேர்ந்து சுபகேந்திர மூல திரிகோணங்களில் இருக்க, இச்சாதகன் அறிவில் தெளிவினை உடையவனாக, இலக்கியங்களைச் சபைகளில் எடுத்துக்கூற வல்லவனாக விளங்குவதோடு, பல கலைகளையும் கற்றுத் தேர்ந்து விளங்குவான்.

## இதுவுமது

தயவாம் புதனும் குருவெள்ளி
தானே இரண்டில் இருந்தக்கால்
வியமே உரையாப் பிரசண்ட
வித்து வானென் றெடுத்துரைப்பார்
இயலா றிடமாம் மதியைப்பொன்
எதிரிற் காணின் வித்தைமெத்த
செயவார் பொன்மால் மதிகன்னி
சேர்ந்து நிற்கில் வெகுவித்தை (204)

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்தில் புதன், குரு, சுக்கிரன் முதலான கோள்கள் இருக்க, இச்சாதகன் பற்பல வித்தைகளில் வல்லவனாக விளங்குவான். இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் உள்ள சந்திரனைக் குரு நோக்க, இச்சாதகன் பல வித்தைகளில் வல்லமைபெற்றவன். குரு, புதன், சந்திரன் ஆகிய கோள்கள் கன்னியா இலக்கனத்தில் சேர்ந்து நிற்கில் பற்பல வித்தைகளில் வல்லவனாகத் திகழ்வான்.

## இதுவுமது

தாளாக் கன்னி உதயமாய்த்
தபனன் இருக்க ஒருநான்கில்
நாளார் புந்தி இருந்தக்கால்
நாட்டில் அவன்தான் வித்தையுளன்
மாளாக் கதிரோன் செவ்வாய்பொன்
வலிய கேது வர்க்கமின்றி
மீளா வலிபெற் றிருந்தக்கால்
மிகவும் புத்தி வித்தையுளன். (205)

*(இ-ள்.)* சென்ம இலக்கனம் கன்னியாக, அதில் சூரியன் இருக்க, இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் புதன் இருந்தால், இச்சாதகன் அதிக வித்தைகளைக் கற்றுத் தேர்ந்தவனாக விளங்குவான். சூரியன், செவ்வாய், குரு மூவரும் கேதுவர்க்கம் இன்றி வலிமைபெற்று இருப்பின், இச்சாதகன் மிகுந்த அறிவுள்ளவனாகவும் பல கலைகளில் வல்லமை உடையவனாகவும் விளங்குவான்.

## இதுவுமது

திருந்து மேடம் விருட்சிகமே
செப்பும் இரண்டாம் இடமாகப்
பொருந்தும் புதனே இருந்திடினும்
புகலும் இரண்டுக் கிறையோனை
அருந்தும் குசனைப் புதன்பார்க்க
அமைச்சன் வெள்ளி சுபகேந்திரம்
விரும்பும் கோணம் தனிலிருக்கின்
வீறும் வித்தைப் பிரபலனாம். (206)

(இ-ள்.) மேடம் அல்லது விருச்சிகம் இலக்கனத்திற்கு இரண்டாம் இடமாக (இலக்கனம் மீனம் அல்லது துலாமாக இருக்க) அதில் புதன் இருந்தாலும், இரண்டாமிடத்திற்கு அதிபதியாகிய செவ்வாயை புதன் பார்த்தாலும், குரு, சுக்கிரன் இருவரும் சுப கேந்திர கோணங்களில் இருந்தாலும் இச்சாதகன் பல வித்தைகளில் வல்லமைப் பெற்றவனாக இருப்பான்.

## கணிதத்தில் வல்லவன்

தீர்க்க மாகும் இரவிக்குச்
செய்ய பனிரண் டாமிடமாம்
மேற்கும் உதய இலக்கனத்து
இரண்டாம் இடமாம் புதன்சனியும்
பார்க்கக் கூடி இருந்தக்காற்
பகருங் கணித வித்தையுளன்
ஆர்க்கும் இவர்பார் புகர்கூடி
னாலும் கணித வித்தையென்பார். (207)

(இ-ள்.) சூரியன் இருக்கும் இராசிக்குப் பன்னிரண்டாம் இடத்திலும் சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்திலும் புதனும், சனியும் ஒன்றுகூடி இருந்தால், இச்சாதகன், கணித வித்தையில் வல்லமை வாய்ந்தவனாக இருப்பான். இவர்களோடு சுக்கிரன் கூடி இருந்தாலும் இச்சாதகன் கணிதவித்தையில் வல்லவனாக விளங்குவான் என்று கணிதநூல் வல்லோர் கூறுவார்கள்.

## இதுவுமது

துங்க புதனே ஆட்சியுச்சம்
துய்ய கேந்திர கோணத்திற்
தங்குற் றிருக்கக் குருசெவ்வாய்
சதிராய்க் கூடி இருந்திடினும்
திங்கள் சனியும் குருவெள்ளி
சிறப்பாய்க் கூடி நின்றிடினும்
வங்கக் கடல்சூழ் புவிமீதில்
வருமே கணித வித்தையென்பார். *(208)*

*(இ-ள்.)* புதன் ஆட்சி அல்லது உச்சம்பெற்ற கேந்திர திரிகோணங்களில் இருந்தாலும், குரு, செவ்வாய் இரண்டும் ஒன்றுகூடி இருந்தாலும் சனி, குரு, சுக்கிரன் ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி இருந்தாலும் இச்சாதகன் கடல் சூழ்ந்த இவ்வுலகில் கணித வித்தையில் வல்லமை படைத்தவனாக விளங்குவான்.

## சாத்திரங்களில் வல்லவன்

தூண்டா திலங்கும் பாக்கியனைச்
சுவாமி கூடிப் பத்தினிற்க
வேண்டா மலது பத்தோனை
மெய்யாய்க் கூடி இருந்தாலும்
மூண்டான் கணித வித்தையுளன்
மூன்றுக் கிறையும் குளிகனும்தான்
ஆண்டார் ஐந்திற் இருக்கரெண்டுக்
கதிபன் பார்க்கிற் சாத்திரிகன். *(209)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்திற்கு அதிபதியோடு, இலக்கனாதிபதி ஒன்றுகூடி பத்தாம் இடத்தில் நிற்க அல்லது பத்தாம் இடத்திற்கு அதிபதியுடன் ஒன்றுகூடி இருப்பினும் இச்சாதகன் கணித வித்தைகளில் வல்லவனாக இருப்பான். இலக்கனத்திற்கு மூன்றாம் இடத்திற்கு அதிபதியும் குளிகனும் ஐந்தாமிடத்தில் இருக்க, இரண்டாமிடத்திற்கு அதிபதி பார்க்க, இச்சாதகன் சாத்திரங்களில் வல்லமை படைத்தவனாக விளங்குவான்.

## இதுவுமது

தெய்வக் கணக்கன் இரவியுந்தான்
சீவற் கிரண்டில் இருந்தாலும்
மெய்வஞ் சனைகூர் சனிஇரவி
வேந்தன் கூடி நின்றாலும்
எய்வன் புகரும் மாலவனும்
இனிதாய்க் கூடி இரண்டுறினும்
சைவந் துரைக்கும் சாத்திரிகன்
கஞ்ச மலரின் அஞ்சுகமே. *(210)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்தில் புதனும் இரவியும் இருந்தாலும் சனியும், சூரியனும் குருவும் ஒன்றுகூடி இருந்தாலும் சுக்கிரனும் புதனும் ஒன்றுகூடி இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் இருந்தாலும் இச்சாதகன், சாத்திரங்களைச் சபைகளில் எடுத்துரைக்கும் ஆற்றல் படைத்தவனாக விளங்குவான்.

## இதுவுமது

தேனார் செவ்வாய் தனக்குமுன்பின்
திகழும் புதனே இருந்தாலும்
கோனார் மந்தி தனைச்செவ்வாய்
கூடிப் பத்தில் இருந்தாலும்
வானார் மதிபொன் சனிகூடி
பன்னும் பரிநாட் டனிலுறினும்
நானா வித்தை தனையுடைத்தால்
நவில்சாத் திரிகன் என்றுரைப்பார். *(211)*

*(இ-ள்.)* செவ்வாய்க்கு முன்பின் புதன் இருந்தாலும், செவ்வாய், புதனோடு கூடி பத்தாம் இடத்தில் இருந்தாலும், சந்திரன், குரு, சனி ஆகிய கோள்கள் ஒன்றுகூடி இச்சாதகன் பற்பல வித்தைகளைக் கற்றவனாகவும் சாத்திரங்களைச் சபையோர் முன் எடுத்துரைக்க வன்மை படைத்தவனாகவும் இருப்பான்.

## மாந்திரீகன்

*தையலே! குளிகன் ஐந்திற்*
*தானிற்கத் தனத்தில் இராகு*
*பையவே இருக்க ரெண்டிற்*
*பார்த்திபன் பார்க்கு மேனும்*
*வெய்யசத் துருத்தா னத்தின்*
*மிகுசுபர் இருக்க ஐந்தில்*
*துய்யவெண் மதிநின் றாலும்*
*சொல்வர்மாந் திரீகன் என்றே.* *(212)*

*(இ-ள்.)* பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் குளிகன் நிற்க, இரண்டாமிடத்தில் இராகு இருக்க, இரண்டாமிடத்தைச் சூரியன் பார்த்தாலும், ஆறாமிடத்தில் சுபக்கோள்கள் இருக்க, ஐந்தாமிடத்தில் பூரணச்சந்திரன் இருந்தாலும் இச்சாதகன் மாந்திரிகனாக விளங்குவான்.

## இசைக் கலைஞன்

*தொகுத்திடும் சனிசேய் கூடி*
*துய்யவாக் கினில்நின் றாலும்*
*அடுத்திடும் புந்தி வெள்ளி*
*அன்புடன் கூடி னாலும்*
*கொடுத்திடும் குருசேய் புந்தி*
*கூடினும் ஐந்தாம் இராசி*
*நடுச்சல ராசி யாய்ச்சுன்*
*நயந்திடில் கான வித்தை.* *(213)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் சனியும் செவ்வாயும் இருந்தாலும், புதனும் சுக்கிரனும் ஒன்றுகூடி இருந்தாலும், குரு, செவ்வாய், புதன் ஆகியோர் கூடி இருந்தாலும், இலக்கனத்திற்கு ஐந்தாம் இராசி சல இராசியாக இருந்து அதில் சனி இருக்க, இச்சாதகன் இசைக்கலையில் வல்லவனாக விளங்குவான்.

## நாட்டிய வித்தை

தோமிலா வியத்து ளோனும்
சுக்கிரன் தானும் கூடிச்
சேமியா நான்கி லேதான்
சிறப்புடன் இருக்கு மேனும்
ஆமெனும் குருசேய் புந்தி
அடுக்கொடு கூடு மேனும்
பூமியின் நடன வித்தை
பொருந்திய புலவ னாமே. (214)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் இடத்திற்கு அதிபதியும் சுக்கிரனும் ஒன்றுகூடி, இலக்கனத்திற்கு நான்கில் அமர்ந்து இருந்தாலும் குரு, செவ்வாய், புதன் ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி இருக்குமாயினும், சாதகன் இப்புவியில் நடனவித்தையில் சிறந்தவனாகவும் புலவனாகவும் விளங்குவான்.

## விஷதாரி, விநோத வித்தையன்

தௌவையாஞ் சனியின் வாக்கிற்
றானதி பலவா னாக
செவ்விய ராகு பார்க்கின்
மிகுசர்ப்ப வித்தை யுண்டாம்
எவ்வமில் வெள்ளி புந்தி
இரண்டினில் ஐந்தில் நின்றால்
கௌவையாய் உறைந்து நிற்கில்
கருதுவன் விநோத வித்தை. (215)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் சனி அதிக பலவானாக இருக்க, இதை இராகு பார்க்க, இச்சாதகன், பாம்புவித்தை செய்வான். சுக்கிரன் சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்திலும் புந்தி ஐந்தாம் இடத்திலும் இருப்பின், இச்சாதகன் விநோத வித்தைகளைக் கற்றவனாக விளங்குவான்.

## வினோத வித்தை

நகைமதி புந்தி கூடி
நயக்கும்பத் தினிலுற் றாலும்
புகர்மதி கூடி ஐந்திற்
பொருந்தியே இருக்கு மேனும்
மகிழுமோ ரெட்டிற் புந்தி
மருவவைந் தினில்இ ராகு
மிகவுறைந் திருக்கின் மாதே!
வினோதவித் தையைப்ப டிப்பான். (216)

(இ-ள்.) நிறைந்த சந்திரனும் புதனும் கூடி, பத்தாம் இடத்தில் இருந்தாலும், சுக்கிரனும், சந்திரனும் கூடி ஐந்தாமிடத்தில் இருந்தாலும், எட்டாமிடத்தில் புதனும் ஐந்தாமிடத்தில் இராகு இருந்தாலும், இச்சாதகன் வினோத வித்தைகளைக் கற்றவனாக விளங்குவான்.

## வினோத வித்தை வேடதாரி, விகடவித்தை, செப்பிடு வித்தை

நாட்டுங்கார்த் திகையிற் கேது
நண்ணிடக் குளிகன் பார்க்கின்
மீட்டுறும் விநோத வித்தை
விளங்குமைந் தினிலி ராகு
சூட்டுலக் கனத்தில் வெள்ளி
தோன்றிடின் வேட தாரி
தீட்டுறும் விகட வித்தை
செப்பிடும் வித்தை கற்பன். (217)

(இ-ள்.) கார்த்திகை நட்சத்திரக்காலில் கேது நிற்க, அதனைக் குளிகன் பார்க்க, இச்சாதகன் விநோத வித்தைகளைக் கற்றவனாக விளங்குவன். ஐந்தாம் இடத்தில் இராகுவும் இலக்கனத்தில் சுக்கிரனும் நிற்க வேடதாரியாக விளங்குவதோடு இச்சாதகன், விகடவித்தை செய்பவனாகவும் கண்கட்டுவித்தை கற்றவனாகவும் விளங்குவான்.

## இதுவுமது

நிலைபெறு நான்கு பத்தில்
நிருபர்க ளுடனி ராகும்
சிலையுறு வெள்ளி கூடிற்
செப்பிடு வித்தை யல்லால்
விலையிலா வினோத வித்தை
வெகுவேட தாரி வித்தை
மலைவின்றிக் கற்க வல்லன்
மருமலர்த் தடங்கண் மாதே! (218)

(இ-ள்.) நறுமணம் பொருந்திய மலர்போன்ற பெரிய கண்களை உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடம், பத்தாமிடம் ஆகியவற்றின் அதிபதிகளும் இராகுவும் சுக்கிரனும் கூடி இருப்பின், இச்சாதகன், கண்கட்டுவித்தை முதலான விநோத வித்தைகளைக் கற்றவனாகவும் வேடங்களைப் புனைவதில் வல்லவனாகவும் விளங்குவான்.

## அதிக சாத்திர வல்லமை உடையவன்

நீடிய செவ்வாய் புதனுமே கூடி
நிறைந்தபாக் கியத்திருந் தாலும்
ஈடியன் மதியும் கணக்கனும் கூடி
இரண்டினில் இருந்திடு மேனும்
தேடிய செவ்வாய் சனியொடு வெள்ளி
சிறப்பொடு கலந்திருந் தாலும்
நாடிய அநேக சாத்திர நிபுணன்
கைமதி வதனமின் னரசே! (219)

(இ-ள்.) சந்திரனைப் போன்ற முகத்தையுடைய மின்னலையொத்த பெண்ணரசே! சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடத்தில் செவ்வாய், புதன் ஆகியோர் இருந்தாலும், சந்திரனும் புதனும் கூடி இரண்டாமிடத்தில் இருந்தாலும் செவ்வாய், சனி, சுக்கிரன் ஆகிய கிரகங்கள் ஒன்றுகூடி இருந்தாலும் இச்சாதகன், அனைத்து சாத்திரங்களிலும் வல்லமை உடையவனாக விளங்குவான்.

**பல சாத்திரங்களில் வல்லவன்**

*நுவலுமோ ரெட்டிற் குருநிற்க ஒன்பா*
*னுடன்பத் தேழைந்தினுக் கிறைவன்*
*பவமில தாகும் சுபவர்க்கம் அடையி*
*பலபல சாத்திர நிபுணன்*
*நவமுறு சாமி சுபகேந்திர கோண*
*நண்ணியே சுபருடன் கூடித்*
*தவறிலாப் புந்தி பார்த்திடின் மிக்க*
*சாத்திர நிபுணனென் றுரைப்பார்.* *(220)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் குரு நிற்க, ஒன்பதாம் இடத்திற்கு அதிபதியுடன் பத்து, ஏழு, ஐந்து ஆகிய இடங்களுக்கு அதிபதிகள் சேர்ந்து சுபவர்க்கம் அடைந் திருந்தால், இச்சாதகன் பல சாத்திரங்களையும் கற்றுத் தேறியவனாக விளங்குவான். இலக்கனாதிபன் சுபகேந்திர, திரிகோண இடங்களில் இருக்க, இக்கோள்களைப் புதன் பார்க்க, இச்சாதகன் பல சாத்திரங்களில் வல்லமை படைத்தவனாக இருப்பான்.

**தர்க்க சாத்திரங்களில் வல்லவன்**

*நூறிய சிங்கம் தனிற்செவ்வாய் இருக்க*
*நோக்குறும் இரவிபார்த் தாலும்*
*சீறிய கதிரோன் சேய்புதன் கூடித்*
*திரத்தினில் உபயத்தில் உறினும்*
*பேறிரு ளிரண்டுக் கிறைவனும் குருவும்*
*பலத்திடில் இரவியைப் புகரோன்*
*மீறியே பார்க்கு மேனும்பெண் ணரசே!*
*விளங்கிய தர்க்கசாத் திரிகன்.* *(221)*

*(இ-ள்.)* பெண்களுக்கெல்லாம் தலைமை பூணும் பெருமைபெற்ற பெண்ணே! சிம்ம இலக்கனத்தில் செவ்வாய் இருக்க, இதனை இரவி பார்த்தாலும், சூரியன், செவ்வாய், புதன் ஆகியோர் ஒன்றுகூடி ஸ்திர இராசி அல்லது உபய இராசியில் இருந்தாலும், இரண்டாம் இடத்திற்கு அதிபதியும் குருவும் பலம்பெற்று, சூரியனைச் சுக்கிரன் பார்த்தாலும் இச்சாதகன், தர்க்க சாஸ்திரத்தில் வல்லவனாக விளங்குவான்.

**வாய்ச் சாலகன்**

*நெறிதரு மிரண்டில் நான்கினிற் சுபரே*
*நின்றிட இரவிபார்த் தாலும்*
*செறிவில்பாக் கியத்தில் இராகுவே இருக்கத்*
*தினகரன் சேர்ந்திடு மேனும்*
*பிரியமாம் உதயம் இரண்டுநான் கொன்பான்*
*பேசிய ஏழினில் சுபர்கள்*
*குறியுடன் இருக்க இரவியே பார்க்கிற்*
*கூறுவாய்ச் சாலகன் என்பார்.* *(222)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் நான்காம் இடத்தில் சுபக்கோள்கள் நின்றிட, இவர்களைச் சூரியன் பார்த்தாலும், ஒன்பதாமிடத்தில் இராகு இருக்க, அத்துடன் சூரியன் கூடி இருந்தாலும் இலக்கனம், இரண்டு, நான்கு, ஏழு, ஒன்பது ஆகிய இடங்களில் சுபக்கோள்கள் இருக்க, இவர்களைச் சூரியன் பார்த்தாலும், இச்சாதகன், பேச்சினால் பிறரைக் கவர்வதில் வல்லவனாக விளங்குவான்.

**இதுவுமது**

*நையுநுண் ணிடையாய்! சனிசெவ்வாய் கூடி*
*நலமுறு தனத்தில்நின் றாலும்*
*துய்யலக் கனந்தான் கன்னியே யாகிற்*
*சூரியன் தானுறைந் தாலும்*
*வெய்யகோன் மிதுனம் தனுசுமீன் மகரம்*
*மீறுபூ ரணமதி யுறினும்*
*வையகம் புகல்வாய்ச் சாலகன் என்பார்*
*மரகத வடிவமா மயிலே!* *(223)*

*(இ-ள்.)* மரகதப் பச்சை நிறத்தில் விளங்கும் வடிவழகோடு கூடிய மயிலின் சாயலைக் கொண்ட பெண்ணே! நைந்து போகக்கூடிய நுண்ணிய நூலிடையை உடைய பெண்ணே! சனி, செவ்வாய் இரண்டும் கூடி, இரண்டாமிடத்தில் நின்றாலும், சென்ம இலக்கனம் கன்னியாகி அதில் சூரியன் நின்றாலும், மிதுனம், தனுசு, மீனம், மகரம் ஆகியவற்றில் ஒன்று சென்ம இலக்கனமாகி அதில் நிறைந்த சந்திரன் இருந்தாலும், இச்சாதகன், பேச்சு சாமர்த்தியம் உடையவன்.

## பாம்பு வித்தை செய்பவன்

நொய்யுமெல் லடியாய் மேடநல் லிடப
நோக்கவிற் கன்னியே உதிப்ப
வெய்யுமுன் திரேகா ணந்தனிற் பிறக்க
இரண்டினுக் கிறையவ ருடனே
பையவே பாம்பு கூடிலப் பத்திற்
பண்புடன் இருப்பரே யாகிற்
கையறி சர்ப்ப வித்தையை யுடையன்
கருமுகில் அனையபூங் குழலே ! (224)

(இ-ள்.) நோகின்ற மெல்லிய அடிகளையும் கரிய மேகங்களை ஒத்த பூச்சூடிய கூந்தலையும் உடைய பெண்ணே! மேடம், இடபம், தனுசு, கன்னி ஆகியவை சென்ம இலக்கனமாக இருந்து, முதல் திரேகாணத்தில் பிறக்க, இரண்டாமிடத்திற்கு அதிபதியுடன் இராகு அல்லது கேது கூடி பத்தாமிடத்தில் இருப்பின், அச்சாதகன் பாம்புகளை வைத்து வித்தைகளைக் காட்டுவதில் வல்லவனாக விளங்குவான்.

## இதுவுமது

நோக்கரு சர்ப்ப முகூர்த்தத்திற் பிறக்க
நுவல்தனத் ததிபனோ டிராகு
மார்க்கமாய்க் கூடி இலக்கனத் திருக்க
வரும்பத்திற் கிறைவநோக் குறினும்
வாக்கினுக் குடையோன் சனியங்சம் ஏறி
வரும்பத்தில் இருந்திட வலது
தாக்குபத் திறையைக் கூடப்பார்த் தாலும்
சர்ப்பசாத் திரனெனச் சாற்றும். (225)

(இ-ள்.) சாதகன், சர்ப்ப முகூர்த்தத்தில் பிறக்க, இரண்டாம் இடத்திற்கு அதிபதியோடு இராகு கூடி, இலக்கனத்தில் இருக்க, பத்தாம் இடத்திற்கு அதிபதியின் பார்வையைப் பெற்றாலும், இரண்டாம் இடத்திற்கு உடையவன் சனியங்கிசம் ஏறி, பத்தாம் இடத்தில் இருந்திட

அல்லது பத்தாம் இடத்திற்கு அதிபதியோடு கூடி இருப்பினும் பத்தாம் அதிபதியைப் பார்த்தாலும், இச்சாதகன் பாம்பு சாத்திரத்தில் வல்லவனாக விளங்குவான்.

## இதுவுமது

நௌவிய கண்ணாய்! இரண்டைந்துக் குடையோர்
நவில்பாம்பின் பவனனே யாகிற்
செவ்வாய சனியங் கிசத்திலுற் றாலும்
திரராகு கேதுவின் பவனம்
எவ்வமில் புதனே யாகியே இரண்டில்
இயற்றிய ஐந்தினிற் பத்திற்
ஒவ்வியே இருக்க தனத்துளோன் பார்க்கில்
உயர்சர்ப்ப வித்தையை உடையோன். (226)

(இ-ள்.) அழகான கண்களை உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடம், ஐந்தாமிடத்திற்கு உடையவர்கள் பாம்பின் இராசியில் இருந்தாலும் சனியின் அங்கிசத்தில் இருந்தாலும் திர இராசியில் இருக்கக்கூடிய இராகு, கேதுவின் இராசியில் புதனாக இருந்து, இரண்டாமிடம், ஐந்தாமிடம், பத்தாமிடம் இவற்றில் இருக்க, இரண்டாம் இடத்திற்கு உடையவன் இவனைப் பார்க்க, இச்சாதகன், பாம்புகளைக் கொண்டு வித்தைகளைச் செய்வதில் வல்லவனாக விளங்குவான்.

## நடன சங்கீத வித்தை

பங்கனும் இராகும் கூடிப்
பகர்ந்திடும் இரண்டில் ஐந்திற்
தங்கிடப் புந்தி பார்க்கிற்
சர்ப்பசாத் திரிகன் என்பன்
பொங்கிய நான்கு தன்னிற்
புகருடன் வியத்தோன் நிற்க
நங்கைகேள்! தனத்தோன் பார்க்கில்
நடனசங் கீத வித்தை. (227)

*(இ-ள்.)* பெண்ணே கேட்பாயாக! சனியும் இராகுவும் ஒன்று கூடி சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடம் ஐந்தாமிடம் இவற்றில் இருக்க, இவர்களைப் புதன் பார்க்க, இச்சாதகன் பாம்புகளைப் பற்றிய சாத்திரங்களில் வல்லவனாக விளங்குவான். சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்தில் சுக்கிரனுடன் பன்னிரண்டாம் இடத்திற்கு அதிபதி நிற்க, அவர்களை இரண்டாம் இடத்திற்கு அதிபதி பார்த்தால், அச்சாதகன் நடனம், இசை முதலான கலைகளில் வல்லவனாக விளங்குவான்.

## இதுவுமது

*பாரிய வியத்தோ னோடு*
*பார்க்கவன் கூடிப் பத்தில்*
*சீரிதாய் இருக்கப் புந்தி*
*திருட்டியாற் பார்ப்பா னாகில்*
*நாரியர்க் குருக்கங் காட்டும்*
*நடனசங் கீத வித்தை*
*ஆரிய வித்தை யெல்லாம்*
*அறிந்திட வல்ல னாவன்.* *(228)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் இடத்திற்கு அதிபதியோடு சுக்கிரன் கூடி பத்தாம் இடத்தில் இருக்க, இவரைப் புதன் பார்ப்பானாகில், இச்சாதகன் பெண்களைப் போன்று மெல்லிய உணர்வுகளையும் காட்டவல்ல நடனம், இசை போன்றவற்றையும், வட இந்தியாவில் விளங்கக்கூடிய வித்தைகள் அனைத்தையும் கற்று வல்லவனாக விளங்குவான்.

## இதுவுமது

*பிறிவிலா வியத்தோ னுடன்புதன் கூடிப்*
*பேசிய வியத்தினில் இருக்க*
*வறிவில்கன் மாது பதியுறை யங்சத்*
*ததிபதி யேனுமல் லாது*

நெறியுள கருமத் ததிபன்பார்த் தாலும்
நிகரிலா வனந்தமா நடனம்
கிரிகையாற் கற்பன முதவா ரிதியிற்
கிளர்ந்திடும் மலையஞ் சுகமே. (229)

(இ-ள்.) இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் இடத்திற்கு அதிபதியுடன் புதன் ஒன்றுசேர்ந்து பன்னிரண்டாம் இடத்தில் இருக்க, பத்தாம் இடத்திற்கு அதிபதி ஏறியுள்ள அங்கிசத்தின் அதிபதி அல்லது பத்தாம் இடத்திற்கு அதிபதி இவர்களைப் பார்த்தாலும், இச்சாதகன் ஒப்பற்ற வகையில் மிகுந்த நடன வகைகளைக் கற்றவனாக சிறந்து விளங்குவான்.

**இனிய வாக்கு உடையவன்**

பீரமா மிரண்டுக் கிறைவனும் புதனும்
பேதமில் லாமலே கூடி
வீரமாங் கோண கேந்திரம் இருக்க
வெள்ளியே விரையுவுடன் பார்க்கிற்
சாரமாம் மிருது கோமள வாக்குத்
தன்னையே உடையவ னாகும்
ஆரமும் புனைந்து களபச்சே றணைந்தே
அருண்மதம் ஒழுகும்பூண் முலையே. (230)

(இ-ள்.) ஆரம் புனைந்து சந்தனக் குழம்பையும், சவ்வாது குழம்பையும் பூசிய கொங்கைகளை உடைய பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்கு அதிபதியும், புதனும் தங்களுக்குள் வேறுபாடு இல்லாமல் கூடி கேந்திர திரிகோணங்களில் இருக்க, இவர்களைச் சுக்கிரன் பார்க்க, மென்மையான இனியவாக்கினை உடையவனாக விளங்குவான்.

**இதுவுமது**

புல்லிய இரண்டில் அவ்விடத் திறையும்
பொன்னவன் தானுமே கூட
வல்லதில் இரண்டுக் கிறைகுரு வர்க்கம்
அடைந்திடப் பவவர்க்கம் இன்றிச்

செல்லுற இருக்கிற் உலகத்தோ ரெல்லாம்
சிரக்கம்பம் கரக்கம்பம் செய்தே
சொல்லிடும் அங்கி காரக வசனன்
துணைவரை அனையபூண் முலையே. *(231)*

(இ-ள்.) இரண்டு மலைகளையொத்த, ஆபரணங்களை அணிந்த கொங்கைகளை உடைய பெண்ணே! இரண்டாமிடத்தில் அவ்விடத்திற்கு அதிபதியும் குருவும் கூடி நிற்க, இரண்டாமிடத்திற்கு அதிபதி குருவர்க்கம் அடைந்திட பாவ வர்க்கம் இல்லாமல் இருக்க, இச்சாதகன், அனைவராலும் தலைதாழ்ந்து கரம் கூப்பி வணங்கக் கூடிய, உயர்வான வற்றைக்கூறக்கூடியவனாக இருப்பான்.

**இதுவுமது**

பூணுமோ ரைந்தீ ராறிற்
புங்கவர் கூடி ரெண்டிற்
காணுற இருக்க ரெண்டுக்
கதிபதி பத்தில் நிற்கத்
தோணும்லக் கனத்திற் பொன்னோன்
துலங்கிட இருப்பா னாகில்
ஆணவம் இல்லா வண்ணம்
அனுக்ரக வசன னாமே. *(232)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடம், பன்னிரண்டாமிடம் ஆகியவற்றில் ஒன்றில் குரு நிற்க அல்லது இரண்டாமிடத்தில் இருக்க, இரண்டாமிடத்திற்கு அதிபதி பத்தாம் இடத்தில் இருக்க, சென்ம இலக்கனத்தில் குரு இருக்க, இச்சாதகன் ஆணவமற்றவனாக, அனைவருடனும் இனிமையாகப் பேசக்கூடியவனாக இருப்பான்.

**அன்னதானம் செய்பவன்**

பெற்றிடுந் தனாதி பன்தான்
பேசும்வை சேடி காங்கசத்
துற்றவுச் சாங்கி சத்தில்
உறைந்துதான் நிற்கு மேனும்

கொற்றமாறைந்தி லேதான்

குரிசிலும் சுபவர்க் கத்தை

உற்றிடு மேனும் பார்மேல்

உகந்தன்னதானம் செய்வான். (233)

(இ-ள்.) இலக்கனத்திற்கு இரண்டாமிடத்திற்கு அதிபதி, வைசேடியாங்கிச உச்சாங்கிசத்தில் நின்றாலும், சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தின் அல்லது ஆறாமிடத்தின் அதிபர்கள் சுபவர்க்கத்தைப் பெற்று விளங்கி னாலும், இச்சாதகன் இப்புவியில் சிறந்த அன்னதானங்களைச் செய்பவனாக விளங்குவான்.

## இதுவுமது

பேதமில் ஐந்துக் குள்ளோன்

பெருநாலு மூன்றி ரண்டுக்

காதிப ருடனே கூடி

அருட்சுப கேந்திர கோண

மீதுற இருக்கு மேனும்

மிகும்ஐந்திற் கிறை தனத்தில்

ஏதுவாய் இருக்க மற்றோர்

எதிர்பார்க்கில் அன்ன தானம். (234)

(இ-ள்.) ஐந்தாமிடத்திற்கு அதிபதி, சென்ம இலக்கனத்திற்கு இரண்டு, மூன்று, நான்கு ஆகிய இடங்களின் அதிபர்களுடன் கூடி கேந்திர திரிகோணங்களில் இருந்தாலும், ஐந்தாம் இடத்திற்கு அதிபதி இரண்டாம் இடத்தில் இருக்க, மூன்றாமிடத்திற்கு அதிபதியும் நான்காமிடத்திற்கு அதிபதியும் இவனை நோக்க, இச்சாதகன் அன்னதானம் செய்பவனாக விளங்குவான்.

## இதுவுமது

பையர வல்கு லாய்கேள்!

பகருத யத்தின் மூன்றில்

ஐயமில் குருவி ருக்க

அவ்வோரை சுகமுற் றாலும்

*வெய்யதோர் செவ்வாய் கேந்திர*
*மீதுறச் சுபர்பார்த் தாலும்*
*வையமேல் அன்ன தானம்*
*மகிழ்ச்சியாய்ச் செய்வன் றானே. (235)*

*(இ-ள்.) பாம்பின் படத்தையொத்த அல்குலை உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு மூன்றாம் இடத்தில் குருவிருக்க, அந்த இராசியில் சுகாதிபதி இருப்பினும், செவ்வாய் கேந்திரங்களில் இருக்க, அதனைச் சுபக்கோள்கள் பார்த்தாலும், இச்சாதகன் இவ்வுலகில் அனைவருக்கும் மகிழ்ச்சியோடு அன்னதானம் செய்பவனாக விளங்குவான்.*

**மக்களைக் காப்பவன்**

*பொருந்திரண்டில் குருவிருக்க அன்றியதற் குடையோன்*
*பொருந்திநிற்ப வல்லததற் கிறைவனொடு புதனும்*
*திருந்தவெள்ளி யுடன்கூடி நட்பாட்சி உச்சம்*
*செய்யகேந் திரகோணத் திருக்கினுப காரி*
*அரும்புவியில் வெகுசனத்தை இரட்சிப்பன் இரண்டுக்*
*காதிபதி மூன்றினிற்கப் புருடக்கோள் பார்க்கின்*
*விரும்பியநான் கிற்கதிரோன் உச்சமாகி நிற்கில்*
*வெகுசனத்தை இரட்சிப்பன் வேற்றடங்கண் மயிலே! (236)*

*(இ-ள்.) வேலை ஒத்த கூரிய பார்வையையுடைய பெரிய கண்களையும் மயில் போன்ற சாயலையும் உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் குரு இருக்க, அல்லது இரண்டாம் இடத்திற்கதிபதி நிற்க, அல்லது இரண்டாமிடத்திற்கதிபதியோடு புதனும் சுக்கிரனும் ஒன்றுகூடி நட்பாட்சி உச்சம்பெற்று கேந்திர திரிகோணங் களில் இருக்கினும் இச்சாதகன் அனைவருக்கும் உபகாரியாக விளங்குவான். இப்புவியுலகில் மக்களனைவரையும் காப்பான். இரண்டாம் இடத்திற்கு அதிபதி மூன்றாம் இடத்தில் இருக்க, இதனை ஆண்கோள் பார்க்க, இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் சூரியன் உச்சமாகி இருந்தால், இச்சாதகன் மக்களைக் காப்பவனாக விளங்குவான்.*

## இதுவுமது

போற்றுதனத் தோன்கோபு ராங்கிசத்தில் இருக்கப்
பொற்பிலிவன் அங்கிசத்தோன் சிங்காச னாங்சம்
தோற்றிநிற்கில் ஐம்பதுபேர் தன்னைரட்சை புரிவன்
சொல்லுமிரண் டுக்கிறைவன் சுபவர்க்கம் ஏறி
ஏற்றபாரா வதாங்கிசத் தில்நிற்க மதிதான்
இரண்டுநிற்க இருபதுபேர் தன்னைரட்சை புரிவர்
ஆற்றும்ரெண் டோனுச்சத் திற்சிங்காச னாங்ச
மாகிப்பொன் வர்க்கமுறில் நூறுசனம் காப்பான். *(237)*

*(இ-ள்.)* இரண்டாம் இடத்திற்கு அதிபதி கோபுராங் கிசத்தில் இருக்க, இவன் அங்கிசத்தில் இருக்கும் கோள் சிங்காசனாங்கிசத்தில் ஏறி இருக்க ஐம்பதுபேரை வைத்துக் காப்பவனாக இச்சாதகன் விளங்குவான். இரண்டாம் இடத்திற்கு அதிபதி சுபவர்க்கம் ஏறி, பர்வதாங்கிசத்தில் இருக்க, சந்திரன் இரண்டாம் இடத்தில் இருக்க, இருபது பேரைக் காப்பவனாக இருப்பான். இண்டாம் இடத்திற்கு அதிபதி சிங்காசனாங்கிசம் ஏறி, குருவர்க்கத்தில் இருந்தால் இச்சாதகன் நூறு சனங்களைக் காப்பவனாக விளங்குவான்.

## இதுவுமது

பௌவமிலா வாக்கேசன் உச்சத்தில் இருக்க
பகருமிரண் டாமிடத்தை யதற்கிறைவன் தன்னைத்
தௌவையிலாக் குருகூடப் பார்க்கிலா யிரமாம்
சனம்தன்னை இரட்சிப்பன் சாற்றரிய பொன்னோன்
எவ்வமிற்சிங் காசனாங்கி சத்திருக்கப் புகரோன்
இயல்கோபு ராங்கிசத்தில் இருக்கவாக் கேசன்
ஒவ்வுமயி ராவதாங்கி சமுறநட் பாட்சி
உச்சகேந் திரமிருக்கில் வெகுசனரட் சகனாம். *(238)*

*(இ-ள்.)* இரண்டாம் இடத்திற்கு அதிபதி உச்சம்பெற்று இருக்க, இரண்டாம் இடத்தை அல்லது இரண்டாம் இடத்திற்கு அதிபதியை குரு பார்க்க அல்லது இவர்களுடன் கூடி இருக்க, ஆயிரம் மக்களைக் காப்பவனாக விளங்குவான். குரு, சிங்காசனாங்கிசத்தில் இருக்க, சுக்கிரன் கோபுராங்

கிசத்தில் இருக்க, இரண்டாம் இடத்திற்கு அதிபதி ஐராவதாங் கிசத்தில் நட்பாட்சி உச்ச கேந்திரங்களில் இருக்க, இச்சாதகன் மிகுந்த மக்களைக் காப்பவனாக விளங்குவான்.

### பொய்க் கூறுபவன்

மருவியநான் கைந்தாறி னோடேழெட் டொன்பான்
மன்னுபுத்திரக் கோளேழும் வரிசையாய் நிற்கில்
அருவருக்கும் சத்தியமு நிந்தையுமே செய்வன்
நானதனம் தனத்திறையும் சனிவர்க்கம் உறினும்
பெருமையுள்ள தனம்தன்னில் சுபரிருக்கச் சுபரே
பெட்புறநோக் காறெனினும் இரண்டிரண்டுக் கிறையும்
தெருளுரு நீசமூடம் உறச்சுபர்பா ராதே
சேராதே இருக்குமேலும் பொய்யனிவன் என்பார். *(239)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடம் ஐந்தாமிடம் ஆறாமிடம், ஏழாமிடம், எட்டாமிடம் ஆகிய ஐந்து இடங்களிலும் ஏழு கோள்களும் வரிசையாய் நின்றால், பொய்சத்தியம் செய்பவனாக இச்சாதகன் இருப்பான். இரண்டாமிடம்,இரண்டாமிடத்திற்கு அதிபதி சனிவர்க்க முற்றாலும், இரண்டாமிடத்தில் சுபக்கோள்கள் இருக்க, அதனைச் சுபக்கோள்கள் பார்க்காவிடினும், இரண்டா மிடத்தில், இரண்டாமிடத்திற்கதிபதி நீசம், அஸ்தமனம் பெற்று, சுபர் பார்க்காமல் இருப்பினும் இச்சாதகன் பொய்யன்.

### கோள் சொல்லுபவன்

மாற்றரிய தனமதனுக் கிறையுமே குளிகன்
வாழரா வர்க்கமுறு மேனுமிகு பொய்யன்
தோற்றுதனா திபன்தன்னை புதன்தன்னைப் பாவர்
சொருபாதி அந்தமுந்தான் பொய்யுமெய்யு மாகும்
ஏற்றரிய மதிபுந்தி இரவிகுரு கூடி
இருந்திடினும் விரைந்தெவர்க்குஞ் சாடியே சொல்வன்
சாற்றரும்ரோ கணிமிருக சீரிடம்பூ ராடம்
தரும்பூரம் அத்தமுறும் சனிக்குமே கோளன். *(240)*

(இ-ள்.) இரண்டாமிடத்திற்கு அதிபதி குளிகன் அல்லது இராகு கேதுக்களுடன் இருப்பின் மிகுந்த பொய் பேசுபவன். இரண்டாமிடத்திற்கு அதிபதியைப் பாவக்கோள்கள் நோக்க, உண்மையைப் போல பொய் பேசக்கூடியவன். சந்திரன், புதன், சூரியன் குரு இவர்கள் நால்வரும் கூடி இருந்தாலும் மற்றவர்களைச் சாடுபவனாக இச்சாதகன் இருப்பான். ரோகணி, மிருகசீரிடம், பூராடம், பூரம், அஸ்தம் முதலான நட்சத்திரக் கால்களில் சனி இருந்தால், இச்சாதகன் கோள் சொல்லுபவனாக இருப்பான்.

## கொடிய வார்த்தைகளைப் பேசுபவன்

*மிக்கான கேட்டையத்தம் பூசத்திற் கேது*
*மேவிடவும் மகம்பரணி விளங்கியசெவ் வாய்க்குத்*
*தக்கதோர் திருவோணம் மூலமுடன் கேட்டை*
*சதயமுத் திரமனுடம் தன்னிலே இராகு*
*சித்தமுற நின்றக்காற் கோட்சொல்ல வல்லன்*
*செய்யநேத் திரத்தானத் திற்பாம்புற் றாலும்*
*மத்திமமாம் விடவாக்கு வெறுஞ்சடக்குப் பேச்சு*
*வருமிரண்டிற் கேதுவுக்கு விடவாக்குத் தானே. (241)*

(இ-ள்.) கேட்டை, அத்தம், பூசத்தின் நட்சத்திரக் கால்களில் கேது நிற்கவும் மகம், பரணி ஆகிய நட்சத்திரங் களின் கால்களில் செவ்வாய் நிற்கவும். திருவோணம், மூலம், கேட்டை, சதயம், உத்திரம், அனுடம் ஆகிய நட்சத்திரக் கால்களில் இராகு நிற்கவும் பிறந்த சாதகன் கோள் சொல்லுவதில வல்லவன். இரண்டாமிடத்தில் இராகு இருப்பின் வீண் வார்த்தைகளையும் விஷவார்த்தைகளையும் இச்சாதகன் பேசுவான். இரண்டாமிடத்தில் கேது இருக்க இச்சாதகன் விஷவார்த்தைகளைப் பேசுபவனாக இருப்பான்.

*மீறிய ஏழில் இராகுவந் துறினும்*
*மிகுமேழிற் கிறைவனை இராகு*
*சீறியே கூடி இருந்திடு மேனும்*
*செப்பிய தனத்திற் காமத்திற்*

*கூறிய இராகு பவனனுற் றாலும்*
*குவலய விரண்டினுக் கிறைவன்*
*ஏறுமங் கிசத்தோன் காமத்தைப் பார்க்க*
*இருந்ததி லேயுதா சீனன். (242)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் இராகு இருந்தாலும் அல்லது ஏழாமிடத்திற்கு அதிபதியை இராகு கூடி இருந்தாலும் இரண்டாமிடத்தில், ஏழாமிடத்தில் இராகு இருந்தாலும், இரண்டாமிடத்திற்கு அதிபதி ஏறியுள்ள அங்கிசாதிபதி ஏழாமிடத்தைப் பார்த்தாலும் பிறரை உதாசினப்படுத்துபவனாக இச்சாதகன் விளங்குவான்.

## இதுவுமது

*முந்திய வாக்குக் காமத்துக் கிறைவர்*
*மொழிபுந்திக் கோளுடன் கூடி*
*உந்திய நீச மூடத்தை அடையில்*
*உதாசீன பரனென உரைப்பர்*
*சந்திரன் செவ்வாய் குருவுமே கூடிற்*
*றயவிலாக் குரூரவாக் குடையோன்*
*சொந்தலக் கனத்தில் இராகுவே இருக்கிற்*
*துர்வாக்கு வெகுபேச்சே உளனே. (243)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் வீட்டிற்கு அதிபதி அல்லது ஏழாம் வீட்டிற்கு அதிபதி இருவரும் புதனுடன் கூடி, நீசம் அஸ்தமனம் அடைந்தால், அச்சாதகன் பிறரை உதாசினம் செய்பவனாக இருப்பான். சந்திரன், செவ்வாய், குரு மூவரும் ஒன்றுகூடி இருக்கில், அச்சாதகன் அன்பற்ற குரூரமான மொழியினைப் பேசுபவனாக இருப்பான். சென்ம இலக்கனத்தில் இராகு இருந்தால், இச்சாதகன் அதிகமாகப் பேசுபவனாகவும் தீய பேச்சைப் பேசுபவனாகவும் விளங்குவான்.

## இதுவுமது

*மூன்றினில் ஆறில் புதன்உறைந் திருக்கின்*
*முனியுநிட் டூரச்சொல் உடையோன்*
*தோன்றிய ஏழில் இராகுவந் தாலும்*
*சூருள குளிகனுற் றாலும்*

*கூன்றரு குளிகன் பவனனுற் றாலும்*
*குணமின்றி பேசுசுதா சீனன்*
*வான்றரு மதியைப் பொன்புகர் நோக்க*
*மந்தன்கோ லுறிற்ஈன வாக்கே. (244)*

*(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடம், ஆறாமிடம் இவற்றில் புதன் நிற்க, கோபமுற்று கொடுஞ் சொற்களைப் பேசுபவனாக இச்சாதகன் விளங்குவான். சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் இராகு இருந்தாலும் குளிகன் இருந்தாலும் குளிகன் நின்ற இராசி அதிபதி இருந்தாலும் நல்ல குணமின்றி மற்றவர்களை உதாசீனப் படுத்துபவனாக இச்சாதகன் இருப்பான். சந்திரனைக் குரு, சுக்கிரன் பார்க்க,சனி துலா இராசியில் இருந்தாலும் பிறரை இழிவாகப் பேசக்கூடியவனாக இருப்பான்.*

## பிறரை இழிவுபடுத்துபவன்

*மெல்லிய ருதயந் தனத்தினிற் காமத்தில்*
*மிகுபாவர் இருந்திடப் பார்க்க*
*வல்லது வித்தைக் கிறைவரே பாவத்*
*தழுந்திடப் புந்தியே நீசம்*
*புல்லுமூ டத்திற் பவவர்க்கம் அடைந்துப்*
*பொலிவுறு பலமது தாழில்*
*வல்லமை போல வேயுதா சீன*
*வார்த்தையே மகிழ்ச்சியால் உரைப்பன். (245)*

*(இ-ள்.) சென்ம இலக்கனத்தில், இரண்டாமிடத்தில், ஏழாமிடத்தில் பாவக்கோள்கள் இருக்க அல்லது இவ்விடங்களைப் பார்க்க, இரண்டாம் இடத்திற்கு அதிபதி பாவக்கோள்களுடன் சேர்ந்திருக்க, புதன் நீசம் அல்லது அஸ்தமனம் அடைந்து பாவவர்க்கம் பெற்று பலவீனமாக இருந்தால், இச்சாதகன் பிறரை உதாசீனப்படுத்துவதில் மகிழ்ச்சி அடைபவனாக இருப்பான்.*

**குருவைத் தூற்றுபவன்**

*மேதகு புந்தி மதிவெள்ளி சனியும்*
*விரைவுடன் கூடிநின் றாலும்*
*ஓதிய லாபத் திரவிநின் றாலும்*
*உசனன்மால் சேய்குரு தானும்*
*ஏதுவாய்க் கூடித் தனத்தில்நின் றாலும்*
*மிகுவெகு சனத்துவே ஷியுமாம்*
*கோதிலா ஏழில் மந்திரி இருக்கிற்*
*குருவையே நிந்திக்கும் கொடியன். (246)*

*(இ-ள்.)* புதன், சந்திரன், சுக்கிரன், சனி இவர்கள் ஒன்றாகக் கூடி நின்றாலும், இலக்கனத்திற்குப் பதினோராம் இடத்தில் சூரியன் இருந்தாலும் சுக்கிரன், குரு, செவ்வாய், புதன் ஆகியோர் ஒன்றுகூடி இரண்டாமிடத்தில் நின்றாலும், இச்சாதகன், மக்களைத் துன்புறுத்துபவனாக இருப்பான். ஏழாமிடத்தில் குரு இருந்தால், இச்சாதகன், குருவை நிந்திக்கும் கொடியவனாக இருப்பான்.

**குருவையும் ஞானத்தையும் வெறுப்பவன்**

*மையுறும் இரவி ஒன்பதி லுறினும்*
*வருமாறில் குருவிருந் தாலும்*
*மெய்யுறு குருவை ஞானத்தை வெறுப்பன்*
*மிக்கபாக் கியந்தன்னிற் குளிகன்*
*பொய்யுறு சனியின் இருக்கினும் பிதாவை*
*போரிட்டு மிகத்துவே ஷிப்பான்*
*செய்யுமோர் நாலிற் புந்தியே இருக்கிற்*
*சிவஞானம் தன்னைதுவே ஷிப்பன். (247)*

*(இ-ள்.)* சூரியன், சென்ம இலக்கனத்திற்கு மூன்றாம் இடத்தில் இருப்பினும் இலக்கனத்திற்கு ஆறாம் இடத்தில் குரு இருந்தாலும், இச்சாதகன், தன்னுடைய குருவையும் ஞானத்தையும் வெறுப்பவனாக இருப்பான். ஒன்பதாம் இடத்தில் குளிகனும், சனியும் ஒன்று சேர்ந்து இருப்பின், இச்சாதகன் தந்தையோடு சண்டையிட்டு, அவரை வெறுப்பவனாக இருப்பான். இலக்கனத்திற்கு நான்காம் இடத்தில் புதன் நின்றால், இச்சாதகன் சிவஞானத்தை வெறுத்துப் பேசுபவனாக இருப்பான்.

## தாரத்தைப் பகைப்பவன், ஞானத்தை வெறுப்பவன், ஊமை

*மொழிந்தபாக் கியத்தில் இரவிசேய் வெள்ளி*
*மூடிடிற் றாரத்தைப் பகைப்பன்*
*வழிபடு தனத்தில் ரோகணி தன்னில்*
*வன்சிகி இருக்கின்ஞா னத்தை*
*அழிவுகள் சொல்வன் இடபத்தின் மதியை*
*அரிட்டம்செய் பாவரே பார்க்க*
*வெளிபெறு கடகம் தனிற்றிரி கோணாங்*
*கிசம்பண்ணில் ஊமையே யாவன். (248)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்தில் சூரியன், செவ்வாய், சுக்கிரன் ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி இருப்பின், இச்சாதகன், தாரத்தைப் பகைப்பவனாக இருப்பான். சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் ரோகணி நட்சத்திரத்தில் பாதமொன்றில் கேது இருந்தால், இச்சாதகன் ஞானத்தை அவமதித்துக் கூறுவான். இடப இராசியில் உள்ள சந்திரனைப் பாவக் கோள்கள் பார்க்க, கடகத்தில் திரிகோணாங்கிசம் பெற்றிருப்பின், இச்சாதகன், ஊமையாக இருப்பான்.

### ஊமை

மோகமாம் இரண்டுக் கிறைவனுங் குருவும்
மொழிமோ ரைந்தெட்டில் இருக்க
வேகமாம் பாவர்கூடிடப் பார்க்க
விலங்கிலக் கனத்திற்றேய் மதியும்
ஏகமாய் இருக்கு மேனும்சா மிக்கே
எட்டைந்திற் கேதுவே இருக்க
யோகமாம் இரண்டில் எட்டுளோன் இருக்கில்
*ஊமைஎன் றுரைத்தனர் உரவோர். (249)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்திற்கு அதிபதியும் குருவும் இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் அல்லது எட்டாமிடத்தில் இருக்க, இவர்களோடு பாவக்கோள்கள் சேர்ந்திருக்க, இலக்கனத்தில் தேய்பிறைச் சந்திரனும் இருக்க, இலக்கனாதிபதிக்கு

எட்டாமிடம் அல்லது ஐந்தாமிடத்தில் கேது இருக்க, இலக்கனத்திற்கு இரண்டில் எட்டாமிடத்திற்கு அதிபதி இருந்தால், இச்சாதகன் ஊமையாக இருப்பான் என்று சோதிடம் கற்றுவல்ல சான்றோர் கூறியுள்ளார்கள்.

## வார்த்தை மூப்பு, அன்னையைப் பகைப்பவன்

மௌவல்வெண் ணகையாய்! இராகுவே நான்கின்
மருவிலும் அட்டமத் திறைவன்
செவ்விதாய் ஆறில் இருக்கினும் புவிமேல்
தெரிந்துதன் வார்த்தைமூப் புடையோன்
கௌவையாம் ஆறில் இருக்கினும் புவிமேல்
கனம்பெற தன்னையே புகழ்வன்
எவ்வமின் மதிசேய் இரவிபொன் வெள்ளி
இசைந்தென்றில் அன்னையைப் பகைப்பன். *(250)*

(இ-ள்.)காட்டுமல்லிகைப்பூப் போன்ற, வெண்மையான பற்களைக்கொண்டு புன்னகை பூக்கின்ற பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்தில் இராகு இருந்தாலும், எட்டாமிடத்திற்கு அதிபதி ஆறில் இருந்தாலும் வார்த்தை மூப்பு உடையவனாக இச்சாதகன் இருப்பான். சென்ம இலக்கனத்திற்கு மூன்றாம் இடத்தில் இராகு இருந்தால், இச்சாதகன், தன்னைத்தானே புகழ்ந்து கொள்ளுவான். சந்திரன், செவ்வாய், சூரியன், குரு, சுக்கிரன் கூடி இருந்தால் அன்னையைப் பகைப்பவனாக இருப்பான்.

## அன்னையைப் பகைப்பவன்

யாவரென் மதிசேய் சனியுமே கூடில்
ஈன்றருள் அன்னையைப் பகைப்பன்
மேவிய தனத்திற் பாவரே இருக்கின்
மிகுரெண்டுக் குடையவன் மூடம்
தாவிய நீசம் அடையில்வன் முகமாம்
சாற்றிட ஆட்டின்பல் லாகும்
கோவையங் கனிவாய் இரசமே ஊறுங்
கோமளப் பச்சிளங் கொடியே. *(251)*

(இ-ள்.) கோவைக்கனி போன்று அழகான சிவந்த வாயையும் பழச்சாறு போன்று ஊறுகின்ற வாய்நீரையும் உடைய அழகுமிகு பச்சிளம் கொடி போன்று விளங்குகின்ற பெண்ணே! சென்ம இலக்கனாதிபதி எந்தக் கோளாக இருப்பினும் சந்திரன், செவ்வாய், சனி ஆகிய கோள்கள் ஒன்றுகூடி இருப்பின், இச்சாதகன், ஈன்ற அன்னையைப் பகைப்பவனாக விளங்குவான். இரண்டாமிடத்தில் பாவக் கோள்கள் இருக்க, இரண்டாம் இடத்திற்கு அதிபதி அஸ்தமனம் நீசம் பெற்றிருக்கின்ற இச்சாதகனுக்குக் கொடூர முகமாக இருக்கும்; பற்கள் ஆட்டின் பல்போல இருக்கும் .

**தீய செயல்களைச் செய்பவன்**

*யுகமுடி வில்லாத் தனத்தினில் நீசர்*
*உறைந்திட இரண்டுளோர் நீசம்*
*புகவல் லதுவாம் இரண்டினுக் கிறையும்*
*பொறையிலாப் பாவமத் தியமாய்*
*துகளுறு பாவ வர்க்கமே அடையிற்*
*றுன்முக மத்தகக் கோடி*
*நிகரென வளர்ந்து பணைத்திறு மாந்து*
*நெருங்கிய கனதன மயிலே ! (252)*

(இ-ள்.) யானையின் மத்தகத்தை ஒத்த பெரிய திமிர்த்த நெருங்கிய கனமான கொங்கைகளையும் மயில்போன்ற சாயலையும் உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் நீசமடைந்த கோள்கள் நிற்க, இரண்டாம் இடம் அல்லது இரண்டாம் இடத்திற்கு அதிபதி பாவக்கோள்களுக்கு இடையில் இருந்தாலும் பாவவர்க்கம் அடைந்திருப்பினும் தீய செயல்களைச் செய்வதில் இச்சாதகன் சாமர்த்தியம் உடையவனாக விளங்குவான்.

**வெள்ளி பாத்திரம் உடையவன்**

*யூகமாம் தனத்தின் மதிவெள்ளி தனக்கே*
*உற்றகேந் திரங்களில் இருந்தே*
*வேகமாம் பாவ வர்க்கமே இன்றி*
*மிகுசுப வர்க்கமே அடையின்*

வாகுறு வெள்ளித் தாலமுண் டாகும்
வாக்கேசன் சதுர்த்தகேந் திரத்தில்
ஏகில்வை சேடி யாங்கிசம் ஏறில்
இயல்வெள்ளி தாலமுண் டாமே. (253)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்தில் சந்திரன், சுக்கிரன் இருவருக்கும் கேந்திர திரிகோணங்களில் இருக்க, பாவ வர்க்கம் இன்றி, மிகுந்த சுபவர்க்கம் அடைந்தால், இச்சாதகனுக்கு வெள்ளித்தட்டு முதலானவை கிடைக்கும். இரண்டாம் இடத்திற்கு அதிபதி, நான்கா மிடமான கேந்திரத்தானத்தில் வைசேடியாங்கிசத்தில் ஏறி இருப்பின் இச்சாதகனுக்கு வெள்ளித்தட்டு முதலானவை கிடைக்கும்.

## இதுவுமது

யோகமாம் தனத்தன் உச்சாங்சம் ஏறி
உச்சமாங் கிசந்தன்னை அடைந்து
வாகுறு கேந்திர கோணத்திற் பெலக்க
மதிபுகர் பார்த்திடு மேனும்
பாகமாம் வெள்ளித் தாலமும் வெள்ளிப்
பண்டமும் வெள்ளியி னாலே
ஆகிய பாத்திர வர்க்கமும் உண்டாம்
அம்புயம் மலருறை அனமே. (254)

(இ-ள்.) செந்தாமரை மலரில் வீற்றிருக்கும், திருமகளைப் போன்று அழகுடனும் அன்னத்தைப் போன்ற நடையுடனும் விளங்கும் பெண்ணே ! சென்ம இலக்கனத் திற்கு இரண்டாமிடத்திற்கு அதிபதி உச்சாங்கிசம் ஏறி உச்சாங்கிசத்தை அடைந்து கேந்திர திரிகோணங்களில் பலத்திருக்க, சந்திரன், சுக்கிரன் அதனைப் பார்த்தாலும் இச்சாதகனுக்கு, வெள்ளித்தட்டு, வெள்ளிப்பாத்திர பண்டங்களும் மிகுதியாகக் கிடைக்கும்.

**மக்களைக் காப்பவன்**

வந்ததனத் தோன்கோபு ராங்கிசத்தில் இருக்க
மந்திரியும் பாராவ தாங்கிசத்தி லாதல்
விந்தையுள வெகுசனங்கள் கொண்டாட வேதான்
வெகுசனத்தை இரட்சிப்பன் மிக்கரண்டுக் கிறைவன்
சொந்தமாம் பாராவ தாங்கிசமே பெற்றுச்
சுபர்கூடச் சுபர்பார்க்கச் சுபவர்க்க முற்றிடில்
இந்திரன்போற் தனயோகம் இவரிருக்கு மேனும்
இவன்பேரைச் சொல்லிஅநே கம்பேர்தாம் பிழைப்பர். (255)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்திற்கு அதிபதி கோபுராங்கிசத்தில் இருக்க, குரு பர்வதாங்கிசத்தில் இருக்க இச்சாதகன் அதிகமான மக்கள் கொண்டாடும் வண்ணம் மிகுதியான மக்களைக் காப்பான். இரண்டாம் இடத்திற்கு அதிபதி, பர்வதாங்கிசத்தில் ஏறி சுபக்கோள்கள் கூடியிருக்க, சுபக்கோள்கள் பார்க்க, சுபவர்க்கம் ஏறி யிருக்கினும் இந்திரன் போன்ற பொருட்செல்வம் இவருக்கு இருந்தாலும், இச்சாதகனின் பேரைச் சொல்லி அநேகம்பேர் பிழைப்பார்கள்.

**இனிமையாகப் பேசுபவன்**

வாக்கின் மூன்றிற் குருவிருக்கின்
மதுர வாக்கு வளர்மதிக்கும்
வீக்கும் வியத்தில் சுபர்இருக்கின்
மிருது வசனன் செங்கதிர்க்குத்
தாக்கும் வியத்தில் இருபாம்பும்
தவிர மற்றோர் இருந்திக்கால்
தேக்க மிருது வசனனெனச்
செப்ப லாகும் தேன்மொழியே! (256)

(இ-ள்.) தேன் போன்று இனியமொழியைப் பேசக் கூடிய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடம் அல்லது மூன்றாமிடத்தில் குரு இருக்க, இச்சாதகன் இனிமையாகப் பேசக்கூடியவனாக இருப்பான். வளர்பிறைச் சந்திரனுக்குப் பன்னிரண்டாமிடத்தில் சுபக்கோள் இருந்தால்,

இச்சாதகன், மென்மையாகப் பேசக்கூடியவனாக இருப்பான். சூரியனுக்குப் பன்னிரண்டாம் இடத்தில் இராகு, கேது ஆகியவற்றைத் தவிர மற்ற கோள்கள் இருந்தால் இச்சாதகன் மென்மையாகப் பேசக்கூடியவன்.

### சத்திய வாக்கு உடையவன்

*விரவும் வியத்திற் குளிகனிற்க*
*மிகவும் குளிர்ந்த வசனனென்பார்*
*பரவும் இரண்டிற் புகருறினும்*
*பருதி செவ்வாய் உடனுறினும்*
*இரவி புந்தி சனிவெள்ளி*
*இவர்கள் இரண்டில் இருந்திடினும்*
*தரமா பத்திற் புதனுறினும்*
*தயவு மிகுஞ்சத் தியவாக்கே.* *(257)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் இடத்தில் குளிகன் நிற்க, இச்சாதகன் இனிமையாகப் பேசக் கூடியவனாக இருப்பான். இலக்கனத்திற்கு இரண்டா மிடத்தில் சுக்கிரன் நின்றாலும் சூரியன், செவ்வாய் இதனுடன் சேர்ந்து இருப்பினும் அல்லது புதன், சனி, சுக்கிரன் இருந்திடினும், இலக்கனத்திற்குப் பத்தாமிடத்தில் புதன் இருந்தாலும், இச்சாதகன் கருணைமிக்கவனாகவும் சத்தியவாக்கினைப் பேசுபவனாகவும் விளங்குவான்.

### இதுவுமது

*வீசுங் கோலே உதிக்கப்பொன்*
*மேவி யிருக்க இரண்டொன்றுக்*
*காசில் இறைவர் கேந்திரிக்கில்*
*அரிதா கியசத் தியவாக்கு*
*பேசும் உதயம் தனத்திற்பாம்*
*பிருக்க வதனோர் கேந்திரத்தின்*
*மாசில் லாத சுபவர்க்கம்*
*மருவிற் றுட்ட வாக்கியனே.* *(258)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனம் துலாமாக இருக்க, அதில் குரு இருக்க, இலக்கனாதிபதி, இரண்டாமிடத்திற்கு அதிபதி ஆகியோர் கேந்திரங்களில் இருக்க, இச்சாதகன் சத்தியவாக்கு

பேசுபவனாக இருப்பான். சென்ம இலக்கனம், இரண்டா மிடம் இவற்றில் ஒன்றில் இராகு அல்லது கேது இருக்க, அதற்குக் கேந்திரத்தில் சுபக்கோள்கள் இருக்க, இச்சாதகன் தீய வாக்கினை உடைவனாக விளங்குவான்.

**அனுக்கிரக வாக்கு**

வெஞ்சமிலா ஒன்றிரண்டு மூன்றுதனக் கிறைவர்
வண்மையுடன் கூடியைந்தின் மேவலின்றிப் பார்க்க
[illegible] உச்சமுற இலக்கனத்திற் பொன்னேன்
அடைந்திருக்கின் நிக்கிரக அனுக்கிரக வாக்கு
தஞ்சமுடன் ஒன்றிரண்டு பன்னிரண்டோ டைந்து
தனக்கிறை வைசேடி சாங்கிசமல் லாது
வஞ்சமில்லா தைராவ தாங்கிசமே ஏறில்
வையகமே னிக்கிரக வனுக்கிரக வாக்கே. *(259)*

*(இ-ள்.)* இலக்கனம், இரண்டாமிடம், மூன்றாமிடம் இவற்றிற்கு அதிபதிகள் ஐந்தாமிடத்தில் இருக்க, அல்லது பார்க்க, ஐந்தாமிடத்திற்கு அதிபதி உச்சம்பெற்று விளங்க, இலக்கனத்தில் குரு இருக்க, இச்சாதகன் அனுக்கிரக வாக்குடையவனாக விளங்குவான். இலக்கனம், இரண்டா மிடம், பன்னிரண்டாமிடம், ஐந்தாமிடம், வேசேடியாங்கிசம் அல்லது ஐராவதாங்கிசம் ஏறில் இச்சாதகன் உலகம் போற்றும் அனுக்கிரக வாக்குடையவனாக விளங்குவான்.

**தெய்வீக வாக்கு, கொடிய வார்த்தை உடையவர்கள்**

வேண்டியதோ ரிவர்கள் குருவர்க்கமே யடைந்து
மிக்ககேந் திரகோணந் தனிலேறி யேதான்
பூண்டபலன் பெற்றிருக்கிற் றெய்வீக வாக்கு
புகலுதயம் இராகுவெனிற் சபையேறும் பேச்சு
தூண்டியதோர் வெகுவார்த்தை மிகுசடக்குப் பேச்சு
தொடுமேழிற் கேதுநிற்க வாக்கேசன் மூடம்
தீண்டரிய நீசமெய்தின் மிதமில்லாப் பேச்சு
தீயவிட வாக்கென்னச் செப்புவர்பெண் ணமுதே. *(260)*

*(இ-ள்.)* பெண்ணமுதே ! சென்ம இலக்கனம், இரண்டா மிடம் இவற்றில் இராகு அல்லது கேது இருக்க, சுபக் கோள்கள், குருவர்க்கம் பெற்றுக் கேந்திர திரிகோணங்களில்

ஏறி இருக்க, இச்சாதகன் தெய்வீக வாக்கை உடையவனாக விளங்குவான். இலக்கனத்தில் இராகு இருக்க, இச்சாதகன் சபைகளில் விவாதம் செய்து அதிகமாகப் பேசுபவனாக இருப்பான். ஏழாம் இடத்தில் கேது நிற்க, இரண்டாம் இடத்திற்கு அதிபதி அஸ்தமனம் அல்லது நீசம் பெற்று இருக்க, இச்சாதகன் தீமையான விஷ வார்த்தைகளைப் பேசுபவனாக இருப்பான்.

## பொய் பேசுபவன்

வையமுறுங் குடும்பமதிற் குளிகனே இருக்கில்
வம்புவீண் வார்த்தையவ னுடனேசுன் ராகு
செய்யசெவ்வா யுடன்கூடிப் பார்த்திடினும் அலது
தீயவிடக் கடிகைதான் இருக்கவன்றித் தனத்தோன்
ஐயமின்றி ஆறெட்டில் பன்னிரண்டில் இருக்க
வானபுதன் நீசவர்க்க மடையில்திக்கு வார்த்தை
மெய்யுடைய குடும்பத்தில் வக்கிரனே இருக்கின்
மெய்போலும் அசத்தியத்தை விளம்பிடுவன் மாதே! (261)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்தில் குளிகன் இருந்தால், இச்சாதகன் வீணான வம்பு வார்த்தை களைப் பேசுபவனாக இருப்பான். அவனுடன் சனி, இராகு, செவ்வாய் ஆகியவை கூடினாலும் பார்த்தாலும், தீயவிடக் கடிகை இருக்க, அல்லது இரண்டாம் இடத்திற்கு அதிபதி ஆறு, எட்டு, பன்னிரண்டாம் இடங்களில் இருக்க, புதன் நீசவர்க்கமடைந்தால், இச்சாதகன் திக்கு வார்த்தை களைப் பேசுபவனாக இருப்பான். சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் செவ்வாய் நிற்க, இச்சாதகன், உண்மையைப் போல பொய்யான வார்த்தைகளையே எப்பொழுதும் பேசுவான்.

## பொன் பாத்திரம் உடையவன்

அரியதனா திபன்குருவி னுடன்கூடி யயிரா
வதாங்கிசம் ஏறிப்
பரிவினுடன் சுபகேந்திர கோணங்கட னிலிருக்கப்
பண்ப தாகத்

*தெரியுமிவ னங்சாதி பதிகுருவின் வர்க்கமுற்று*
*சிறப்பாய் நிற்கில்*
*விரிவனைய பொற்றாலம் பொற்பாண்டம் படைத்திடுவன்*
*வேற்க ணாளே.* (262)

(இ-ள்.) வேலை ஒத்த கூரிய பார்வையைக் கொண்ட கண்ணினாளே! சென்ம இலக்கனத்திற்கு இரண்டா மிடத்திற்கு அதிபதி குருவுடன் கூடி ஐராவதாங்கிசம் ஏறி சுப கேந்திர திரிகோணங்களில் இருக்க, இவன் ஏறியுள்ள அங்கிசாதிபதி குருவின் வர்க்கம் பெற்று இருக்கில், இச்சாதகன், பொன்னாலாகிய தட்டு முதலான பொன் பாத்திர பண்டங்களை உடையவனாக விளங்குவான்.

## இதுவுமது

*ஆய்ந்ததனா திபனுச்ச கேந்திரத்தி லேயிருக்க*
*அமைச்ச னானோன்*
*வாய்ந்ததோர் உதயமுறத் தனத்திலுச்சக் கோளிருக்க*
*வலிய பாவர்*
*சாய்ந்துபா ராதிருக்கிற் பொற்றாலம் பொற்பாண்டம்*
*தானே உண்டாம்*
*தேய்ந்தமதி போல்நுதலும் வேற்கண்ணும் செவ்வாயும்*
*சிறக்கும் மானே!* (263)

(இ-ள்.) தேய்ந்த சந்திரனைப் போன்ற நெற்றியையும் வேல் போன்ற வடிவுடைய கூரிய பார்வை கொண்ட கண்களையும், சிவந்த வாயையும் மான்போன்ற துள்ளலையும் உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்திற்கு அதிபதி உச்சம் பெற்று கேந்திரங்களில் இருக்க, குரு இலக்கனத்தில் இருக்க, இரண்டாமிடத்தில் உச்சமடைந்த கோள் இருக்க, பாவக்கோள்கள் எவையும் பாராது இருப்பின், இச்சாதகனுக்கு பொன்தட்டு, பொன்னா லாகிய பண்ட பாத்திரம் முதலானவை தானே வந்து சேரும்.

## இதுவுமது

*இலக்கனந்தான் தனுவாகிச் சாமியயி ராவதாங்*
*கிசத்தில் ஏறித்*
*துலக்கமுற நிற்கிலில் தனபதியும் உச்சமுறச்*
*சொலுமின் னோர்கள்*

கலக்குமங்கி சாதிபதி வைசேடி காங்கிசத்தில்
கலந்து பொன்னோன்
பெலத்தவர்க்கத் துடனிருக்கிற் பொற்றாலம் உண்டென்றே
பேச லாமே! (264)

(இ-ள்.) சென்ம இலக்கனம் தனுவாகி, இலக்கனாதிபதி ஐராவதாங்கிசத்தில் ஏறி நிற்க, இரண்டாமிடத்திற்கு அதிபதியும் உச்சமுற்று இருக்க, இவர்களுடைய அங்கிசாதிபதி வைசேடிகாங்கிசத்தில் இருக்க, குரு வர்க்கத்துடன் இருக்கில், இச்சாதகன் பொன் தட்டினை உடையவனாக விளங்குவான்.

## செம்பு பாத்திரம் உடையவன்

ஈட்டுநேத் திரதா னத்தோன்
இயல்செவ்வா யுடனே கூடி
நாட்டுங்கேந் திரகோ ணத்தில்
நண்ணிடப் பாவ ரானோர்
மீட்டுங்கண் காணா ராகின்
மேன்மேலும் செம்பு பாத்ரம்
தேட்டமாய் வந்து சேரும்
செழுங்கயற் கண்ணி னாளே! (265)

(இ-ள்.) செழுமையான கயல் மீனை ஒத்த கண்களை யுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு இரண்டா மிடத்திற்கு அதிபதி, செவ்வாயுடன் ஒன்றுகூடி, கேந்திர கோணங்களில் இருக்க, பாவக்கோள்கள் இவர்களைப் பாராமல் இருந்தால், இச்சாதகனுக்குச் செம்புப் பாத்திரங்கள் மிகுதியாக வந்து சேரும்.

## வெண்கலப் பாத்திரம் உடையவன்

ஈங்கிவர் தங்க ளோடே
இந்துவே கூடி நின்றாற்
பாங்குறும் வெண்க லத்தாற்
பாத்திரம் உண்டாம் என்பர்

தேங்கொடி! புந்தி கூடிற்
தராவினால் பாத்தி ரந்தான்
தாங்கரும் கொங்கை தாங்கித்
தளர்ந்தமின் னிடையி னாளே! (266)

(இ-ள்.) இனிய கொடியைப் போன்ற உடலையும் தாங்குவதற்கு அரிய கொங்கைகளைத் தாங்குவதனால் தளர்ந்துவிட்ட மின்னல் போன்ற மெல்லிய இடையையும் கொண்ட பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்திற்கு அதிபதியுடன் செவ்வாய் இவர்களோடு சந்திரனும் கூடி நிற்க, இச்சாதகனுக்கு வெண்கலப் பாத்திரம் மிகுதியாக வந்து சேரும். சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்திற்கு அதிபதியுடன் புதன் கூடி நிற்க, இச்சாதகனுக்குத் தராவினால் ஆன பாத்திரங்கள் மிகுதியும் கிடைக்கும்.

**பித்தளை பாத்திரம் உடையவன்**

உற்றிடும் இவர்தம் மோடே
உலவிய நீச மூடம்
பெற்றிடுங் குருவே கூடில்
பித்தளைப் பாத்தி ரந்தான்
கற்றிடும் இவரைப் பானு
கலக்கினால் நானா விதத்தாற்
சொற்றிடும் பாத்தி ரங்கள்
துதிபெற வாய்க்கும் சொல்லே. (267)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்திற்கு அதிபதியுடன் குரு, அஸ்தமனம் அல்லது நீசம் பெற்று விளங்கில், இச்சாதகனுக்கு பித்தளைப் பாத்திரங்கள் மிகுதியாகக் கிடைக்கும். இரண்டாமிடத்திற்கு அதிபதியுடன் சூரியன் சேர்ந்திருக்க, பல வகையான பாத்திரங்களும் இச்சாதகனுக்குக் கிடைக்கும்.

**இரும்பு பாத்திரம் உடையவன்**

உருப்பொலி இவர்க ளோடே
உயர்சனி கூடி நின்றால்
இருப்புப்பாத் திரங்கள் உண்டாம்
இந்துவும் சனியும் கூடில்

ஒருப்படு துத்த நாகம்
ஒளியுறும் ஈயம் தன்னால்
வருக்கமாம் பாத்தி ரங்கள்
வந்திடும் மடநல் லாளே! (268)

(இ-ள்.) மடப்பம் பொருந்திய நல்ல பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்திற்கு அதிபதியோடு சனி சேர்ந்து இருப்பின், இச்சாதகனுக்கு இரும்புப் பாத்திரங்கள் மிகுதியாகக் கிடைக்கும். இரண்டா மிடத்திற்கு அதிபதியோடு சந்திரனும் சனியும் சேர்ந்திருக்க, துத்தநாகம், ஈயம் இவற்றால் செய்யப்பட்ட பாத்திரங்கள் இச்சாதகனுக்குக் கிடைக்கும்.

## மாலைக்கண் உடையவன்

ஊடிய தனத்தோன் சாமி
உடன்கூடி துர்த்தா னத்தில்
வாடியே இருப்பா னாகில்
வலதுகண் நாச மாகும்
நீடிய இலக்க னத்தின்
நேத்திரத் திறைவன் நிற்கத்
தேடிய மதியும் வெள்ளி
சேர்ந்திடில் மாலைக் கண்ணாம். (269)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்திற்கு அதிபதி, இலக்கனாதிபதியுடன் கூடி, ஆறு, எட்டு, பன்னிரண்டாமிடங்களில் இருந்தால், இச்சாதகனுக்கு வலது கண் பார்வை தெரியாது. சென்ம இலக்கனத்தில் இரண்டாம் இடத்திற்கு அதிபதி நிற்க, சந்திரனும் சுக்கிரனும் சேர்ந்திருக்க, இச்சாதகனுக்கு மாலைக்கண் நோய் வரும்.

## பிறவிக் குருடு

எண்ணமாம் நேத்தி ரேசன்
இரவிசுக் கிரனில் மூவர்
தண்ணமாம் சாமி தன்னைத்
தான்கூடித் துர்த்தா னத்திற்

பண்ணுற இருப்பா ராகிற்
பாலகன் பிறந்த போதே
கண்ணிலாக் குருட னென்றே
கருதினர் கற்றோர் தாமே. (270)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்திற்கு அதிபதி, சூரியன், சுக்கிரன் ஆகிய மூவரும் இலக்கனாதிபதியைக் கூடி ஆறு, எட்டு, பன்னிரண்டு முதலான தீய வீடுகளில் இருப்பாரேயானால், இக்குழந்தை பிறந்தபொழுது இருகண்களும் தெரியாது என்று சோதிடம் கற்றுணர்ந்த வல்லவர்கள் கூறியுள்ளனர்.

### பிறவிக் குருடு, வலக்கண் ஊனம்

ஏதுவாம் வியந்தனக்கு இறைவர்சட் டாட்டம்வியத்
திசைந்து கூடில்
ஓதுபிற விக்குருடன் வியத்திற்சே யுறப்பாவர்
உகந்து பார்க்கில்
வாதிலிடக் கண்ணூனம் இவ்வண்ணம் சனியிருக்கின்
வலக்கண் ஊனம்
சோதிடமா ராய்ந்துணர்ந்த பெரியோர்கள் நூல்முழுதும்
சொல்லிற் றன்றே. (271)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் வீட்டிற்கு அதிபதி ஆறு, எட்டு, பன்னிரண்டு ஆகிய தீய வீடுகளில் இருந்தால் இச்சாதகன், பிறவிக் குருடனாக விளங்குவான். சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் வீட்டில் செவ்வாய் நிற்க, இவனை பாவக்கோள் பார்க்க, இச்சாதகனுக்கு இடக்கண் ஊனமாகும். இதே போன்று சனி இருக்க வலக்கண் ஊனமாக இருக்கும் என்று சோதிடக் கலையை நன்கு கற்று வல்ல பெரியோர்கள் கூறியுள்ளார்கள்.

### கண்நோய் உடையவர்கள்

ஐந்தாக வருஞ்சிங்க முதிக்கிலதி இரவிமதி
அமர்ந்தி ருக்க
கந்தோத வேசனியும் பார்க்கவே இரண்டுகண்ணும்
நாச மாகும்

சந்தாரும் சுபர்பாவர் வந்துபார்த் திடிற்குந்தம்
தள்ளும் கண்ணும்
சிந்தாத சுபர்மாத்ரம் பார்த்திடிற்கண் நோயுண்டாய்
தீரும் என்பார். *(272)*

(இ-ள்.) சென்ம இலக்கனம் சிம்மமாக இருக்க, சூரியன், சந்திரன் இருவரும் அதில் இருக்க, சனியும் இவர்களைப் பார்க்க, இச்சாதகனுக்கு இரண்டு கண்களும் நாசமாகும். இவர்களைச் சுபக்கோள்களும், பாவக் கோள்களும் சேர்ந்து பார்த்திட, இச்சாதகன் முன் தள்ளிய கண்களை உடையவன். சுபக்கோள்கள் மட்டும் இவர்களைக் காண இச்சாதகனுக்கு கண்ணில் நோயுண்டாகும். அந்நோயும் தீரும்.

## இதுவுமது

ஒட்டியரெண் டினிற்பாவர் இருக்கரெண்டுக் கிறைவனுறு
ஒளிம ழுங்கிக்
கிட்டியதோர் சுபர்பார்வை உண்டாகிற் சிமிட்டுக்கண்
கீர்த்தி தானம்
மட்டிலாத் தனத்தானம் இதற்கிறைவர் பாவருடன்
வந்து கூடத்
தொட்டசனி பார்த்தக்கால் வியாதிநேத் திரமென்ன
சொல்ல லாமே. *(273)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்தில் பாவக்கோள்கள் இருக்க, இரண்டாமிடத்திற்கு அதிபதியும், அஸ்தமனம் பெற்றிருக்க, சுபக்கோள்கள் அதனைப் பார்த்திருக்க, இச்சாதகன் அடிக்கடி சிமிட்டுகின்ற கண்களை உடையவனாக இருப்பான். பதினோராமிடம், இரண்டா மிடம் இவற்றிற்கு அதிபதிகள், பாவக்கோள்களுடன் சேர்ந்திருக்க, இவர்களைச் சனி பார்த்தால், நோயுள்ள கண்கள் என்று சொல்ல வேண்டும்.

## இதுவுமது

ஓலமுற்ற வாக்கேசன் அங்கிசாதி பதியுடனே
உகந்து கூடி
கோலமுற்ற பாவவர்க்க மடையினேத் திரரோகம்
கொள்வ ரென்பார்

சாலரெண்டுக் கிறையவனேவியந்தன்னிற் சுபரோடும்
சார்ந்து நிற்கில்
ஏலுறுவி சாலமின்றி இடுகுநேத் திரமாக
இருக்கும் தானே. *(274)*

(இ-ள்.) இரண்டாமிடத்திற்கு அதிபதி, அங்கிசாதி பதியுடன் ஒன்றுகூடி பாவவர்க்கம் பெற்று இருப்பின், இச்சாதகனுக்கு கண்ணோய் உண்டாகும். இரண்டாம் இடத்திற்கு அதிபதி, பன்னிரண்டாமிடத்தில் சுபக்கோள் களோடு சேர்ந்து இருக்கில், இச்சாதகனுக்கு அகலமில்லாத இடுக்குக் கண் இருக்கும்.

## இதுவுமது

கருதி ரண்டுக் கதிபதியே
கதிரோ னாகி இரண்டைந்தின்
மருவி இருக்கக் குளிகனும்தான்
மகிழ்ந்து பார்க்க உடனிருக்க
உருகும் பித்த காசத்தால்
உஷ்ண மாகும் நோயதனால்
இருபங் கயம்போல் இருந்தகண்கள்
இடுக்குப் பிடித்த நேத்திரத்தான். *(275)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் வீட்டிற்கு அதிபதியாக சூரியன் இருந்து, இலக்கனத்திற்கு இரண்டு அல்லது ஐந்தாமிடத்தில் இருக்க, இதனோடு குளிகன் கூடியிருக்க, அல்லது இதனைக் குளிகன் பார்க்க, பித்தகாசம், உஷ்ணநோய் போன்றவற்றால் இச்சாதகனுக்கு இருதாமரை மலர்களைப் போல அழகு பெற்றிருந்த கண்கள் மாற்றமடைந்து இடுக்கிய கண்களாகும்.

## அழகான கண்கள் உடையவன்

காணு மிரண்டுக் கதிபதியும்
கருது நேத்திரக் காரகனும்
தோணும் சுபரே யாகிமிகுஞ்
சுபவர்க் கங்கள் தனையடைந்துக்

*கோண கேந்திரம் தனிலிருக்கிற்*
*குலவி நீண்டு விசாலமதாய்ப்*
*பூணும் இனிய வமரமது*
*பொருந்தி இலங்கும் கண்ணாமே. (276)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்திற்கு அதிபதியும் இரண்டாமிடத்திற்குக் காரகனும் சுபராக இருக்க, சுபவர்க்கங்களை அடைந்து கேந்திரங்களில் இருக்க, பெரியதான அழகிய இனிமை தருவதாகிய தேவர்களின் கண்களைப் போல பொலிவுடன் காட்சிதரும் கண்களை இச்சாதகன் பெற்றிருப்பான்.

**அரசரால் கண்ணிழப்பவன்**

*கிளரும் இராச காரகன்தான்*
*கிட்டி யிருந்த நவாங்கிசத்தோன்*
*வளரும் சாமி யுடன்கூடி*
*வருதுர்த் தானம் தனிலிருக்க*
*விளரும் இரண்டு மூன்றினுக்கும்*
*இறைவர் வியமா றெட்டிநிற்கும்*
*அளவிற் குருவீட் சணமற்றால்*
*மன்ன ராலே கண்பறிபோம். (277)*

*(இ-ள்.)*இராச காரகன் இருந்த நவாங்கிசத்தோன் இலக்கனாதிபதியுடன் கூடி ஆறு, எட்டு, பன்னிரண்டாம் இடங்களில் இருக்க, இரண்டாமிடத்திற்கு அதிபதி, மூன்றாமிடத்திற்கு அதிபதி இவர்கள் ஆறு, எட்டு, பன்னிரண்டாம் இடங்களில் இருக்க, குருவின் பார்வை இல்லாமல் இருக்குமானால், இச்சாதகனின் கண்கள் அரசரால் பறிபோகும்.

**வலக்கண் ஊனம்**

*கீற்றாம் இரண்டில் ஓரெட்டிற்*
*கிலமாந் தீக்கோ ளுறப்பார்க்க*
*மாற்றமாஞ் சுபக்கோள் வர்க்கமின்றி*
*வலிதில் இருக்க அதற்குடையோன்*

தூற்றார் பலம்போய் இருந்தக்காற்
சொன்னார் வலக்கண் ஊனமென்றே
தேற்றாக் காமக் கலையான
திருப்பாற் கடலில் குளிப்பவளே! (278)

(இ-ள்.) கண்களுக்குப் புலப்படாத காமக்கலையான திருப்பாற்கடலில் நீராடக்கூடிய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் தீயக்கோள்கள் நிற்க, அல்லது அவ்விடத்தைத் தீயக்கோள்கள் பார்க்க, சுபக்கோள் வர்க்கமின்றி பலவீனமாக இருக்க, எட்டாமிடத்தோன் வலிமையின்றி இருப்பின், இச்சாதகனுக்கு வலக்கண் ஊனம்.

### அரசாரால் கண் இழப்பவன்

குறிப்பாம் இராச காரகன்தான்
குலவும் உதயம் தனிலிருக்கப்
பொறிப்பா மூன்று தனம்வியத்தைப்
பொருந்தும் இறைவர் தன்பாகம்
செறிப்பா யடையச் செழுங்கதிரோன்
தெரிந்து பார்க்கில் உடன்கூடில்
வெறிப்பாம் இராச கோபத்தால்
விளங்கும் இருகண் பறிபோமே. (279)

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் சூரியன் இருக்க, மூன்றாமிடம், இரண்டாமிடம், பன்னிரண்டாமிடம் ஆகியவற்றில் ஒன்றில் இலக்கனாதிபதி இருக்க, அல்லது இலக்கனாதிபதியை சூரியன் பார்க்க, அல்லது இலக்கனாதி பதியுடன் கூடி இருக்க, இச்சாதகனின் கண்கள், இரண்டும் அரசாங்க தண்டனையால் பறிபோகும்.

### வலதுகண் ஊனம்

கூட்டுந் தனத்தில் அட்டமத்திற்
கொடிய பாவர் உறைந்திருக்க
மீட்டுந் தீயோர் எதிர்பார்க்க
மிகுநற் கோள்கள் வர்க்கமின்றி

நீட்டு மிரண்டெட் டினுக்கிறைவர்
நிறைந்த பலம்போய்க் குறைந்துநிற்கில்
தீட்டுங் கதிர்வேல் விழியணங்கே !
சிறக்கும் வலக்கண் ஊனமென்பார். *(280)*

(இ-ள்.) மைதீட்டப்பெற்ற ஒளிபொருந்திய வேலை ஒத்த கூர்மையான பார்வையைக் கொண்ட விழிகளை யுடைய பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்தில் அல்லது எட்டாம் இடத்தில் பாவக்கோள்கள் நிற்க, இவற்றைத் தீயக்கோள்கள் பார்க்க, நற்கோள்கள் வர்க்கமின்றி, இரண்டாமிடத்திற்கு அதிபதி, எட்டாம் வீட்டிற்கு அதிபதி ஆகியோர் பலம் குன்றியவர்களாக இருக்கில், இச்சாதகனுக்கு வலக்கண் ஊனம்.

## இதுவுமது

கெண்டையங் கண்ணாய்! ஏழிற்
கிரணசூ ரியனே நிற்கத்
திண்டிரல் இராகு காரி
சேர்ந்தொன்றாய்ப் பார்க்கு மேனும்
தண்டியே வெவ்வே றாகத்
தானின்று பார்க்கு மேனும்
கண்டிடும் வலக்கண் ஊனம்
காணுமென் றுரைத்தார் மேலோர். *(281)*

(இ-ள்.) கெண்டைமீனை ஒத்த அழகான கண்களை உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் கிரகண சூரியன் இருக்க, இராகு, சனி ஆகிய இரண்டு கோள்களும் ஒன்றாகச் சேர்ந்து பார்த்தாலும் தனித்தனியாக நின்று பார்த்தாலும் இச்சாதகனுக்கு வலக்கண் ஊனமாகும் என்று சோதிடக்கலையைக் கற்றுணர்ந்த வல்லவர்கள் கூறியுள்ளார்கள்.

## இதுவுமது

கேடிலான் இரண்டிற் பானு
கிட்டிநின் றிடத்த னத்தோன்
நாடியே பார்க்கு மேனும்
நற்சிங்கம் உதய மாகத்

தேடிய கதிரோன் நிற்கச்
சேய்சனி கூடிப் பார்க்கப்
பாடிய குருவர்க் கத்தாற்
பகர்ந்திடும் வலக்கண் நாசம். (282)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் சூரியன் நிற்க, இரண்டாமிடத்திற்கு அதிபதி இவனைப் பார்க்கும் என்றாலும், சென்ம இலக்கனம் சிம்மமாக இருக்க, அதில் கதிரோன் நிற்க, செவ்வாய், சனி ஆகிய இருவரும் கூடி இதனைப் பார்க்க, இச்சாதகனுக்குக் குருவர்க்கத்தாரால் வலக்கண்ணுக்குக் கேடு நேரிடும்.

## இடக்கண் ஊனம்

கைப்படு சிங்கம் தோன்றக்
கலைமதி இருக்க அன்றேல்
மெய்ப்படு உதயம் ஏழு
வியத்தினில் மதியி ருக்கப்
பொய்ப்படு பாவர் பார்க்கப்
புண்ணியர் பாரா ராயிற்
செப்பிடும் இடக்கண் ஊனம்
திரண்டழும் தனத்தி னாளே! (283)

(இ-ள்.) திரண்டெழுந்த கொங்கைகளை உடைய பெண்ணே! சென்ம இலக்கனம் சிம்மமாக அதில் சந்திரன் இருக்க, அல்லது இலக்கனம், ஏழாமிடம், பன்னிரண்டாம் இடத்தில் சந்திரன் இருக்க, இதைப் பாவக்கோள்கள் பார்க்க, சுபக்கோள்கள் பார்க்கவில்லையானால், இச்சாதகனுக்கு இடக்கண் ஊனமாக இருக்கும்.

## கண்பார்வை இழப்பவன்

கொந்தவி ழிரவி செவ்வாய்
கொடுஞ்சனி மதியி ரண்டில்
விந்தையாய் ஆறில் எட்டில்
வியத்தினில் நிரையா நிற்கில்
பந்தமாம் பாவர் பார்க்கப்
பண்ணவர் நோக்கா ராகில்
இந்திரப் பதியைப் போன்ற
இருகண்ணும் நாச மாமே. (284)

(இ-ள்.) சூரியன், செவ்வாய்,சனி, சந்திரன் ஆகிய நால்வரும் சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடம், ஆறாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாம் இடத்தில் என வரிசையாக நிற்கில், இவர்களைப் பாவர்கள் பார்க்க, சுபக்கோள்கள் பார்க்காவிடில், இச்சாதகனுடைய இரண்டு விழிகளும் பார்க்கும் சக்தியை இழந்துவிடும்.

## இதுவுமது

கோலமார் சிங்கம் தோன்றக்
குளிர்மதி இரவி நிற்க
நீலனோ டிராகு மாந்தி
நேர்பட நின்று பார்க்க
வேலவே சுபவர்க் கந்தான்
இல்லாமல் இருக்கு மாயின்
ஞாலமே இருகண் ணுந்தான்
நாசமாம் என்று சொல்லே. (285)

(இ-ள்.) சென்ம இலக்கனம் சிம்மமாக அதில் சூரியனும் சந்திரனும் இருக்க, சனி, இராகு, குளிகன் ஆகிய மூன்று கோள்களும் பார்க்க, சுபவர்க்கம் இல்லாமல் இருக்குமானால், இச்சாதகனுக்கு இரண்டு கண்களிலும் பார்வை இருக்காது.

## ஒருகண் ஊனம்

சதயமா திரைபூசம் விசாகமதில் வெள்ளி
தானிருக்கச் சோதிதனிற் சனியனே இருக்கப்
புதைவுறுகார்த் திகை மூலந் தனிற்கேதுற் றிருக்க
புகலுமிவை தானுதயந் தனந்தான மாகச்
சிதைவுறுசத் திரத்தானம் அட்டமாம்பின் வியமாய்ச்
சிறந்திருக்கில் ஒருகண்ணே குருடெனவும் சொல்வார்
சுதைமதிசூ ரியன்காணா திடங்களெல்லாம் கண்டு
சொலுங்கணிதர் ஆராய்ந்து சொல்லியதிப் பொ[illegible]ளே!(286)

(இ-ள்.) சதயம், திருவாதிரை, பூசம், விசாகம் ஆகிய நட்சத்திரக் கால்களில் சுக்கிரன் இருக்க, சோதியில் நட்சத்திரக்காலில் சனி இருக்க, கார்த்திகை, மூலம் ஆகிய நட்சத்திரக் கால்களின் ஒன்றில் கேது இருக்க இவை

இலக்கனத்திலும் தனத்தானத்திலுமாக இருக்க, ஆறாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாமிடத்தில் இருந்தாலும், ஒரு கண் குருடு என்று சொல்லுவார்கள் என்பதைச் சூரியனும் சந்திரனும் கூட காண இயலாத இடங்களையெல்லாம் நுணுக்கமாக ஆராயும் கணித வல்லுநர்கள் கூறியுள்ளார்கள்.

**இரு கண்களும் ஊனம்**

*சாருமசு பதிஅனுடம் கார்த்திகையி னூடே*
*சாற்றுமுத்தி ராடமதிற் சாமனே இருக்கக்*
*கூறுமிரே வதிபரணி ஆயிலியம் பூசம்*
*குலவியசித் திரைநாளிற் சனியனே உறையச்*
*சேருமிவை தானுதயம் வாக்கொருகண் ஊனம்*
*செப்பியவிட் டம்வியமாய்ப் பாவர்நிற்கப் பார்க்கப்*
*பாருலவு சுபவர்க்கம் இல்லாமல் இருக்கில்*
*பண்பில்இரு கண்குருடாய்ப் பகருவர்பைந்*
*தொடியே!(287)*

*(இ-ள்.)* பசுமையான வளையல்களை அணிந்துள்ள பெண்ணே! அசுபதி, அனுடம், கார்த்திகை, உத்திராடம் ஆகிய நட்சத்திரக் கால்களில் புதன் இருக்க, இரேவதி, பரணி, ஆயிலியம், பூசம், சித்திரை ஆகிய நட்சத்திரக் கால்களில் சனி இருக்க, இவை சென்ம இலக்கனம், இரண்டாமிடம் ஆகிய இடங்களில் இருக்க, ஒருகண் ஊனமாகும். அவிட்டத்தில் பன்னிரண்டாமிடத்தோனுடன் பாவக்கோள் நிற்க அல்லது பார்க்க, சுபக்கோள்களின் பார்வை இல்லாமல் இருந்தால், இச்சாதகனின் இரண்டு கண்களும் குருடாகும் என்று கூறுவார்கள்.

*சிறக்கும் இரண்டில் ஈராறிற்*
*செப்பும் ஆறில் எட்டினிலும்*
*நிற்கும் இரவி மதிசெவ்வாய்*
*நீலன் இருக்கக் கொடும்பாவர்*
*உறக்கம் இன்றி எதிர்பார்க்க*
*உகந்து கூடி உடனிருக்கிற்*
*பிறக்கும் பொழுதே இருகண்ணும்*
*குருடாம் என்று பேசுவரே. (288)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடம், பன்னிரண்டாமிடம், ஆறாமிடம், எட்டாமிடம் ஆகிய வற்றில் முறையே சூரியன், சந்திரன், செவ்வாய், சனி இருக்க, இவர்களைக் கொடிய பாவக்கோள்கள் பார்க்க, அல்லது இவற்றோடு சேர்ந்து இருக்கில், சாதகன் பிறக்கும் பொழுதே இருகண் பார்வையையும் இழந்தவனாக இருப்பான்.

**குருடன், முன் தள்ளிய கண்**

*சீரார் ஐந்தும் ஏழிரண்டும்*
*திகழொன் பதுக்கும் இறையவர்கள்*
*தோராப் பலன்கள் குறைந்து நிற்கத்*
*துர்த்தா னத்திற் பாவர்நிற்கிற்*
*கூரா ரிருகண் குருடனென்பார்*
*கும்பம் உதிக்கச் சனிசெவ்வாய்*
*நேராய்க் கூடிப் பார்த்தக்கால்*
*நெறியாங் குந்தந் தள்ளியகண். (289)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடம், ஏழாமிடம், இரண்டாமிடம், ஒன்பதாம் இடம் ஆகிய வற்றிற்கு அதிபதிகள் பலம் குறைந்து இருக்க, ஆறு, எட்டு, பன்னிரண்டு முதலான இடங்களில் பாவக்கோள்கள் தோன்ற, இச்சாதகனுக்கு இரண்டு கண்களும் குருடாகும் என்பர். சென்ம இலக்கனம் கும்பமாக இதனை சனி, செவ்வாய் ஆகிய கோள்கள் ஒன்றுகூடி பார்க்க இச்சாதகன் வெளியின் தள்ளிய கண்களை உடையவனாக இருப்பான்.

**குருடன்**

*சுருதி உதய நாதனுக்கே*
*தோணும் ஐந்திற் அட்டமத்திற்*
*பருதி செவ்வாய் உறைந்திருக்க*
*பன்னிரண் டதனில் பாம்புநிற்க*
*சருவிற் சனியன் பார்த்தக்காற்*
*சாற்றும் இருகண் குருடாகும்*
*பொருங்குஞ் சரங்கள் புறங்கொடுக்கப்*
*பூரித் தெழுந்த தனத்தாளே. (290)*

(இ-ள்.) சண்டையிடுகின்ற இரு யானைகளை ஒத்த புடைத்தெழுந்த கொங்கைகளை உடைய பெண்ணே! சென்ம இலக்கனாதிபதிக்கு ஐந்தில் சூரியனும் எட்டாமிடத்தில் செவ்வாயும் நிற்க, பன்னிரண்டாம் இடத்தில் பாம்பு நிற்க, சனி பார்க்க, இச்சாதகனுக்கு இரண்டு கண்களிலும் பார்வை இழப்பு ஏற்படும்.

### கண்ணோய் உடையவன்

சூதார் இரவி மதிவெள்ளி
தொடங்கு பாம்பும் உடன்கூடிப்
போதாம் இரண்டோ டாறெட்டுப்
புகலீ ராறும் சரமாகிக்
கோதா லிவர்கள் இருந்தக்காற்
குறிப்பாம் கண்ணிற் சலரோகம்
பேதார் கண்ணின் விளிம்பெல்லாம்
புழுவே அரிக்கும் கண்டாயே. (291)

(இ-ள்.) சூரியன், சந்திரன், சுக்கிரன், இராகு அல்லது கேது ஒன்று சேர்ந்து, இரண்டாமிடம், ஆறாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாமிடம் இவை சரமாகி, இவற்றில் ஒன்றில்அமர்ந்திருக்க, இச்சாதகனுக்குக் கண்களில் நீர் நோய் உண்டாகும். கண்களின் விளிம்புகளில் புழு அரித்தது போன்ற நோயுண்டாகும்.

### பூ விழுந்த கண்

செப்பு மிவர்க ளுடன்சனியன்
சேரின் அனலால் கருவியினால்
வெப்பும் விரண நேத்திரமாம்
மேடம் உதிப்பக் கதிரிருப்ப
வப்பு மிராகுஞ் சனிசெவ்வாய்
அடர்ந்து பார்க்கிற் பூப்படுகண்
கொப்புக் குழையாய்! செம்படலைக்
குலவும் கண்ணாம் எனச்சொல்லே. (292)

(இ-ள்.) கொத்துக்களாக விளங்கும் தளிர்களைச் சூடிய பெண்ணே! சூரியன், சந்திரன், சுக்கிரன், இராகு அல்லது கேது, சனி இவர்கள் ஒன்றுசேர்ந்து சர இராசியாக இரண்டாம்

இடம், ஆறாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாமிடம் இவற்றில் இருக்க, இச்சாதகனுக்குப் புண்கள் உள்ள கண்ணாகும். மேடம் சென்ம இலக்கனமாக, இதில் சூரியன் இருக்க, இராகுவும், சனியும், செவ்வாயும் இதைப் பார்க்க, இச்சாதகனுக்குப் பூப்பட்ட கண்ணாக இருக்கும். மேலும் சிவந்த படலை உடையதாக கண்கள் விளங்கும்.

## முன் தள்ளிய கண்களை உடையவன்

சேர்க்கும் உதயம் தனிற்றனத்தோன்
 தீக்கோ ளுடனே சேர்ந்துநிற்க
ஆர்க்கும் சுபர்நோக் கிலையாகில்
 அடரும் மாலைக் கண்ணென்பார்
ஏற்கும் உதயம் இடபமதாய்
 இரவி இருக்கச் சனிசெவ்வாய்
பார்க்கு மாகில் அணங்கரசே!
 பகராய்க் குந்தந் தள்ளியகண். *(293)*

*(இ-ள்.)* பெண்களுக்கெல்லாம் தலைமைப் பூணும் சிறப்புடைய பெண்ணே! சென்ம இலக்கனத்தில் இரண்டாம் இடத்திற்கு அதிபதி பாவக்கோள்களுடன் சேர்ந்திருக்க, சுபக்கோள்கள் அதனைப் பார்க்கவில்லையென்றால், இச்சாதகனுக்கு மாலைக்கண் நோய் உண்டாகும். சென்ம இலக்கனம் இடபமாக இருக்க, அதில் சூரியன் இருக்க, சனி. செவ்வாய் ஆகிய கோள்கள் பார்க்குமானால், இச்சாதகன் முன்தள்ளிய கண்களை உடையவனாக இருப்பான்.

## அறிவு குறைபாடு, சுகவாழ்வு உடையவர்கள்

சையா மேடம் சிலைஇடபம்
 தானே உதிப்பத் தீக்கோட்கள்
மய்யாய்ப் பார்க்கத் தனந்தன்னின்
 மிக்க சனியும் உபகேதும்
தொய்யா திருக்கில் அசமந்தன்
 சுங்கன் புதன்பொன் னிரண்டிநிற்க
வையாத் தனத்தோன் கேந்திரகோ
 ணத்தி லிருக்கிற் சுகப்பொசிப்பே. *(294)*

*(இ-ள்.)* ஜென்ம இலக்கனம், மேடம், இடபம், தனுசு இவற்றில் ஒன்றாக இருக்க, இதனைத் தீயக்கோள்கள் பார்க்க, இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்தில் சனியும் உபகேதுவும் இருக்கில், இச்சாதகன் அறிவு குறைவுடன் மந்தமாகச் செயல்படுபவனாக இருப்பான். சூரியன், புதன், குரு ஆகியோர் இரண்டாம் இடத்தில் இருக்க, இரண்டாமித்திற்கு அதிபதி கேந்திர திரிகோணங்களில் இருக்க, இச்சாதகன் சுகமான வாழ்வை உடையவனாக இருப்பான்.

**சுகவாழ்வு உடையவன்**

*சொன்னதோர் இரண்டில் மூன்றொரு நாலிற்*
*றுலங்கிய நிறைமதி இருக்க*
*மின்னுறும் இரவி கூடிடா திருக்கில்*
*வெள்ளிதான் பார்க்கக்கூ டிடினும்*
*அன்னலக் கனத்திற் குருநிற்க ஏழுக்*
*கதிபதி கேத்திர கோணத்தின்*
*முன்னுற இருக்கு மேனும்பெண் ணரசே!*
*மொழிந்திடு சுகப்பொசிப் பென்றே. (295)*

*(இ-ள்.)* பெண்களுக்கெல்லாம் தலைமை பூண்ட பெண்ணே! ஜென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடம், மூன்றாமிடம், நான்காமிடம் இவற்றில் ஒன்றில் நிறைந்த சந்திரன் இருக்க, இதனுடன் சூரியன் சேராமல் இருக்க, சுக்கிரன் இதனைக் கூடி இருக்க அல்லது பார்த்து நிற்க, இலக்கனத்தில் குரு இருக்க, ஏழாம் இடத்திற்கு அதிபதி, கேந்திர திரிகோணங்களில் இருக்க, இச்சாதகன் சுகமான வாழ்க்கையை உடையவன்.

**சுவையான உணவு உண்பவன்**

*சோதியாம் இரண்டு மூன்றைந்தோ டேழும்*
*சொல்லு மெட்டுக்கிறை யோரும்*
*தீதிலா திருக்கச்சுபவர்க்க முறினும்*
*செழுமதி சுக்கிரன் தானும்*

மூதுணர் வானசுபவர்க்க மேறி
மூன்றினில் இருந்திடப் பார்க்க
வேதகு பாவர் நோக்கிலா ரேனும்
மிகுசுக போசனம் என்பார். (296)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டு, மூன்று, ஐந்து, ஏழு, எட்டு ஆகிய இடங்களுக்கு அதிபதிகள் தீங்கின்றி சுபவர்க்கம் பெற்று இருந்தாலும் சந்திரனும் சுக்கிரனும் சுபவர்க்கம் ஏறி மூன்றாமிடத்தில இருக்க, பாவக்கோள்கள் நோக்காமல் இருப்பாரேயானால், இச்சாதகன் சுவையான உணவினை உண்ணுபவனாக இருப்பான்.

## இதுவுமது

தக்கவைத்தோ டாறேழி லெட்டொன்பான் பத்திற்
தரும்வியத்திற் புதனிருக்கத் தனாதிபதி தானே
தொக்கேந் திரகோணம் தனிலிருக்கு மேனும்
சுக்கிரனும் மந்திரியும் கூடிநிற்க ரெண்டின்
மிக்கசுபர் உறைந்திருக்கச் சாமிபார்த் தாலும்
விளங்குமூன் றாமிடமே குருவர்க்க மாகப்
புக்குமிதற் குடையோர்கள் உதயகேந் திரமே
பொருந்திடுமே னும்சுகபோ சனமென்பர் திருவே! (297)

(இ-ள்.) திருமகளைப் போன்ற அழகினைக்கொண்ட பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்கு ஐந்து, ஆறு, ஏழு, எட்டு, ஒன்பது, பத்து, பன்னிரண்டு ஆகிய இடங்களில் ஒன்றில் புதன் இருக்க, இரண்டாமிடத்திற்கு அதிபதி, கேந்திர திரிகோணங்களில் இருந்தாலும், சுக்கிரனும் குருவும் ஒன்றுகூடி இருக்க, இரண்டாமிடத்தில் சுபக்கோள்கள் நிற்க, அவற்றை இலக்கனாதிபதி பார்த்தாலும், மூன்றாமிடம் குருவர்க்கமாக, மூன்றாம் இடத்திற்கு அதிபதி, இலக்கன கேந்திரத்தில் பொருந்தி இருந்தாலும் இச்சாதகன் நல்ல உணவை உண்பான்.

## சுமாரான உணவு உண்பவன்

தாவியலக் கனந்தன்னிற் குருவிருக்க நான்கிற்
சல்லியனுற் றிடமூன்றில் இரவிமதி உறைய
மேவியரெண் டுக்கிறைவன் கேந்திரத்தில் இருக்கின்
விரும்புசுவை பால்தேனும் முப்பழத்தோ டுண்பன்

தோமிலுத யத்திரவி நிற்கவேத னத்திற்
சுபரிருக்கு மேனும்வாக் கேசனுடன் புகரும்
ஆமிதெனக் கூடிநிற்க ஒவ்வொன்றைப் பார்க்கில்
ஆனதொரு சொற்பசுக போசனமாம் உரையே. (298)

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் குருவிருக்க, இலக்கனத்திற்கு நான்காம் இடத்தில் சுக்கிரன் நிற்க, மூன்றாமிடத்தில் சூரியன், சந்திரன் ஆகிய இருவரும் இருக்க, இரண்டாம் இடத்திற்கு அதிபதி கேந்திரத்தில் இருக்க இச்சாதகன் விரும்புகின்ற சுவையில் பால், தேன், முப்பழம் இவற்றோடு உணவை உண்பவனாக விளங்குவான். சென்ம இலக்கனத்தில் சூரியன் நிற்க, இலக்கனத்திற்கு இரண்டா மிடத்தில் சுபக்கோள்கள் இருக்க, இரண்டாமிடத்திற்கு அதிபதியும் சுக்கிரனும் ஒன்றுகூடி இருக்க, அல்லது ஒன்றை ஒன்று பார்க்கில் சுமாரான உணவை உண்ணும் வாழ்க்கை கிட்டும்.

## மிகுதியான உணவு உண்பவன்

திறமாக இவ்வண்ணம் மூன்றிலிருந் தாலும்
தெரிந்துசொல்வ றற்பசுகம் போசனமென் றேதான்
உறவாகும் இலக்கனத்திற் பாவியே இருக்க
உற்றரெண்டாம் தானத்திறை பாவவர்க்க மாயின்
முறமாக வேகண்டு வயிறுமள வின்றி
முழுபூசை கொள்ளுமகா முனியென்ன லாகும்
அறமுடைய வாக்கேசன் பாவியாய்ச் சுபவீ
சணமின்றி யேயிருக்கில் அரியபெரும் புசிப்பன். (299)

(இ-ள்.) இவ்வண்ணம் மூன்றாமிடத்தில் இருந்தாலும், இச்சாதகனுக்கு அற்ப சுகமும் சுமாரான உணவும் வாழ்வில் கிட்டும்; இலக்கனத்தில் பாவக்கோள் இருக்க, இரண்டாம் இடத்திற்கு அதிபதி பாவவர்க்கம் பெற்று இருப்பின், இச்சாதகன், மிகுந்த உணவினை உண்பவனாக இருப்பான், இரண்டாமிடத்திற்கு அதிபதி பாவியாகச் சுபக்கோள்களின் பார்வை இன்றி இருப்பின், இச்சாதகன் உணவை மிகுதியாக உண்பவனாக இருப்பான்.

## இதுவுமது

*தீராத வக்கிரனும் புதனுமே கூடிச்*
*சேயரிபுத் தானத்திற் சனிபுகர்கூ டிடினும்*
*ஏராத பெரும்படிபோசனமுடையன் என்பார்*
*இரண்டதனிற் சேயிருக்கில் அரிசியே பொசிப்பன்*
*சோராமல் இரண்டுமூன் றுக்கிறைவ ருடனே*
*சுக்கிரனும் கூடியே தனந்தன்னில் இருக்கில்*
*நேராக தயிர்மோரி னுடனதிகம் புசிப்பான்*
*நிறையஉண்பன் கனத்தெழுந்து நெருங்கியபூண் முலையே! (300)*

(இ-ள்.) கனத்து திமிர்ந்த நெருங்கிய அணிகள் புனையப்பட்ட கொங்கைகளை உடைய பெண்ணே! செவ்வாயும் புதனும் சுக்கிரனும் ஒன்றுகூடி ஆறாமிடத்தில் நின்றாலும் சனியும் சுக்கிரனும் இருந்தாலும் இச்சாதகன் மிகுந்த உணவு உண்பவனாவான்; இரண்டாமிடத்தில் செவ்வாய் இருக்க, இவன் அரிசி உணவை விரும்பி உண்பான்; இரண்டு, மூன்றாம் இடத்திற்கு அதிபதிகளுடன் சுக்கிரன் இரண்டாம் இடத்தில் ஒன்றுகூடி இருந்தால் தயிர், மோர் இவற்றை அதிகமாக உண்பவனாக இருப்பான்.

## அறுசுவைகளில் விருப்பம் உடையவர்கள்

*துய்யரெண்டு மூன்றைந்தோ ரேழெட்டுக் கிறைவர்*
*சுபராகிச் சூரியனும் அந்தவர்க்கம் அடையின்*
*மொய்யிலெரிப் புள்ளவர்க்கந் தனிலதிகப் புசிப்பன்*
*முழுமதியாம் வாக்குறில் உப்புக்கஞ்சி உண்பன்*
*செய்யகுசன் வர்க்கமுறிற் காரம்விருப் புடையோன்*
*தீட்டுபுதன் வர்க்கமுறில் புளிப்புமிக உண்பன்*
*வெய்யகுரு வர்க்கமுறிற் றித்திப்பிற் பொசிப்பன்*
*வெஞ்சனியா யிற்கசப்பில் விரும்பியுண்பன்*
*மானே. (301)*

(இ-ள்.) மான்போன்ற பெண்ணே! இரண்டு, மூன்று, ஐந்து, ஏழு, எட்டு ஆகிய இடங்களுக்கு அதிபதி சுபராகி சூரியனும் அந்த வர்க்கத்தையே அடைந்து இருந்தால், கார உணவினை அதிகமாக உண்பன். நிறைந்த சந்திரன் இரண்டா மிடத்தில் இருப்பின் உப்புக்கஞ்சியில் விருப்பம் உடையவன்; செவ்வாய் இருப்பின், காரச் சுவையில்

விருப்பம் கொண்டவன்; புதன் வர்க்கமாக இருப்பின், புளிப்புச் சுவையில் மிகவும் விருப்பமுடையவன்; குரு வர்க்கமாக இருப்பின் இனிப்புச் சுவையை விரும்புபவன்; சனி வர்க்கமாக இருந்தால் கசப்பினை மிகவும் விரும்பி உண்பான்.

## உணவின்மீது வெறுப்பு, பல்வேறு உணவு உண்பவர்கள்

தூண்டியபாம் பொடுகுளிகன் வர்க்கமே யுற்றாற்
சொல்வர்போ சனவெறுப்புப் போசனக்கி லேசம்
ஆண்டதன மூன்றுதயம் ஐந்தோழெட் டதிபர்
ஆனசுப முற்றுகேந் திரகோணத் திருந்து
நீண்டவே ழெட்டொன்பான் அங்கிசத்தில் ஏறி
நிகரான ருசியுடனே வேளையறிந் துண்பன்
தீண்டருந்தீக் கோள்வர்க்க முறிற்காலந் தப்பிச்
சிறுதானியத் தனைமரி சிதனையே பொசிப்பன். *(302)*

*(இ-ள்.)* இராகு அல்லது கேதுவுடன் குளிகன் வர்க்கம் நின்றால், இச்சாதகனுக்கு உணவின் மீது வெறுப்பும், உணவினால் கவலையும் உண்டாகும். இரண்டாமிடம், மூன்றாமிடம், இலக்கனம், ஐந்தாமிடம், ஏழாமிடம், எட்டாமிடம் இவற்றின் அதிபதிகள் சுபபலன் பெற்றுக் கேந்திர திரிகோணங்களில் ஏழாமிடத்திற்கதிபதி, எட்டா மிடத்திற் கதிபதி, ஒன்பதாமிடத்திற்கதிபதி ஆகியோரின் அங்கிசங் களில் ஏறி இருந்தால் சுவையுடன் வேளாவேளை உணவு உண்ணுவான். தீயக்கோள்களின் வர்க்கத்தில் இருப்பின் காலம் தப்பி உண்பான். மேலும் சிறுதானியம், அரிசி போன்றவற்றை உண்பான்.

## இரண்டாம் பாவத்திற் சூரியன் நின்ற பலன்

தெரியதனத் திரவிநிற்கின் தினமரசர்ப் பிரியன்
தந்தமநேத் திரரோகம் வித்தையில்வி ரோதம்
மரியமுக ரோகமுடன் வாக்கினில்வி ரோதம்
மாடுமைந்தர் காலிகன்று மித்துருவி ரோதம்

பரிவினால் நால் வகையில் திரவியமே லாபம்
பண்புளவாய்ச் சாலகன்முற் கோபவச னத்தன்
துரிதமிகு சோரராற் றனநாச மாகும்
சோதிடநூற் றெளிவுடையோர் சொன்னபலன்
இவையே. *(303)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்தில் சூரியன் நின்றால், இச்சாதகன் அரசர்களால் தினமும் விரும்பப்படுபவனாக விளங்குவான்; பற்கள், கண்கள் இவற்றில் நோய் உடையவன்; கல்வி, வித்தை இவை நிரம்பப் பெறாதவன்; செல்வம் குறைவுடையவன்; புத்திரர்களிடம் விரோதம் பாராட்டுபவன்; கால்நடைகள் இருப்பின் அழியும்; நண்பர்களைப் பகைத்துக்கொள்பவன்; பல வகையில் செல்வம் வந்து சேரும்; பேச்சு வன்மை உடையவன்; கோபமாகப் பேசக்கூடியவன்; கள்ளரால் இவன் சேர்த்து வைத்துள்ள பொருளுக்கு அழிவுண்டாகும் என்று சோதிட நூல்கள் பலவற்றையும் கற்ற புலமையுடையவர்கள் கூறியுள்ளார்கள்.

### இரண்டாம் பாவத்திற் மதி நின்ற பலன்

தேனாகும் வாக்கதனிற் சந்திரனே இருக்கிற்
சிறியகுயி லினமார்க்க வித்தைப்பிர தாபம்
தானாகும் வாலிபத்தில் விவாகநல்ல வசனன்
தனமழகு சற்கீர்த்தி நயனசல ரோகன்
வேனாகும் மித்திரமே புத்திரசம் பத்து
மிகுகாமம் தனையுடையன் வளர்மதியே யாகிற்
பூநாறுஞ் சொற்பதனம் உள்ளவனென் றுரைப்பார்
புடைபரந்த அகலவல்குற் பூண்முலைப்பைந்
தொடியே. *(304)*

*(இ-ள்.)* புடைத்தெழுந்து விரிந்த அகலமான அல்குலையும், அணிகள் புனைந்த கொங்கைகளையும் உடைய பசுமையான வளையல்களையும் அணிந்த பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்தில்

சந்திரன் இருப்பானாகில், இச்சாதகன், இனவழியில் உண்டான வித்தைகளைக் கற்றிருப்பான்; புகழ் உடையவன்; இளம் வயதில் திருமணம் நடக்கும்; இனிமையான மொழிகளைப் பேசுபவன்; செல்வம் உடையவன்; அழகு நிரம்பியவன்; கண், நீர் நோய் உடையவன்; நண்பர்களை உடையவன்; நல்ல புத்திரர்களைப் பெறுபவன்; மிகுந்த காமம் உடையவன்; சந்திரன், வளர்பிறைச் சந்திரனாக இருப்பின், இனிமையான நல்ல மொழிப்பயிற்சி உடையவன் என்று கற்றுணர்ந்த வல்லோர் போற்றுவர்.

## இரண்டாம் பாவத்தில் செவ்வாய் நின்ற பலன்

தைவருநேத் திரத்தானம் தனிற்செவ்வாய் இருக்கிற்
சஞ்சலத்தன் இருவித்தை குரூரமுகத் துட்டன்
மைவருநேத் திரரோகம் மலசலவி ரோதம்
வாக்குவிரோ தம்பூமி விரோதநி தனத்தன்
கைவருமா கோபிதுட்டர் சேவைதனை உடையன்
காதலியைப் பகைசெய்வன் சத்தியன்பொல் லாதா
னைவருநா கப்பணத்தை அரசிலையைத் தேரை
அனுமானம் எனவுரைக்கும் அகலஅல்குல் திருவே. (305)

(இ-ள்.) நல்ல பாம்பின் படத்தையும், அரசிலையையும் தேரையும் ஒப்புமையாகக் கூறத்தக்கதான அகலமான அல்குலைக் கொண்ட திருமகளைப் போன்ற அழகுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்தில் செவ்வாய் இருக்கில், இச்சாதகன் மனக்கவலையை உடையவனாக இருப்பான்; இருவித்தைகளைக் கற்றவன்; குரூர முகம் உடையவன்; கொடியவன்; கண்நோய், மலசல நோய் உடையவன்; தன்னுடைய வாக்கினால் பகையைச் சம்பாதித்துக்கொள்ளக் கூடியவன்; பூமியினால் கேடு உடையவன்; நிதானமாகச் செயல்படக் கூடியவன்; கோபம் உடையவன்; தீயவர்களுக்குப் பணிசெய்து கிடப்பவன் ; காதலியைப் பகைப்பவன்; சத்தியம் பேசுவான்; பொல்லாதவன்.

## இரண்டாம் பாவத்தில் புதன் நின்ற பலன்

*தொடுதனத்திற் புதனிற்கில் சகலகல்விப் பிரியன்*
*சுகபொசிப்பு வெகுவித்தை சுத்தமன துடையன்*
*கொடுகையிலா நல்வாக்கன் வாலிபவி வாகம்*
*குணமுடையன் சவுந்திரிகன் குளிர்ந்தநய னத்தன்*
*விடுகதைகா வியங்கடனில் அதிகபிர சங்கன்*
*மிகுசாத்திர பிரீதிஆடை அலங்கார வசனன்*
*நடுவுறசத் தியவாக்கு சீலன்முக வசியன்*
*ராசமந்திரி மார்சபையில் வல்லவனாம் நவிலே. (306)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்தில் புதன் இருக்கில், இச்சாதகன் கல்வியில் மிகுந்த நாட்டம் உடையவனாக இருப்பான்; சுகமான வேலையினை உடையவன்; மிகுந்த வித்தைகளைக் கற்றவன்; தூய்மையான மனதினை உடையவன்; நல்ல வாக்கைப் பேசுபவன்; இளம் வயதில் திருமணம் செய்துகொள்பவன்; நல்ல குணமுடையவன்; அழகான தோற்றம் உடையவன்; குளிர்ச்சி பொருந்திய கண்களைப் பெற்றிருப்பவன்; விடுகதை, காவியங்கள் குறித்துச் சொற்பொழிவாற்றுபவன்; மிகுந்த சாத்திரங்களைப் படிப்பவன்; ஆடை, அலங்காரங்களில் அதிக ஈடுபாடு உடையவன்; இனிமையாகப் பேசக் கூடியவன்; சத்திய வாக்கு உடையவன்; ஒழுக்கம் உடையவன்; முக வசீகரம் உடையவன்; பெரியோர்கள் இருக்கக்கூடிய பெரியசபைகளில் ஒருவனாக விளங்கக்கூடிய வல்லமை உடையவன்.

## இரண்டாம் பாவத்தில் குரு நின்ற பலன்

*தோணுமிரண் டினிற்குருவே நிற்கநல்ல கல்வி*
*சுபகேந்திர மாமிருந்த தனம்மதுர வாக்கு*
*பூணும்வா லிபந்தன்னில் விவாகமது வாகும்*
*போகபோக் கியந்தெய்வப் பிராமணர்கள் பெரியோர்*
*தாணுவிடத் தினிற்பத்தி மன்னவர்ச மானன்*
*சபைபுகழும் வல்லவன்வாய்ச் சாலகன்சொற் பொழிவு*
*காணும்வி தாணிகன்மிகச் சுகபோச னத்தன்*
*கனத்ததுரைத் தனமுடையன் களபமுலை மயிலே! (307)*

(இ-ள்.) சந்தனம் பூசப்பெற்ற கொங்கைகளை உடைய பெண்ணே! சென்ம **இலக்கன**த்திற்கு இரண்டாம் இடத்தில் குரு நிற்க, இச்சாத**கன் சிறந்த** கல்விமானாக விளங்கு**வான்.** நல்ல பார்வையை உடையவன்; இனிமையாகப் பேசக் கூடியவன்; இவனுக்கு இளம் வயதில் திருமணம் நடக்கும்; அனைத்து பாக்கியங்களையும் பெறுவான்; தெய்வம், பிராமணர்கள், பெரியோர்கள் அனைவரிடத்தும் பக்தி உடையவன்; மன்னருக்குச் சமமான சிறப்புகளை உடையவன்; சபை போற்றக்கூடிய வல்லமை உடையவன்; பேச்சினால் பிறரைக் கவரக்கூடியவன்; சொற்பொழிவாற்றும் ஆற்றல் உடையவன்; கவனம் உடையவன்; சுவையான உணவினை உண்பவன்; தலைமையான பண்பினைப் பெற்றவன்.

## இரண்டாம் பாவத்தில் சுக்கிரன் நின்ற பலன்

*நன்மைதரு வாக்கதனிற் சுக்கிரனே இருக்கில்*
*நயனரோகத்தையுளன் காமநூல் அறிவன்*
*வண்மையிலா வெகுசேட்டை அபிமானன் கல்வி*
*வாலிபவி வாகமுள்ளோன் வெகுதான சீலன்*
*மென்மையினன் சத்தியவாக்கு சுயகவிதை சொல்வன்*
*விரும்புசுக போசனத்தன் பொருளுடையோனாகும்*
*பொன்மையின்முத் தாபரணம் வெள்ளிப்பாத் திரங்கள்*
*புகழ்பரிகாசப்பிரியன் றிருவார்த்தை மிக்கோன்.* **(308)**

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் சுக்கிரன் இருக்க, இச்சாதகன் கண்நோய் உள்ளவன்; காம நூல்களைக் கற்றுத் தேறியவன்; அதிகமான குறும்பு வேலைகளைச் செய்பவன்; அனைவராலும் விரும்பப் படுபவன்; கல்வி கற்றவன்; இளம் வயதில் திருமணம் இவனுக்கு நடைபெறும்; மிகுந்த தானங்களைச் செய்யக் கூடியவன்; மென்மையானவன்; சத்தியவாக்கு உடையவன்; சுயகவிதை சொல்பவன்; நல்ல உணவை உண்பவன்; நல்ல பொருளுடையவனாவான்; மற்றவர்களைக் கேலி செய்யக் கூடியவன்; நல்ல வார்த்தைகளை மிகுதியாகப் பேசக் கூடியவன்.

## இரண்டாம் பாவத்தில் சனி நின்ற பலன்

*நானாத வாக்கதனில் சனிதானே இருக்கில்*
*நயந்தவெகு களத்திரத்தன் திரிமோகி யாவன்*
*பூணாரும் தனச்செலவு வாக்கினில்வி ரோதம்*
*பூருவத்தில் பொருள்நாசம் மந்தபுத்தி யுடையன்*
*வீணான வாய்ச்சண்டை தாமதகா ரியத்தன்*
*மிகுவஞ்சன் முகதந்த ரோகிதன வீடு*
*காணாத பரதார கமனிஇனப் பகைஞன்*
*கருதியசஞ் சாரன்பிறர் நற்றனத்தை உளனே. (309)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் சனி இருந்தால், அதிக மனைவியரை உடையவன்; பெண் மயக்கம் உடையவன்; அதிக பொருட்செலவு உடையவன்; பேச்சினால் பகையைச் சம்பாதித்துக் கொள்பவன்; பொருள் நாசம் செய்பவன்; மந்த புத்தி உடையவன்; வீணாகச் சண்டையிடுபவன்; காரியங்களைத் தாமதமாகச் செய்பவன்; மிக வஞ்சனை உடையவன்; முகம், பல் முதலானவற்றில் நோய் உடையவன்; தனம், வீடு உடையவன்; பிற பெண்களோடு உறவு உடையவன்; உறவினர்களிடம் பகைமை பாராட்டுபவன்; பிறர் சேர்த்து வைத்த செல்வத்தைப் பெறுபவனாக இருப்பவன்.

## இரண்டாம் பாவத்தில் இராகு நின்ற பலன்

*நிறைவாக்கில் இராகுநிற்கில் தரித்திரன்கி லேசி*
*நிர்மூட னாவன்வித்தை விரோதிவிட வாக்கன்*
*உறைநடுப்பாக் கியத்தன்மந் திரிசாத் திரிகன்*
*உத்தண்ட வசனமுளன் சாடியே சொல்வன்*
*குறைபடுகூர்ப் போசனத்தன் வாக்கினில்வி ரோதி*
*கூறுமுக தந்தநேத் திரரோகம் உடையன்*
*பிறைநுதல்விற் புருவமலர்க் கண்கள்குமிழ் மூக்கின்*
*பெண்ணரசே! கணிதநூற் பெரியோர்சொற் பலனே. (310)*

*(இ-ள்.)* பிறைபோன்ற நெற்றியையும், வில் போன்ற புருவங்களையும் தாமரைப் போன்ற கண்களையும் குமிழ் போன்ற மூக்கினையும் கொண்ட பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்தில் இராகு நின்றால், இச்சாதகன் வறுமையை உடையவன்; மனக்கவலை கொண்டவன்; அழிவை உடையவன்; வித்தையை முழுவதுமாகக் கல்லாதவன்; விஷ வார்த்தைகளைப் பேசக் கூடியவன்; நடுவயதில் பாக்கியம் உடையவன்; மந்திரி; சாத்திரம் பேசுபவன்; பிறரை வசை கூறக்கூடியவன்; தீய உணவை உண்பவன்; தன் வாக்கினால் பகையைச் சம்பாதித்துக் கொள்பவன்; முகம், பல், கண் முதலானவற்றில் நோய் உடையவன் என்று சோதிடக்கலையைக் கற்றுவல்ல பெரியோர்கள் கூறியுள்ளார்கள்.

**இரண்டாம் பாவத்தில் கேது, குளிகன் நின்ற பலன்**

நீங்காத வாக்கதனில் கேதுவந்துற் றிருக்கில்
நகரில்வித்தை விடவாக்கு பலவினைய புத்தி
பாங்கார்வஞ் சனைத்தொழிலாற் றனலாபம் உடையன்
பந்துசன விரோதிபுறம் சொல்லுவன் தனத்தன்
தாங்காணும் தனந்தன்னிற் குளிகனே இருக்கில்
ஆனநேத் திரரோகி கோபிவீண் வார்த்தை
வாங்காத சொற்பேதம் பொருட்செலவை உடையன்
வருந்தரித்திரன் சொற்பவித்தை வாக்குவிரோ தியனே! *(311)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் கேது இருந்தால், இச்சாதகன் வித்தை உடையவன்; விஷவார்த்தை பேசக்கூடியவன்; பலவற்றையும் அறிந்தவன்; பிறரை வஞ்சனை செய்து செல்வம் சேர்ப்பவன்; உறவினர் களுக்குப் பகைவனாவான்; புறம் கூறுபவன்; செல்வன். இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் குளிகன் இருந்தால், இச்சாதகன் கண்நோய் உள்ளவன்; கோபம் உடையவன்; வீண் வார்த்தைகளைப் பேசக்கூடியவன்; பேச்சு மாறக்கூடியவன்; மிகுந்த பொருட்களைச் செலவு செய்பவன்; வறுமை உடையவன்; வித்தை குறைபாடுள்ளவன்; பேச்சினால் விரோதிகளைத் தேடிக்கொள்பவன்.

## இரண்டாம் பாவத்தில் மாந்தி நின்ற பலன்

நுண்ணிய வாக்கு தன்னில்
ஹுவன்மாந்தி பவன நிற்கின்
மண்ணின்மேல் எவர்க ளோடும்
வழக்கிட்டுச் சண்டை செய்வன்
எண்ணிய கோபி ரெண்டில்
இயல்சுபர்க் கூடி நின்றால்
கண்ணினில் வியாதி யுள்ளான்
கதித்திடும் தனத்த னாமே. (312)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்தில் மாந்தி பவனன் நின்றால், இச்சாதகன், இப்புவியுலகில் அனைவரோடும் வழக்கிட்டுச் சண்டை செய்பவனாகவும் கோபம் மிகுந்தவனாகவும் விளங்குவான். இரண்டாம் இடத்தில், சுபக்கோள்கள் மாந்தியுடன் கூடி இருந்தால், கண்களில் நோயுள்ளவனாக இச்சாதகன் இருப்பதோடு, செல்வமுடையவனாகவும் விளங்குவான்.

## வீரம், செல்வம் உடையவன்

நூதனம் இலங்கி ரண்டி
ஹுடங்கிய சனிசேய் கூடின்
மதான ஞானம் வித்தை
வருபராக் கிரமம் உள்ளோன்
கோதறும் இரவி காரி
கூடியே இரண்டில் நிற்கின்
மேதறு கிலேசன் பாரில்
வெகுதன முடைய னாமே. (313)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்தில் சனி, செவ்வாய் ஆகிய இரண்டு கோள்களும் சேர்ந்து இருந்தால் ஞானம், வித்தை ஆகியவற்றோடு, இச்சாதகன் வீரம் உடையவனாகவும் விளங்குவான். சூரியனும், சனியும் ஒன்றுகூடி இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் இருந்தால், இச்சாதகன் மிகுந்த செல்வம் உடையவனாக விளங்குவான் என்றாலும் மனக்கவலை உடையவனாக இருப்பான்.

## செல்வம் அழிவு, செல்வம் உள்ளவன்

நெறியுறும் இரண்டிற் பொன்னோன்
நின்றிடப் புதனே பார்க்கிற்
குறியுள தனமே நாசம்
குருவுக்கு வஞ்சம் செய்வன்
செறியிற்றேய் மதியி ரண்டிற்
சேர்ந்திடில் வெகுத னத்தோன்
வெறிமலர்க் கண்ணி சூடும்
வேயனத் தோளி னாளே. *(314)*

*(இ-ள்.)* நறுமணம் மிக்க பூக்களைத் தொடுத்துச் சூடிக் கொள்ளும் மூங்கிலையொத்த தோள்களையுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் குரு நிற்க, இதனைப் புதன் பார்க்க, இச்சாதகனின் செல்வம் நாசமடையும். இவன் தன் குருவிற்கு வஞ்சனை செய்பவனாக விளங்குவான். சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் தேய்பிறைச் சந்திரன் இருந்தால், இச்சாதகன் மிகுதியான செல்வமுடையவனாக விளங்குவான்.

## வறுமை உடையவன், மன்னர் சமானன், ஊமை, செல்வன்

நேரான தனத்தின்மதி யுடன்வெகு கோள்நிற்கில்
நீடுதரித் திரன்வெள்ளி மதிகூடி நிற்கிற்
பேரான விதரணிகன் கிலேசன்வெகு தனத்தன்
பெரியமன்னர் நிகரோனெட் டுடையோன்பன் னிரண்டிற்
சீராக வேயிருக்கில் ஊமைதனமே நாசம்
செய்யலக் கனேசனிற்கில் தனாதிபனல் வாக்காம்
ஏராகும் வித்துவான் பார்க்குபகா ரியனாம்
இனியசுக போசனத்தன் தனவசிய னென்பார். *(315)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் உள்ள சந்திரனோடு பல கோள்கள் ஒன்று சேர்ந்து இருக்கில், இச்சாதகன் தரித்திரனாக விளங்குவான். சுக்கிரனும் சந்திரனும் இரண்டாமிடத்தில் ஒன்றுகூடி இருக்கின், விதரணிகரனாகவும் மனக்கவலை உடையவனாகவும் இருப்பான். மிகுந்த செல்வனாக மன்னர்க்கு நிகரான சிறப்புக்களைப்பெற்று இருப்பான். எட்டாமிடத்திற்கு அதிபதி இரண்டாமிடத்தில் இருக்கில், இச்சாதகன் ஊமையாக இருப்பான். செல்வத்தை அழிப்பான். இலக்கனேசன் நிற்கில் செல்வனாகவும் இனிமையாகப் பேசுபவனாகவும் இச்சாதகன் விளங்குவான். மேலும், சாத்திரங்களில் வல்லவனாகவும் பிறருக்கு உதவுபவனாகவும் இருப்பான். நல்ல உணவு உண்பான்.

ஒன்மதிக் கிரண்டு ளோனும்
உதயத்துக் கிரண்டு ளானும்
தன்மையாம் ஏழில் நிற்கிற்
சங்கீத வித்தை யோடே
வண்மையாம் பலவே டங்கள்
மருவுநாட் டியமும் கற்பன்
பெண்மயில் எழுதொண் ணாத
பிறைநுதற் றடங்கண் மாதே! (316)

(இ-ள்.) பெண்மயிலோடு ஒப்பிட இயலாத பிறை போன்ற நெற்றியையும் பெரிய கண்களையும் உடைய பெண்ணே! சென்ம இராசிக்கு இரண்டாமிடத்தில் இருப்பவனும் சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்திற்கு உடையவனும் பலம் பெற்று ஏழாமிடத்தில் நிற்கில், இச்சாதகன், சங்கீத வித்தையுடன் பல வேடங்களையிட்டு ஆடும் நாட்டியத்திலும் வல்லவனாக விளங்குவான்.

இரண்டாம் பாவம் முற்றிற்று.



# மூன்றாம் பாவம்

இலங்கிய மூன்றில் சுங்கனும் இராகும்
இருந்திடிற் சோதர விருத்தி
துலங்கும் விக்கிரமத் திறைவனோர் ஏழிற்
றுய்ந்திடப் பாவர்கள் வியத்திற்
கலந்திடில் ஏகச் சகோதரம் என்பர்
கருதிய மூன்றினுக் கதிபன்
தலம்பெறும் மூன்றில் இருந்திடில் இரண்டு
சகோதரம் என்றனர் தக்கோர். *(317)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் சுக்கிரனும் இராகுவும் இருக்க, இச்சாதகனுக்கு சகோதர சகோதரிகள் அதிகமாக இருப்பார்கள். மூன்றாம் இடத்திற்கு அதிபதி ஏழில் நிற்க, பாவக்கோள்கள் பன்னிரண்டாம் இடத்தில் இருந்தால், இச்சாதகனுக்கு ஒரே சகோதரன் அல்லது சகோதரி இருப்பாள், மூன்றினுக்கதிபன் மூன்றாம் இடத்தில் இருக்க, இச்சாதகனுக்கு இரண்டு சகோதர, சகோதரிகள் இருப்பார்கள் என்று சோதிடத்தைக் கற்றுவல்லவர்கள் கூறியுள்ளனர்.

**புகழ்மிக்க இளைய சகோதரன்**

தக்கவிக் கிரமன் புருடாங்ச ராசி
தன்னிலே அங்கிச மாக
மிக்கவிக் கிரத்தா னத்தினைச் சனியன்
வெள்ளியும் விரைவுடன் பார்க்கில்
புக்கதோர் காலாந் திரத்தினி லேதான்
புகழ்பெறும் இளைவருண் டாகும்
திக்கயம் புடைசூழ் புவியின்மேல் கணிதர்
செப்பிய வகையிதாம் திருவே. *(318)*

(இ-ள்.) திருமகளை ஒத்த அழகு மிகுந்துள்ள பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு மூன்றாம் இடத்திற்கு அதிபதி ஆண்ராசியின் அங்கிசம் பெற்றிருக்க, மூன்றாம் இடத்தினைச் சனி, சுக்கிரன் பார்க்க, சிறிது இடைவெளிக்குப்

பிறகு புகழுடைய சகோதரன் ஒருவன் தோன்றுவான். இதனைத் திசையானைகள் சூழ்ந்துள்ள இவ்வுலகில் சோதிடக்கலையில் வல்லவர்கள் கூறியுள்ளனர் என்பதை அறிவாயாக.

## இளைய சகோதரங்கள் பிறக்கும் காலம்

*திருமூன்றே ழொன்பான் இலாபத்தோர் திசைபொசிப்பிற்*
*சித்தி ரத்தில்*
*வருசகோதர இலாபமுண் டாகுமூன் றிடத்திற்*
*வாய்ந்தோன் பார்த்தோன்*
*கருதுமங்கி சாதிபர்க ளிவர்கள்திசை பொசிப்பில்*
*அபகாரம் தன்னில்*
*இருநிதிபோல் சோதரங்கள் உண்டாகு மெனக் கணிதர்*
*இயம்பி னாரே.* (319)

*(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு மூன்று, ஏழு, ஒன்பது, பதினொன்று ஆகிய இடங்களின் அதிபர்களின் திசை நடக்கும்பொழுதோ, புத்தி நடக்கும்பொழுதோ அந்தரம் நடக்கும் பொழுதோ இளைய சகோதரம் பிறக்கும். மூன்றாம் இடத்தில் நிற்கும் கோள்கள், மூன்றாமிடத்தைப் பார்க்கும் கோள்கள், இவர்களின் அங்கிசாதிபர்கள் இவர்களுடைய திசை, புத்தி, அந்தரங்க காலங்களில் இளைய சகோதர சகோதரிகள் பிறப்பார்கள்.*

*ஆருமி லா பத்தில் நின்ற கிரக சங்கை யாற்சேட்டர்*
*அடவு சொல்வார்*
*நேருமூன்றி னிலிருந்தக் கிரகசங்கை யாற்கனிட்டர்*
*நிலைமை யாகும்*
*கூறுமூன்றி னுக்கிறைவன் காரகனீங் கிவர்கள்தனைக்*
*கூடி நின்றோர்*
*சாறுநிலை யும்பெலமும் தெரிந்துசகோ தரலாபம்*
*சாற்றல் வேண்டும்.* (320)

*(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பதினோரா மிடத்தில் உள்ள கோள்களைக் கொண்டு மூத்த சகோதர, சகோதரிகளைப் பற்றிக் கூறுவார்கள். மூன்றாம் இடத்தில்*

இருந்த கோள்களைக்கொண்டு இளைய சகோதரர் சகோதரிகளைப் பற்றி சொல்ல வேண்டும். மூன்றாம் இடத்திற்கு அதிபதி, காரகன், இவர்களைக் கூடி நின்றவர்கள், கிரகங்களின் நிலை கிரகங்களின் பலம் ஆகியவற்றைக் கொண்டு சகோதர சகோதரிகளைப் பற்றி கூறவேண்டும்.

குறிப்பு: சேட்டர் - மூத்த சகோதரம், கனிட்டம் - இளைய சகோதரம்.

## சகோதரர் இறப்பு, சகோதரர் பிறப்பு

*வேண்டுமிரண் டுக்கிறைவன் எட்டிநிற்கக் காரகன்*
*விக்கிரமன் தன்னை*
*தாண்டியபா விகள்சேர மாதுர்மி கப்பயந்த*
*சகோரங்கள் எல்லாம்*
*மாண்டுபோம் ஒருமூன்று நான்கினுக்கும் இறைவர்களை*
*வக்ரன் கூடிற்*
*பூண்டகா லாந்திரத்திற் சோதர இலாபமெனப்*
*புகலு வாரே.* *(321)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்திற்கு அதிபதி, இலக்கனத்திற்கு எட்டாம் இடத்தில் நிற்க, காரகன் செவ்வாயுடன் அல்லது மூன்றாமிடத்திற்கு அதிபதியுடன் பாவக்கோள்கள் சேர்ந்தால், இச்சாதகனின் தாய் பெற்ற, இவனுடைய சகோதர சகோதரிகள் இறந்து போவார்கள். மூன்றாமிடம் அல்லது நான்காமிடத்திற்கு அதிபதிகளோடு செவ்வாய் கூடி இருந்தால் இச்சாதகனுக்கு நீண்ட இடைவெளிக்குப் பிறகு சகோதர சகோதரிகள் பிறப்பார்கள்.

## அட்டவர்க்கத்தினால் சகோதரர் காணல்

*புகலரிய அட்டவர்க்கம் தனிலேதான் மூன்றிடத்திற்*
*பொருந்தும் விந்தைப்*
*பகர்நீசம் சத்துருமூ டக்கிரகம் இதுவெல்லாம்*
*பரிந்தே தள்ளி*
*அகலாமல் நின்ற விந்தை ஆண்பெண்ணின் கிரகவிந்தென்*
*றறிந்து பார்த்தே*
*நிகரான சோதரலா பந்தெரிந்து பலனறிந்து*
*நெறியிற் கூறே.* *(322)*

(இ-ள்.) செவ்வாய் அஷ்ட வர்க்கப் பரல்களில், மூன்றாம் இடத்தில் பொருந்தியுள்ள பிந்துக்களில் நீசம், பகை, அஸ்தமனம் ஆகியவற்றை நீக்கிவிட்டு, மீதியுள்ள பிந்துக்களில், ஆண், பெண்களின் கோள்களின் பிந்துக்களைக் கண்டுணர்ந்து, இச்சாதகனோடு பிறந்த சகோதரர்கள், சகோதரிகள் ஆகியோரின் எண்ணிக்கையை அறியவேண்டும்.

**சகோதர, சகோதரிகள்**

கூறுமூன் றுக்கிறையுங் காரகனு மேபுருடக்
கோட்க ளாகி
வீறுளதோர் புருடாங்ச ராசிதனி லேயிருக்கின்
விருப்ப மாகும்
தேறுபுக ழாற்புருட சோதருண்டா கும்மிக்கோட்
செழும்பெண் கோளாய்ப்
பேறுளதோர் திரிராசி தானிருக்கில் சோதரங்கள்
பெண்ணாம் என்னே. (323)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு மூன்றாம் இடத்திற்கு அதிபதியும், காரகனும் ஆண் கோள்களாக ஆண் அங்கிச இராசிகளில் இருக்க, இச்சாதகனுக்குச் சகோதரர்கள் உண்டாகும். மூன்றாமிடத்திற்கு அதிபதியும் காரகனும் பெண் கோள்களாக இருக்க, பெண் அங்கிசம் பெற்ற இராசிகளில் இருந்தால், இச்சாதகனுக்கு சகோதரிகள் பிறப்பார்கள்.

**இதுவுமது**

என்னுமோர் சாமி தானத்திரி கோணத்
தேறியே குருவருங் காலம்
மன்னுசோ தரங்களில் இலாபமுண் டாகும்
மன்னிய உதயத்திற் செவ்வாய்
உன்னிநின் றிடினும் பூமனுக் காறில்
ஒளிபெறு சுபரிருந் தாலும்
பின்னுள துணைவர் வாதனை யாகும்
பெட்புறு பிறைநுதற் றிருவே. (324)

(இ-ள்.) சிறப்புமிகு பிறைபோன்ற நெற்றியையுடைய திருமகளையொத்த அழகுடைய பெண்ணே! சென்ம இலக்கனாதிபதி, திரிகோணங்களில் ஏறி இருக்க, அதில் குரு கோசார ரீதியில் வரும்பொழுது சகோதர, சகோதரிகள் பிறப்பார்கள். இலக்கனத்தில் செவ்வாய் இருந்தாலும் செவ்வாய்க்கு ஆறாம் இடத்தில் சுபக்கோள்கள் நின்றாலும் இச்சாதகனின் உடன்பிறந்த சகோதர சகோதரிகள் துன்பமடைவார்கள்.

## அதிக சகோதர, சகோதரிகள்

திருந்திய மூன்றிற் குருவுறைந் திடினும்
சேய்க்குமூன் றாறினிற் சுபர்கள்
பொருந்தியே இருக்க அவ்விடத் திறைவன்
புகழ்பெறு சுபவர்க்க மாக
இருந்திடிற் றுணைவர் வர்த்தனை உண்டாம்
இந்துவே மூன்றினில் இருக்கில்
வருஞ்சகோ தரங்கள் சவுக்கியம் பெண்பால்
மகிழ்துணை அதிகமென் றுரையே. (325)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் குரு இருந்தாலும் செவ்வாய்க்கு மூன்றாமிடம், ஆறாமிடம் இவற்றில் சுபக்கோள்கள் இருக்க, மூன்றாமிடத்திற்கு அதிபதி சுபவர்க்கமாக இருக்க, இச்சாதகனுக்கு உடன்பிறந்தோர் அதிகமாக இருப்பர். மூன்றாமிடத்தில் சந்திரன் இருக்க, உடன்பிறந்தோர் நலம்பெற்று விளங்குவர். மேலும் இவனுக்குச் சகோதரிகள் அதிகமாக இருப்பர்.

## புகழ்பெற்ற சகோதரர்

உரைக்குமோர் மூன்றிற் புகர்நிற்கிற் பெண்பால்
உயர்துணை யாற்செயம் உண்டாம்
உரைக்குமூன் றிறைவன் உதயத்தில் இருக்கின்
மாறுந்தான் காரக னுடனே
நிரைத்துறக் கூடி கேந்திரம் ஏறில்
நிகர்சகோ தரம்பிர பலமாம்
திரைக்குளம் புயமேல் அரசுவீற் றிருக்கும்
திருவினுக் கினியமென் கொடியே! (326)

*(இ-ள்.)* அலைகளுள்ள குளத்தில் மலர்ந்திருக்கும் தாமரை மலர் மீது அரசு வீற்றிருக்கும் திருமகளைக் காட்டிலும் மென்மையான கொடி போன்ற இடையை யுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு மூன்றா மிடத்தில் சுக்கிரன் நிற்கில், சகோதரிகளின் துணையால் வெற்றி உண்டாகும். மூன்றாம் இடத்திற்கு அதிபதி இலக்கனத்தில் இருக்க, காரகனுடன் கூடி கேந்திரங்கள் ஏறி இருக்க, இச்சாதகனுடைய சகோதர, சகோதரிகள் புகழ்பெற்று விளங்குவர்.

## அதிக சகோதர, சகோதரிகள்

கொடியுறு மூன்றுக் கிறையும்கா ரகனும்
கூடிகேந் திரந்தன்னில் இருக்க
வடிவுறு குருவே பார்த்திடு மேனும்
மலிவுள மூன்றினுக் கிறைவன்
அடிதொழு தேவ லோகாங்கிசத் திருக்கின்
அவ்வாரல்சிங் காசனாங் கிசத்திற்
துடிபெற இருக்கின் வெகுசகோ தரங்கள்
தோன்றுமென் றனர்பெரி யோரே. *(327)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்திற்கு அதிபதியும் காரகனும் கூடி கேந்திரங்களில் இருக்க, இவர்களை குரு பார்த்திட்டாலும், மூன்றாமிடத்திற்கு அதிபதி தேவலோகாங்கிசத்தில் இருக்கில், செவ்வாய், சிங்காசனத்தில் இருக்க, இச்சாதகனுக்குச் சகோதர சகோதரிகள் அதிகமாகப் பிறப்பார்கள் என்பதைக் கற்றுணர்ந்த சோதிடர்கள் கூறியுள்ளார்கள்.

## புகழுடைய மூத்த, இளைய சகோதரர்கள்

பெரியதோர் மூன்றுக் கிறைவனும் குசனும்
பேசிய சுபவர்க்கம் ஏறி
புரியுங்கேந் திரத்தில் இருந்திடக் கனிட்டர்
புகழுடன் பிரபல மாவர்

திரைபதி னொன்றுக் கிறைவனிவ் வண்ணஞ்
சிறந்திடிற் சேட்டராய் வந்தோர்
அரியதோர் புகழும் பிரபல முடைய
ராகுவர் அமுதமென் மொழியே. *(328)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு மூன்றாம் இடத்திற்கு அதிபதியும் செவ்வாயும், சுபவர்க்கம் ஏறி, கேந்திர கோணங்களில் இருந்திட, இச்சாதகனின் இளைய சகோதரன் புகழுடன் விளங்குவான் பதினோராம் இடத்திற்கு அதிபதி சிறப்புடன் விளங்கிட, இச்சாதகனின் உடன்பிறந்த மூத்த சகோதரன் புகழுடையவனாக விளங்குவான்.

## இதுவுமது

மொழியுமூன் றொன்பான் இறைவர்க்குச் சாமி
முற்றிய பலமது தாழில்
அழிவில்சோ தரத்தாற் றிரவிய லாபம்
ஆனதோர் மூன்றுபன் னொன்றுக்
கொழிவிலா இறைவர் சாமிக்குத் தாழ்ந்தால்
உலகினிற் றன்சுயத் தெட்டா
எழில்பெறு துணைவர் பிரபல மாவர்
என்றனர் கணிதநூ லவரே. *(329)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு மூன்று, ஒன்பது ஆகிய இடங்களுக்கு அதிபதியைக் காட்டிலும் இலக்கனாதிபதி பலம் குறைவாக இருந்தால், அச் சாதகனுக்குச் சகோதர சகோதரிகளால் செல்வம் கிட்டும். இலக்கனத்திற்கு மூன்று, பதினொன்று ஆகிய இடங்களுக்கு அதிபதிகள், இலக்கனாதிபதியைக் காட்டிலும் பலம் குறைவாக இருப்பின், இச்சாதகனின் உடன்பிறந்தோர் புகழ்மிக்கவர்களாக விளங்குவார்கள் என்று சோதிடநூல் வல்லுநர்கள் கூறியுள்ளார்கள்.

## புகழ், பராக்கிரமம்

அவமிலா உதயம் மூன்றில்இலா பத்துக்
அதிபர்கள் உச்சகேந் திரங்கள்
தவறில்கோ ணத்தில் இருந்திடில் துணைவர்
சமரசப் பிரபல மாவர்
இவர்தரு சனியும் சாமியுங் கூடி
இலங்கிய ஆறினில் இருக்க
பவமுற நல்லோர் நோக்கிடா திருக்கிற்
பகருவர் பராக்ரமந் தானே. *(330)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் பதினோராமிடத்திற்கு அதிபதி உச்ச கேந்திரங்களில் அல்லது திரிகோணங்களில் இருக்க, உடன்பிறந்தோர் புகழ் மிக்கவர்களாக விளங்குவார்கள். சனியும் இலக்னாதிபதியும் ஒன்று சேர்ந்து ஆறாமிடத்தில் இருக்க, இவர்களை சுபக்கோள்கள் நோக்காதிருக்கில், இச்சாதகன் தைரியம் உடையவனாக விளங்குவான்.

## இதுவுமது

தானமா மதியும் சனியுங்கூ டிடினும்
சல்லியன் குருவும்கூ டிடினும்
வானுரை மதிபொன் புகரும்ஒன் பானில்
வளம்பெறு மூன்றில்நின் றாலும்
ஆனவீங் கிறைவர் சாமிபார்த் தாலும்
அலதுசேய் கூடிப்பார்த் தாலும்
பானுவின் பின்னே குசனிருந் தாலும்
பராக்ரமன் என்றுதான் பகரே. *(331)*

(இ-ள்.) சந்திரனும் சனியும் ஒன்றாகக் கூடி இருந்தாலும் சுக்கிரனும் குருவும் கூடியிருந்தாலும், சந்திரனும் குருவும் சுக்கிரனும் ஒன்பதாமிடத்தில் அல்லது மூன்றாமிடத்தில் நின்றாலும் மூன்றாமிடத்திற்கு அதிபதியை இலக்கனாதிபதி பார்த்தாலும் அல்லது சேய் கூடி இருந்தாலும் அல்லது பார்த்தாலும் சூரியனுக்குப் பின்னே செவ்வாய் இருந்தாலும், இச்சாதகன் தைரியவான்.

## இதுவுமது

பகருமம் புலிக்கு இரவிக்கு முன்பின்
பண்புளச் சுபரிருந் தாலும்
நிகர்கதிர் முன்னம் குருவிருந் தாலும்
நின்றமூன் றிறையுடன் கதிரும்
தகவுற வேனும் ஆறினிற் குளிகன்
தனைமதி சேயுங்கண் டாலும்
திகழ்மிது னத்தின் மதியைப்பொன் பார்க்கிற்
செயபராக் கிரமமுள் ளானே! *(332)*

*(இ-ள்.)* சந்திரன், சூரியனுக்கு முன்னும் பின்னும் சுபக்கோள்கள் இருந்தாலும், சூரியனுக்கு முன்னால் குரு இருந்தாலும், மூன்றாமிடத்திற்கு அதிபதியும், சூரியனும் ஆறாமிடத்தில் இருந்தாலும், குளிகனைச் சந்திரனும் செவ்வாயும் பார்த்தாலும், மிதுன இராசியில் உள்ள சந்திரனைக் குரு பார்த்தாலும் வெற்றியையுடைய தைரியவானாக இருப்பான்.

## இதுவுமது

உள்ளலக் கனத்திற் சேயிருந் தாலும்
ஒளிர்மதி சேயுமே கூடி
தெள்ளிய கடகம் இரண்டிட மாகச்
சென்றிதில் இருந்திடு மேனும்
எள்ளிய ஆறில் இரவிபத் தினில்சேய்
எட்டினிற் சனியிருந் தாலும்
துள்ளிய கேது கருமத்தில் இருந்து
சுபர்பார்க்கில் விக்கிரமன் என்பார். *(333)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்தில் செவ்வாய் இருந்தாலும், நிறைந்த சந்திரனும் செவ்வாயும் கூடி, கடகம் இலக்கனத்திற்கு இரண்டாம் இடமாக அதில் இருந்தாலும் ஆறாமிடத்தில் சூரியன், பத்தாம் இடத்தில் செவ்வாய் எட்டாமிடத்தில் சனி இருந்தாலும், பத்தாமிடத்தில் கேது இருக்க, அவரைச் சுபக்கோள்கள் பார்க்க, இச்சாதகன் தைரியவான்.

## இதுவுமது

என்பதோர் உதயம் முதனான்கு வரையில்
இயல்மதி இருக்கலா பத்திற்
வன்புறு செவ்வாய் இருக்கினும் கும்ப
மகரமே உதயலக் கனமாய்
இன்புறும் ஆறு பதினொன்றில் சனியன்
இருக்கினும் வியமொன் பானிலாந்
துன்பமதி மூன்றிற் சேயுற உதயம்
சூரிய னுறிற்றயி ரியனே. *(334)*

(இ-ள்.) சென்ம இலக்கனம், இரண்டாமிடம், மூன்றாமிடம், நான்காமிடம் இவற்றில் ஒன்றில் சந்திரன் இருக்க, பதினோராம் இடத்தில் செவ்வாய் இருந்தாலும், சென்ம இலக்கனமாகக் கும்பம், மகரம் ஆகியவை அமைந்து அவற்றுக்கு ஆறாமிடம், பதினோராமிடம் இவற்றில் சனி இருந்தாலும், பன்னிரண்டாமிடம் ஒன்பதாமிடம் இவற்றில் ஒன்றில் தேய்பிறை இருக்க, இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் செவ்வாய் இருக்க, இலக்கனத்தில் சூரியன் இருக்க, இச்சாதகன் தைரியவான்.

## இதுவுமது

அனையதோர் இரவிசனி குருகூடி
ஆகிய மூன்றில்நின் றிடினும்
புனைமதி தனக்குப் பத்தினிற் கதிரோன்
பொருந்தவா திரைஇலக் கனமாய்
வனைபுக ருறினும் உதயத்தில் இராகு
மன்னிய மூன்றில்வெய் யோனும்
வினையுறும் ஆறில் சேயிருந் தாலும்
மிகுத்திடும் தயிரிய பரனே. *(335)*

(இ-ள்.) சூரியன், சனி, குரு ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி மூன்றாமிடத்தில் நின்றாலும், சந்திரனுக்குப் பத்தாமிடத்தில் சூரியன் நின்றிடினும் திருவாதிரை நட்சத்திரம் அமைந்த மிதுனம் இலக்கனமாய் அதில் சுக்கிரன் இருக்க, இலக்கனத்தில் இராகு இருக்க, இலக்கனத்திற்கு

மூன்றாம் இடத்தில் சூரியனும் ஆறாமிடத்தில் செவ்வாயும் இருந்தால் இச்சாதகன் மிகுந்த தைரியசாலியாக விளங்குவான்.

பரவிய மதிக்குப் பத்தினிற் சனிபொன்
பானுவும் கூடிநின் றாலும்
இரவிசேய் கூடி இரண்டிலுற் றாலும்
எழிற்மூன்றிற் பாவர்கள் இருக்க
உருகெழுஞ் சுபரே கூடிப்பார்த் திடினும்
உதயமோ ரேழினிற் குருவும்
வரமுறு நாலில் ஏழினிற் செவ்வாய்
மருவிடிற் தீரமேற் றுவனே. (336)

(இ-ள்.) சந்திரனுக்குப் பத்தாமிடத்தில் சனி, குரு, சூரியன் கூடி நின்றாலும் சூரியனும் செவ்வாயும் சேர்ந்து இரண்டாமிடத்தில் இருந்தாலும், மூன்றாமிடத்தில் பாவக்கோள்கள் இருக்க, சுபக்கோள்கள் கூடியிருந்தாலும் அல்லது பார்த்தாலும், இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் குருவும், நாலாமிடம் அல்லது ஏழாமிடத்திற் செவ்வாயும் நிற்க இச்சாதகன் தீரச்செயல்களைச் செய்யக்கூடியவனாக இருப்பான்.

ஏற்றிய தனுமீன் தண்டெரி உதயம்
இலங்கிட வெண்மதி இருக்க
தோற்றிய வியத்திற் சனிநிற்க மூன்றிற்
துங்கஇரா கிருந்திடில் தீரன்
கூற்றடா மூன்றுக் கிறைவனும் மதியும்
குருவுமே கூடிடக் குளிகன்
ஆற்றரு மூன்றில் இருந்திடச் சூர
னாமென உரைத்தனர் அணங்கே ! (337)

(இ-ள்.) தனுசு, மீனம், மிதுனம் இலக்கனமாக அதில் சூரியனும் பூரணச்சந்திரனும் இருக்க, இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் இடத்தில் சனி நிற்க, மூன்றாம் இடத்தில் இராகு நிற்க, இச்சாதகன் தைரியவானாகவும் வீரனாகவும் இருப்பான். மூன்றாம் இடத்திற்கு அதிபதியும் சந்திரனும் குருவும் கூடிட குளிகன், மூன்றாம் இடத்தில் இருக்க, இச்சாதகன் தைரியவானாகவும் வீரனாகவும் விளங்குவான்.

அணங்குறு மிதுனம் கன்னியிற் செவ்வாய்
அடைந்திட மூன்றினுக் கதிபன்
இணங்கும்உச் சத்தில் இருந்திடு மேனும்
இரவிவக் கிரவன்குரு மதிமால்
மணங்குறக் கூடி இருக்கினும் வீர
மார்த்தாண்டன் கருமத்தில் இருக்கக்
கணம்பெறும் வியத்திற் சேயரா உதயம்
காரிடிற் றிடவும்போர் வலனே. *(338)*

*(இ-ள்.)* மிதுனம் அல்லது கன்னியில் செவ்வாய் நிற்க, மூன்றாம் இடத்திற்கு அதிபதி உச்சத்தில் இருந்தாலும், சூரியன், செவ்வாய், குரு, சந்திரன், புதன் ஒன்று கூடி இருப்பினும், இச்சாதகன் வீரத்தில் தலை சிறந்தவனாக இருப்பான். சூரியன் பத்தாம் இடத்தில் இருக்க, பன்னிரண்டாம் இடத்தில் செவ்வாய், இராகு அல்லது கேது நிற்க, இலக்கனத்தில் சனி நின்றாலும் இச்சாதகன், போர் செய்வதில் வல்லவனாக விளங்குவான்.

## வலிமை உடையவன்

வல்லதோர் கடகம் இடபமே உதிக்கின்
மதிநிற்க விக்கிரமத் தோனும்
சொல்லிய சேயும் கூடிநின் றிடினும்
சூரியன் குசனும்கூ டிடினும்
நல்லபாக் கியத்திற் சுபர்நிற்க அலது
நலம்பெற நோக்கிடு மேனும்
வல்லுறு சாமி உச்சநட் பாட்சி
மிகுகேந்திரம் இருக்கினும் பலவான். *(339)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனம் கடகம் அல்லது இடபமாக இருக்க, அதில் சந்திரன் இருக்க, மூன்றாம் இடத்திற்கு அதிபதியும் செவ்வாயும் கூடி இருந்தாலும், சூரியனும் செவ்வாயும் கூடி நின்றாலும், ஒன்பதாம் இடத்தில் சுபக்கோள் நிற்க அல்லது சுபக்கோள்கள் இவற்றைப் பார்த்தாலும் இலக்கனாதிபதி உச்ச, நட்பாட்சி பெற்று கேந்திரங்களில் இருந்தாலும் இச்சாதகன் பலம் பொருந்திய வனாக விளங்குவான்.

## இதுவுமது

பலமுறு மேட விருட்சிக மதிக்குப்
பேசுமா றாமிடம் தனிலே
நலமுறு இரவி இருந்திடு மேனும்
நண்ணிய மேடந்தான் மிதுன
விலகிய கன்னி உதயமே யாக
வியன்மதி இருந்திடு மேனும்
அலகிலா ராகு புதனுமே கூடி
ஆறெட்டில் இருக்கினும் பலவான். *(340)*

(இ-ள்.) சென்ம இலக்கனம் மேடம் அல்லது விருச்சிக மாக அதில் சந்திரன் இருக்க, அதற்கு ஆறாமிடத்தில் சூரியன் நின்றாலும் மேடம், மிதுனம், கன்னி ஆகியவற்றுள் ஒன்று இலக்கனமாக அதில் சந்திரன் இருக்க, இராகுவும் புதனும் ஒன்றுகூடி ஆறாமிடம் அல்லது எட்டாமிடத்தில் இருக்க, இச்சாதகன் பலவானாக விளங்குவான்.

## வலிமை இல்லாதவன்

பலப்படு இரவி செவ்வாய்
பிரசுரன் புதனும் கூடி
இலக்குற இருக்கு மேலும்
இரவிதான் வியத்துற் றாலும்
கலக்குறு செவ்வாய் வெள்ளி
கதிரவன் கூடி னாலும்
மலக்குறு குளி[illegible]யானு
மதிகூடிற் றுர்ப்ப லம்தான். *(341)*

(இ-ள்.) சூரியன், செவ்வாய், சுக்கிரன், புதன் ஆகிய கோள்கள் பலம்பெற்று ஒன்றுகூடி இருந்தாலும், சூரியன் பன்னிரண்டாம் இடத்தில் இருந்தாலும், செவ்வாய், சுக்கிரன், சூரியன் ஒன்று கூடி இருந்தாலும், குளிகன், சூரியன் ஆகியோர் ஒன்றுகூடி இருந்தாலும், இச்சாதகன் பலமற்ற வனாக இருப்பான்.

## இதுவுமது

தானமாம் வியத்திற் காரி
சாமனும் இருக்க ஆறின்
ஞான மந்திரிநின் றாலும்
நான்கொன்ப துடையோர் தன்னோ
டூனமில் இரவி கூடி
இருக்கினும் உதயம் மூன்றில்
கானஒன் பதனிற் பொன்னோன்
அமரிலும் துர்ப்ப லந்தான். *(342)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டா மிடத்தில் சனியும் புதனும் இருக்க, ஆறாமிடத்தில் குரு இருந்தாலும், நான்காமிடம், ஒன்பதாமிடம் இவற்றிற்கு அதிபதிகளோடு சூரியன் கூடி இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் அல்லது ஒன்பதாமிடத்தில் குரு இருந்தாலும் இச்சாதகன், பலமற்றவனாக இருப்பான்.

## இதுவுமது

தானே உதயம் பாவர்நடுச்
சார்ந்திட் டாலும் ஒருமூன்றில்
வானே கதிரோன் உரைத்திருக்க
வலிய பாவர் பார்த்தாலும்
தேனேர் கடகம் உதயமதாய்த்
தீயோர் நிற்க மதிதனக்குத்
கானா ரைந்தெட் டினிற்செவ்வாய்
கலந்தே நிற்கிற் ப[illegible]ம். *(343)*

(இ-ள்.) சென்ம இலக்கனம் பாவக்கோள்களுக்கு நடுவில் இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு மூன்றா மிடத்தில் சூரியன் இருக்க, அவனைப் பாவக்கோள்கள் பார்த்தாலும், சென்ம இலக்கனம் கடகமாக இருக்க, அதில் பாவக்கோள்கள் இருக்க, சந்திரனுக்கு ஐந்தாமிடம், எட்டாமிடம் இவற்றில் செவ்வாய் இருக்க, இச்சாதகன் பலமற்றவனாக இருப்பான்.

## இதுவுமது

*ஈன மில்லா உதயத்தில்*
*இனிய கேது தானுறையில்*
*ஆன சாமி பலவீன*
*ஆகி லேனும் உதயமூன்*
*ஊன மிலாகேத் திரத்தோனை*
*உச்சன் சனிசேய் விடராகு*
*தானு மாகக் கூடிநிற்கிற்*
*சரீர மிகத்துர்ப் பலமாமே. (344)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் கேது இருக்க, இலக்கனாதிபதி பலவீனமாக இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் நின்ற கேந்திரத் தோனுடன் உச்சம் பெற்ற சனி, செவ்வாய், இராகு ஆகிய கோள்கள் கூடி நின்றாலும் இச்சாதகன் பலமற்றவனாக விளங்குவான்.

## இதுவுமது

*ஆமே சாமி தானிருந்த*
*வங்சராசிக் கதிபதியைப்*
*பூமேற் சுபரே கூடிடினும்*
*பொருந்தும் சாமி யுடன்சேயும்*
*தாமே வியத்தில் இருந்திடினும்*
*சாற்றும் உதயம் சேயுறினும்*
*தேமே உடலிற் பலங்குறைவாய்த்*
*திரிவர் கமலச் செழுந்திருவே ! (345)*

(இ-ள்.) செந்தாமரைப் பூவில் வீற்றிருக்கும் திருமகளை யொத்த அழகுடைய பெண்ணே! சென்ம இலக்கனாதிபதி இருந்த அங்கிச இராசிக்கதிபதியைச் சுபக்கோள்கள் கூடி இருந்தாலும், இலக்கனாதிபதியும் செவ்வாயும், இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் இடத்திலிருந்தாலும் இலக்கனத்தில் செவ்வாய் நின்றிருந்தாலும், இச்சாதகன் பலம் குன்றியவனாக விளங்குவான் என்றவாறு.

### உடல் மெலிவும், வலிமையின்மையும் உடையவன்

திருவார் மதியு மூர்த்தியனும்
சிறக்கும் மதிதான் உறைகின்ற
மருவார் இராசிக் கதிபதியும்
மழுங்கிப் பலம்போய் இருந்தக்கால்
வெருவா உடலம் மிகமெலிவாய்
மிகத்துர்ப் பலமாய்த் திரிவரென்ப
பொருவா ளியைநேர் விழி'யணங்கே !
புகன்றார் கணிதர் புவிமீதே. (346)

(இ-ள்.) அம்புகளைப் போன்ற கூர்மையான விழிகளை உடைய பெண்ணே! சந்திரனும் இலக்கனாதிபதியும் இராசிக்கதிபதியும் பலமற்று இருந்தால் இச்சாதகன், மிகவும் உடல்மெலிவோடு உடல்பலமற்று விளங்குவான் என்று சோதிட நூல்களைக் கற்றுணர்ந்த சான்றோர்கள் இப்புவியில் கூறியுள்ளார்கள்.

### காதாபரணம் அணிபவன்

மீதுதய விக்கிர மம்லாபத்துக் கிறைவர்
மிகப்பலக்கிற் கர்ணபூஷ்ண லாப முண்டாம்
மோதுமிவ ருடனிரவி கூடியே கேந்திர
மாறுகோணத் திருந்தக்கால் ரத்தினபூ டணமாம்
போதுமிவர் தன்னுடனே புகரிரவி கூடிற்
புகழுமுத்தாஞ் சேய்சிவப்பு புதன்கூடிற் பச்சை
கோதுபடாச் சனிகூடில் நீலம்பொன் கூடிற்
கூர்வயிர முடனேகோ மேதகம்பொன்
னணியே. (347)

(இ-ள்.) சென்ம இலக்கனாதிபதி, மூன்றாமிடத்திற் கதிபதி, பதினோராம் இடத்திற்கு அதிபதி ஆகியோர் பலம் பெற்று விளங்கினால், இச்சாதகனுக்கு காதாபரணம் கிடைக்கும். மூன்றாமிடத்திற்கு அதிபதியுடன் சூரியன் ஒன்றுகூடி, கேந்திர கோணங்களில் இருந்தால் இச்சாதகன்,

இரத்தின ஆபரணங்களை அணிவான். மூன்றாமிடத்திற்கு அதிபதியுடன் சுக்கிரனும் சூரியனும் ஒன்று கூடி இருந்தால், முத்தாலாகிய ஆபரணங்களை இச்சாதகன் அணிவான். மூன்றாமிடத்திற்கு அதிபதியுடன் செவ்வாய் கூடியிருந்தால், மாணிக்க காதணியை அணிவான். புதன் கூடியிருந்தால், மரகத அணிகலன்களை இச்சாதகன் அணிவான். சனி கூடியிருந்தால், நீலமணி பதித்த அணிகலன்களை அணிவான். குரு கூடியிருந்தால், வைரமுடன் கோமேதகம் சேர்ந்த அணிகலன்களை இச்சாதகன் அணிவான்.

## புண்ணிய கதை உபதேசம் கேட்பவன்

அணியுதய விக்கிரம நான்கைந்துக் கிறைவன்
அதிகபல மாகில்நா னாவிதபூ ஷணமாம்
பணியுமொன்று மூன்றுபதி னொன்றினுக்கே அதிபர்
பாக்கியமைந் தினிலிருக்கிற் புண்யகதை கேட்பன்
துணிவிலி வர்தனைப்பொன்னோன் தான்பார்க்க குருவின்
தூபமந்திர வுபதேசமெய்ஞ்ஞானம் கேட்பன்
கணிதநூற் வகுத்துரைத்த பலாபலத்தை அறிந்தே
கட்டுரைப்பர் கற்றறிந்த கவிவல்லோர் தாமே. *(348)*

(இ-ள்.) சென்ம இலக்கனாதிபதி, மூன்றாமிடத்திற்கு அதிபதி, நான்காம் இடத்திற்கு அதிபதி ஐந்தாமிடத்திற்கு அதிபதி ஆகிய நால்வரும் அதிக பலம் பெற்று விளங்கினால், இச்சாதகன்பலவிதமான ஆபரணங்களை அணிபவனாக விளங்குவான். இலக்கனாதிபதி, மூன்றாமிடத்திற்கு அதிபதி, பதினோராமிடத்திற்கு அதிபதி ஆகிய மூவரும் ஒன்பதாம் இடத்தில் இருந்தால், இச்சாதகன், புண்ணிய கதைகளைக் கேட்பவனாக இருப்பான். இவர்களைக் குரு பார்க்க, இச்சாதகன் குருவினிடம் மந்திர உபதேச, மெய்ஞானங் களைக் கேட்பான் என்று சோதிடக்கலையில் வல்லவர்கள் ஆராய்ந்து எடுத்துரைத்த சோதிடப் பலன்களையெல்லாம் அறிந்து கவி எழுதுவதில் வல்லவரான கவிஞர்கள் இதனை எடுத்துரைத்துள்ளார்கள்.

## இதுவுமது

வலவுதய மூன்றைந்தோ டொன்பதுபன் னொன்றில்
சுபவர்க்க முறிற்புண்ய கதையதனைக் கேட்பன்
அலதிவர்கள் சுபரோடு சனிராகு காண
வர்க்கமுறில் அதிக விகடப் பிரசங்கம் கேட்பன்
சொலுமிவர்கள் புதன்சுக்ர வர்க்கமடைந் திருக்கிற்
சுகமான வனிதையர்கள் நடனநாட் டியத்திற்
குலவியசங் கீதவித்தை தனிற்பிரிய னாவன்
கோகன மலர்ப்பொகுட்டிற் கொஞ்சுகிளி மொழியே. *(349)*

(இ-ள்.) தாமரை மலரின் பொகுட்டில் கொஞ்சும் கிளிமொழியுடைய பெண்ணே! சென்ம இலக்கனாதிபதி, மூன்றாமிடத்திற்கதிபதி, ஐந்தாமிடத்திற்கதிபதி, ஆகிய நால்வரும் இலக்கனத்திற்குப் பதினோராமிடத்தில் சுபவர்க்கம் பெற்று விளங்கினால், இச்சாதகன் புண்ணிய கதைகளைக் கேட்பதில் விருப்பம் உடையவனாக விளங்குவான். அல்லது இவர்கள் சுபக்கோள்களோடு சேர்ந்து இருக்க, இவற்றைச் சனி, இராகு பார்க்க, அல்லது இவர்கள் சனி, இராகு வர்க்கமுற அதிகமான நகைச்சுவை சொற்பொழிவுகளைக் கேட்பதில் இச்சாதகன் விருப்ப முடையவனாக விளங்குவான். இவர்கள் புதன் அல்லது சுக்கிர வர்க்கம் அடைந்து இருந்தால், இச்சாதகன், பெண்களின் நடன நாட்டியங்களிலும் இசைப்பாடல்களிலும் பெரு விருப்பம் உடையவனாக விளங்குவான்.

## மூன்றாம் பாவத்தில் இரவி நின்ற பலன்

மொழியுமோர் மூன்றில் இரவியே நிற்கின்
முனைதரு சோதர பீடை
வழிபடு தியாகிப் புவிதனில் வீரன்
மாபெலன் துர்ச்சன சேவை
பழிபடு பகைவர் தன்னையே வெல்வன்
பாரினில் வெகுசன மித்திரன்
அழிவிலா மைந்தர் தமக்குமே பீடை
அறிவுள மாமென அறையே. *(350)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் சூரியன் இருப்பின், இச்சாதகனின் சகோதரர்களுக்குத் துன்பம் நேரும். இச்சாதகன் தியாகியாகவும் வீரனாகவும் இருப்பான்; தீயவர்களிடத்தில் பணி செய்வான்; பகைவர் களை வெல்வான்; பலருக்கும் நண்பனாக விளங்குவான்; இச் சாதகனின் புத்திரர்களுக்குத் தீமை உண்டாகும்; இவன் புத்திசாலியாக இருப்பான்.

**மூன்றாம் பாவத்தில் மதி நின்ற பலன்**

அறையுமோர் மூன்றிற் சந்திரன் இருக்கில்
ஆடையா பரணசிங் காரன்
நிறைவுறு கர்ண பூடண லாபம்
நிகர்தன்ம கதைகளே கேட்பன்
குறைவிலாச் சூரன் பெண்துணை யுடையன்
கூர்சவுக் கியமுள சிரேட்டன்
பொறைதரு குணத்தன் வித்தையும் உடையன்
பொம்மல்வெம் முலையணங் கரசே! (351)

(இ-ள்.) திமிர்ந்த கொடுமையான கொங்கைகளை யுடைய பெண்ணரசே! சென்ம இலக்கனத்திற்கு மூன்றா மிடத்தில் சந்திரன் இருந்தால், இச்சாதகன், ஆடை ஆபரணங்களால் தன்னை மிகவும் அழகுபடுத்திக்கொள்ளக் கூடியவன்; காதாபரணங்களை அணிவான்; தர்ம கதைகளைக் கேட்பதில் ஆர்வம் உடையவன்; மிகுந்த தைரியசாலி; பெண்களின் துணையை உடையவன்; பாக்கியங்களைப் பெற்றுள்ளவன். நன்மைதரும் நல்ல குணங்களைக் கொண்டவன். பல வித்தைகளையும் கற்றவனாக இருப்பான்.

**மூன்றாம் பாவத்தில் அங்காரகன் நின்ற பலன்**

அரசெனும் மூன்றில் வக்கிரன் நிற்கில்
அருள்பிதுர் பிராதுரு தோடம்
பரவுஞாநி யர்தம் கலக்கமே உண்டாம்
பண்புறு குணப்பிர சித்தன்

*வரமிகு பூமி இலாபத்தை உடையன்*
*மணிபுனை நயனரோ கத்தன்*
*விரவுதுர் புத்தி தைரியம் பாவர்*
*விரும்புமா சாரனென் றுரைப்பார். (352)*

(இ-ள்.) சென்ம இலக்கனாதிபதிக்கு மூன்றாம் இடத்தில் செவ்வாய் இருந்தால், இச்சாதகனின் உடன்பிறந்த சகோதரர்களுக்கும் தந்தைக்கும் தோஷம் உண்டாகும்; பகைவர்களால் மனத்துயரம் உண்டாகும்; இவன் நல்ல குணத்தை உடைய பிரபலனாக இருப்பான். பூமி இலாபம் கிடைக்கும்; கண்களில் நோய் உடையவன்; தீய சிந்தனை, தைரியம் உடையவன்; தீயோரால் விரும்பப்படுபவன்; ஆசாரத்தோடு வாழ்பவன்.

**மூன்றாம் பாவத்தில் புதன் நின்ற பலன்**

*என்றதோர் மூன்றிற் புந்தியே இருக்கில்*
*இன்சொலி நட்புதாட் சினிகன்*
*வென்றிசேர் பெரியோ ரிடத்தினிற் கேள்வி*
*மிகுதன்ம ஞானகா வியங்கள்*
*நின்றுறக் கேட்பன் சற்சனர் சேர்க்கை*
*நிட்டூர வசனன்முற் கோபி*
*துன்றிய மந்த புத்தியன் அற்ப*
*சோதரன் உடையனென் றுரைப்பர். (353)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் புதன் இருக்க, இனிய சொற்களை உடையவன்; நட்பு பாராட்டுபவன்; பெரியோரிடத்திற் பாடம் கற்பான்; தர்ம, ஞான காவியங்கள் கேட்பதில் விருப்பம் உடையவன்; நல்லவர்களோடு உறவாடுபவன்; இருப்பினும் சிலபொழுது கொடுமையாகப் பேசுபவன்; முன்கோபம் உடையவன்; மந்தபுத்தி கொண்டவன்; இவனுக்குச் சகோதரர்கள் மிகவும் குறைவு என்று கூறுவர்.

## மூன்றாம் பாவத்தில் குரு நின்ற பலன்

உடையதோர் மூன்றில் மந்திரி இருக்கில்
உறுதுணை யாலவ மானம்
தடையுறா ஞான உபதேசங் கேள்வி
தருமகா வியகதைக் கேட்பன்
இடையுமற் பாயுள் கர்ணபூ டணத்தன்
இராசசே வையுமுளப் பெரியன்
விடையுறு சொற்பத் திரவியன் கான
வித்தையன் திரிகளாற் செயனே. *(354)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு மூன்றாம் இடத்தில் குரு இருக்க, இச்சாதகன் உடன்பிறப்புக்களால் அவமானம் அடைவான்; ஞான உபதேசத்தைப் பெறுபவன்; தர்ம, காவிய கதைகளைக் கேட்பதில் ஆர்வம் உடையவன்; ஆயுள் குறைவு உடையவன்; காதாபரணம் அணிபவன்; அரசாங்கத்தில் பணியாற்றக்கூடியவன்; சிறிதளவே செல்வம் உடையவன். இசைக்கலையில் வல்லவன்; பெண்களால் வெற்றியை உடையவன்.

## மூன்றாம் பாவத்தில் சுக்கிரன் நின்ற பலன்

செயமுறு மூன்றிற் சுக்கிரன் இருக்கிற்
திரிமோகி தாட்ச சணிகன்
வயமுறு கலகி சதாதுக்கி தனத்தன்
வன்பவச் சிந்தையே உடையன்
இயலும்ஆ ளடிமை தாசிதா சாளும்
இலாதவன் பெண்சகோ தரத்தன்
நயமுறு சயத்தன் ஆடைஆ பரணன்
நல்லலங் காரமும் உளனே. *(355)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் சுக்கிரன் இருந்தால், இச்சாதகன், பெண்களிடத்தில் மோக முடையவனாவான். இரக்கம் உடையவன்; கலகம் செய்பவன்; எந்நேரமும் துக்கம் உடையவன்; செல்வன்; பாவச்சிந்தனை உடையவன்; ஆள், அடிமை போன்றோர்

இல்லாதவன்; உடன்பிறந்த சகோதரிகளை உடையவன்; வெற்றியை உடையவன்; ஆடை, ஆபரணங்களால் தன்னை அலங்காரம் செய்துகொள்ளுவதில் பெருவிருப்பம் உடையவன்.

### மூன்றாம் பாவத்தில் சனி நின்ற பலன்

*உள்ளதோர் மூன்றிற் சனியனே இருக்கில்*
*உயர்பிர தானிகீழ்ப் பட்டோர்*
*விள்ளுறு சாதி இனசனம் தன்னை*
*மெய்ப்பொடு சேவையே செய்வன்*
*தள்ளுறு நீசக் கிருத்தியன் காமி*
*தைரியன் செவிமந்தம் உடையன்*
*துள்ளுறாச் சேட்டர் தனக்குமே தோடம்*
*சொற்பெரு மந்தனென் றிசைப்பார்.* *(356)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு மூன்றாம் இடத்தில் சனி நின்றால், இச்சாதகன் உயர்நிலையில் பதவி வகிப்பான்; கீழ்ப்பட்டவர்கள், தன்னுடைய இனத்தோர் போன்றோருக்கு உதவுவான்; அவமானம் உடையவன்; காமத்தில் விருப்பம் உடையவன்; தைரியசாலி; காது கேளாதவன். இவனுடைய மூத்த சகோதரர்கள் துன்பம் அடைவர்; வேலைகளை மெதுவாகச் செய்யக்கூடியவன்.

### மூன்றாம் பரவத்தில் இராகு நின்ற பலன்

*இசையுமோர் மூன்றில் இராகுவே இருக்கில்*
*இனிலிது தீர்க்காயுள் கர்வி*
*நசையுறும் ஒழுக்கந் தன்னையே புகழ்தல்*
*ராசசன் மானபிர தாபி*
*வசையினை உடையன் சோதர பீடை*
*மண்ணின்மேல் திரவிய னாகும்*
*திசையெலாம் உரைக்க அக்கிரமம் செய்வன்*
*திரைகடற் பிறந்ததெள் ளமுதே !* *(357)*

(இ-ள்.) திருப்பாற்கடலில் தோன்றிய தெளிந்த அமுதம் போன்று இனியவளே! சென்ம இலக்கனத்திற்கு மூன்றா மிடத்தில் இராகு நிற்கில், இச்சாதகன் தீர்க்காயுள் உடையவன்; கர்வி; நல்லொழுக்கத்துடன் இருப்பவன்; தன்னைத்தானே புகழ்ந்துகொள்பவன்; உயர்ந்த பொருளைப் பெறும் சிறப்புடையவன்; பிறரால் இகழப்படுபவன்; இவனுடைய இளைய சகோதரரர்கள் துன்பம் அடைவர்; இவன் செல்வம் மிகுந்தவனாக விளங்குவான்.

**மூன்றாம் பாவத்தில் கேது நின்ற பலன்**

தெள்ளிய மூன்றிற் கேதுவே இருக்கிற்
செய்திடும் காரியம் தாழ்ச்சி
தள்ளுறா வீர பராக்ரம சாலித்
தயையிலான் சாத்திரம் கேள்வி
விள்ளுறு கபால ரோகமே உடையன்
வீறிய பிராதுரு தோடம்
கள்ளவிழ் கமலப் பொகுட்டில்வீற் றிருக்கும்
கமலைக்கும் இனியபொற் பனமே. (358)

(இ-ள்.) தேன் சிந்துகின்ற செந்தாமரை மலரின் பீடத்தில் வீற்றிருக்கும் திருமகளைப் போன்ற இனிமையான அன்னம் போன்ற பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்கு மூன்றாம் இடத்தில் கேது நிற்க, இச்சாதகன் கீழ்மையான செயல்களைச் செய்பவன்; வீரம் உடையவன்; தைரியசாலி; கருணை இல்லாதவன்; சாஸ்திரம், கேள்விகளில் சிறந்தவன்; தலையில் நோய் உள்ளவன்; சகோதர தோஷம் உடையவன்.

**மூன்றாம் பாவத்தில் குளிகன் நின்ற பலன்**

பொற்புறு மூன்றிற் குளிகனே நிற்கில்
புவியிலுன் மத்தன்மா விரகி
பற்பல கர்வி பாக்கியவி ரோதி
பகர்சகோ தரவிரோ தியுமாம்

மற்பொடு கோபி பிதாவின்மேற் பத்தி
மனோதிடம் உடையவ னாகும்
சிற்பநூன் முழுதும் தெரிகுநர்க் கெழுத
தெரியொணா வடிவுறு தேனே! (359)

(இ-ள்.) சிற்பநூலை முழுமையாகக் கற்றவர்களும் செய்வதற்குத் தெரியாத அழகான வடிவுடைய தேன் போன்ற இனிய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு மூன்றா மிடத்தில் குளிகன் இருந்தால்; இச்சாதகன் செயலாற்றல் இல்லாதவன்; காமம் உடையவன்; கர்வம் உடையவன்; பாக்கியங்கள் இல்லாதவன்; சகோதரரர் களிடம் பகையைக் கொண்டவன்; கோபம் உடையவன்; தந்தையிடம் அன்பு பூண்டவன்; தைரியம் உடையவன்.

**மேற்படி கிரகங்களின் சகிதாதிய பலன்**

தேனே! மூன்றாம் இடந்தனிலே
திருந்து குளிகன் பாவர்நிற்கில்
தானே பிதாவின் வழிதுக்கம்
தாரித் திரனாம் பெறும்வழியிற்
காணோ ரிடத்திற் பொருட்சேதம்
காட்டும் பாவ ரொடசுபரும்
வானே ரெண்ண விருந்தக்கால்
மயங்கா வீரம் உடையனென்பார். (360)

(இ-ள்.) தேன்போன்ற இனிய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு மூன்றாம் இடத்தில் குளிகனுடன் பாவக்கோள்கள் இணைந்திருக்கில், இச்சாதகன், பிதாவினால் துன்பத்தை அடையக்கூடியவன்; வறுமை உடையவன்; வரவைக்காட்டிலும் மிகுந்த பொருள் செலவு உடையவன். சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் குளிகனுடன் பாவக்கோள்களும் சுபக்கோள்களும் ஒன்று சேர்ந்து இருக்க, இச்சாதகன் மிக்க வீரம் உடையவனாக விளங்குவான்.

**இதுவுமது**

என்பார் மூன்றா மிடம்புதனுக்
கினிய உச்சம் ஆட்சிஎனிற்
தன்பால் மிகவும் பொருளுடையன்
தண்கோள் உறையிற் சதாதுக்கி

வன்பார் பாவர் இருந்தக்கால்
வருமே தனமும் நன்மையுந்தான்
பொன்பார் நிலவுக் காட்சியுச்சம்
பொருந்தி வளரில் வெகுநன்மை. *(361)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில், புதன் உச்சம் அல்லது ஆட்சி பெற்றிருந்தால், இச்சாதகன், மிகுந்த செல்வனாக விளங்குவான். புதனோடு மூன்றா மிடத்திற்கதிபதியும் சேர எந்நேரமும் துக்கம் உடையவன்; புதனோடு பாவக்கோள்களும் சேர்ந்திருக்க, இச்சாதகன் மிகுந்த செல்வத்தையும் நன்மையையும் அடைவான். மூன்றாமிடத்தில் சந்திரன் ஆட்சி அல்லது உச்சம் பெற்று இருந்தால், இச்சாதகன் மிகுந்த நன்மையை அடைபவனாக விளங்குவான்.

**இதுவுமது**

நன்மை யாகும் ஒருமூன்றிற்
நவிலுமெட்டுக் கிறைவர் நிற்கிற்
துன்மை யான சோதரமும்
பொருளும் சேதம் துர்ப்பலமாம்
வன்மை யான களரோகம்
மருவும் மூன்றில் மூர்த்திநிற்கில்
இன்மைத் துணைவர் வாதனையாம்
இனிய கர்ணா பரணமுண்டே. *(362)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில், எட்டாம் இடத்திற்கு அதிபதி நின்றால், இச்சாதகனின் சகோதரர்களுக்கு அழிவுண்டாகும்; பொருட்சேதமும் ஏற்படும்; தீய பலன்கள் உண்டாகும். கண்டநோய் கழுத்தில் தோன்றும். சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில், இலக்கனாதிபதி நிற்கில், இச்சாதகனின் உடன்பிறந்தவர் களுக்குத் துயரம் உண்டாகும்; இச்சாதகன், காதாபரணம் அணிவான்.

**செவிடு**

உண்டாம் மூன்றில் மதிகுருமா
லுடன்சுன் கூடி இருந்தாலும்
தண்டார் சாமி தனக்கஞ்சில்
சாற்றும் எட்டில் ராகுநிற்கில்

வண்டார் பாவர் பார்த்தாலும்
மலவன்திரிகோ ணத்தியத்தில்
ஒண்டார்பாவா ஒன்றெட்டில்
ஒளிர்ம திக்கும் செவிடாமே. (363)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில், சந்திரன், குரு, புதன், சனி ஆகியோர் கூடி இருந்தாலும், இலக்கனாதிபதிக்கு ஐந்தாமிடத்தில் அல்லது எட்டாமிடத்தில் இராகு இருந்தாலும் அவ்விடத்தைப் பாவக் கோள்கள் பார்த்தாலும் சந்திரன், திரிகோணங்களில் இருந்தாலும் பாவக்கோள் இலக்கனம், எட்டாமிடம் ஆகிய இடங்களில் இருந்தாலும், சந்திரன் இருந்தாலும், இச்சாதகனின் காது செவிடாகும்.

**இதுவுமது**

ஆமாம் பாம்பி னுடன்குளிகன்
அரிய சனியும் உடன்கூடின்
தாமாம் மூன்றில் இலாபத்தில்
அருணன் இருக்கில் செவிடென்பார்
காமா ரியைநேர் பூராடம்
கலந்தே கேது வுறசெவிடாம்
பூமா ரியைநேர் கணிதநன்னூல்
புவியோர்க் குரைத்த பொருளதுவே. (364)

(இ-ள்.) இராகு அல்லது கேதுவுடன் குளிகனும் சனியும் கூடியிருக்க, மூன்றாமிடத்தில் அல்லது இலாப ஸ்தானத்தில் சூரியன் இருந்தால்,இச்சாதகன் செவிடாக இருப்பான். பூராடத்தின் காலில் கேது இருப்பின், இச்சாதகன் செவிடாக இருப்பான். பூமழையை ஒத்த சோதிடநூல் வல்லுநர்கள் புவியோர்க்கு உரைத்த பொருள் இதுவாகும்.

மூன்றாம் பவம் முற்றிற்று.



# நான்காம் பாவம்

ஏர்பெற்ற நான்கு நான்குக்
கிறைவனும் சுபவர்க்க மாகி
தார்பெற்ற மதிக்கைந் தெட்டுத்
தான்சுத்த மாயி ருக்கில்
சீர்பெற்ற மாதுர் தானே
தீர்க்காயுள் என்று சொல்வார்
பார்பெற்ற கணித நூலோர்
பகருறும் பலனி தாமே. *(365)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடம், நான்காமிடத்திற்கு அதிபதி சுபவர்க்கமாகிச் சந்திரனுக்கு ஐந்து, எட்டாமிடம் சுத்தமாக இருக்கில், இச்சாதகனின் தாய்க்கு தீர்க்காயுள் என்று இவ்வுலகில் புகழ்பெற்று விளங்கும் சோதிடநூல் சிறந்து விளங்குவோர் கூறியுள்ளனர்.

## இதுவுமது

*துதிசெய்நான் காமி டந்தான்*
*சுபமத்தியு மாக நாலுக்*
*கதிபன்கேந் திரகோ ணத்தில்*
*ஆகிலும் நிசியிற் றேயா*
*மதியுச்சம் ஆட்சி கேந்திரம்*
*வருகோணத் திருக்கச் சாமி*
*சதிருடன் குருபார்த் தாலும்*
*தாய்க்குத்தீர்க் காயு ளென்பார். (366)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடம் சுபக்கோள்களுக்கு மத்தியில் இருக்க, நான்காம் இடத்திற்கு அதிபதி கேந்திர திரிகோணத்தில் நின்றாலும், சந்திரன் ஆட்சி, உச்சம் பெற்று கேந்திர திரிகோணங்களில் இருக்க, இலக்கனாதிபதியை குரு பார்த்தாலும் இச்சாதகனின் தாய்க்குத் தீர்க்காயுள் சொல்வார்.

## இதுவுமது

உச்சரே நான்கில் நிற்க
ஒருநான்குக் குடையோன் உச்சம்
மிச்சகேந் திரத்தில் நிற்க
மிகுபாவர் நோக்கா ராகில்
அச்சமின் றீன்ற தாய்க்கே
அதிகதீர்க் காயுள் என்பார்
பச்சிளங் குரும்பை போல
பனைத்தெழுந் தனத்தி னாளே. *(367)*

*(இ-ள்.)* பசிய குரும்பையைப் போல பெரிதாக திமிர்த்த கொங்கைகளை உடையவளே! சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்தில் உச்சக்கோள் நிற்க, நான்காம் இடத்திற்கு அதிபதி உச்சம் பெற்று கேந்திரத்தில் இருக்க, பாவக்கோள் இதனைப் பார்க்கவில்லையாயின், இச்சாதகனைப் பெற்ற தாய்க்குத் தீர்க்காயுள்.

## இதுவுமது

ஒருநான்கிற் குருவி ருக்க
உறைந்திடு நாலுக் குள்ளோன்
குருவர்க்கம் அடைந்து நிற்க
கூறிய இடபம் ஞெண்டு
மருவுற்ற கேந்திர மாகி
வளர்மதி இருக்கு மாகிற்
திருவுற்ற மாதுர் தானே
தீர்க்காயுள் என்று செப்பே. *(368)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் குரு இருக்க, நான்காம் இடத்திற்கு அதிபதி குருவர்க்கம் அடைந்து நிற்க, இடபம், கடகம் ஆகியவை கேந்திரங்களாகி அவற்றில் வளர்மதி இருக்குமாயின், அச்சாதகனின் தாய்க்குத் தீர்க்காயுள்.

காட்டிய நாலுக் கிறையும்சந் திரனும்
தேவ லோகாங் கிசத்தை
நீட்டிய வைசேடி காங்கிசம் ஏறி
உச்சமுற் றுநிகரில் உச்சம்

தீட்டிய அங்கிசமிருக் கசுபர் பார்க்கிற்
தாய்க்குத் தீர்க்காயுள் என்பர்
கூட்டிய சந்தனக் குழம்பின்முளைத் தெழுந்த
கரும்பணையக் கோதை மாதே! (369)

(இ-ள்.) நறுமணம் மிகுந்த சந்தனக் குழம்பில் முளைத்து வளர்ந்த கரும்பினையொத்த இனிமையான பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்திற்கு அதிபதியும் சந்திரனும் தேவலோகாங்கிசத்தை அல்லது வைசேடி காங்கிசத்தை அடைந்து உச்சமடைந்து, உச்ச அங்கிசத்தில் இருக்க, இவரைச் சுபக்கோள் பார்க்க, இச்சாதகனின் தாய்க்குத் தீர்க்காயுள்.

## இதுவுமது

வனித்தபக லினிற்பிறக்கப் புகருதய முதலைந்து
வரையி லேதான்
தனித்திருக்கச் சுபர்பார்க்கின் மாதுருதீர்க் காயுளென்பர்
தரும்வெள் ளிக்கே
கனிப்புற நாலெட்டுஞ் சுத்தமாய்ச் சாமிக்கே
கருது நாலோன்
தனக்குமிகும் பலனுறினும் மாதுருதீர்க் காயுளெனச்
சாற்ற லாமே. (370)

(இ-ள்.) சாதகன், பகலினில் பிறக்க, சுக்கிரன் இலக்கனம் முதல் ஐந்து இடம் வரை ஏதேனும் ஓரிடத்தில் தனித்திருக்க, இதனைச் சுபர் பார்க்க, இச்சாதகனுக்குடைய தாயாருக்குத் தீர்க்காயுளாகும். சுக்கிரனுக்கு நான்காமிடம், எட்டாமிடம் சுத்தமாக இருக்க, இலக்கனாதிபதிக்கு நான்காமிடத்தோன் நட்புக்கோள் என்றாலும் இச்சாதகனுடைய தாயாருக்குத் தீர்க்காயுள்.

## இதுவுமது

சொற்றுலாங் கேந்திர மாகிச்
சுக்கிரன் இருக்க நாலுக்
குற்றவன் பலத்தி ருக்க
ஒருநாலோன் சுபவர்க் கத்தைப்

பெற்றிடில் ஈன்ற தாய்க்கே
　　பேசுந்தீர்க் காயுள் என்பர்
கற்றறி உடைய மேன்மைக்
　　கணிதர்தாம் உரைத்த வாறே. (371)

(இ-ள்.) சுக்கிரன் கேந்திரத்தில் இருக்க, நான்கா மிடத்தில் இருப்பவன் வலிமை பெற்று இருக்க, நான்கா மிடத்திற்கு அதிபதி சுபவர்க்கத்தை அடைந்திடில், இச்சாதகனின்தாய்க்குத் தீர்க்காயுள் என்று சோதிடக்கலையில் மேன்மையுடன் விளங்கும் கற்றறிந்த வல்லுநர்கள் எடுத்துரைத்துள்ளார்கள்.

## இதுவுமது

உயர்ச்சியாம் நாலோன் ஆட்சி
　　உச்சகேந் திரத்தி லாக
நயப்புற மதிவெள் ளிக்கு
　　நான்கைந்தோ டெட்டீ ராறும்
வயப்படு சுத்த மாகின்
　　மாதுர்தீர்க் காயுள் என்பர்
கயற்கதிர் அயிலை வண்டைக்
　　காட்டிய கருங்கண் ணாளே! (372)

(இ-ள்.) வடிவால் கயல் மீனைப் போன்றும் கூர்மையால் ஒளிபொருந்திய வேலைப் போன்றும் நிறத்தால் கரிய வண்டினைப் போன்றும் தோன்றுகின்ற கரிய கண்களை உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு நான்கா மிடத்திற்கு அதிபதி ஆட்சி, அல்லது உச்சம் பெற்று கேந்திரங்களில் இருக்க, சந்திரனுக்கும் சுக்கிரனுக்கும் நான்காமிடம், ஐந்தாமிடம், எட்டாமிடம், பன்னிரண் டாமிடம் ஆகியவை சுத்தமாக இருந்தால், இச்சாதகனுடைய தாய்க்குத் தீர்க்காயுள்.

## இதுவுமது

இரங்கியநா லுக்கிறைவனை றாவதாங்கிசம் ஏறி
　　உச்சாங்கி சமிருக்க வெண்மதியும் புகரும்
குலவுறும்வை சேடிகாங்கிச மேறிகேந்திர கோணத்
　　திருந்திடினும் நான்கும்சுப மாகி

தலம்பெறும் நாலுக்கிறைவன் உச்சமே யாகச்
சாமியே பார்த்தாலும் நாலெட்டுப் பத்தோர்
நிலங்கொள்கோ ணத்திருக்க நான்கினதி பதியும்
நிலவும்கூ டிப்பலக்கின் மாதுருதீர்க் காயுள். *(373)*

(இ-ள்.) ஜென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்திற்கு அதிபதி ஐராவதாங்கிசம் ஏறி, உச்ச அங்கிசத்தில் இருக்க, வளர்பிறைச் சந்திரனும் சுக்கிரனும் வைசேடிகாங்கிசம் ஏறி, கேந்திர திரிகோணங்களில் இருக்க, நான்காமிடம் சுபமாகி, நான்காமிடம், எட்டாமிடம், பத்தாமிடம் ஆகியோர் திரிகோணத்தில் நிற்க, நான்காமிடத்திற்கு அதிபதி கூடி பலம் பெற்று நிற்க, இச்சாதகனின் தாய்க்குத் தீர்க்காயுள்.

### தீய நடத்தையுடைய தாய்

ஓதுநாலுக் கிறைவன்சனி ராகுகுளி கனுடன்
கூடிப்பாவ வர்க்கமுற் றுநிற்கச் சுபர்தான்
போதுறநோக் காரெனினும் மாதுர்க்கா ரகனும்
போற்றும்நா லுக்கிறையும் பொருந்தியவங் கிசமும்
கோதுபடு சனிஇராகு குளிகனுடன் கூடிக்
குறித்திடுசத் துருநீச மூடமடைந் திருக்க
மாதுகேள்! குருபார்வை யன்றிஇருந் தாலும்
மாதுர்விப சாரியென வகுத்துரைப்பர் தானே. *(374)*

(இ-ள்.) ஜென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்திற்கு அதிபதி, சனி, இராகு, குளிகன் இவர்களுடன் கூடி பாவவர்க்க முற்று இருக்க, இவர்களைச் சுபக்கோள்கள் பார்க்காமல் இருக்க, சந்திரனும் நான்காமிடத்திற்கு அதிபதியும் அவர்கள் பொருந்திய அங்கிசரும், சனி, இராகு, குளிகன் இவர்களோடு கூடி பகை, நீசம் அஸ்தமனம் அடைந்திருந்து, இவர்களைக் குரு பார்க்கவில்லை என்றாலும், இச்சாதகனின் தாய் தீய நடத்தை உடையவளாக இருப்பாள் என்று சோதிட நூல் வல்லுனர்கள் வகுத்துரைத்துள்ளார்கள்.

## இதுவுமது

*ஆனதேளு றுமதியைப் புதன்பார்க்கு மேனும்*
*ஆறுடையோன் சேய்மதியைக் கூடியே நான்கிற்*
*தானமுற வேயிருக்க பொன்பார்க்கு மேனும்*
*தபனனிரா குவும்கூடி நான்கதனில் இருக்கில்*
*ஈனமுறும் தீக்கோட்க ளுடன்கூடிப் பார்க்கில்*
*ஏற்றமுள்ள குருவர்க்கி லாதிருந்தா ரேனும்*
*மானமிலா மாதுர்விப சாரியாம் என்றே*
*வகுத்துரைத்தார் கணிதநூல் வல்லவர்கள் தானே. (375)*

(இ-ள்.) விருச்சிகத்தில் உள்ள சந்திரனைப் புதன் பார்த்தாலும், ஆறாமிடத்திற்கு அதிபதி செவ்வாய், சந்திரனைக் கூடி நான்காமிடத்தில் இருக்க, இவர்களைக் குரு பார்த்தாலும், சூரியனும் இராகுவும் கூடி நான்காம் இடத்தில் இருக்கில் அல்லது தீயக்கோள்களுடன் கூடி இருக்கில் அல்லது தீயக்கோள்களால் பார்க்கப்பட்டாலும், குரு வர்க்கம் இல்லாமல் இருந்தாலும், இச்சாதகனைப் பெற்றதாய் தீய நடத்தையை உடையவளாக இருப்பாள் என்று சோதிடக் கலையில் வல்லவர்கள் வகுத்துரைத்துள்ளனர்.

## இதுவுமது

*மதிபாம்பி னுடன்கூடி சனிவர்க்கம் அடைந்தே*
*வருநான்கில் இருக்கஒன்றோ டொன்பதுளோர் தமக்கே*
*அதிராமல் நாலுநா லுக்கிறையும் பலக்க*
*ஆனகுரு வீட்சணமில் லாதிருக்கு மேனும்*
*கதியான சனிராகு குளிகனுடன் மதியும்*
*கலந்தொன்றாய் நான்கிநிற்க நிசியிலே பிறக்க*
*விதியான குருவர்க்க மானதிலா திருக்கின்*
*மேன்மாதுர்விபசாரி எனஉரைப்பர் மேலோர். (376)*

(இ-ள்.) சந்திரன், இராகு அல்லது கேதுவுடன் கூடி சனிவர்க்கம் அடைந்து நான்காம் இடத்தில் இருக்க, இலக்கனம், ஒன்பதாமிடம், ஆகியவற்றிற்கு அதிபதிகளும் நான்காமிடம், நான்காமிடத்திற்கு அதிபதியும் பலம் பெற்று விளங்க, குருவின் பார்வை இல்லாமல் இருந்தாலும், சனி, இராகு, குளிகனுடன், சந்திரனும் கலந்து நான்காம் இடத்தில்

நிற்க, இரவிலே பிறக்க, குருவர்க்கம் இல்லாமல் இருந்தால், இச்சாதகனின் தாய் தீய நடத்தையை உடையவளாக இருப்பாள் என்று சோதிடம் கற்றறிந்தோர் கூறியுள்ளார்கள்.

## இதுவுமது

சொன்னதிவா விற்பிறக்கச் சனிஇராகு குளிகனுடன்
சுங்கன் கூடி
மன்னியநான் காமிடத்தில் உறைந்திருக்க நீசக்கோள்
மகிழ்ந்து பார்க்க
நன்னியல்பாம் குருவர்க்க மில்லாம லேயிருக்கின்
நலமில் லாத
கன்னியன்போன் மாதுர்விப சாரியென வேயுரைப்பர்
கயற்கண் நல்லாய்! *(377)*

(இ-ள்.) கயல்மீன் போன்ற கண்களைக் கொண்ட நல்ல பெண்ணே! சனி, இராகு, குளிகன், சுக்கிரன் கூடி பகலில் பிறக்க, நான்காமிடத்தில் நிற்க, இவற்றை நீசக்கோள்கள் பார்க்க, குருவர்க்கம் இல்லாமல் இருந்தால், இச்சாதகனின் தாய், தீய நடத்தை உடையவளாக இருப்பாள் என்று சோதிடர்கள் கூறுவார்கள்.

## இதுவுமது

மேவுதயம் பாக்கியத்துக் கிறைவருக்கு நாலோன்
வெண்மதியும் பலமாகி வெய்யருடன் கூடிப்
பாவவர்க்கம் தனையடைந்து நீசக்கோள் பார்க்கப்
பண்புறக்கேந் திரகோணந் தனிலிருக்கப் பொன்னோன்
ஆவலுறு வர்க்கமிலா தேயிருக்கிற் பார்மேல்
ஆசையுள்ள புத்திரனும் பர்த்தாவும் அறிய
பூவுலகில் விபசாரம் செய்திடுமா துருவாம்
புளகமுறுங் களபமுலைப் பெண்ணரசுக் கரசே. *(378)*

(இ-ள்.) மயிர்க்ககூச்சொறியும் வண்ணம் சந்தனத்தைப் பூசியுள்ள தனங்களையுடைய பெண்களுக்கெல்லாம் அரசியே! இலக்கனம், ஒன்பதாம் இடத்திற்கு அதிபதிக்கு நான்காம் இடத்திற்கதிபதி, சந்திரன் ஆகியோர் பலம்பெற்று, சூரியனுடன் சேர்ந்து பாவவர்க்கம் அடைந்து, இவர்களை

நீசக்கோள்கள் பார்க்க, கேந்திர திரி கோணங்களில் இருக்க, குருவர்க்கம் இல்லாமல் இருக்க, இச்சாதகனுடைய தாய், தன் கணவனுக்கும் பிள்ளைக்கும் தெரிய, தீயநடத்தை உடையவளாக விளங்குவாள்.

## இதுவுமது

திங்களுடன் சுக்கிரனும் நீசமெய்தப் பாவர்
சேர்ந்துநிற்க நான்கோனும் நீசமுர அல்லால்
பங்கமுறு நீசருடன் கூடியே நிற்கப்
பரிந்திவர்கள் அஞ்சாதி பதிகளிந்தப் படியே
சங்கையுற இருக்கப்பொன் வர்க்கமிலா தாகிற்
றகுவரம்பில் லாமல்விப சாரமே செய்வள்
மங்கையரில் அதிகமாம் மாதுரெனச் சொல்வர்
மதவேளை மதிமயக்கும் வாட்தடங்கண் மயிலே. (379)

(இ-ள்.) மன்மதனை மயங்கச் செய்யும் வாளையொத்த பெரிய கண்களையும் மயில்போன்ற சாயலையும் உடைய பெண்ணே! சந்திரனுடன் சுக்கிரனும் நீசம்பெற்று விளங்க, நான்காமிடத்திற்கு அதிபதியும் நீசமுற்று இருக்க, அல்லது பாவக்கோள்களுடன் கூடி நிற்க, இவர்களுடைய அங்கிசாதி பதிகளும் அப்படியே இருக்க, குருவர்க்கம் இல்லாமல் இருக்க, இச்சாதகனின் தாய், தீய நடத்தையை உடையவளாக விளங்குவாள்.

## நடுக்கு நோய், கலகம் செய்யும் தாயார்

எண்ணிய நாலொன் பானுக்
கிறைவரே கூடி எட்டில்
நண்ணியே இருக்கின் மாதுர்
நடுங்கியே ரோகம் உண்டாம்
உண்மையாம் நான்குக் குள்ளே
வக்கிரன் தன்னைக் கூடில்
கண்ணகல் ஞாலம் மீதில்
கலகியாம் மாதுர் என்பார். (380)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடம், ஒன்பதாமிடம் ஆகியவற்றிற்கு அதிபதிகள் ஒன்றுகூடி, எட்டாம் இடத்தில் இருக்க, இச்சாதகனின் தாய்க்கு நடுக்கு

நோய் உண்டாகும். நான்காமிடத்தில் இவர்கள் இருவரும் செவ்வாயுடன் கூடி இருக்க, இச்சாதகனின் தாய், கலகம் செய்பவளாக இருப்பாள்.

**கற்புடைய தாய்**

*மீறிய நாலுக் குள்ளோன்*
*வியாழத்தி னுடனே கூடி*
*கூறியே சுபநற் கேந்திர*
*கோணத்தில் இருக்கப் பாவர்*
*மாறிய பாரா ராகின்*
*மாதுரு கற்பை யுள்ளாள்*
*தேறிய கணித நூலோர்*
*செப்பிய தென்று கானே. (381)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்திற்கு அதிபதி, குருவுடன் கூடி நல்ல கேந்திர திரிகோணங்களில் இருக்க, பாவக்கோள்கள் பார்க்காமல் இருக்க, இச்சாதகனின் தாய், கற்புள்ளவளாக இருப்பாள் என்று சோதிடக்கலையில் வல்லவர்கள் கூறியுள்ளார்கள்.

**வாகனம் உடையவன்**

*ஒன்பது பத்து நாலுக்*
*கோரைந்துக் கிறைவர் கூடி*
*வன்புறு பாவ வர்க்கம்*
*அற்றிடின் வாக னந்தான்*
*அன்புறு ஒன்பான் நாலில்*
*அடைந்திட அதனுக் குள்ளோன்*
*கொன்புறு கேந்திரம் ஏறிக்*
*கூறும்வா கனம்என் றோதும். (382)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடம், பத்தாமிடம், நான்காமிடம், ஐந்தாமிடம் ஆகியவற்றின் அதிபர்கள் ஒன்றுகூடி, பாவ வர்க்கம் பெறாது இருப்பின், இச்சாதகன், வாகனம் உடையவனாக இருப்பான். சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி நான்காமிடத்தில் நிற்க, நான்காமிடத்திற்கு அதிபதி கேந்திரத்தில் இருக்க, இச்சாதகன், வாகனம் உடையவனாக இருப்பான்.

## இதுவுமது

*மாதுரு தானத் தோனும்*
*மன்னிய புகரும் கூடி*
*ஏதுவாம் கதிரோன் பத்தில்*
*இருந்திடப் பாவ வர்க்க*
*மீதுறா தேயி ருக்கில்*
*விளம்புவர் வாக னந்தரன்*
*கோதுறாத் தேனே! மானே!*
*கூறினோர் கணிதர் தாமே.* *(383)*

*(இ-ள்.)* குற்றமில்லாத் தேனைப் போன்று இனிமையையுடைய மான் போன்ற பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்திற்கு அதிபதியும் சுக்கிரனும் ஒன்றுகூடி நிற்க, சூரியன் இலக்கனத்திற்குப் பத்தாம் இடத்தில் இருக்க, பாவவர்க்கம் அடையாமல் இருக்கில், இச்சாதகன் வாகனத்தை உடையவனாக விளங்குவான் என்று சோதிடநூல் வல்லுநர்கள் கூறியுள்ளார்கள்.

## இதுவுமது

*பொன்னவன் புந்தி நான்கிற்*
*பொருந்திடில் நாலுக் குள்ளோன்*
*மன்னுகேந் திரமுற் றாலும்*
*மந்திரி உதயம் நிற்க*
*துன்னிய நான்கிற் திங்கட்*
*கலங்கியே இருப்ப தாகிற்*
*பன்னிய வாக னந்தான்*
*பாலிக்கும் என்று சொல்லே.* *(384)*

*(இ-ள்.)* குரு, புதன் இருவரும் சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் நிற்க, நான்காம் இடத்திற்கு அதிபதி கேந்திர கோணங்களில் இருந்தாலும், குரு, இலக்கனத்தில் நிற்க, நான்காமிடத்தில் சந்திரன் இருந்தால், இச்சாதகன் வாகனத்தை உடையவனாக விளங்குவான்.

## இதுவுமது

நாமமாம் வியத்திற் பொன்னும்
நான்கிற்சுக் கிரனும் நிற்க
சாமியே பார்க்கு மேனும்
தருபத்திற் புகரோன் மேவ
மாமதி தனக்குப் பத்தில்
மந்திரி இருக்க மேனும்
தேமரு வாக னந்தான்
சிறப்புடன் உண்டாம் என்னே. *(385)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு பன்னிரண்டாம் இடத்தில் குருவும், நான்காமிடத்தில் சுக்கிரன் இருக்க, இலக்கனாதிபதி பார்த்தாலும், பத்தாமிடத்தில் சுக்கிரன் இருக்க, சந்திரனுக்குப் பத்தாமிடத்தில் குரு இருந்தாலும், இச்சாதகன் வாகனம் உடையவன்.

## இதுவுமது

சந்திரன் தனக்கோ ரெட்டிற்
சல்லியன் இருக்க வேதான்
வந்தலக் கனத்திற் பொன்னோன்
மலிவுடன் இருக்கு மேனும்
கொந்தவி இரவி திங்கள்
குருவுமே கூடி னாலும்
சிந்தைகூர் வாக னந்தான்
சித்திக்கும் என்று கூறே. *(386)*

(இ-ள்.) சந்திரனுக்கு எட்டாமிடத்தில் சுக்கிரன் இருக்க, சென்ம இலக்கனத்தில் குரு இருந்தாலும், சூரியன், சந்திரன், குரு ஆகிய மூன்று கோள்களும் கூடி நின்றாலும், இச்சாதகன் வாகனம் உடையவனாக இருப்பான்.

## இதுவுமது

ஒருநாலுக் கிறைவன் நாலில்
உடன்சாமி பார்க்கு மேனும்
மருவுபாக் கியனும் பொன்னும்
மன்னுசுக் கிரனும் கூடித்

தருநாலில் இருக்க நாலோன்
தயவுடன் பார்க்கு மேனும்
திருவுள வாக னந்தான்
சித்திக்கும் என்று சொல்லே. (387)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்திற்கு அதிபதி நான்காமிடத்தில் இருக்க, அவரை இலக்கனாதிபதி பார்த்தாலும் ஒன்பதாம் இடத்திற்கு அதிபதியும் குருவும் சுக்கிரனும் ஒன்றுகூடி நான்காமிடத்தில் இருக்க, இவர்களை நான்காமிடத்திற்கு அதிபதி பார்த்தாலும், இச்சாதகனுக்கு வாகனயோகம் உண்டாகும்.

## இதுவுமது

அச்சமில் நாலொன் பானுக்
கதிபரொன் பதிலுற் றாலும்
உச்சகேந் திரத்திற் சாமி
உகந்திட அதனுக் குள்ளோன்
மெச்சுநா லுடையோ னுக்கு
மித்திர னாகிற் கேந்திரம்
நிச்சய மெனநின் றாலும்
நிகரும்வா கனமுண் டாமே. (388)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடம், ஒன்பதாமிடம் ஆகியவற்றிற்கு அதிபதிகளில் ஒருவர் ஒன்பதாம் இடத்தில் இருந்தாலும், இலக்கனாதிபதி உச்சம் பெற்றிருக்க அல்லது கேந்திரங்களில் இருக்க, இலக்கனாதிபதி நிற்கும் இராசியாதிபதி, நான்காம் இடத்திற்கு அதிபதியோடு நட்புடையவனாகி கேந்திரத்தில் நின்றாலும், இச்சாதகன் வாகனம் உடையவன்.

## இதுவுமது

அரைதரும் பாக்கி யத்தில்
அந்தணன் இருக்க வெய்யோன்
பிறையுடன் கூடி யேதான்
பெட்புறப் பார்க்கு மேனும்

குறைவிலா நாலோன் கேந்திர
கோணத்தில் இருக்கச் சுங்கன்
நிறைகதி ரோனும் பார்க்கில்
நிகரில்வா கனமுண் டாமே. (389)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடத்தில் குரு இருக்க, சூரியன், சந்திரனுடன் கூடி இதைப் பார்த்தாலும், நான்காமிடத்திற்கு அதிபதி, கேந்திர திரிகோணங்களில் இருக்க, சுக்கிரனும் சூரியனும் பார்க்க, இச்சாதகன், வாகனம் உடையவனாக விளங்குவான்.

### இதுவுமது

தனத்தில்வா கனத்தில் திங்கள்
தானிற்க அதற்குள் ளோரும்
கனத்தவெள் ளியும்ப லக்கக்
கருதிய குருபார்த் தாலும்
வினைபடா மதிக்கும் சேய்க்கும்
மித்திர னாகி நாலோன்
செனித்தகேந் திரகோ ணத்தைச்
சேரினும் வாக னந்தான். (390)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்தில் சந்திரன் இருக்க, நான்காம் இடத்திற்கு அதிபதியும் சுக்கிரனும் வலிமைபெற, இவர்களைக் குரு பார்த்தாலும், சந்திரனுக்கும் செவ்வாய்க்கும் நண்பனாகி, நான்காம் இடத்திற்கு அதிபதி கேந்திர திரிகோணத்தைச் சேர்ந்தாலும், இச்சாதகன் வாகனம் உடையவனாக விளங்குவான்.

### இதுவுமது

வாகனத் தானத் தோனும்
மதியும்சா மியுமே கூடி
ஆகும்வா கனத்துற் றாலும்
அருக்கன்சேய் வெள்ளி யோடே
தாகமாம் பாக்கி யத்தோன்
தான்கூடி இருக்கு மேனும்
பாகுசேர் மொழியி யனாளே!
பலித்திடும் வாக னந்தான். (391)

(இ-ள்.) சர்க்கரைப் பாகுபோன்ற இனியமொழியை யுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்திற்கு அதிபதியும் சந்திரனும் இலக்கனாதிபதியும் ஒன்று கூடி, நான்காம் இடத்தில் இருந்தாலும், சூரியன் சுக்கிரன், ஒன்பதாம் இடத்திற்கு அதிபதியும் ஒன்றுகூடி இருந்தாலும் இச்சாதகன், வாகனம் உடையவனாக இருப்பான்.

## இதுவுமது

*ஆய்ந்திடு சுக்கி ரன்தான்*
*அறியநட் பாட்சி உச்சக்*
*கேந்திர கோணம் தன்னிற்*
*கிளர்ந்துற சுபர்பார்த் தாலும்*
*தோய்ந்தநா லுடையோன் சாமி*
*சுக்கிரன் தானும் கூடி*
*வாய்ந்தலக் கனத்தில் நின்றால்*
*வாகனம் உண்டாம் என்னே.* *(392)*

(இ-ள்.) சுக்கிரன் நட்பு அல்லது ஆட்சி அல்லது உச்சம் பெற்று கேந்திர திரிகோணங்களில் இருக்க, இவர்களைச் சுபக்கோள்கள் பார்த்தாலும், நான்காம் இடத்திற்கு அதிபதி, இலக்கனாதிபதி சுக்கிரன் ஆகியோருடன் இலக்கனத்தில் நின்றால், இச்சாதகன், வாகனம் உடையவன்.

## இதுவுமது

*குருமதி வெள்ளி சாமி*
*கூடிகேந் திரகோ ணத்திற்*
*திறுதிபெற நிற்கு மேனும்*
*சொலுமொன்று நாலுக் குள்ளோர்*
*சதிரிரு கிரகம் மாறச்*
*சல்லியன் பலத்தி ருக்க*
*ததிபெறு சுபர்பார்த் தாலும்*
*வாகனம் உண்டாம் என்னே.* *(393)*

(இ-ள்.) குரு, சூரியன், சுக்கிரன், இலக்கனாதிபதி ஆகியோர் ஒன்றுகூடி, கேந்திர திரிகோணங்களில் நின்றாலும்,

நான்காமிடத்திற்கு அதிபதியும் இலக்கனாதிபதியும் வீடு மாறி நிற்க (பரிவர்த்தனை), சுக்கிரன் பலம் பெற்று விளங்க, சுபக் கோள்கள் பார்த்தாலும், இச்சாதகன், வாகனம் உடையவன்.

### நரவாகனம் உடையவன்

சுக்கிரன் புந்தி வெள்ளி
மதிகுரு வெய்யோன் தானும்
தொக்கேந் திரகோ ணத்திற்
றுலங்கிடப் பாவ ரானோர்
தக்கிடப் பாரா ராகிற்
கசதுர கம்ப தாதி
மிக்குட னாகச் சூழும்
மிகுநர வாக னத்தான். *(394)*

(இ-ள்.) சுக்கிரன், புதன், வெள்ளி, மதி, குரு, சூரியன் ஆகியோர் கேந்திர திரிகோணங்களில் நிற்க, பாவக்கோள்கள் இவர்களைப் பார்க்காமல் இருந்தால் இச்சாதகன் யானை, குதிரை, காலாள் சூழ இருக்கும் நரவாகனத்தை உடைய மன்னனாக விளங்குவான்.

### இதுவுமது

நவமதாய் மதியும் பொன்னும்
நான்கினுக் கிறையைக் கூடி
தவறிலாக் கேந்திரம் ஏறச்
சாற்றும்லக் கனத்தில் வெள்ளத்
தவமென இருக்கின் யானைத்
துரகமும் சேனை சூழப்
பவனியே வரவே வாழ்வன்
பகர்நர வாக னந்தான். *(395)*

(இ-ள்.) சந்திரனும் குருவும் நான்காம் இடத்திற்கு அதிபதியும் ஒன்றுகூடி கேந்திரங்களில் இருக்க, இலக்கனத்தில் சுக்கிரன் இருக்க, இச்சாதகன், யானை, குதிரை, காலாள் படைசூழ, நரவாகனத்தை உடையவனாக வாழ்வான்.

## இதுவுமது

ஊணிய ஒன்று நான்குக்
குடையவர் கேந்திர கோணம்
பேணியே இருக்கக் கோலே
பிறந்திடும் உதய மாகத்
தானுவாந் துலாதொட் டைந்து
தனிப்புகர் இரவி நிற்கில்
தோணுநால் வகையில் தானை
சூழ்நர வாக னம்தான். *(396)*

*(இ-ள்.)* இலக்கனாதிபதி, நான்காம் இடத்திற்கு அதிபதி இருவரும் கேந்திர திரிகோணங்களில் இருக்க, துலாம் சென்ம இலக்கனமாக, துலாவிலிருந்து ஐந்தாமிடத்தில் சுக்கிரனும் சூரியனும் நிற்க, இச்சாதகன், யானை, குதிரை, காலாள் படைசூழ நரவாகனத்தை உடையவனாக வாழ்வான்.

## இதுவுமது

வெய்யதோர் தனுவிற் பொன்னும்
மீனத்திற் புகரும் ஐந்திற்
துய்யசெங் கதிரும் பத்திற்
சொல்லிய புதனும் நிற்கில்
கையணி வகுத்த சேனை
களிறுவெம் பரியும் சூழ
வையக மதிக்க வேதான்
வரும்நர வாக னம்தான். *(397)*

*(இ-ள்.)* தனுர் இலக்கனமாக, அதில் குருவும் மீனத்தில் சுக்கிரனும் ஐந்தாமிடத்தில் சூரியனும் பத்தாமிடத்தில் புதனும் நிற்க இச்சாதகன், காலாள், யானை, குதிரைபடை சூழ இவ்வுலகோர் போற்ற நரவாகனத்தை உடையனவனாக விளங்குவான்.

## வாகனத்தை உடையவன்

எற்புறு நான்கு பத்துக்
கிறைவருங் குருவும் கூடிப்
பொற்புற ஐந்து பத்திற்
பொருந்தியுற் றிடத்த னத்தோன்
கற்பொடு பார்க்கு மேனும்
கவிஞரும் நான்கில் நிற்க
பற்பல வியத்தோன் கூடிப்
பார்க்கினும் வாக னந்தான். *(398)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடம் பத்தாமிடம் ஆகியவற்றிற்கு அதிபதிகளும் குருவும் ஒன்றுகூடி ஐந்தாமிடம் அல்லது பத்தாமிடத்தில் நிற்க, இரண்டாமிடத்திற்கு அதிபதி இவர்களைப் பார்த்தாலும், சுக்கிரன் நான்காமிடத்தில் நிற்க, பன்னிரண்டாம் வீட்டிற்கு அதிபதி அவனோடு கூடி பார்த்தாலும், இச்சாதகன், வாகனத்தை உடையவனாக இருப்பான்.

## நரவாகனம் உடையவன்

சல்லியன்வெண் மதிகுருவும் வாகநே சனுமுதயம்
தன்னின் மேவ
அல்லதுகேந் திரகோணம் தனிலிருந்து பாவவர்க்கம்
அன்றி யேதான்
ஒல்லையினிற் தேவதாங் கிசமேறப் புதனிரவி
உச்ச மாகி
எல்லையிலாச் சதுரங்க சேனைகள்சூழ் நரவாகன
நேச னாமே. *(399)*

*(இ-ள்.)* சுக்கிரன், வளர்பிறைச் சந்திரன், குரு, நான்காம் இடத்திற்கு அதிபதி ஆகிய நால்வரும் இலக்கனத்தில் இருக்க, அல்லது கேந்திர திரிகோணங்களில் ஏறி இருக்க, பாவ வர்க்கம் இல்லாமல் தேவதாங்கிசம் ஏறியிருக்க, புதன், சூரியன் ஆகியோர் உச்சமாக, இச்சாதகன் யானை, குதிரை, காலாள், தேர்படை சூழ நரவாகனம் உடையவனாகத் திகழ்வான்.

## இதுவுமது

இட்டமுள பாக்கியத்தன் உச்சகேந்திர கோணத்
திருக்க வேதான்
தொட்டதனா திபனானோன் பிதுர்த்தானந் தனிலிருக்கச்
சுங்கன் பொன்னோன்
சட்டமுட னேபார்க்கில் அதிகாரம் தனம்தான்ய
சம்பத் துண்டாய்
அட்டதிக்கெல் லாம்புகழும் நரவாக னாதிபதி
ஆவன் தானே. (400)

(இ-ள்.) ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி உச்சம் அல்லது கேந்திர திரிகோணங்களில் இருக்க, இரண்டாமிடத்திற்கு அதிபதி, ஒன்பதாம் இடத்தில் இருக்க, சுக்கிரன், குரு ஆகியோர் பார்க்க, இச்சாதகன் அதிகாரமுள்ள பதவியில் இருப்பான்; தன தானியம், செல்வம் போன்றவற்றைப் பெற்றிருப்பான்; எட்டுத்திசையும் புகழும் நரவாகனம் உடையவனாக விளங்குவான்.

## இதுவுமது

பாங்குறுநா லொன்பதுக்கும் இறைவனுமொன் றாய்க்கூடி
பாவ வர்க்க
நீங்கியே வைசேடி காங்கிசத்தி லிருக்கவெள்ளி
நிகராய்ப் பார்க்கிற்
தாங்கரிய புவிமீதில் சகலபாக் கியத்தோடு
சபல மாக
ஓங்கியதோர் நரவாக னாதிபதி யாயிருப்பன்
உகந்து தானே. (401)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்திற்கும், ஒன்பதாம் இடத்திற்கும் அதிபதிகள் ஒன்று கூடி பாவ வர்க்கம் இன்றி வைசேடிகாங்கிசத்தில் இருக்க, சுக்கிரன் பார்த்திருக்க, இச்சாதகன் இவ்வுலகில் சகல பாக்கியங்களையும் பெற்று, நரவாகனத்தையும் பெற்றவனாக இருப்பான்.

### மன்னனாக விளங்குவான்

பரவிலொன்று நாலொன்று தினுக்கிறையொன் றாய்க்கூடி
பத்திற் நிற்க
தெரியகன்மத் திறையுதயம் தனிலிருக்க இவர்களெலாம்
தீய பாவம்
புரியமத்த நீசமிலா திருந்துசுப வர்க்கமது
பொருந்தி வாகாய்
வருந்தேவாங் கிசத்துறுமேற் சிங்காச னாதிபதி
வாக நேசன். *(402)*

(இ-ள்.) இலக்கனம், நான்காமிடம், ஒன்பதாம் இடம் இவற்றிற்கு அதிபதிகள் ஒன்றாகக்கூடி, பத்தாம் இடத்தில் இருக்க, பத்தாம் இடத்திற்கு அதிபதி இலக்கனத்தில் இருக்க, இவர்களெல்லாம் தீய, பாவ, நீசம் இல்லாமல் இருந்து சுபவர்க்கம் பொருந்தி தேவாங்கிசத்தில் ஏற, இச்சாதகன், மன்னனாக, வாகனங்களுக்கு அதிபதியாக விளங்குவான்.

### நரவாகனம் உடையவன்

உந்தியநா லொன்பதினுக் கிறைவரொன் றாய்க்கூடி
உதயம் நிற்ப
மந்திரிகண் ணாற்பார்க்கப் பாவவீ டணமின்றி
மாண்பு மேற்றாற்
சந்ததமும் கனராச வெகுமான முடைத்தாகித்
தனவா னாகி
இந்திரவி மானம்போல் வருநரவா கனம்பெற்றே
இருப்பன் தானே. *(403)*

(இ-ள்.) நான்காமிடம், ஒன்பதாமிடம் இவற்றிற்கு அதிபதிகள் ஒன்றுகூடி இலக்கனத்தில் நிற்க, குரு பார்க்க, பாவக்கோள்களின் பார்வையின்றி, சிறந்து விளங்க, இச்சாதகன் எந்நாளும் அரச வெகுமானங்களை மிகுதியாகப் பெற்று செல்வனாக, இந்திர விமானத்தை ஒத்த பல்லக்கினைப் பெற்றவனாக விளங்குவான்.

### இதுவுமது

செப்பரிய ஒன்பதுநான் குக்கிறைவர் தான்கூடி
தேவ தாங்சம்
ஒப்பமுற ஒருமூன்றுக் கிறைவனுடன் செவ்வாயும்
உச்ச கேந்திரம்

மெய்ப்புறுகோ ணத்திருக்கக் குருவுஞ்சாமி யுமுதயம்
மேவி நிற்கிற்
துப்புறுசே னாதுதி யானநர வாகனமும்
சுகமும் உண்டே. (404)

(இ-ள்.) ஒன்பதாமிடம், நான்காமிடம் இவற்றிற்கு அதிபதிகள் ஒன்றுகூடி தேவாங்கிசம் ஏற, மூன்றாமிடத்திற்கு அதிபதியுடன் செவ்வாய் உச்சம்பெற்று கேந்திர திரிகோணங் களில் இருக்க, குருவும், இலக்கனாதிபதியும் இலக்கனத்தில் நிற்க, இச்சாதகன், சேனைகள் உடையவனாகவும் பல்லக்கை உடையவனாகவும் விளங்குவான்.

### வாகனமுடையோர்க்கு அதிகாரி

பாக்கியேசன் தனக்கிலா பத்தினில் சாமிநிற்கப்
பாக்கி யத்திற்
தேக்கியே சுகேசனிற்க இவர்களங்கி சாதிபர்கள்
தேவ தாங்ச
மாக்கியபூ ரணப்பலமாய்க் கேந்திரகோ ணத்திலிருக்கில்
அளவி லாத
யோக்கியவா கனமுடையோர்க் கதிகாரி யாயிருப்பின்
உகந்து தானே. (405)

(இ-ள்.) ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி நிற்கு மிடத்திற்குப் பதினோராம் இடத்தில் நிற்க, ஒன்பதாம் இடத்தில் நான்காம் இடத்திற்கதிபதி நிற்க, இவர்களின் அங்கிசாதிபர்கள் தேவதாங்கிசம் ஏற, கேந்திர திரிகோணங் களில் இருக்க, இச்சாதகன் அளவற்ற வாகனங்களை உடையவர்களுக்கு அதிகாரியாக உயர்ந்த பதவியில் இருப்பான்.

### பல வாகனங்கள் உடையவன், நரவாகனம் உடையவன்

உன்னியசு கேசன்கேந் திரமிருக்க அதற்குடையோன்
உதயம் மேவ
பொன்னவன்சுக் கிரன்பார்க்கில் அநேகவா கனமுடையன்
பொருந்தி இலாபம்

பன்னுதய நாலினுக்கும் இறைவன்சே யுடன்கூடிப்
பதினொன் றெய்த
மன்னுகுரு பார்த்திடிற்றே சாதிபதி யானநர
வாக னாமே. (406)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்திற்கு அதிபதி, கேந்திரத்தில் இருக்க, அவன் நின்ற இராசியாதிபதி இலக்கனத்தில் இருக்க, குரு, சுக்கிரன் இவனைப் பார்க்க, இச்சாதகன் பல வாகனங்களை உடையவனாக விளங்குவான். பதினோராம் இடத்திற்கு அதிபதி, இலக்கனத்தில் இருக்க, நான்காமிடத்திற்கு அதிபதி செவ்வாயுடன் கூடி, இலக்கனத்திற்கு பதினோராம் இடத்தில் இருக்க, இவர்களைக் குரு பார்க்க, தேசத்திற்கு அதிபதியாக நர வாகனங்களை உடையவனாக விளங்கினான்.

**செல்வனும் வாகனாதிபனும்**

தூயசுகே சன்கருமத் திருந்துசுகத் தானத்திற்
சுங்கன் மேவ
வாய்வுதயஞ் தனிலேசா மியுடனே குருவும்
அடைந்து நிற்கில்
தாயகமாய் நிறைந்தபொக் கிசாதிபதி வாகனத்
தானே யாவன்
நாயகமா கியபருவ மடந்தையர்க்கு நாயகமாம்
நளின மாதே! (407)

(இ-ள்.) இளம்பருவப் பெண்களுக்குள் தலைமை பெற்று விளங்கும் தாமரை மலரையொத்த பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்திற்கு அதிபதி, பத்தாம் இடத்தில் இருக்க, நான்காம் இடத்தில் சுக்கிரன் இருக்க, இலக்கனத்தில் இலக்கனாதிபதியுடன் குரு சேர்ந்திருக்க, இச்சாதகன் செல்வங்களுக்கு அதிபதியாகவும் வாகனங்களுக்கு அதிபதியாகவும் விளங்குவாள்.

**நாரவாகனத்தை உடையவன்**

ஓங்குசுபர் பலனாகி ஒன்றொன்பான் தனிலிருக்க
ஒன்றி ரண்டுக்
காங்கதிபர் சுபர்கூடக் கேந்திரகோ ணங்கலக்க
அமைச்சன் வெள்ளி

பாங்குடனே தான்பார்க்கிற் சிங்காச னாதிபனும்
பாக்ய வானாய்
நீங்கரிய நரவாக னாதிபதி யாகிவரு
நிலைமை தானே. *(408)*

(இ-ள்.) சென்ம இலக்கனம், ஒன்பதாமிடம் ஆகியவற்றில் சுபக்கோள்கள் பலம் பெற்று இருக்க, இலக்கனாதிபதி, இரண்டாமிடத்திற்கு அதிபதி ஆகியோருடன் சுபக்கோள்கள் கூடி, கேந்திர கோணங்களில் இருக்க, குரு, சுக்கிரன் ஆகியோர் பார்க்க, இச்சாதகன், அரசனாக அனைத்து வாகனங்களையும் பெற்று விளங்குவான். இவன் நரவாகனத்தையும் பெறுவான்.

**பலவாகனங்களையுடைய மன்னன்**

தனராசன் உதயநிற்க கருமேசன் நாலிரண்டில்
தான்நின் றாலும்
கனலாபத் திறைநாலிற் கலந்துநிற்க கருமேசன்
காணு மேனும்
வினவுநான் கைன்பதொன்றுக் கிறைவரொன் றுக்கொன்று
மிகுகேந்திர மேற
வனமிகுமந் திரியுதயத் திருக்கினும்வா கனமுடையன்
மன்ன னாமே. *(409)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்திற்கு அதிபதி இலக்கனத்தில் நிற்க, பத்தாம் இடத்திற்கு அதிபதி நான்கு அல்லது இரண்டாம் இடங்களில் நின்றாலும், பதினோராம் இடத்திற்கதிபதி நான்காம் இடத்தில் நின்றாலும், பத்தாம் இடத்திற்கு அதிபதி இவரைப் பார்த்தாலும் நான்காமிடம், ஒன்பதாமிடம் இவற்றுக்கு அதிபதிகள் கேந்திரங்களில் இருக்க, குரு இலக்கனத்தில் இருக்க, இச்சாதகன் பல வாகனங்களையுடைய மன்னனாக விளங்குவான்.

## பல வாகனங்களையுடையவன்

*வாகனாதிபன்கோபுராங்கிசத்தி லேயிருக்க*
*மருவி லாபம்*
*போகபாக் கியங்கருமத் திறையோர்கள் பார்த்தாலும்*
*ஒன்ப துக்கே*
*ஆகுமிறை தன்னுடனே இரண்டுகோள் கேந்திரிக்க*
*அல்லா துச்ச*
*மாகநாலுக்கதிபன் கேந்திரமுற் றாலுவாக*
*னத்த னாமே.* *(410)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்திற்கு அதிபதி கோபுராங்கிசம் ஏறி, பதினோராம் இடத்திற்கு அதிபதி, ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி, பத்தாம் இடத்திற்கு அதிபதி ஆகியோர் பார்த்தாலும், ஒன்பதாம் இடத்திற்கு அதிபதியோடு, இரண்டு கோள்கள் கேந்திரிக்க அல்லது உச்சமாக, நான்காம் இடத்திற்கு அதிபதி கேந்திர முற்றாலும் இச்சாதகன் பல வாகனங்களை உடையவனாக விளங்குவான்.

## இதுவுமது

*குடும்பத்தோனுடன்வியத்தோன் கூடியே ஆட்சியுச்ச*
*கேந்திர கோணம்*
*ஒடுங்கிநிற்கப் பாக்கியத்தோன் பார்த்தாலும் கருமேச*
*னொடுலா பத்தோன்*
*அடும்பரிவி னாற்கூடி நாலினிற்க இவர்களுச்சம்*
*ஆகி நின்றாற்*
*கடும்பகைவர் தொழுதிறைஞ்சும் வெகுவாக னாதியாங்*
*காட்சி யானே.* *(411)*

(இ-ள்.) இரண்டாமிடத்திற்கு அதிபதியுடன் பன்னிரண்டாம் இடத்திற்கு அதிபதி ஒன்றுகூடி ஆட்சி அல்லது உச்சம்பெற்றுக் கேந்திர திரிகோணங்களில் நிற்க, ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி இவர்களைப் பார்த்தாலும், பத்தாமிடத்திற்கு அதிபதியோடு பதினோராம் இடத்திற்கு அதிபதி ஒன்றுகூடி, நான்காமிடத்தில் இவர்கள் உச்சம் பெற்று இருக்க, இச்சாதகன் பகைவர்கள் வணங்கி போற்றக்கூடிய மிகுந்த வாகனங்களை உடையவனாக விளங்குவான்.

## இதுவுமது

பரவிரண்டு கிரமுச்ச மாகரெண்டு கிரகந்தான்
பாக்கி யத்தில்
விரவிநின்ற ஒன்பதொன்றுக் கிறைவன்தான் பார்த்தாலும்
மிகுந்த லாபம்
மரியகரு மந்தனக்கும் இறைவன்தான் சிங்காச
நாங்கசம் ஏற
திரமான சாமிதான் பார்த்தாலும் வாகனா
திபனாம் என்னே. *(412)*

(இ-ள்.) இரண்டு கோள்கள் உச்சமாக ஒன்பதாம் இடத்தில் நின்ற இரண்டு கோள்களை இலக்கனாதிபதியும் ஒன்பதாம் இடத்திற்கு அதிபதியும் பார்த்தாலும், பதினோராம் இடத்தில் பத்தாமிடத்திற்கு அதிபதி சிங்காசனாங்கிசம் ஏற, அதனை இலக்கனாதிபதி பார்த்தாலும், இச்சாதகன் வாகனாதிபதியாக இருப்பான்.

## அநீதியான எண்ணம் உடையவன்

மகரமே உதிப்ப கடகத்தில் வெய்யோன்
மலிவுறச் சிங்கத்தில் மதியும்
நிகருட னிருந்த இவருடன் வெள்ளி
நின்றிடில் வயதுபதின் மூன்றில்
அகமகிழ் நரவா கனந்தனை ஏறி
ஆயுளுள் ளளவும்பெற் றிருப்பின்
திகழ்நடு வயதிற் றருமத்தை மறந்து
சிந்தைவே றாகுவன் என்பார். *(413)*

(இ-ள்.) சென்ம இலக்கனம் மகரமாகக், கடகத்தில் சூரியன் நிற்க, சிங்கத்தில சந்திரன் இருக்க, இதனுடன் சுக்கிரன் கூடி இருப்பின், இச்சாதகன், இருபத்து மூன்று வயதில் பல்லக்கினை வாங்குவான். மேலும் அதனை ஆயுள் உள்ளவரை வைத்திருப்பான். இவன் மத்திய வயதை அடையும்பொழுது, தருமத்தை மறந்து அநீதியான எண்ணங்களை உடையவனாக இருப்பான்.

## இளமை முதல் வாகனம் உடையவன்

நாலிரண்டு மூன்றிலொன்பான் பத்துபன்னொன் றுடையோன்
நண்ண எட்டில்
ஏறுசுக்கி ரனுறினும் சுகேசனுச்சம் ஆட்சிநிற்க
இவன்தன் வீட்டைக்
கோலியவுச் சாதிபதி கேந்திரிக்க நாலுடையோ
கோளுக் குச்சஞ்
சாலவுறு வியஞ்சுத்த மென்னின்வா கனமிளமை
தனிலுண் டாமே. (414)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடம், இரண்டாமிடம், மூன்றாமிடம் இவற்றில் முறையே ஒன்பதாமிடத்திற்கு அதிபதி, பத்தாம் இடத்திற்கு அதிபதி, பதினோராம் இடத்திற்கு அதிபதிகள் இருக்க, எட்டாமிடத்தில் சுக்கிரன் இருந்தாலும் நான்காமிடத்திற் கதிபதி உச்சம் அல்லது ஆட்சி பெற்று இருக்கினும் இவனுடைய வீட்டில் உச்சாதிபதி நிற்க, நான்காமிடத்திற்கு அதிபதி உச்சம்பெற்று, பன்னிரண்டாமிடம் சுத்தமாக இருந்தால், இச்சாதகன், இளமையான வயது முதல் வாகனத்தை உடையவனாக இருப்பான்.

## வாகனங்களை உடையவன்

கவியுச்சம் பெறநாலிற் கருமத்தோ னுறச்சாமி
கதிக்கி லூர்திப்
புவிதனிலுண் டாகும்பாக் கியன்கேந்திர கோணவுச்சம்
பொருந்த பத்தில்
குவிதருநா லாதிநிற்க கருமவா கனத்திறைவர்
கூடிச் சாமி
பவியமொடு பார்த்திடில்வா கனமேள தாளமுமுண்
டாகும் தானே. (415)

(இ-ள்.) சுக்கிரன் உச்சம் பெற்று விளங்க, நான்காமிடத்தில் பத்தாமிடத்திற்கு அதிபதி நிற்க, இலக்கனாதிபதி பலம்பெற, இச்சாதகன் வாகனங்களை உடையவனாவான். ஒன்பதாமிடத்திற்கு அதிபதி, கேந்திர திரிகோணங்களில் இருக்க, உச்சம் அடைய அல்லது

பத்தாமிடத்தில் நான்காமிடத்திற்கு அதிபதி இருக்க, பத்தாமிடம், நான்காமிடம் இவற்றிற்கு அதிபதிகள் கூடி நிற்க, இலக்கனாதிபதி இவர்களைப் பார்க்க, இச்சாதகன் வாகனம் மேள, தாளம் உள்ளவனாக விளங்குவான்.

### வாகனமும் இசைக்கருவிகளும் உடையவன்

*கருமத்தை னுடன்சனியும் கூடியே கேந்திரத்தைக்*
*கலந்து நிற்க*
*குருபுகழும் பலத்திருக்க உதயநா யகன்நாலில்*
*உகந்து மேவிற்*
*பெருக்கமுள்ள பேரிகைவாத் தியத்திடனே வாகனமும்*
*பெறுவன் கண்டாய்*
*முருக்கிதழ்செங் கனிவாய்ச்செந் தேனெழுகுஞ் செழும்கமல*
*முகத்தி னாளே.* *(416)*

(இ-ள்.) முருக்க மலரையொத்த சிவந்த, கொவ்வைக் கனி போன்ற வாயில் சிவந்த தேன்போன்ற உமிழ்நீர் நிறைந்த, வளப்பமான தாமரையை ஒத்த அழகான முகத்தை உடைய பெண்ணே! பத்தாமிடத்திற்கு அதிபதியுடன் சனி கூடி, சுப கேந்திரங்களில் நிற்க, குருவும் சுக்கிரனும் வலிமை பெற்றிருக்க, இலக்கனாதிபதி நான்காமிடத்தில் இருக்க, இச்சாதகன், பேரிகை முதலான தோலிசைக் கருவிகளுடன் வாகனங்களையும் உடையவனாக விளங்குவான்.

### வாகனம் உடையவன், நல்லவீடு உடையவன்

*துடருமொன் றொன்பான் பத்திற்*
*சுபர்நிற்கச் சாமி பார்க்கிற்*
*திடமிலா வாக னந்தான்*
*சிறிதுநாள் அனுப விப்பன்*
*இடமுறு நல்லோர் நாலில்*
*இருந்திட கோண கேந்திரம்*
*வடிவுறு சாமி நிற்கில்*
*வருநல்ல கிரகம் தானே.* *(417)*

(இ-ள். சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடம் பத்தாமிடம் இவற்றில் சுபக்கோள்கள் நிற்க, இவர்களை இலக்கனாதிபதி பார்க்கில், இச்சாதகன் சிறிது காலம்

வாகனத்தைப் பயன்படுத்துபவனாக இருப்பான். நற்கோள்கள் நான்காம் இடத்தில் இருக்க, திரிகோண கேந்திரங்களில் இலக்கனாதிபதி இருக்க, இச்சாதகன் நல்ல வீட்டிற்கு உரிமையாளன்.

### இதுவுமது

என்றலக் கனத்திற் குருநிற்க அதனுக்
கிறைவனும் புகரும்நா லோனும்
ஒன்றியே கூடி இருக்கினும் மதிமால்
உகந்துநா லாமிடத் திருக்க
என்றிலக் கனத்தில் நாலினுக் கிறைவன்
வீறுடன் இருக்கினும் புகரோன்
சென்றபொன் னவனும் மிக்கநா லிறையும்
சேர்ந்திடின் வருநல்ல கிரகம். (418)

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் குரு நிற்க, இலக்கனாதி பதியும் சுக்கிரனும் நான்காம் இடத்திற்கு அதிபதியும் ஒன்றுகூடி இருந்தாலும், சந்திரனும் புதனும் நான்காமிடத்தில் இருக்க, இலக்கனத்தில் நான்காம் இடத்திற்கு அதிபதி இருந்தாலும், சுக்கிரனும் குருவும் நான்காமிடத்திற்கு அதிபதியும் ஒன்றுகூடி இருந்தாலும் இச்சாதகன் நல்ல வீட்டிற்கு உரிமையாளன்.

### இதுவுமது

நலமுறு மூன்றாம் [illegible]ம்சுப மாக
நாலினிற் குருநிற்க உதயத்
தலரியே இருக்கில் அழகுள்ள கிரகம்
மறைந்திடு நாலினுக் கிறையும்
இலகிய புகரும் கூடியே இலாபத்
திருக்கினும் உதயநா லுடையார்
பலமொடு நிற்க மாறியே நிற்கில்
பலத்திடும் கிரகம்வந் தெய்தும். (419)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடம் சுபமாக, நான்காமிடத்தில் குரு நிற்க, இலக்கனத்தில் சூரியன் நிற்க, இச்சாதகன் அழகான வீட்டை உடையவன். நான்கா மிடத்திற்கு அதிபதியும் சுக்கிரனும் ஒன்றுகூடி இலாபத்தில்

இருந்தாலும் இலக்கனம், நான்காம் இடத்திற்கு அதிபதி பலம் பெற்று வீடு மாறி நிற்க (பரிவர்த்தனை) இச்சாதகன் வலிமையான வீட்டை உடையவனாக இருப்பான்.

## இதுவுமது

கூட்டிய நாலுக் கிறைவனும் புகழும்
சுபகேந் திரகோண நின்றாலும்
நாட்டினிற் பலத்த கிரகம்வந் தெய்தும்
நாலினிற் சுக்கிரன் இருக்க
கூட்டிய மதியம் மூன்றினில் இருக்கக்
குருவு தையந்தனில் உறையில்
நீட்டிய மாட மாளிகை யுடனே
நிலைபெறு கிரகம்வந் தெய்தும். *(420)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்திற்கு அதிபதியும் சுக்கிரனும் கேந்திர திரிகோணங்களில் இருந்தால் அச்சாதகன், வலிமையான வீட்டை உடையவன். நான்காம் இடத்தில் சுக்கிரன் இருக்க, சந்திரன் மூன்றாம் இடத்தில் இருக்க, குரு இலக்கனத்தில் நிற்க, இச்சாதகன், மாட மாளிகையுடன் வலிமையான வீட்டை உடையவனாக விளங்குவான்.

## அரண்மனை போன்ற வீடு உடையவன்

பங்கமிலா நாலிற் சுக்கிரன் இருக்கப்
பத்தினில் இராகுவும் உறைய
விங்கிவர் இருக்கும் அங்கிசா தியரே
உயற்சுப கேந்திர கோணம்
தங்கிவர் பெலக்கிற் கோட்டைகொத் தளமும்
சதிரிலுப் பரிகையா சாரம்
பொங்கம தாகும் மாமனைக் கட்டிற்
பொற்புறு கிரமுண் டாமே. *(421)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்தில் சுக்கிரன் இருக்க, பத்தாமிடத்தில் இராகு நிற்க, இங்கு இவர் நின்ற அங்கிசாதிபர், சுப கேந்திர திரிகோணங்களில் பலம்

பெற்று நிற்கில் இச்சாதகன், கோட்டை, கொத்தளம், உப்பரிகை, சாளரம் முதலானவை அமைந்த அரண்மனை போன்ற பெரிய வீட்டிற்குச் சொந்தக்காரனாக விளங்குவான்.

**பல வீடுகளை உடையவன்**

*அரியதோர் நாலாம் இடஞ்சல இராசி*
*ஆகியே வெண்மதி இருக்க*
*துரியதெண் ணிலவு நாலினுக் கிறையும்*
*சொலுமிவர் அங்கிசா திபரும்*
*விரிசர ராசி தன்னிலே இருக்கின்*
*வெற்பெனப் பனைத்தெழு தனத்தாய்!*
*உரிமையாய் அநேக விடத்தனிற் கிரகம்*
*உள்ளவ னாமென உரையே.* *(422)*

(இ-ள்.) குன்றென விளங்கும் பெரிய தனங்களை உடைய பெண்ணே! இலக்கனத்திற்கு நான்காம் இடம் சல இராசியாக இருக்க, அதில் வளர்பிறைச் சந்திரன் இருக்க, சந்திரன், நான்காமிடத்திற்கு அதிபதி இவர்களின் அங்கிசாதிபதிகள் சரராசியில் இருக்க, இச்சாதகன், பல இடங்களில் பல வீடுகளை உடையவனாக விளங்குவான்.

*கள்ளமிலா மூர்த்தியோன் உதயத்தில் இருக்கச்*
*காமத்தோன் உடன்கூடப் பார்க்கிலா சார*
*முள்ளதோர் கிரகமுண்டா ரிவர்கிரக மாறி*
*ஓங்குசுப கேந்திரகோ ணத்திருக்கு மேனும்*
*கொளுநாலுக் கிறைவன்கேந் திரகோ ணத்திற்*
*கோபுரங் கிசமேவிப் பெலக்கவே புகரோன்*
*விள்ளரிய ஆட்சியுச்சம் தனிலிருக்கின மாதே*
*வீண்பாடு றாதநல் கிரமுண்டாம் என்னே!* *(423)*

(இ-ள்.) இலக்கனாதிபதி இலக்கனத்தில் இருக்க, ஏழாம் இடத்திற்கு அதிபதி அவனோடு ஒன்றுகூடி நிற்க, அல்லது இலக்கனாதிபதியைப் பார்க்க, இச்சாதகன், ஒருவீடு உடையவனாக இருப்பான். இலக்கனாதிபதியும் ஏழா

மிடத்திற்கு அதிபதியும் வீடு மாறி, சுபகேந்திர திரிகோணங்களில் கோபுராங்கிசம் ஏறி பலம்பெற்று இருந்தாலும் சுக்கிரன் ஆட்சி, உச்சம் பெற்று இருந்தாலும் இச்சாதகனுக்கு நல்லவீடு ஒன்று சொந்தமாக இருக்கும்.

## பழைய வீடு உடையவன்

நயந்தநா லாமிடமே சுபர்மத்ய மாக
நாலினுக் கதிபதியும் வியாழன்சுக் கிரனும்
சுயம்பெறுவை சேடிகாங் கிசமேறிப் பலமாய்ச்
சுபகேந்திர கோணமுறிற் கோட்டைகொத் தளமும்
இயலாகும் அரண்மனைக்கட் டுளகிரகம் உண்டாம்
இசைமூன்றிற் குருவிருக்க நாலேனை புகரைச்
செயமான சனிபார்க்கிற் புராதனவீ டுண்டாம்
தெரியவரும் ஐம்புலனும் தெவிட்டாத கனியே! (424)

(இ-ள்.) ஐம்புலன்களுக்கும் திகட்டாத இனிய கனியாக விளங்கும் பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடம் சுபக்கோள்களுக்கு மத்தியில் இருக்க, நான்காமிடத்திற்கு அதிபதியும் குருவும், சுக்கிரனும் வைசேடிகாங்கிசம் ஏறி, பலம்பெற்று கேந்திர திரிகோணங்களில் இருக்கில், இச்சாதகன், கோட்டை, கொத்தளம் அமைந்த அரண்மனை போன்றமைப்புள்ள வீடு உடையவனாக இருப்பான். மூன்றாமிடத்தில் குரு இருக்க, நான்காமிடத்திற்கு அதிபதியையும் சுக்கிரனையும் சனி பார்க்க இச்சாதகன் பழமையான வீட்டை உடையவன்.

## கூறைவீடு அக்கினி தோடவீடு உடையவர்கள்

கிரகநா யகனைச்சுன்னைக்
சீலமுறு பாவர் கூடி
உரமின்றிப் பிரிந்த கூறை
உள்ளதோர் கிரகம் எய்தும்
திரமுறு சனிசேய் நாலிற்
சென்றிடிற் சுபர்பா ராரேல்
மரபினக் கினித்தோ டந்தான்
வந்திடும் கிரகம் என்பார். (425)

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்திற்கு அதிபதியாகிய சனியோடு பாவக்கோள்கள் கூடி நிற்க, இச்சாதகன் பிரிந்து போன கூறை வீட்டை உடையவனாக இருப்பான். நான்காம் வீட்டில் சனி, செவ்வாய் ஆகிய கிரகங்கள் கூடி இருக்க, இவர்களைச் சுபக்கோள்கள் பார்க்கவில்லை என்றால், இச்சாதகன், அக்கினியால் எரிந்து போன வீட்டை உடையவனாக இருப்பான்.

## தனிவீடு, துக்கவீடு, நல்லவீடு உடையவர்கள்

*அலங்கல்சேர் புகரும் நாலுக்*
*கதிபனாம் துர்த்தா னத்தில்*
*இலங்கிடில் தனித்த வீடாம்*
*இவர்களைப் பாவர் பார்க்கில்*
*புலம்புமவ் வீடோ துக்கில்*
*புகுங்குடி இவரை நல்லோர்*
*தலம்பெறச் சேரிற் காலந்*
*திரசுபக் கிரகம் தானே.* *(426)*

*(இ-ள்.)* சுக்கிரனும் நான்காமிடத்திற்கு அதிபதியும், ஆறு, எட்டு, பன்னிரண்டாம் இடங்களில் இருப்பின், அச்சாதகன், தனியான வீட்டை உடையவனாக இருப்பான். இவர்களைப் பாவக்கோள்கள் பார்க்க, அந்தவீடு துக்கம் நடைபெறும் வீடாக இருக்கும். இவர்களைச் சுபக்கோள்கள் பார்க்க, அல்லது இவர்களோடு சேர, இச்சாதகன், நிலையான நல்ல வீட்டினை உடையவனாக இருப்பான்.

## அழியும் பிறந்த வீடு, நடைபாதை வீடு உடையவர்கள்

*பாச இராகு நாலினிற்கப்*
*பாவர் பார்க்க பிறந்தமனை*
*நாச மாகும் நாலிலொன்றில்*
*நவிலும் அட்ட மாதிபனே*
*வாச வாகிற் றான்பிறந்த*
*மனைபாழ் குளிகன் நாலினிற்க*
*நேசக் குருபா ராதிருக்கில்*
*நலமும் வழிமேற் குடியிருப்பே.* *(427)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்தில் இராகு நிற்க, இவனைப் பாவக்கோள் பார்க்க, இச்சாதகன் பிறந்த வீடு அழிந்துபோகும். நான்காமிடத்தில், எட்டாம் இடத்திற்கு அதிபதி நிற்க, இச்சாதகன் பிறந்த வீடு அழிந்து, ஒன்றுமில்லாமல் போகும். நான்காமிடத்தில் குளிகன் நிற்க, இவனைக் குரு பார்க்காமல் இருந்தால், இச்சாதகன் நடைபாதையில் அமைந்த குடியிருப்பை உடையவன்.

**அழியும் வீட்டை உடையவன்**

நீர்க்கீழ் குடும்பம், வியத்துடையோர்
நீசம் மூடம் எய்திடினும்
பார்க்கு நாலுக் கிறைபுகரும்
பாவ வர்க்கந் தனையடைந்து
கார்க்கும் பாவ ருடன்கூடக்
காணக் கிரக நாசமதாம்
சேர்க்குங் களபச் சேறணைந்து
சேர்க்கும் குரும்பைத் தனத்தாளே! *(428)*

(இ-ள்.) சந்தனச் சேறு பூசப்பட்ட குரும்பை போன்ற தனங்களை உடைய பெண்ணே! இரண்டாமிடத்திற்கதிபதி பன்னிரண்டாம் இடத்திற்கதிபதி இருவரும் நீசம், அஸ்தமனம் பெற்று இருந்தாலும், நான்காமிடத்திற்கு அதிபதியாக சுக்கிரன் இருந்து பாவ வர்க்கத்தை அடைந்து இருந்தாலும், அல்லது பாவக்கோள்களுடன் சேர்ந்து இருந்தாலும், இச்சாதகன் காண, அவனுடைய வீடு நாசமடையும்.

**பகைவரால் வீடழிதலை உடையவன்**

புகழும் நாலுக் கதிபதியைப்
புகரைப் பத்துக் குடையோனும்
திகழும் கதிரோன் உடன்கூடித்
தீக்கோள் தானும் சேர்ந்துநிற்கில்
விகழும் பரசத் துருராசாக்
கினியாற் கிரகம் நாசமதாம்
நிகழ்மும் மதத்தின் மதகரியை
நிகராம் களபத் தனத்தாளே! *(429)*

(இ-ள்.) மும்மதங்களைக் கொண்ட மதயானையை நிகர்த்த திமிர்ந்த சந்தனம் பூசப்பட்ட தனங்களைக் கொண்ட பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்திற்கு அதிபதியுடன் அல்லது சுக்கிரனுடன் பத்தாம் இடத்திற்கு அதிபதியும் சூரியனும் ஒன்றுகூடி இருக்க, அல்லது தீயக் கோள்களுடன் சேர்ந்து இருப்பின், இச்சாதகனின் வீடு பரம வைரியால் அழிந்துபோகும்.

### உறுதியான வீடு உடையவன்

அலைவிலா நாலுக் கிறைவனும் புகரும்
அயிராவ தாங்கிச மேறி
துலைவிலா உதய இலக்கனத் திருக்கச்
சுவாமியும் குருவுமே உச்சம்
அலைவுறா திருக்கிற் கல்லின்வே லையினால்
மாடமா ளிகைமுத லான
நிலைபெறு கிரகம் உண்டெனக் கணித
நூல்புல வோர்நிகழ்த் தியதே. (430)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்திற்கு அதிபதியும் சுக்கிரனும் ஐராவதாங்கிசம் ஏறி உதய இலக்கனத்தில் இருக்க, இலக்கனாதிபதியும் குருவும் உச்சம் பெற்றிருக்க இச்சாதகன், நிலைபெற்றிருக்கும் கல்லால் கட்டப்பட்ட மாடமாளிகை போன்ற வீட்டினை உடையவனாக விளங்குவான் என்று சோதிட நூல்களைக் கற்றுணர்ந்த அறிஞர்கள் கூறியுள்ளார்கள்.

### மக்கள் நண்பன்

அற்புத நாலாம் இடம்சுப மாக
அதற்கிறை மிகுசுப கேந்திரம்
பொற்புநின் றிடினும் நாலினுக் கிறைவன்
புகல்சுபர் மத்திய மாகி
எற்புகழ் கேந்திரம் எய்தினும் சாமி
இடம்சுப மாவதற் குள்ளோன்
கற்புள சுபர்கள் வர்க்கமே யாகிற
கனசன மித்திர னாவன். (431)

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடம் சுபமாக. அந்த இடத்திற்கு அதிபதி சுபக் கேந்திரங்களில் நின்றிருந்தாலும், நான்காம் இடத்திற்கு அதிபதி, சுபக் கோள்களுக்கு இடையே நின்று கேந்திரங்களிலொன்றில் இருந்தாலும், இலக்கனம் சுபமாக, இலக்கனாதிபதி சுபக்கோள்களின் வர்க்கமாக இருந்தால், இச்சாதகன் மிகுந்த மக்களுக்கு நண்பனாக இருப்பான்.

## பிறருக்கு உதவுபவன்

*ஏழெட்டிற் பத்திற் வியத்திற் கோளெல்லாம்*
*இருந்திடிற் பரோப காரி*
*நீளுறப் புகருக் கேழினிற் சுபரே*
*நிற்கினும் சனிபதி னொன்றில்*
*தாழ்வுறா துறினும் குருரவி நாலிற்*
*சார்ந்துடிற் தானுப காரி*
*மீளுற நாலாம் இடத்தினிற் கோள்கள்*
*மேவினும் பரவுப காரி.* *(432)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடம், எட்டாமிடம், பத்தாமிடம், பன்னிரண்டாமிடம் ஆகிய வற்றில் கோள்கள் அனைத்தும் நின்றிடில், இச்சாதகன், பரோபகாரியாக இருப்பான். சுக்கிரனுக்கு ஏழாம் இடத்தில் சுபக்கோள்கள் நின்றாலும், சனி பதினோராம் இடத்தில் பலம்பெற்று நின்றிடினும், குரு, சூரியன் ஆகிய இரண்டு கோள்களும் நான்காம் இடத்தைச் சார்ந்திருந்தாலும் இச்சாதகன், பரோபகாரியாக இருப்பான். நான்காம் இடத்தில் நற்கோள்கள் இருப்பினும் இச்சாதகன் பரோபகாரியாக இருப்பான்.

## எந்நாளும் சுகம் பெறுவான்

*கனியுறு நாலாம் இடம்சுப மாகிக்*
*காட்சியாம் சுபரிருந் தாலும்*
*இனிமதி குருவும் சுபருமே கூடி*
*இருக்கிலும் மூன்றில்வெண் மதிதான்*

தனதுறா திருக்க மூன்றினுக் கிறைவன்
தழுவிய கேந்திரகோ ணத்தில்
குனிவுற இருக்கும் எனினும்எந் நாளும்
குறைவிலாச் சவுக்கியம் தானே. *(433)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடம் சுபமாகி, அவ்விடத்தில் சுபக்கோள்கள் இருந்தாலும், குருவும் சுபக்கோள்களும் கூடி இருந்தாலும் மூன்றாமிடத்தில் **வளர்பிறைச் சந்திரன் இருக்க, மூன்றாம் இடத்திற்கு அதிபதி** கேந்திர கோணங்களில் இருக்க, இச்சாதகன் எந்நாளும் அனைத்துச் சுகங்களும் நிறைந்தவனாக விளங்குவான்.

**அரசன்**

ஒருநாலிற் சுபரிருக்க அதற்கிறையும் புகரும்
ஒன்றாகக் கூடிகேந்திர கோணத்தி ருக்கில்
அருமையுள தாகியர சாளும்அர சுடையான்
அரியகட்டில் மெத்தைசப்ர மஞ்சமுத லாக
வருஞ்சயன சவுக்கியபரி மளசுகந்தப் பிரியன்
மன்னுநா டகவாத்திய சங்கீதப் பிரியன்
குருமணியைத் தரம்பிரித்து தேய்த்தொப்ப மிட்டே
கோவையிட்ட தெனக்கணித நூலவர்கூ றினதே. *(434)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் சுபக்கோள்கள் இருக்க, நான்காம் இடத்திற்கு அதிபதியும் சுக்கிரனும் கூடி கேந்திர திரிகோணங்களில் இருந்தால், இச்சாதகன், அரசாளும் அரசனாக விளங்குவான். சயன சுகங்களை அடைந்து, நறுமணப் பொருட்களில் பெரு விருப்பம் கொண்டும் விளங்குவான். இவன் நாடகம், இசைகளில் நாட்டம் உடையவனாக இருப்பான். சிறந்த குருமணியைத் தேர்ந்தெடுத்துத் தேய்த்துத் துளையிட்டு கோவையாக்கியது போன்று சோதிடநூல் வல்லவர்கள் இதனைக் கூறியுள்ளார்கள்.

## ஆள், அடிமை உடையவன்

நாலுநா லுக்கிறையும் சுபர்மத்திய மாகி
நலஞ்செய்சுபர் பார்க்கசுபக் கேந்திரகோ ணத்தில்
ஏலுறுவை சேடிகாங் கிசம்பெற்றே இருக்கில்
இலங்கியதோர் தாசிதா சாளுமிக உடையன்
மேலுபரி யானசுபுத் திரனாவிப் பிள்ளை
மிருகமத கஸ்தூரி களபமுத லான
மாலுரிய சுகந்தபரி மளவாச னாதி
வகையெல்லாம் உடைத்தாகி வாழ்வுடைய
னாமே. *(435)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடம், நான்காம் இடத்திற்கு அதிபதி சுபக்கோள்களுக்கு இடையே இருக்க, இவர்களைச் சுபக்கோள்கள் பார்க்க, சுபக் கேந்திர கோணங்களில் வைசேடி காங்கிசம் பெற்று இருக்கில், இச்சாதகன் ஆள், அடிமைகளை உடையவன். சிறந்து விளங்குபவன் புனுகுப் பூனையின் புனுகு, மானிடமிருந்து பெற்ற கஸ்தூரி ஆகியவற்றுடன் சந்தனம் முதலான இனிய வாசனைப் பொருட்களுடன் உண்டான இனிமையான வாழ்க்கையை உடையவன்.

உந்துநா லாமிடமே சுபமத்திய மாகி
உச்சக்கோ ளிருக்கநா லுக்கிறையும் புகரும்
முந்துமுச் சாங்கிசமே நட்பாட்சி உச்சம்
மொழிகொள்சுப கேந்திரகோ ணந்தன்னில் இருக்க
சந்தியுறுந் தேவலோ காங்கிசமாய்ப் பெலத்துத்
சாமிபார்த் திடகூடிற் கொடுக்குடைடால் விருது
அந்தமுறும் வஸ்திரா பரணசுகந் தாதி
அருளுடைய சாமரைநா டகசாலை யுளனே. *(436)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடம் இரண்டு சுபக்கோள்களுக்கு மத்தியில் இருக்க, அதில் உச்சக் கோள் இருக்க, நான்காம் இடத்திற்கு அதிபதியும் சுக்கிரனும் உச்சாங்கிசம் பெற்று நட்பு, ஆட்சி, உச்ச வீடுகளில் இருக்க

அல்லது சுப கேந்திர கோணங்களில் இருக்க, தேவாங்கிசம் ஏறி பலத்துடன் இருக்க, இதனை இலக்கனாதிபதி பார்க்க, அல்லது இதனுடன் கூடி இருக்க, இச்சாதகன், கொடி, குடை, டால் முதலான விருதுகளையும், நல்ல ஆடை ஆபரணங்களையும், நறுமணப் பொருட்களையும் நடன மங்கையர் நடனமாடக்கூடிய நாடக சாலையையும் உடையவனாக விளங்குவான்.

## நிர்நிலைகளால் பலன் பெறுபவன்

கிலமிலா நாலுநா லுக்கிறையும் புகரும்
கீர்த்திபாக் கியன்கருமத் ததிபதியும் தானே
சலக்கிரக மாகியே சலராசி யுறைந்து
சலராசி அங்கிசத்தைச் சார்ந்துசுப கேந்திரம்
இலங்கியகோ ணத்திருந்த தெய்வலோ காங்சத்
திருந்துபலத் துச்சாங்கம் உற்றுசுபர் கூட
நலமுறநோக் கிடில்கூவல் காலொடுத டாகம்
நண்ணுதன முளனெந்த நாளும்நல முளனே. (437)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடம், அதற்கு அதிபதி, சுக்கிரன், இலக்கனத்ததிபதி, ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி, பத்தாமிடத்திற்கு அதிபதி ஆகியோர் சலக்கிரகங்களாகச் சல இராசிகளில் நிற்க, சல இராசி அங்கிசத்தைப்பெற்று, சுபமான கேந்திரங்களில் திரிகோணங் களில் இருந்து தேவலோகாங்கிசம் பெற்று சுபக்கோள்கள் நோக்க, கிணறு, தடாகம் முதலானவற்றைக் கொண்டு தனம் தேடுவான். இச்சாதகன் எந்நாளும் சுகம் உடையவனாக விளங்குவான்.

## நான்காம் பாவத்தில் இரவி நின்ற பலன்

செங்கதிரோன் நாலினிற்கில் அதிகமனத் தாபம்
தரித்திரம்வா கனவீனம் பந்துஜன வீனம்
பொங்கழறு தலபேதம் மிகுசனவி ரோதம்
புத்திமந்தம் பிதுர்த்தோடம் கிரகதன நாசம்

மங்கலமாதுருபீடை பலபலவி சாரம்
வண்மையாம் பிரபுசேவை செய்வன்மகா வசிதன்
பங்கமாம் குரூரனெனப் பகருவர்கற் றுணர்ந்தோர்
படவரவை அரசிலையைப் பழிக்குமல்குல் திருவே. *(438)*

*(இ-ள்.)* படமெடுத்து ஆடும் பாம்பின் படத்தையும் அரசிலையும் பழிக்கக்கூடிய திருமகளை ஒத்த அழகுடைய பெண்ணே ! சூரியன், நான்காமிடத்தில் நின்றால் இச்சாதகனுக்கு அனைவரிடமும் மனவருத்தம் தோன்றும், வறுமையுடையவன் இருப்பான்; வாகனங்கள் நாசமடையும்; உறவினர்களுக்குத் துன்பம் நேரும்; இடமாற்றம், சன விரோதம் ஏற்படும்; புத்தி மந்தமாகும்; பிதுர் தோடம் உண்டாகும். வீடு, செல்வம் நாசமாகும்; தாய்க்குத் துன்பம் ஏற்படும்; பல்வேறான கவலைகள் தோன்றும்; வலிமை வாய்ந்த அதிகாரப் பதவியில் உள்ளவரிடம் பணி செய்வான்; கொடுமையானவன் என்று சொல்லவேண்டும்.

## நான்காம் பாவத்தில் மதி நின்ற பலன்

களங்கனே நாலினிற்கிற் பரதார கமனம்
கருதுமின்கள் கூட்டுறவு திரிபோகி ஒழுக்கம்
விளங்கியசொற் செலவுவா கனலாபம் மிக்க
வீடுவாச லும்வஸ்தி ராபரண லாபம்
வளம்பெறுபோ சனம்வித்தை அலங்காரம் பாதி
வயதில்வா கனமுடக்கம் இனசனவி ரோதம்
முளம்பெறுமா துருபீடை மாதுர்வழித் துக்கம்
உயர்க்கிரக பேதமுடன் சலகண்டம் பயமே. *(439)*

*(இ-ள்.)* சந்திரன், சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் இருந்தால் பிற பெண்களை விரும்புவான். பெண்களின் நட்புடன், பெண் போகம் கொண்டும் அலைவான்; நல்ல பேச்சாளன்; வாகனங்களை உடையவன், வீடு, வாசல் விலையுயர்ந்த ஆடை, ஆபரணங்கள் முதலான வற்றைக் கொண்டவன்; நல்ல உணவை விரும்பி உண்ணுவான்; வித்தை கற்றவன்; அலங்காரப் பிரியன், பாதி வயதிற்கு மேல் வாகன நாசம், உறவினர்களின் பகை,

தாய்க்குத் துன்பம், தாய் வழியில் துக்கம், வீட்டில் வேறுபாடு, சலகண்டம் போன்றவை வரும்.

## நான்காம் பாவத்தில் அங்காரகன் நின்ற பலன்

பூமனே நாலினிற்கில் மித்துருவி ரோதம்
புகல்கருவி சோராக்கினி பயமாத்ருத் வேஷம்
ஆமிதெனத் தொடுத்தகா ரியச்சேத மாகும்
அசல்வீட்டிற் குடியிருப்பு மனைவியைநிந் திப்பன்
சேமமிகுந் தனம்வீடு வாசல்வழி எய்தும்
செப்பும்வா கனவீனம் பரக்கிரக வாசம்
பாமரணா கத்தயிரி யன்பின்புச் செல்வன்
பந்துசனப் பகையுளனாம் பழகுகிளி மொழியே. (440)

(இ-ள்.) பழகுகின்ற கிளியின் மொழியையுடைய பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்தில் செவ்வாய் நிற்க, இச்சாதகன், நண்பர்களிடம் விரோதம் கொள்வான். இவனுக்கு ஆயுதங்களாலும், திருடர்களாலும், தீயினாலும் பயம் உண்டாகும்; தாயிடமும் பகை கொள்வான். இவன் செய்யும் காரியங்கள் அனைத்தும் நிறைவுறாது; அயலாரின் வீட்டில் குடியிருப்பான்; மனைவியைத் திட்டுவான்; செல்வம் இவனைவிட்டு வெளியேறும்; இவனுடைய வாகனத்திற்கு அழிவுண்டாகும்; தைரியமும் வீரமும் உடையவன்; பின்னாளில் செல்வனாவான்; உறவினர்களுக்குப் பகைவனாக விளங்குவான்.

## நான்காம் பாவத்தில் புதன் நின்ற பலன்

கணக்கனே நாலினிற்கின் முன்னமா பத்துக்
காட்டிடும்பின் பாக்கியத்தைக் கலப்பன்தீர்க் காயுள்
தணப்பில்சே னாதிபதி ஞானதூ ஷணிகன்
தனேசன்வா கனலாபன் சவுக்கியபோ சனத்தன்
இணக்கமுறு நல்வீடு நல்மாதுர் பீடை
இனியவிந்து வான்சமத்தன் சுயகாரி யனுமாம்
வணக்கமுறு குதிரைபசு நாவிமுத லுடையோன்
மருவுசங்கீ தப்பிரியன் அடிமையிற்கே டுளனே. (441)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் செவ்வாய் நிற்க, இச்சாதகனுக்கு முதலில் பல ஆபத்துகள் உண்டாகும். பின்பு பாக்கியங்கள் அனைத்தும் அவனை வந்து சேரும்; தீர்க்காயுள் உடையவன்; சேனாதிபதியாக விளங்கக் கூடியவன்; ஞானத்தை வெறுப்பவன்; செல்வன்; வாகன இலாபம் உடையவன்; நல்ல வீட்டில் வாழ்பவன்; தாய்க்குக் கெடுதல் உண்டாம்; சாத்திரங்கள் பலவற்றைக் கற்றவன்; சாமர்த்தியம் உடையவன்; சுயநலம் உடையவன்; குதிரை, பசு, பூனை முதலானவற்றை வளர்ப்பவன்; இசையில் விருப்பம் உடையவன்; தன்னுடைய பணியாளால் இவனுக்குக் கேடு நேரிடும்.

## நான்காம் பாவத்தில் குரு நின்ற பலன்

ஆண்டளப்பான் நாலினிற்கிற் பிறர்நகர்தே சத்தின்
அதிபதியாம் பந்துசனச் சேர்க்கைதீர்க் காயுள்
பூண்டபலங் கீர்த்திதனம் வஞ்சகன்சி ரேட்டன்
புகழ்வித்தை சுகதேக நல்வீடு வாசல்
நீண்டுறுதே சத்தரசன் வாகனநல் வார்த்தை
நிகரான ஆளடிமை வர்த்தனையே யாகும்
வேண்டியசற் சனமித்திரன் கனராச யோகம்
மிக்கசங் கீதப்பிர தாபனெனலாமே. *(442)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்தில் குரு இருக்க, இச்சாதகன், பிற நாட்டின் அதிபதியாக விளங்குவான்; உறவினர்கள் கூடியிருக்க வாழ்வான்; தீர்க்காயுள் உடையவன்; பலராலும் புகழப்படுபவன்; செல்வன்; வஞ்சனையை உடையவன்; நட்புடையவன்; வித்தைகளைக் கற்றுத்தேர்ந்தவன்; உடல் ஆரோக்கிய மானவன்; நல்ல வீடு, வாசல் போன்றவற்றைப் பெற்றவன்; மன்னனாக விளங்குபவன்; வாகனங்களைக் கொண்டவன்; இனிய மொழி பேசுபவன்; ஆள், அடிமை என பணியாளர்கள் மிகுந்திருக்க வாழ்பவன்; நல்ல நண்பர்களைப் பெற்றவன்; இராசயோகம் உடையவன்; இசையில் மிகுந்த வல்லமை படைத்தவன்.

## நான்காம் பாவத்தில் சுக்கிரன் நின்ற பலன்

சுக்கிரனே நாலினிற்கிற் கியானவித்தை சவுக்யன்
சுயங்கவிதை ஆளடிமை பசுவிருத்தி அழகு
மிக்கதீர்க் காயுள்வெகு தன்மமதி மித்ரன்
மேல்வீடு உப்பரிகை ஆசார முகப்புத்
தக்கதொரு மாடமா ளிகையுமுள கீர்த்திச்
சங்கீத சாமர்த்ய வித்தையாம்பிர சங்கன்
முக்கியதே சாதிப்தி சயனசுகம் உடையன்
மோகப்பிர தாபசுகன் புத்திரமித் திரனே. *(443)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்தில் சுக்கிரன் இருக்க, இச்சாதகன், கலைகளோடு கூடிய வித்தைகளைக் கற்று விளங்குவான்; சௌகரியங்களை உடையவன்; கவிதைகளை இயற்றுவான்; ஆள், அடிமை போன்றோர் இவனுக்குப் பணிசெய்வர்; அழகுள்ளவன்; தீர்க்காயுள் உடையவன்; மிகுந்த தர்ம சிந்தனை உடையவன்; நண்பன்; உப்பரிகையுடன் கூடிய முறைப்படி முகப்புடைய மாட மாளிகைகளை உடையன்; புகழ்மிக்கவன்; இசையில் வல்லவன்; சொற்பொழிவாளன்; தேசாதிபதியாக விளங்குவான்; சயன சுகம் உடையவன்; பெண்களிடம் மோகம் கொண்டவன்; சுகவாசி; புதல்வரிடம் அன்பு பாராட்டுபவன்.

## நான்காம் பாவத்தில் சனி நின்ற பலன்

பாலுமக னாலினிற்கின் மாதுருக்குத் தோஷம்
பந்துசன பகையொதுக்குக் குடிகுச்சு வீடு
ஈனமுறும் ஆசாரம் சதாதுக்கி ரோகி
இருகால்முடக் கமனக்கப டன்வெகு சேதம்
தானபயம் நகக்கேசம் வளர்ச்சிபந்து நாசம்
சனப்படுத்தும் வாதத்தாற் வாயுவினாற் பீடை
ஆனவா கனமுடக்கம் வாகனத்தாற் பயமாம்
அதட்டியநா யாற்பயமுண் டாகுமென
மொழியே. *(444)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்தில் சனி நின்றால், இச்சாதகனின் தாய்க்குத் தோஷம் உண்டாகும். உறவினரின் பகை ஏற்படும்; வசிக்கும் வீடு சிறிய வீடாக இருக்கும்; அவமானம் அடைவான். ஆசாரம் குறைவு உடையவன்; எந்நேரமும் கவலைப் படுபவன்; கால்களில் நோய் உண்டாகும்; கபடம் நிறைந்த மனதை உடையவன். இவனால் மிகுந்த பொருள் சேதம் உண்டாகும்; பிறருக்குப் பொருளைத் தராதவன்; நகம், கேசம் நன்கு வளர்ச்சி பெற்றவன்; உறவினர்களுக்கு அழிவு உண்டாகும்; வாதம், வாயு இவற்றால் உடல் துன்பம் அடைவான்; வாகனத்திற்கு அழிவு, வாகனத்தால் பயம் போன்றவை உண்டாகும்; நாயினால் துன்பம் அடைபவனாக இருப்பான்.

## நான்காம் பாவத்தில் இராகு நின்ற பலன்

விடராகு நாலிநிற்கிற பந்துசனப் பகையாம்
வீறுவா கனமிடுக்கம் மாதுருக்குத் தோஷம்
திடமான சொற்செலவு யாத்திரைசஞ் சாரம்
செல்லுநடை யாலிளைப்பு சோபமிகு தாபம்
அடமுடைய நல்வீடு வாசலுமே யுண்டாம்
அரிதான கிரகத்தின் விரோதமும்வந் தெய்தும்
படபடெனத் தன்வார்த்தை மூப்பாகத் திரிவன்
பகல்சால மின்னலெனப் பண்புறுமின் கொடியே. *(445)*

*(இ-ள்.)* பகலில் தோன்றிய மின்னலைப் போன்று பகட்டின்றி விளங்கும் மின்னலையொத்த இடையினை யுடைய பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்தில் இராகு நின்றால், இச்சாதகனுக்கு உறவினர்களிடம் பகை உண்டாகும்; வாகனங்கள் நாசமாகும்; தாய்க்கு தோஷம் உண்டாகும்; வீண் பேச்சு பேசுவான்; யாத்திரை சென்று அலைச்சல் அடைவான்; இளைப்பு நோய் வருவதோடு, கோபமும் அடைவான்; நல்ல வீட்டினை உடையவன்; அவ்வீட்டினால் பகையும் வந்து சேரும்; அகங்காரமாகப் பேசக்கூடியவன்.

## நான்காம் பாவத்தில் கேது நின்ற பலன்

வருங்கேது நாலினிற்கிற் பிறர்மனைக் கீனமதாம்
வளமான கிரகத்தில் வந்திருந்து வாழ்வன்
தருமுதலில் பீடையுண்டாம் மாதுருக்குத் தோடம்
தனதுகா ரியத்தாழ்ச்சிப் பிறர்நிந்தை யுடையன்
வெருவுசதா துக்கிமன மனையொதுக்குக் குடியின்
மேவுகுச்சு வீடுமுளன் குளிகனுமே நாலிற்
பொருந்திநிற்கில் வீடில்லான் வழிக்கரையிற் குடியாய்ப்
பொருந்துவன்மாதுருபீடைத் தரித்திரன்சஞ்
*சாரன். (446)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் கேது இருந்தால், இச்சாதகன், பிறன் மனையை நோக்குவான். நல்ல வீட்டில் இருந்து வாழ்வான்; துன்பம் அடைவான்; தாயாருக்கும் துன்பம் உண்டாகும்; இவன் கீழான காரியங் களைச் செய்வான்; பிறரின் வசை பேச்சுக்கு ஆளாவான்; எந்நேரமும் துன்பம் உடையவனாக இருப்பான்; சிறிய வீட்டையும் உடையவனாவான். குளிகன் நான்காம் வீட்டில் இருக்க, இச்சாதகன் வீடு இல்லாமல், நடைபாதையில் குடியிருப்பான்; இவனுடைய தாயாருக்குத் துன்பம் உண்டாகும்; வறுமையை உடையவன்; அங்குமிங்கும் அலைந்து வாழ்வை நடத்துபவன்.

## குளிகன் நின்ற பலன்

ஈடுறு குளிகன் பவனனே நாலிற்
இருந்திடிற் சனங்களை விட்டு
காடுறு மலைகடனிற்சஞ் சாரன்
காரியும் இராகுவும் நாலில்
நாடுறிற் றேசமீதினிற் றிரிவன்
நவிலுஞ்சத் துருவுக்கே ஆட்சி
வீடுதா னாகிற் சனங்களிற் றள்ளி
வேறுபட் டிருப்பனென் றுரையே. *(447)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்தில் குளிகன் இருந்தால், இச்சாதகன் தன் உறவினர்களை விட்டு மலை, கடல் போன்றவற்றில் பயணம் செய்பவனாக இருப்பான். சனியும், இராகுவும் நான்காம் இடத்தில் இருந்தால் இச்சாதகன் நாடுவிட்டு நாடு சென்று அலைவான்; சென்ம இலக்கனத்திற்கு நான்காம் வீடு பகைக் கோள்களுக்கு ஆட்சி வீடாக இருக்குமானால், இச்சாதகன் மக்களில் இருந்து மாறுபட்டவனாக இருப்பான்.

**மேற்படிக் கிரகங்களின் சகிதாதிய பலன்**

நலிவுறு சேயும் பாவரும் கூடி
நாலினி லுறின்மனப் பீடை
வலியுறு கலகம் தாரமே நாசம்
மாலுடன் சேயும்நா லெய்திற்
பொலிவுறு பந்த சனசோர பயமாம்
பூமனுஞ் சனியுமே நிற்கிற்
பலிதமாம் நன்றி அறிவிலாக் கேள்வி
பாலிக்கும் அன்னைக்குத் தோஷம். *(448)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் செவ்வாயும் பாவக்கோளும் கூடி இருந்தால், இச்சாதகன் மனத்துயரம் அடைவான்; கலகம் செய்வான்; இவனுடைய மனைவிக்கு அழிவு உண்டாகும். செவ்வாயும் புதனும் நான்காம் வீட்டில் இருந்தால் இச்சாதகன், உறவினர்களாலும் கள்ளராலும் துன்பத்தை அடைவான். செவ்வாயும் சனியும் நான்காமிடத்தில் இருக்க இச்சாதகன் நன்றியும் அறிவும் இல்லாதவன்; இவனுடைய தாயாருக்குத் துன்பம் நேரிடும்.

சுங்கனும் குருவும் நாலினில் இருக்கிற்
றுதிபெறு கவிஞனே யாவன்
பொங்கமாய் வீடு வாசலும் உடையன்
புவிதனில் எவர்க்கும்மித் திரனாம்
தங்குமா லிருமை தேசாதி காரம்
சகல சம்பத்தை உடையோன்
இங்கிதச் சுகந்த பரிமளப் பிரியன்
எழில்பர தாரவாஞ் சையனே. *(449)*

(இ-ள்.) சுக்கிரனும் குருவும் நான்காம் இடத்தில் இருந்தால், இச்சாதகன் பலராலும் போற்றப்படும் கவிஞனாக விளங்குவான்; வீடு வாசல் உடையவனாக விளங்குவான். அனைவரிடமும் நட்புறவுடன் பழகுவான்; ஆள், அடிமைகள் பணிக்கு இருப்பர்; அதிகாரம் செய்யும் பதவியில் இருப்பான்; அனைத்துப் பாக்கியங்களும் கிடைக்கும்; நறுமணப் பொருட்கள் மீது விருப்பம் கொண்டவன்; பிற பெண்கள் மீது நாட்டம் கொண்டவனாக இருப்பான்.

நீலனுட னேகுருவும் நாலினிற்க கபடி
நிகருமபி மானிதயி ரியவான்கி லேசன்
கோமுறு பரதார கமனசொற்ப புத்திராள்
குறிக்குநல் வீடுடையன் கிராமாதி காரன்
ஏலுசுப காரியன்சம் பத்துடையன் சதுர்த்தன்
இனியசதா உத்வேக பிரவர்த்தம் உடையோன்
ஞாலமிசைப் பெரியனிவன் ஆசாரன் என்பர்
நளினமலர் மாளிகையில் நயந்தருள்செந் திருவே. (450)

(இ-ள்.) செந்தாமரை மலராகிய பீடத்தில் வீற்றிருந்து அருளை வழங்கும் திருமகளையொத்த அழகுடைய பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்கு நான்காம் வீட்டில் சனியும் குருவும் இருக்க, இச்சாதகன் அனைவராலும் விரும்பப்படுவான்; தைரியசாலி; மனக்கவலை உடையவன்; பிற பெண்களோடு உறவு உடையவன்; குறைந்த புதல்வர்களை உடையவன்; நல்ல வீட்டிற்கு உரிமையாளன்; கிராமத்திற்கு நிர்வாகியாக விளங்கக் கூடியவன்; சுயநலம் மிக்கவன்; செல்வம் உடையவன்; திறமைசாலி; எப்பொழுதும் உற்சாகத்துடன் இருக்கக் கூடியவன் பெரியவன், ஆசாரன் என்று பிறரால் போற்றப்படுபவன்.

அட்டமத்தோன் நாலினிற்கிற் பந்துவைவிட் டகன்றே
அந்நியர்கள் தனைக்கூடி யேபிழைத்துத் திரிவன்
இட்டமுள்ள மித்துருவும் கிரகமுமே நாசம்
மீன்றமா துருதோஷம் பரதேச வாசம்
தொட்டவா கனமுடக்கம் தோன்றுசுதன் பிரிவுத்
தூய்தனநா சம்தளையும் சிறைகாவல் துக்கம்

கொட்டமிடு இராசதண்டம் அவமானம் ஒதுக்குக்
குடியிருப்பு தேகம்வற்றி மலினமுறும் கூறே. *(451)*

*(இ-ள்.)* ஜென்ம இலக்கனத்திற்கு எட்டாம் இடத்திற்கு உரியவன், நான்காம் இடத்தில் நின்றால், இச்சாதகன் உறவினர்களை விட்டு அகன்று, பிறருடன் கூடி தொழில் செய்து வாழ்வான்; நண்பர்கள் அழிவர்; வீடு பாழாகும்; தாய்க்குத் துன்பம் நேரிடும்; பிற நாடுகளில் வாழ்வான்; வாகனம் நாசமாகும்; பெற்ற மகனைப் பிரிவான்; செல்வம் அழியும்; விலங்கு பூண நேரும்; சிறைக்காவலில் துன்பம் அடைவான்; அரச தண்டனைப் பெறுவான்; அவமானம் ஏற்படும்; ஒதுக்குப்புறமான இடத்தில் வாழ்வான்; உடல் வற்றி பலம் இழந்தவனாவான்.

தூயசுப இலக்கனத்துக் கதிபரே நாலிற்
றுலங்கிநிற்கின் வெகுபாக்கியந் தனலாபம் கீர்த்தி
நேயமிகு கெம்பீரம் வஸ்திரா பரணம்
நிகரான ஆளடிமை காலிகன்று பவிதற்
தாயகமா கியசவுக்கியஞ் சயனசுகம் புத்திச்
சாதமகிழ்ச்சி ராசவெகு மானமொடு லாபம்
ஏயகுணன் தாட்சணிகன் பரிமளகந் தாதி
இலங்குசுக போசனமும் எய்துவனென் பாரே. *(452)*

*(இ-ள்.)* ஜென்ம இலக்கனாதிபதி நான்காமிடத்தில் இருக்க, இச்சாதகன் மிகுந்த பாக்கியங்களைப் பெற்றவனாக விளங்குவான். மிகுந்த செல்வத்தையும் புகழையும் கௌரவத்தையும் உடையவனாக இருப்பான். உயர்ந்த பட்டாடைகளைப் பெற்றிருப்பதோடு, கால்நடைகளால் இலாபம் உடையவனாவான்; சயன சுகத்தையும் நன்மைகளையும் கொண்டவனாகவும், எந்நேரமும் மனமகிழ்ச்சி உடையவனாகவும் புத்திசாலியாகவும் விளங்குவான். அரசர்களின் வெகுமதியைப் பெற்றவனாகவும், கருணையுடையவனாகவும், நறுமணப் பொருட்கள் மீது விருப்பம் உடையவனாகவும் இருப்பான், சுவையான உணவுகளை உண்ணுவதில் ஆர்வம் மிக்கவனாக விளங்குவான்.

நான்காம் பாவம் முற்றிற்று.



# ஐந்தாம் பாவம்

அஞ்சினுக் குடையோன் காரி
அந்தணன் புதன்வர்க் கத்தைத்
தஞ்சமில் லாமல் வர்க்கம்
தானிற்கில் துர்த்தா னத்தை
வஞ்சமாய்ச் சொல்வ தின்றி
மகிமையோர் வர்க்கம் எய்தி
விஞ்சுகேந் திரகோ ணத்தின்
மேவிடில் வெகுபுத் ராளாம். (453)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாம் இடத்திற்கு அதிபதி சனி, குரு, புதன் வர்க்கத்தைச் சேர்ந்திருந்தாலும் அல்லது அவ்வர்க்கத்தில் நின்றிருந்தாலும், தீய இடங்களைச் சென்று அடையாமல், ஆட்சி, உச்சம், நட்பு உடைய கோள்களின் வர்க்கம் ஏறி இருந்தாலும், கேந்திர, திரகோணங்களில் இருந்தாலும் இச்சாதகர்க்குப் புதல்வர்கள் அதிகம் தோன்றுவார்கள்.

அட்டியில் ஒன்றொன் பானுக்
கதிபரே கூடி ஏழில்
ஒட்டிநின் றிடத்த னத்தோன்
உதயத்தில் இருக்கு மேனும்
கிட்டிய ஒன்றோ டைந்துக்
கிறையவர் கிரகம் மாறி
ஒட்டிய சுபரே கூட
எதிர்பார்க்க வெகுபுத் ராளம். (454)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கதிபதி ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி ஒன்றுகூடி இருக்க, இவ்விரு கோள்களும் நின்ற இடத்திற்கு அதிபதி இலக்கனத்தில் இருந்தாலும், இலக்கனத்திற்கு அதிபதியும், ஐந்தாமிடத்திற்கு அதிபதியும் கிரகம் மாறி (பரிவர்த்தனை) இருந்தாலும் சுபக்கோள்களோடு ஒன்றுகூடி இருந்தாலும் இச்சாதகனுக்குப் புதல்வர்கள் அதிகம் தோன்றுவார்கள்.

### இதுவுமது

குருவுத யத்தில் நிற்கக்
கூறுமொன் றிரண்டுக் குள்ளோர்
வருகோண கேந்திர மீது
மற்றுந்தான் குருவி னோடே
அருள்பெறும் ஒன்றி ரண்டுக்
கதிபருங் கூடிக் கேந்திரம்
பெருகிய சுபவர்க் கத்தைப் ,
பெற்றிடில் வெகுபுத் ராளம். *(455)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்தில் குரு இருக்க, இலக்கனாதிபதி, இரண்டாம் இடத்திற்கு அதிபதி கேந்திர திரிகோணங்களில் இருந்தாலும் குருவுடன் இலக்கனாதிபதி, இரண்டாம் இடத்திற்கு அதிபதி ஆகியோர் ஒன்றுகூடி கேந்திரம் ஏறி சுபவர்க்கத்தைப் பெற்றாலும் இச்சாதகனுக்குப் புத்திரர்கள் அதிகமாகப் பிறப்பார்கள்.

### இதுவுமது

மதிசனி செவ்வாய் புந்தி
மருவியே கூடி னாலும்
கதிர்செவ்வாய் திங்கள் கூடிக்
கலந்துதான் இருக்கு மேனும்
புதியமீன் உதிப்ப நண்டிற்
பொங்கிய கதிர்நின் றாலும்
துதிமதி சனிபொன் காரி
சூழ்ந்திடில் வெகுபுத் ராளாம். *(456)*

*(இ-ள்.)* சந்திரன், சனி, செவ்வாய், சந்திரன் ஆகிய கோள்கள் ஒன்றாகக் கூடி இருந்தாலும், சூரியன், செவ்வாய், சந்திரன் ஆகிய கோள்கள் ஒன்றாக இருந்தாலும், சென்ம இலக்கனம் மீனமாகக் கடகத்தில் சூரியன் நின்றாலும், இதனைச் சந்திரன், சனி, குரு ஆகிய கோள்கள் சூழ நின்றாலும், இச்சாதகனுக்குப் புத்திரர்கள் அதிகமாகப் பிறப்பார்கள்.

## இதுவுமது

வக்கிரன் பொன்னோன் புந்தி
மதிவெள்ளி கூடி னாலும்
மிக்கசேய் அருக்கன் சாமன்
வீறுடன் கூடி னாலுந்
தக்கலா பத்திற் பொன்னோன்
சந்திரன் கூடி நிற்கப்
புக்கவொன் றைந்தொன் பானில்
நிற்கினும் வெகுபுத் ராளாம். *(457)*

(இ-ள்.) செவ்வாய், குரு, புதன், சந்திரன், சுக்கிரன் ஆகிய கோள்கள்கூடியிருந்தாலும், செவ்வாய், சூரியன், புதன் ஆகியகோள்கள் கூடியிருந்தாலும், பதினோராம் இடத்தில் குருவும், சந்திரனும் கூடி இருந்தாலும் அல்லது இக்கோள்கள் இலக்கனம், ஐந்தாமிடம், ஒன்பதாமிடம் ஆகிய இடங்களில் இருந்தாலும் இச்சாதகனுக்குப் புத்திரர்கள் அதிகமாகப் பிறப்பார்கள்.

## இதுவுமது

துணிவுடன் ஐந்துக் குள்ளோன்
சுபகோண கேந்த்ரம் ஏறக்
குணமொடு வெள்ளி திங்கள்
கூடியே பார்த்திட் டாலும்
அணிகொள்புத் திரத்தா னத்தில்
அமரர்மந் திரியே நிற்கப்
பணியும்லக் கனத்தோன் பார்க்கிற்
பகருவர் வெகுபுத் ராளாம். *(458)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாம் இடத்திற்கு அதிபதி, திரிகோண கேந்திரங்களில் இருக்க, இதனைச் சுக்கிரன், சந்திரன் இருவரும் ஒன்றாகக் கூடி பார்த்திட்டாலும், அல்லது இவை ஐந்தாம் தானத்தில் அமர்ந்திருக்க, குரு சேர்ந்திருக்க, இவர்களை இலக்கனாதிபதி பார்க்க, அதிகப் புதல்வர்கள் என்று கூறவேண்டும்.

## இதுவுமது

*கற்பாம்ஐந் தினுக்கதிபன் காரகனும் வைசேடி*
*காங்சம் ஏறிப்*
*பொற்பான சுபவர்க்க மடையஐந்துஞ் சுபவர்க்கம்*
*பொருந்து மேனும்*
*அற்பாயுந் தனத்திறை ஐந்திநிற்கக் குருபலமாய்*
*மகிழ்ந்து காணில்*
*ஒப்பான மதியேறி பலத்திருக்க வெகுபுத்திர*
*யோக மாமே.* *(459)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாம் இடத்திற்கு காரகனும் வைசேடி காங்கிசம் ஏறி சுபவர்க்கம் அடைய, ஐந்தாமிடம் சுபவர்க்கம் பெறினும், இரண்டாம் இடத்திற்கு அதிபதி ஐந்தாமிடத்தில் நிற்க, குரு பலம் பெற்று இக்கோளைப் பார்க்க, சந்திரன் பலம் பெற்று விளங்க, இச்சாதகன் அதிகமான புத்திரர்களை உடையவனாக விளங்குவான்.

## இதுவுமது

*உலவுதயம் ஐந்தினுக்கு இறைவரொன்றாய்க் கூடவன்றேல்*
*ஒன்றுக் கொன்று*
*குலவிப்பார்த் திடவைந்திற் கூடிநிற்க இவர்தம்மை*
*குருபார்த் தாலும்*
*கிலமிலா ஒன்றைந்தோ டொன்பதுள்ளோர் பலமாக*
*கேந்திர கோணத்*
*தலமிருக்கத் தாரேசன் பெலனாய்ப்பார்க் கிலுமெத்தத்*
*தனையர் தானே.* *(460)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனாதிபதி, ஐந்தாம் இடத்திற்கு அதிபதி ஆகிய இருவரும் கூடி நிற்க, அல்லது ஒன்றை ஒன்று பார்க்க அல்லது இவர்கள் இருவரும் கூடி நிற்க, இவர்களைக் குரு பார்த்தாலும், இலக்கனம் ஐந்தாமிடம், ஒன்பதாமிடம் இவற்றில் உள்ள கிரகங்கள் வலிமைபெற்று, கேந்திர திரிகோணங்களில் இருக்க, இரண்டாமிடத்திற்கு அதிபதி வலிமை பெற்று இருக்கில், இச்சாதகனுக்குப் புதல்வர்கள் அதிகமாக இருப்பார்கள்.

## இதுவுமது

எதிர்காமம் உதயமைந்துக் கிறைவருடன் குருவுமிவர்
அங்கி சாதிப்
பதிகளுமே சுபவர்க்கம் உறைந்தாலும் உதயம்பாக்
யத்தோர் நின்ற
துதிநவாங் கிசத்தோரைத் தனமுதயம் பாக்கியத்தோர்
தொடர்ந்து பார்க்க
சதிருடைய குருவுமைந்துக் கிறையுமே பெலக்கில்வெகு
தனையர் தானே. (461)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடம், இலக்கனம், ஐந்தாமிடம் இவர்களுக்கு அதிபதிகளுடன் குருவும், இவருடைய அங்கிசாதிபதிகளும் சுபவர்க்கம் பெற்று இருந்தாலும், இலக்கனம், ஒன்பதாம் இடம் இவற்றிற்கு அதிபதிகள் நின்ற நவாங்கிசத்தோரை இரண்டாமிடம், இலக்கனம், ஒன்பதாமிடம் இவற்றிற்கு அதிபதிகள் தொடர்ந்து பார்க்க, குருவும் ஐந்தாமிடத்திற்கு அதிபதியும் பலம்பெற்று விளங்கில் இச்சாதகனுக்குப் புதல்வர்கள் அதிகம் தோன்றுவர்.

## இதுவுமது

தக்கபாக்கியமுதயம்குரு வெதிரேபாராவ தாங்கமேற
ஏறலக்க னேசன்
பெலக்கக்குரு விருந்தவ சத்தோன்
கேந்தி ரத்துக்
கிறைவர்பொன் பலத்துக்கேந் திரகோண் புக்கிடினும்
ஐந்தே ழொன்பான்
முக்கியமாய் இருந்தக்கால் வெகுபுத்திர யோகமென
மொழிய லாமே. (462)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடம், இலக்கனம் இவற்றிலொன்றில் குரு இருக்க அல்லது பார்வதாங்கிசம் ஏற, இலக்கனாதிபதி பலம் பெற்று விளங்க, குரு இருந்த அங்கிசத்திற்கு அதிபதி, கேந்திரத்திற்கு அதிபதி, குரு இவர்கள் பலம் பெற்றுக் கேந்திர திரிகோணம் ஏறினும்

ஐந்தாமிடம், ஏழாமிடம், ஒன்பதாமிடம் ஆகிய இடங்கள் பலம் பெற்று விளங்கினாலும் இச்சாதகன், அதிகமான புதல்வரைப் பெற்றவனாக விளங்குவான்.

## இதுவுமது

எட்டுடனே மூன்றுசனி வீடாகக் குருபார்க்க
இவர்கள் கேந்திர
மட்டவிழ் கோணத்துறி னுமஞ்சுப மாகச்சுப
அடைந்து நிற்க
தொட்டதா னத்திறையும் காரகனும் சுபராகிச்
சுபரைக் கூடி
நட்டமுற்று மறையாம லிருக்கில்வெகு புத்ரனென
நவில லாமே. *(463)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு எட்டாம் வீடு, மூன்றாம் வீடு ஆகியவை சனியின் வீடாக இருக்க, இதைக் குரு பார்க்க, இவர்கள் கேந்திர திரிகோணங்களில் இருந்தாலும் ஐந்தாமிடம் சுபவர்க்கம் அடைந்து நிற்க, இரண்டாமிடத்திற்கு அதிபதியும் காரகனும் சுபக்கோள்களாகி அல்லது சுபக்கோள்களோடு கூடி, மறையாமல் இருக்கில், இச்சாதகனுக்கு புதல்வர்கள் அதிகமாகப் பிறப்பார்கள்.

## மகராசயோக புத்திரன்

ஒளிருதயம் ஐந்தொன்பான் குருவிருக்க மற்றோர்
உபசெயத்தில் இருக்கவல்லாற் சேயிரவி திங்கள்
வளர்மதியும் மித்திரமாய்க் கூடில்கர்ப்ப வேதை
வருமுன்னே ழாமாத வரையிற்கோ லேழைத்
தெளிவுடனே பூசைசெய்த பின்னரெட்டா மாதம்
செங்கண்மா லுக்கினிய சிறப்பியற்று மாதே!
எழில்பெறுதீர்க் காயுளுடன் மகராச யோகத்
தியற்கையுள்ள சந்ததிபெற் றெடுத்திருப்பர்
தானே. *(464)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் ஐந்தாமிடத்திற்கு அதிபதி, ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி, குரு ஆகியோர் இருக்க, மற்றவர்கள் உபசெய வீடுகளான மூன்று, ஆறு, பத்து, பதினொன்று ஆகியவற்றில் இருக்க அல்லது செவ்வாய், சூரியன், சந்திரன், வளர்பிறைச் சந்திரன் ஆகிய நால்வரும் தங்களுக்குள் நட்பாக இருப்பின், கருவிற்குத் துன்பம் நேருவதற்கு முன் கருவுற்ற ஏழாம் மாதம் வரையில் ஏழு கோள்களையும் பூசை செய்து, பின் எட்டாவது மாதம், திருமாலுக்கு ஏற்ற பூசை செய்தால், மகராச யோகத்தோடு, நீண்ட ஆயுளையுடைய புதல்வன், இச்சாதகனுக்குப் பிறப்பான்.

## அதிக புத்திரர்கள்

கூறியவைந் தினிற்சாமி இருக்கஐந்துக் கிறைவன்
　　கூறாட்சி கேந்திரகோ ணந்தன்னில் இருக்க
மீறியகா ரகன்பெலக்கின் வெகுபுத்ர யோகம்
　　மிக்கஐந்தில் சாமிநிற்க அதிபதிலக் கனத்திற்
றேறியிருக் கச்சுபர்தாம் பார்க்கவெகு புத்ராள்
　　சீரான சுவாமியைந்துக் கிறைவனங்கா ரகனும்
மீறியதா னாதிபதி இலக்கனத்துச் சத்தின்
　　மிக்கவே பலத்திருக்கின் வெகுபுத்திர யோகம். (465)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் இலக்கனாதிபதி இருக்க, ஐந்தாமிடத்திற்கு ஆட்சி பெற்று அல்லது கேந்திர கோணங்களில் இருக்க, காரகன் பலம் பெற்று இருக்க, இச்சாதகனுக்கு புதல்வர்கள் மிகுதியாக இருப்பார்கள். சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் இலக்கனாதிபதி, இருக்க, ஐந்தாமிடத்திற்கு அதிபதி இலக்கனத்தில் ஏறி இருக்க, சுபக்கோள்கள் பார்க்க, இச்சாதகனுக்கு அதிக புதல்வர்கள் பிறப்பார்கள். இலக்கனாதிபதி, ஐந்தாமிடத்திற்கு அதிபதி, அங்காரகன், இரண்டாமிடத்திற்கு அதிபதி இலக்கனத்தில் உச்சம் பெற்று விளங்க, இச்சாதகனுக்கு அதிக புதல்வர்கள் இருப்பார்கள்.

## இதுவுமது

அதியதிகா ரகன்சாமி இவர்களிட வங்ச
அதிகபலன் பெற்றிடினும் மத்திபத்தா னத்தோன்
நிதியனைய பாக்கியகா ரகனுமதில் இருக்க
நீடுத னாதிபதி சுபருதயத் திருக்க
எதிர்நோக்கப் பற்றிடினும் இரவிசெவ்வாய் புந்தி
இவர்கூட இருந்திடினும் மதிஇரவி சனிபொன்
சதிராகக் கூடினுமி லாபத்தின் மதிபொன்
தனித்தனிநின் றாலும்வெகு புத்ரனெனச் சாற்றும். (466)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்திற்கு அதிபதி, புத்திரக்காரகன் குரு, இலக்கனாதிபதி இவர்களுடைய அங்கிசாதிபதிகள் அதிக வலிமைபெற்று, பத்தாம் இடத்திற்கு அதிபதியும், ஒன்பதாம் இடத்திற்கு அதிபதியும் அவ்விடத்தில் இருக்க, இரண்டாமிடத்திற்கு அதிபதி சுபக்கோளாகி இலக்கனத்தில் இருக்க அல்லது பார்த்தாலும், சூரியன், சந்திரன், சனி, குரு ஆகியோர் பதினோராமிடத்தில் கூடி இருந்தாலும், சந்திரன், குரு ஆகியோர் தனித்தனியாக இருந்தாலும், இச்சாதகனுக்குப் புதல்வர்கள் அதிகமாகப் பிறப்பார்கள்.

## அதிக புதல்வர், முதுமையில் புதல்வர்

காரிபுதன் மதிசெவ்வாய் கூடியிருந் தாலும்
கதிர்சேய்மால் குருவெள்ளி கலைமதிகூ டிடினும்
சூரியனீள் வியத்துறினும் உதயமைந்தொன் பானிற்
சுக்கிரனின் றாலும்வெகு புத்திரயோ கந்தான்
சீரியமே டந்தேளே உதிக்கஐந் தெட்டிற்
தீயோர்கள் இருந்தாலும் உதயத்திற் சேயும்
பாரியஎட் டினிற்பானு வுறிற்சுபவர்க் கிருக்கிற்
பண்பொடுகா லாந்திரத்தில் வரும்புத்ர யோகம். (467)

(இ-ள்.) சனி, புதன், சந்திரன், செவ்வாய் ஆகிய கோள்கள் ஒன்றாகச் சேர்ந்து இருந்தாலும் சூரியன், செவ்வாய், புதன், குரு, சுக்கிரன், சந்திரன் ஆகிய ஆறு கோள்களும்

ஒன்றுகூடி ஒரே வீட்டில் இருந்தாலும், சூரியன் பன்னிரண்டாம் இடத்தில் இருந்தாலும், இலக்கனம், ஐந்தாமிடம், ஒன்பதாமிடம் ஆகியவற்றில் சுக்கிரன் நின்றாலும் இச்சாதகனுக்குப் புதல்வர்கள் அதிகமாக இருப்பார்கள். சென்ம இலக்கனம் மேடம் அல்லது விருச்சிகமாக இருக்க, ஐந்தாமிடத்தில் அல்லது எட்டாம் இடத்தில் தீயக்கோள்கள் இருந்தாலும் இலக்கனத்தில் செவ்வாயும் எட்டாம் இடத்தில் சூரியன் இருந்து சுபவர்க்கம் பெற்றிருக்க, இச்சாதகனின் வயோதிகத்தில் புத்திரர் தோன்றும்.

## இரண்டாம் மனைவியின் மூலம் புதல்வர்கள்

வெய்யவெட்டிற் குருவிருக்க இலக்கனத்திற் சனியும்
வியத்தில்செவ் வாயிருக்க வைந்துக்குடை யோன்பத்தில்
துய்யஐந்து தனுவாகச்சாமிபார்த் தாலும்
சொல்லுதயம் குருவிருக்கச் சனிசெவ்வாய் கூடி
செய்யவைந்தி லுறிற்காலாந் திரத்தில்புத்ர யோகம்
செழுமதிக்கோர் ஐந்தெட்டிற் சுபரிருக்கி லவர்கள்
ஐயமில்லாத் திசைபுத்திப் பொசிப்பபகா ரங்கள்
அதிற்புத்தி ரோதயமுண் டாகுமலர்க் கொம்பே.*(468)*

(இ-ள்.) பூங்கொத்தினை ஒத்த பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் குரு இருக்க, இலக்கனத்தில் சனியும், ஒன்பதாம் இடத்தில் செவ்வாயும் இருக்க, ஐந்தாமிடத்திற்கு அதிபதி, பத்தாம் இடத்தில் இருக்க, இலக்கனத்திற்கு ஐந்தாமிடம் தனுசு இலக்கனமாக அதை இலக்கனாதிபதி பார்த்தாலும், இலக்கனத்தில் குரு இருக்க, சனி, செவ்வாய் இவை ஒன்றுகூடி ஐந்தாமிடத்தில் இருக்க, இச்சாதகனுக்கு வயோதிகக் காலத்தில் புத்திரன் தோன்றுவான். வளர்பிறைச் சந்திரனுக்கு ஐந்தாமிடம், எட்டாம் இடத்தில் சுபக்கோள்கள் இருக்க, இவர்களுடைய திசை, புத்திகளில் இச்சாதகனுக்குப் புத்திரர்கள் தோன்றுவார்கள்.

## இரண்டாம் மனைவியின் மூலம் புதல்வர்கள்

*சிலைமீ னுதய மாகவைந்திற்*
*செவ்வாய் இருக்கச் சந்திரன்தன்*
*நிலையுற் றிருந்த இராசியவர்*
*நிறைந்த பாவ ருடன்கூடி*
*தொலையிற் பலக்கிற் றாணிரண்டாங்*
*குடும்பத் துக்கே புதல்வருண்டாம்*
*மலையக் கருவி மதக்களிற்றை*
*மருட்டி எடுத்து தனத்தாளே. (469)*

(இ-ள்.) மலையக் கருவியையும் மதக்களிற்றையும் அஞ்சச் செய்யும் தனங்களை உடைய பெண்ணே! சென்ம இலக்கனம் தனுசு, மீனமாக இருக்க, இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் செவ்வாய் இருக்க, சந்திரன் நின்ற இராசிக்கதிபதி பாவக்கோள்களுடன் கூடி பலம்பெற்று விளங்க, இச்சாதகனுக்கு இரண்டாம் மனைவியின் மூலம் புதல்வர்கள் தோன்றுவார்கள்.

*சந்திரன் ஆறில் வியத்திநிற்கச்*
*சனிசேய் இரவி அவர்வீடாய்*
*ஐந்திட மாகி அதற்குள்ளோர்*
*அங்கிசத் ததிபதி ஏழிடமாய்ச்*
*சொந்த வீடாய் உறைந்திருக்கத்*
*துய்ய வியாழன் பலம்தொழில்*
*இந்து நுதலாய்! புவிமீதில்*
*ஏக புத்ரன் எனமொழியே. (470)*

(இ-ள்.) சந்திரன் பிறை போன்ற அழகிய நெற்றியையுடைய பெண்ணே! சந்திரன் இலக்கனத்திற்கு ஆறாமிடம் அல்லது பன்னிரண்டாம் இடத்தில் இருக்க, அல்லது சனி, செவ்வாய், சூரியன் வீடுகள் இலக்கனத்திற்கு ஐந்தாமிடமாகி, அந்த ஐந்தாமிடத்தில் இருப்போரின் அங்கிசாதிபதி ஏழாமிடத்தில்,சொந்த வீட்டில் அமர, குருவின் வலிமை குறைவாக இருக்க, இச்சாதகனுக்கு, ஒரே ஒரு மகன் பிறப்பான்.

## குறைந்த புத்திரர், தத்து புத்திரன்

அருணன் தனக்கு வியத்தி வெள்ளி
அருக்கன் இருக்க மீன்கடகம்
மருவும் இடபம் இவைமூன்றும்
மன்னும் மைந்தர் இடமெனினும்
இருமை உதயக் கதிரிருக்க
எட்டிற் சனியன் இருந்தாலும்
கருமாயத்தில் இராகுவுறப்
பாவர் காண்கில் அற்பபுத்ராள். *(471)*

(இ-ள்.) சூரியனுக்குப் பன்னிரண்டாம் இடத்தில் சுக்கிரன் இருந்தாலும், சென்ம இலக்கனம் மீனம், கடகம், இடபம் இவற்றில் ஒன்றாக இருந்து அதில் சூரியன் நிற்க, அவ்விடம் சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடமாக இருந்தாலும், சென்ம இலக்கனத்தில் சூரியன் இருக்க, எட்டாமிடத்தில் சனி இருந்தாலும், பத்தாம் இடத்தில் இராகு இருக்க, அவரைப் பாவக்கோள் பார்த்தாலும் இச்சாதக னுக்குப் புதல்வர்கள் ஒரு சிலரே இருப்பார்கள்.

## குறைந்த புத்திரர், தத்து புத்திரன்

கன்னி உதயம் புதனிருக்கிற்
கருதும் அற்ப புத்திரராம்
மின்னு மதியும் சனிகுளிகன்
விரைந்தொன் றாகக் கூடிடினும்
பண்ணும் ஏழில் சனிசெவ்வாய்
பண்புற் றிருக்க மற்றோர்கள்
உன்னிப் பாரா திருத்தக்கால்
உரைப்பார் தத்து புத்திரனே! *(472)*

(இ-ள்.) சென்ம இலக்கனம் கன்னியாக அதில் புதன் இருக்க, இச்சாதகனுக்குப் புத்திரர்கள் குறைவாகப் பிறப்பார்கள். சந்திரன், சனி, குளிகன் ஆகியோர் ஒன்றாக ஏழாம் இடத்தில் இருக்க, சனி, செவ்வாய் ஆகியோர் பலம் பெற்று விளங்க, இவர்களைச்சுபக்கோள்கள் பார்க்கவில்லை யாகில், இச்சாதகனுக்குத் தத்துபுத்திரன் இருப்பான்.

## தத்து புத்திரன்

ஏய்ந்த உதயம் ஐந்தினுக்கும்
இறைவர் கிரகம் மாறிடினும்
பாய்ந்த ஒன்றைந் தினுக்கிறைவர்
பாவ வர்க்கம் தனையடைந்து
வாய்ந்த சுபராற் பார்வையுறின்
வகுத்தார் தத்து புத்திரனென்
றாய்ந்த கணித நூல்வல்லோர்
அறிந்தே யுரைத்த திவையாவே. (472)

(இ-ள்.) சென்ம இலக்கனம், ஐந்தாமிடம் இவற்றிற்கு அதிபதிகள் வீடு மாறி இருந்தாலும், சென்ம இலக்கனம், ஐந்தாமிடம் ஆகியவற்றிற்கு அதிபதிகள் பாவ வர்க்கத்தை அடைந்து, இவை சுபக்கோள்களால் பார்க்கப்பட்டால், இச்சாதகனுக்குத் தத்து புத்திரன் இருப்பான் என்று சோதிடக் கலையை ஆராய்ந்துணர்ந்த சோதிடர்கள், அறிந்து எடுத்துரைத்தள்ளார்கள்.

## இதுவுமது

செருக்கு மைந்துக் கிறைசனிபாற்
சேரு மேனும் அங்கிசத்தில்
இருக்கு மேனும் தத்துமைந்தன்
ஈரா றைந்துக் கிறையாகும்
அருக்கன் கூடிச் சத்துருத்தான்
அதிக வங்சந் தானாக
உருக்கு மிடத்தில் இரட்டித்த
வோரை நிற்கிற் தத்துபுத்திராள். (473)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாம் இடத்திற்கு அதிபதி சனியுடன் சேர்ந்து இருப்பினும் அல்லது சனியின் அங்கிசத்தில் இருந்தாலும், இச்சாதகனுக்குத் தத்துப்புதல்வன் இருப்பான். பன்னிரண்டாம் இடத்திற்கு அதிபதியும் ஐந்தாம் இடத்திற்கு அதிபதியும் சூரியனும் கூடி இருக்க, ஆறாமிடத்திற்கு அதிபதி அங்கிசத்தான நிற்கும் இராசி, இரட்டித்த இராசியாக இருந்தால், இச்சாதகனுக்குத் தத்துப் புத்திரன் இருப்பான்.

## இதுவுமது

மறையோ னோரைந் தினிலிருக்க
மற்றோர் வர்க்கம் அடைந்திடினும்
உறையும் மிதுனங் கன்னியைந்தாம்
ஓரை யாகி உறிற்சனிசேய்
பொறையிற் குளிக னுடன்கூடிப்
பொலிவுற் றிருக்க மடமானே!
அறைவர் தத்து புத்திரனென்
றறிஞர் உரைத்த படியாமே. (475)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் குரு இருக்க, மற்ற கோள்கள் குருவர்க்கம் அடைந்து இருந்தாலும் மிதுனம், கன்னி, குளிகன் இவை ஒன்றுகூடி நிற்க, இச்சாதகனுக்குத் தத்து புத்திரர்கள் இருப்பார்கள் என்று சோதிடக்கலையில் வல்ல அறிஞர்கள் எடுத்தோதி யுள்ளார்கள்.

## இதுவுமது

ஆரா றைந்திற் சுபரிருக்க
அதனுக் குடையோன் கூடாமற்
பாரா திருக்கிற் தத்துமைந்தன்
பகருந் தத்தே திரமாகும்
ஊராரும் சுக்கி ரன்வெள்ளி
குருவின் வர்க்கம் அடைந்துசனி
சீராங் கிசந்தா னுறின்காலாந்
திரசே யலது தத்துமை ந்தன். (476)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் சுபக்கோள் இருக்க, ஐந்தாமிடத்திற்கு அதிபதியோடு சுபக்கோள்கள் கூடாமல் இருந்தாலும், அதனைச் சுபக் கோள்கள் பார்க்காமல் இருந்தாலும் இச்சாதகனுக்குத் தத்து புத்திரன் இருப்பான். சுக்கிரன் குருவின் வர்க்கத்தை அடைந்து, சனியின் அங்கிசத்தில் இருந்தால், அச்சாதகனுக்கு வயோதிக காலத்தில் புத்திரன் பிறப்பான் அல்லது தத்து புத்திரன் அமைவான்.

குறிப்பு: குருவர்க்கம் என்பது ஏதாவது ஒரு வகையில் குரு தொடர்பு கொண்டிருப்பது. இது குருவின் இடத்திலோ, குருவிற்குரிய நட்சத்திரங்களான புனர்பூசம், விசாகம், பூரட்டாதி ஆகிய நட்சத்திரங்களில் இருப்பதோ, குருவுடன் சேர்ந்திருப்பதோ குரு பார்வையில் இருப்பதோ ஆகும்.

## சீமந்தம் செய்யாமல் பிறந்த புத்திரன்

*அரிய சாமி ஐந்தினிற்க*
*ஐந்துக் கிறையொன் பதிலிருக்க*
*விரியும் மதிதீக் கோளுடனே*
*மேவிற் றெத்து புத்திரனாம்*
*உரிய ஐந்தொன் பதுபத்துக்*
*குடையோன் உறையச் சாமிபலம்*
*தெரிய எட்டில் இருந்தக்கால்*
*சீமந் தாதி யிலாதமைந்தன்.* *(477)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் இலக்கனாதிபதி இருக்க, ஐந்தாமிடத்திற்கு அதிபதி ஒன்பதாம் இடத்தில் இருக்க, சந்திரன், பாவக்கோள்களுடன் இருக்க, இச்சாதகனுக்குத் தத்து புத்திரர்கள் இருப்பார்கள். இலக்கனத்திற்கு ஐந்தாமிடம், ஒன்பதாமிடம், பத்தாமிடம் இவற்றிற்கு அதிபதிகள் ஒன்றாக நிற்க, இலக்கனாதிபதி எட்டாமிடத்தில் இருந்தால், இச்சாதகனுக்குப் பிறந்த புத்திரன், சீமந்தம் முதலான சடங்குகள் எவையும் செய்யாமல் பிறந்தவனாக இருப்பான்.

## தந்தையைத் தூற்றும் புதல்வன்

*சாற்றும் இலாபே சன்தானும்*
*பாவ வர்க்க முறிற்போற்றுஞ்*
*சீமந் தாதி இலாப்புதல்வன்*
*என்றே புகலு வராற்*
*சாற்று மைந்த னருக்கனிற்க*
*ஐந்துக் கிறைதுர்ப் பலமாகத்*
*தோற்றுஞ் சனிசேய் தான்பார்க்கிற்*
*சொல்லு வாய்பிதுர்த் துவேஷியென்றே.* *(478)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பதினோராம் இடத்திற்கு அதிபதி பாவவர்க்கம் பெற்றிருந்தால், இச்சாதகன் சீமந்தம் முதலான சடங்குகள் எவையும் செய்யாமல் பிறந்தவனாக இருப்பான். ஐந்தாமிடத்திற்கு அதிபதி தீயவனாக, இக்கோளைச் சனி, செவ்வாய் ஆகிய கோள்கள் பார்த்தால், இச்சாதகன், தன்னுடைய தந்தையை எந்நேரமும் குறைகூறுபவனாக இருப்பான்.

## தாய், தந்தையைத் தூற்றும் புதல்வன்

சுங்கன் வேந்தன் மதிசெவ்வாய்
சூரன் கூடி இருந்தாலும்
துங்கன் சனியன் உடன்பாம்பும்
துணையால் ஒன்ப தினிலுறினும்
அங்கன் ஞாலத் தவரறிய
அன்னை பிதுர்க்குத் துவேஷியனாம்
திங்கள் முகத்தாய் கனதனத்தாய்
செம்பொன் மானே பசுந்தேனே! *(479)*

(இ-ள்.) குளிர்ந்த சந்திரனைப் போன்ற முகத்தையும் கனமான தனங்களையும் செம்பொன் போன்ற நிறத்தினையும் மானைப் போன்ற சாயலையும் பசுமையான இனிய தேன் போன்ற மொழியையும் பேசக்கூடிய பெண்ணே! சுக்கிரன், குரு, சந்திரன், செவ்வாய், சூரியன் கூடி இருந்தாலும் சனியுடன் இராகு அல்லது கேது சேர்ந்து இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்தில் இருந்தாலும் இச்சாதகன் தன் தாயையும் தந்தையையும் இழிவாகப் பேசுபவனாக இருப்பான்.

## தந்தைக்குப் பகைவன், மகனுக்குப் பகைவன்

அடுக்குந் தந்தை இலக்கனத்துக்
காறெட் டதனின் மகன்உடலம்
எடுக்கிற் புதல்வன் சத்துருவாம்
இயற்றும் உதயம் ஐந்தினுள்ளோர்
துடுக்கும் குணமொன் றுக்கொன்று
தோரப் பகைவ ராயிருக்கிற்
தடுக்கும் மாற்ற மிலானேனும்
தானே புத்திர சத்துருவாம். *(480)*

(இ-ள்.) தந்தையின் இலக்கனத்திற்கு ஆறாமிடம் எட்டாமிடம் இவற்றில் புத்திரர்களின் இராசி அமைந்தால், அச்சாதகனின் புதல்வன் தன் தந்தையிடம் பகைமை பாராட்டுபவனாக இருப்பான். இலக்கனாதிபதி, ஐந்தாமிடத்தில் நிற்போர் ஆகியோர் ஒருவருக்கொருவர் பகையாக இருந்தால், இச்சாதகன் தன்னுடைய மகனுக்குப் பகையாக விளங்குவான். இதை யாராலும் தடுக்க முடியாது என்பதாகும்.

### குரு, தந்தையைத் தூற்றுபவன், மகனுக்குப் பகைவன், தீய புத்திரர்

ஒன்பதிற் சனிசேய் இரவிதான் கூடி
உறைந்திடிற் பிதுர்க்குருத் துவேஷி
மின்புகழ் ஐந்திடில் ஒன்றதில் சனியன்
வெய்யவன் இருந்திடப் பார்க்கிற்
துன்பமிற் பிதாவே வஞ்சக னாவன்
சுங்கன்சேய் சனியொன்றாய்க் கூடில்
வன்புள புத்தி துர்ப்புத்தி ராளாய்
வருவது திண்ணமென் றுரையே. (481)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்தில் சனி, செவ்வாய், சூரியன் ஆகியோர் கூடி நிற்க, இவன் தந்தையையும் குருவையும் குற்றம் கூறி இழிவாகப் பேசுபவனாக இருப்பான். இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் இலக்கனத்தில் சனி, சூரியன் இருக்க அல்லது இவ்விடங்களைப் பார்க்க, இச்சாதகனுக்கு இவன் தந்தையே வஞ்சம் செய்பவனாக விளங்குவான். சுக்கிரன், செவ்வாய், சனி ஆகிய கோள்கள் ஒன்றாக இருக்கில், துர்ப்புத்தியுடன் புத்திரர்கள் விளங்குவார்கள்.

### பிதுர்கன வீனன்

பத்தினிற் குளிகன் பவனனி ராகு
பண்புடன் கூடவித் தலத்தோர்
மெத்தென மூன்றில் உறப்பிதுர் வழியில்
வேண்டிய வசுமகன் மன்னாய்

*மொத்திடு சரகேந் திரத்தினிற் கதிரோன்*
*உகந்திடப் பிதுர்கன வீனன்*
*சத்துரு வெய்யோன் மதிபலம் தாழ்ந்தே*
*சரமுறிற் பிதுர்கன வீனன். (482)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்குப் பத்தாமிடத்தில் குளிகனும் இராகுவும் ஒன்றாகக் கூடி இருக்க, இந்த இடத்திற்கு அதிபதி மூன்றாமிடத்தில் இருக்க, சரகேந் திரத்தில் சூரியன் இருக்க, பிதுர்கன வீனனாக, இருப்பான். சூரியன் சந்திரன் பலம் குன்றி, சரராசியில் இருக்க பிதுர்கன வீனனாக இருப்பான்.

குறிப்பு: இப்பாடலுக்குப் பொருள் சரியாக விளங்கவில்லை.

## தாயைத் தூற்றுபவன்

*நவிலும்துர்த் தானத் திறைரே பலக்க*
*நாலொன்ப தேழினுக் கிறைவர்*
*தவறிலாப் பலம்போய்ச் சரத்தினில் இருக்கின்*
*தான்பிதுர் கர்மவிக் கினனாம்*
*குவித்திர மதிசேய் குருவெள்ளி தானும்*
*கூடின்மாதுருத்துவே ஷியனாம்*
*சவுரியம் புலிசேய் கூடிடிற் பெற்ற*
*தாய்து வேஷியுமெனச் சாற்றும். (483)*

*(இ-ள்.)* தீய வீடுகளான ஆறு, எட்டு, பன்னிரண்டாம் வீட்டிற்கு அதிபதிகள் வலிமை பெற்று விளங்க, இலக்கனத்திற்கு நான்காமிடம், ஒன்பதாமிடம், ஏழாமிடம் இவற்றிற்கு அதிபர்கள் பலம்பெற்று சர இராசிகளில் இருந்தால், இச்சாதகன் தன்னுடைய தந்தைக்குச் செய்ய வேண்டிய இறுதிச் சடங்குகளைச் செய்யமாட்டான். சந்திரன், செவ்வாய், குரு, சுக்கிரன் ஆகிய நான்கு கோள்களும் ஒன்றுகூடி இருக்க, இச்சாதகன் தாயை இழிவாகப் பேசுபவனாக இருப்பான். சந்திரன், செவ்வாய் ஒன்றுகூடி இருந்தாலும் இச்சாதகன் தாயை இழிவாகப் பேசுவான்.

## தாயைத் தூற்றும், ஊனமுடைய புத்திரர்கள்

*கூறுமொன் பதினில் புகல்மதி செவ்வாய்*
*கூடிடின் மாதுருத் துவேஷி*
*மீறிய வைந்து மைந்தனுக் கிறைவன்*
*வியாழத்தி லிவர்கைந்தில் எட்டில்*
*தேறுசேய் குருடு சனிமுடமி ராகு*
*செவிடு மாந்திக் குளத ரித்திரன்*
*நீறுகே துவுக்கே யூமைபேய்ப் புதல்வ*
*னிவ்வகை கண்டுதான் இயம்பே. (484)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்தில், சந்திரன், செவ்வாய் ஆகிய கோள்கள் ஒன்றுகூடி இருந்தால், இச்சாதகன் தாயைத் தூற்றுபவனாக இருப்பான். ஐந்தாமிடம், ஐந்தாம் இடத்திற்கு அதிபதி, குரு இவர்களுக்கு ஐந்தா மிடத்தில், எட்டாமிடத்தில் செவ்வாய் இருக்க, இச் சாதகனின் புத்திரன் குருடாக இருப்பான். இவ்விடங் களில் சனியுடன் இராகு இருக்க, இவன் புத்திரன் செவிடாவான். இவ்விடங்களில் மாந்தி இருக்க, இவன் புத்திரன் தரித்திரன். இவ்விடங்களில் கேது இருக்க இவன் புத்திரன் ஊமை யாகவும், பேய்பிடித்தவனாகவும் இருப்பான்.

## பெண்குழந்தை பெறுபவன், குழந்தை இல்லாதவன்

*தக்கவைந் தொன்பான் பத்தினுக் கிறைவர்*
*தருமேழில் இருக்கவே ஏழாம்*
*உக்கும இராசி யாகியே வெள்ளி*
*ஒளிர்மதி பார்க்கப்பெண் பிறக்கும்*
*லக்கனச் சனியுங் கடகதிரி கோணா*
*தியத்தினில் புகரைந்தொன் பதிலே*
*மிக்கதோர் சுபரே நோக்கிலை யாகின்*
*விளம்புவர் மலடனென் றேதான். (485)*

(இ-ள்.) சென்ம இலக்கினத்திற்கு ஐந்தாமிடம், ஒன்பதாமிடம், பத்தாமிடம் ஆகியவற்றிற்கு அதிபதிகள் ஏழாமிடத்தில் இருக்க, ஏழாம் இராசி இரட்டை இராசியாக,

சுக்கிரன் வளர்பிறைச் சந்திரன் முதலான கோள்கள் பார்க்க, இச்சாதகனுக்குப் பெண்குழந்தை பிறக்கும். இலக்கனத்தில் சனியும் கடகத்தின் திரிகோணங்களில் சுக்கிரனும் இருக்க, ஒன்பதாம் இடத்தைச் சுபக்கோள்கள் பார்க்கவில்லையாயின் இச்சாதகன் குழந்தைப்பேறு அற்றவன்.

### குழந்தையற்றவன், ஊனமான புதல்வன்

*மதனநா யகனை வெள்ளியைச் சனிமால்*
*வலிகொடு பார்த்திடின் மலடன்*
*அதனமாம் வியத்தை வெள்ளிதான் பார்க்க*
*வதுரவி மதியுட வீடாய்*
*இதமுளக் கதிரோன் மதியுமே கூட*
*ரிதுவுக்கு முன்பிறந் தவனாம்*
*மதிசனி குருநண் டுறச்செவ்வாய் நோக்க*
*ம[illegible]டின் மூடத்திற் பிறந்தோன்.* **(486)**

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாம் இடத்திற்கு அதிபதியையும் சுக்கிரனையும் சனி, புதன் ஆகியோர் வலிமையுடன் பார்க்க, இச்சாதகன் குழந்தையற்றவனாக இருப்பான். பன்னிரண்டாமிடத்தைச் சுக்கிரன் பார்க்க, அது சூரியன் அல்லது சந்திரனின் வீடாக அதில் சூரியனும் சந்திரனும் கூடியிருக்க, இச்சாதகனுக்குப் பிறக்கும் குழந்தை, குறைப்பிரசவத்தில் தோன்றும். சந்திரன், சனி, குரு ஆகிய கோள்கள் கடக இராசியில் இருக்க, இவர்களைச் செவ்வாய் நோக்கப் பிறந்த சாதகனின் புதல்வன், ஊனமாக இருப்பான்.

குறிப்பு: 'ரிதுவுக்கு முன் பிறந்தவன்' பொருள் விளங்கவில்லை.

### சித்திர புத்திரன், குழந்தையற்றவன்

*ஒருங்குள ஐந்திற் சனிசெவ்வாய் தன்னை*
*ஒருத்தரும் நோக்குறா திருக்கிற்*
*துருந்து சித்தி ரபுத்திர னென்பார்*
*சொல்லிய காமத்திற் புகரோன்*

*விரும்பிய கதிரோன் புதனுமே நிற்க*
*வியத்தினிற் சனியும்லக் கனத்தில்*
*வருந்துறு குளிகன் இருக்கினும் மலடன்*
*வளரிள வனமுலை மயிலே !* *(487)*

*(இ-ள்.)* வளர்ச்சி பெற்ற இளமையான அழகு பொருந்திய தனங்களையும் மயிலைப் போன்ற சாயலையும் கொண்ட பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாம் இடத்தில் சனி, செவ்வாய் இருக்க, இவ்விருவரையும் ஒரு கோளும் நோக்கவில்லையாகில், இவனுக்குச் சித்திர புத்திரன் என்பர். இலக்கனத்திற்கு ஏழாம் இடத்தில் சுக்கிரன், சூரியன், புதன் இருக்க, பன்னிரண்டாம் இடத்தில் சனியும் இலக்கனத்தில் குளிகனும் இருக்க, இச்சாதகன் குழந்தைபேறு அற்றவனாக இருப்பான்.

**புத்திரன் பிறக்கும் காலத்தில் சிறையிலிருப்பவன்**

இரலைக்கைந் தேழில் ஒன்பதிற் பாவர்
இருந்திடச் சுபர்கநோக் காரேல்
வரமிகும் ஈன்றோன் செனனகா லத்தின்
மறுதேசம் தனிற்சிறை இருப்பன்
திரம்பெறு நாலி சனிபிறப் பாவர்
சேர்ந்திடற் சுபர்கநோக் கின்றித்
தரம்பெறின் மைந்தன் சனனகா லத்திற்
தந்தையே சிறையினில் இருப்பன். *(488)*

*(இ-ள்.)* மகரத்திற்கு ஐந்தாமிடத்தில், ஏழாமிடத்தில், ஒன்பதாமிடத்தில் பாவக்கோள் இருக்க, இவர்களைச் சுபக்கோள்கள் நோக்கவில்லையானால் இச்சாதகன் பிறந்த காலத்தில், இவனுடைய தந்தை வேறுதேசத்தில் சிறையில் இருந்து வாடுவான் என்றவாறு. இலக்கனத்திற்கு நான்காம் இடத்தில் சனியும் மற்ற பாவக்கோள்களும் சேர்ந்திருந்து, சுபக்கோள்கள் பார்க்கவில்லையாயின், இச்சாதகன் பிறக்கும் பொழுது, இவனுடைய தந்தை சிறையில் இருப்பான்.

## புத்திரன் பிறக்கும்பொழுது தந்தையின் இருப்பிடம்

*புத்திரன் சனன காலத்தில் வெய்யோன்*
*புகல்சர ராசியெட் டொன்பான்*
*ஒத்துர நிற்கிற் பிதாசமீ பத்தில்*
*உற்றிடில் உதயத்தில் சனிசேய்*
*மெத்தென இருக்க ஏழினில் மதியும்*
*மிடுபவ மத்திப மாகிற்*
*சித்துறு தந்தை சமீபத்தி லில்லை*
*தேனினும் இனியதேன் மொழியே! (489)*

*(இ-ள்.)* தேனைக் காட்டிலும் இனிமையான மொழியைப் பேசக்கூடிய பெண்ணே! புதல்வனின் பிறந்த காலத்தில், சூரியன் சர இராசியில் இருக்க, எட்டாமிடம், ஒன்பதாமிடம் இவற்றுக்கு அதிபதிகள் ஒன்று சேர்ந்திருப்பின், இச்சாதகனுக்கு தந்தை அருகிலேயே இருப்பான். சென்ம இலக்கனத்தில் சனியும் செவ்வாயும் இருக்க, ஏழாமிடத்தில் சந்திரனும் பாவக்கோள்களுக்கு இடையில் இருக்க, இச்சாதகனின் தந்தை தூர தேசத்தில் இருப்பான்.

## குழந்தையற்றவன்

*பத்தினில் மதியும் இருக்கவோ ரேழிற்*
*பாவர்கள் உறையநா லைந்திற்*
*றுத்துளப் பாவர் இருந்திடு மேனும்*
*சுக்கிரன் கதிர்புகர் ஏழில்*
*கொத்துடன் இருக்க சனிவியத் தெய்தக்*
*குளிகனே இலக்கன மாயின்*
*மைத்தடக் கண்ணாய் ! மலடனென் றுரைத்தார்*
*வடமொழி புலமைமா தவரே. (490)*

*(இ-ள்.)* மை பூசப்பட்ட பெரிய கண்களையுடைய பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்குப் பத்தாமிடத்தில் சந்திரன் இருக்க, ஏழாமிடத்தில் பாவக்கோள்கள் இருக்க, நான்காமிடத்தில் அல்லது ஐந்தாமிடத்தில் பாவக்கோள்கள் இருந்தாலும், சுக்கிரன் அல்லது சூரியனும் சுக்கிரனும் கூடி

ஏழாமிடத்தில் இருக்க, சனி பன்னிரண்டாமிடத்தில் இருக்க, குளிகன் இலக்கனத்தில் இருக்க, இச்சாதகன் குழந்தை யற்றவன் என்பதை வடமொழி சோதிட நூல்களில் புலமை பெற்ற சோதிட வல்லுநர்கள் எடுத்துக் கூறியுள்ளார்கள்.

### முதுமையில் புத்திரன்

*அரிய வியத்தினில் இராகு இருக்க*
*கரியவன் குருவும் கலந்துத யத்திற்*
***பரிவோடிருக்கப் பனிமதி எட்டிற்***
*தெறிவுநிற் காலாந் திரபுத் திரனே.* *(491)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் இடத்தில் இராகு இருக்க, சென்ம இலக்கனத்தில் குருவும், சனியும் சேர்ந்திருக்க, வளர்பிறைச் சந்திரனும் எட்டா மிடத்தில் இருக்க, இச்சாதகனுக்கு வயோதிக காலத்தில் புத்திரன் தோன்றுவான்.

### அலியான புத்திரன்

*புத்திரத் தானத் திறையும்மந் திரியும்*
*புதன்சனி வர்க்கம் அடையின்*
*மித்திர மைந்தன் நபுஞ்சக னாகும்*
*வெண்மதி உதயத்தில் இருக்க*
*வெத்துள ஏழிற் சனிரவி தனக்கே*
*ஏழினிற் புதனிருந் தாக்கால்*
*கொத்தணி குழலாய்! நபுஞ்சகன் என்றே*
*கூறினர் கணிதநூற் புலவோர்.* *(492)*

*(இ-ள்.)* கொத்தான மலர்களைக் குழலில் சூடியுள்ள பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாம் இடத்திற்கு அதிபதியும் குருவும் புதனின் சுபவர்க்கத்தை அல்லது சனியின் வர்க்கத்தை அடைந்தால், இச்சாதகனுக்கு நல்ல புத்திரன் பிறப்பான். அவன் அலியாவான். நிறைந்த சந்திரன் இலக்கனத்தில் இருக்க, ஏழாமிடத்தில் சனி, சூரியனுக்கு ஏழாமிடத்தில் புதன் இருக்கில் இச்சாதகனுக்குப் பிறக்கும் புதல்வன் அலியாவான் என்று சோதிடக்கலையில் வல்ல புலவர்கள் கூறியுள்ளார்கள்.

## இதுவுமது

ஓசையின் மதியும் உக்குமம் தனின்மேல்
　　உகந்திவர் இவரைசேய் பார்க்கில்
ஆசையாம் மைந்தன்ந புஞ்சக னாகும்
　　ஆத்தும புருடரா சியுமாய்
பூசைசெய் குருவும் மதிபுகர் மூவர்
　　பொற்பொடு கூடியே நிற்க
மாசையே யகற்றுஞ் சனியேழில் இருக்கின்
　　மைந்தனே நபுஞ்சகன் என்பார். (493)

(இ-ள்.) ஆண் இராசி அல்லது ஒற்றை இராசியில் சந்திரனும் பெண் இராசி அல்லது இரட்டை இராசியில் புதனும் இருக்க, இவர்களைச் செவ்வாய் பார்க்க, இச்சாதகனின் புத்திரன் அலியாக இருப்பான். இலக்கனம் ஆண் இராசியாக குரு, சந்திரன், சுக்கிரன் ஆகியோர் அதில் கூடி நிற்க, ஏழாமிடத்தில் சனி இருக்க இச்சாதகனின் புதல்வன் அலியாக இருப்பான்.

## இதுவுமது

அடைவுறு தனுவு திப்ப
　　ஆறினிற் புதனும் மேவ
உடைபடா வொன்றி ரண்டுக்
　　குடையவர் மித்திர ராகித்
தடையின்றி மிதுனங் கன்னி
　　தன்னிலே இருப்பா ராகில்
நடைபிணம் தன்னை யொத்த
　　நபுஞ்சக னாவன் மின்னே. (494)

(இ-ள்.) சென்ம இலக்கனம் தனுசுவாக, அதில் புதன் இருக்க, இலக்கனாதிபதி, இரண்டாமிடத்திற்கு அதிபதி ஆகிய இருவரும் நட்புள்ளவர்களாக, மிதுனம், கன்னி ஆகிய இராசிகளில் இருக்க, இச்சாதகனுக்குத் தோன்றும் புதல்வர் நடைபிணத்தை ஒத்த அலியாக விளங்குவான்.

## அலி புத்திரன்

உறைபுதன் பலவா னாகி
உக்கும இராசி யாகித்
துறையுள ஒன்றின் மூன்றிற்
சுபருடன் கூடி நின்றால்
நறைமலர்க் குழலாய் கேளாய்!
நபுஞ்சபுத் திரியே யாகும்
மறைதரு கணித நூலோர்
அறிந்திவை உரைத்த வாறே. (495)

(இ-ள்.) தேன் நிறைந்த மலர்களைச் சூடிய குழலை யுடைய பெண்ணே! புதன் பலவானாக இருக்க, இலக்கனம், மூன்றாமிடம் இரட்டை இராசியாக இதனுடன் சுபக் கோள்கள் கூடியிருக்க, இச்சாதகனுக்கு அலியாக புத்திரி இருப்பாள் என்பதை வேதங்களையும் சோதிடக் கலையையும் கற்ற அறிஞர்கள் கூறியுள்ளார்கள்.

## புத்திரர் துன்பம், பிற பெண்களால் புத்திர யோகம்

இகத்தினில் ஐந்தோ டேழுக்
கிறையவர் கூடி நிற்க
மிகப்படு பகைதா னத்தோன்
விரகொடு பார்ப்பா னாயின்
பகைப்படு வாதை நல்கும்
பரதார விடயம் தன்னில்
நகைப்புறு புத்திர யோகம்
நண்ணிடும் என்று சொல்லே. (496)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடம், ஏழாமிடம் இவற்றிற்கு அதிபதிகள் ஒன்றுகூடி நிற்க, ஆறாமிடத்திற்கு அதிபதி இவர்களைப் பார்ப்பானாயின், இச்சாதகனின் புத்திரர்க்குத் துன்பம் உண்டாகும். மனைவியை யன்றி பிற பெண்களிடம் கொண்ட தொடர்பால் இச்சாதகனுக்குப் புத்திரயோகம் உண்டாகும்.

### பரத்தையரிடத்தில் புத்திரர் பிறத்தல்

*உரியகா மத்தோர் பாவி*
*யுடன்கூடி இரண்டில் நிற்க*
*விரிவுறு செவ்வாய் பார்க்கின்*
*வேசிய ரிடத்தி லேதான்*
*பரிவொடு புத்திர யோகம்*
*பலித்திடும் என்று சொன்னார்*
*புரிகுழல் வேற்கண் காந்தட்*
*பூந்துணைக் கையி னாளே. (497)*

(இ-ள்.) சுருண்ட கூந்தலையும், வேல் போன்ற கண்களையும், காந்தள் மலர்களையொத்த விரல்களைக் கொண்ட கைகளையும் கொண்ட பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்திற்கு அதிபதி, பாவக்கோள் களுடன் கூடி இரண்டாமிடத்தில் நிற்க, இதனை செவ்வாய் பார்க்க, இச்சாதகனுக்குத் தீய நடத்தையையுடைய பெண்களிடத்தில் புத்திரர்கள் தோன்றுவார்கள் என்று சோதிடக்கலையில் வல்லவர்கள் கூறியுள்ளவர்கள்.

### இரட்டை குழந்தைகள்

*அறிவுள புந்தி யைந்தில்*
*அமர்ந்திட மற்றோ ரெல்லாம்*
*பிறிபடு துர்த்தா னத்திற்*
*பலவீன மாகி நிற்கில்*
*இறுதியாய் வாதை அன்றி*
*இரட்டைபிள் ளைகள்பி றக்கும்*
*வெறிமலர்த் தடங்கண் நல்லாய்*
*நல்வாய் விளம்பினர் கணிதர் மாதே ! (498)*

(இ-ள்.) நறுமணம் மிக்க மலர்களையும், பெரிய அழகான கண்களையும் உடைய பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் புதன் நிற்க, மற்றக் கோள்களனைத்தும் ஆறு, எட்டு, பன்னிரண்டு முதலான தீய இடங்களில் நிற்கில், இச்சாதகனுக்கு இரட்டைப் பிள்ளைகள் பிறக்கும். அக்குழந்தைகளுக்குத் துன்பம் நேரிடும் என்பதை சோதிடக்கலையில் வல்லோர்கள் கூறியுள்ளோர்கள்.

## இரட்டைப் பெண்குழந்தைகள்

திரட்டிய மதிசேய் வெள்ளி
　　சிறப்புடன் ஒன்றாய்க் கூடி
இரட்டித்த இராசி தன்னில்
　　இருந்ததில் அங்கிச மாகப்
பிரட்டிலாப் புதனே பார்க்கிற்
　　பிறந்திடும் இரட்டை பெண்ணே !
முரட்டுறு பகுவாய் பாந்தள்
　　முடிநிகர் அல்கு லாளே ! (499)

(இ-ள்.) முரட்டுத்தன்மையுடன் கூடிய பிளவுபட்ட வாயையுடைய பாம்பின் படத்தை ஒத்த அல்குலை உடைய பெண்ணே ! சந்திரன், செவ்வாய், சுக்கிரன் முதலான கோள்கள் இரட்டை இராசிகளில் ஒன்றுகூடி புதன் அங்கிசத்தில் இருக்க, புதன் பார்க்க, இச்சாதகனுக்கு இரட்டை பெண் குழந்தைகள் பிறந்திடும் என்று சொல்லவேண்டும்.

## இரட்டை ஆண் குழந்தைகள்

தண்டுவில் லுதய மாகத்
　　தபனனம் புலிவி யாழம்
அண்டுமுக் குமரா சிக்குள்
　　அமர்ந்திடில் ஆணி ரட்டை
கண்டுபண் மிதுனந் தோன்றக்
　　காரிபொன் னுதயம் மேவத்
தண்டமர் பராவ தாங்சம்
　　தான்செயில் ஆணி ரட்டை. (500)

(இ-ள்.) சென்ம இலக்கனம் மிதுனம் அல்லது தனுசுவாக இருக்க, சூரியன் சிம்ம இராசியிலும் குரு உக்கும இராசியில் இருக்க, இச்சாதகனுக்கு இரட்டை ஆண் குழந்தைகள் பிறந்திடும். மிதுனம் சென்ம இலக்கனமாக இருக்க, சனி, குரு ஆகிய கோள்கள் இலக்கனத்தில் இருந்து பர்வதாங்கிசம் ஏற, இச்சாதகனுக்கு இரட்டை ஆண் குழந்தைகள் பிறந்திடும்.

## இதுவுமது

ஒள்ளிய ஒன்று மூன்றுக்
குடையவர் ஒன்றாய்க் கூடி
தள்ளுறும் இலக்க னத்திற்
தானிற்க கிரகம் மாற
வெள்ளிய பாவ ரானோர்
எதிருறப் பாரா ராயின்
வள்ளிதாய் ஆணி ரட்டை
மண்ணின்மேற் பிறக்கும் என்பார். *(501)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனம், மூன்றாமிடம் இவற்றுக்கு அதிபதிகள் இருவரும் ஒன்றுகூடி சென்ம இலக்கனத்தில் நிற்க, அல்லது வீடு மாறி நிற்க (பரிவர்த்தனை) பாவக் கோள்கள் எவையும் பார்க்கவில்லையாயின் இச்சாதகர்க்கு இரட்டை ஆண் குழந்தைகள் பிறக்கும்.

## ஆண், பெண் இரட்டைக் குழந்தைகள்

சந்தமாம் மிதுனம் கன்னி
தனுவுமீன் உதய மாக
இந்தநல் ஓரைக் காணில்
இந்துடன் கதிரோன் செவ்வாய்
புந்தியும் ஒன்றாய்க் கூடிப்
பொற்புற நிற்பா ராயின்
முந்தும்ஆண் பெண்ணி ரட்டை
முசிப்பின்றிப் பிறக்கும் மாதே. *(502)*

*(இ-ள்.)* மிதுனம், கன்னி, தனுசு, மீனம் முதலான உபய ராசிகள் சென்ம இலக்கனமாக அமைய, அவற்றில் ஒன்றில், சந்திரன், சூரியன், செவ்வாய், புதன் ஆகிய நான்கு கோள்களும் ஒன்றுகூடி நின்றால், இச்சாதகனுக்கு ஆண் குழந்தை ஒன்று, பெண்குழந்தை ஒன்றாக இரட்டைக் குழந்தைகள் பிறக்கும்.

### இதுவுமது

*தக்கதோர் ஓசை ராசி*
*தன்னிலே புதன்இ ருக்க*
*உக்கும இராசி மீதில்*
*ஒளிர்மதி உறைந்து நிற்க*
*மிக்கசேய் குருவும் கூடி*
*விளங்கிலக் கனத்தில் நிற்கில்*
*இக்கனம் தானே ஆண்பெண்*
*இரட்டையாய்ப் பிறக்கு மின்னே.* *(503)*

(இ-ள்.) ஒற்றை இராசிகளில் ஒன்றில் புதன் நிற்க, இரட்டை இராசிகளில் ஒன்றில் வளர்பிறைச் சந்திரன் இருக்க, செவ்வாயும் குருவும் ஒன்று சேர்ந்து இலக்கனத்தில் நிற்க, இச்சாதகனுக்கு ஆண்குழந்தை ஒன்றும் பெண்குழந்தை ஒன்றுமாக இரட்டைக் குழந்தைகள் பிறக்கும்.

### இதுவுமது

*இசையும்தண் டுதய மாகி*
*இனியமால் பாவ ரோட*
*அசைவின்றிக் கூடி நிற்க*
*அழகிய சுபரே பார்க்கிற்*
*இசையிலாண் பெண்ணி ரட்டைத்*
*திண்ணமாய்ப் பிறக்கும் என்பார்*
*நசையுறுந் தீஞ்சொல் முல்லை*
*நகையன்ன நடையி னாளே.* *(504)*

(இ-ள்.) முல்லைப் பூப்போன்ற புன்னகையும் குற்றமற்ற இனிய சொற்களையும் அன்ன நடையினையும் உடைய பெண்ணே! மிதுனம், சென்ம இலக்கனமாக அதில் புதன் பாவக்கோளோடு ஒன்று சேர்ந்து இருக்க, அவரைச் சுபக்கோள் பார்க்க, இச்சாதகனுக்கு ஆண்குழந்தை ஒன்று, பெண்குழந்தை ஒன்றாக இரட்டைக் குழந்தைகள் பிறக்கும் என்று கூறுவார்கள்.

## மூன்று ஆண்குழந்தைகளைப் பெறுபவன்

கன்னியிற் புதனி ருக்க
கருதுலக் கனமீ னாக
உன்னிய மற்றுள் ளோர்கள்
உபயரா சியலி ருக்கிற்
பின்னிய மூன்றாண் பிள்ளை
பிறக்குமென் றுரைத்தார் மேலோர்
மன்னிய கமலப் போதின்
வளரிள மயிலி னாளே! (505)

(இ-ள்.) நிலைபெற்ற செந்தாமரை மலரின் வீற்றிருக்கும் திருமகளைப் போன்ற அழகையும் வளர்ந்த இளம் மயிலின் சாயலையும் கொண்ட பெண்ணே! கன்னி இராசியில் புதன் இருக்க, சென்ம இலக்கனம் மீனமாக, மற்ற கோள்கள் உபய இராசிகளில் இருக்க, இச்சாதகனுக்கு மூன்று ஆண்குழந்தைகள் பிறக்கும் என்று சோதிட நூல்களைக் கற்றுணர்ந்த புலவர்கள் கூறியுள்ளார்கள்.

## மூன்று பெண்குழந்தைகளைப் பெறுபவன்

மீனமே உதய மாக
மீனத்தில் கன்னி தன்னில்
வானமர் புதனே நிற்கின்
மற்றுள கிரகம் எல்லாம்
மானவுக் குமரா சிக்குள்
அடைவுடன் இருப்பா ராகிற்
தானமாம் மூன்று பெண்ணே
தரணியிற் பிறக்கு மன்றே. (506)

(இ-ள்.) சென்ம இலக்கனம் மீனமாக, மீன இராசி அல்லது கன்னி இராசியில் புதன் நிற்க, மற்றுமுள்ள கோள்கள் அனைத்தும் உக்கும இராசி எனப்படும் இரட்டை இராசிகளில் இருந்ததென்றால், இச்சாதகனுக்கு மூன்று பெண்குழந்தைகள் பிறக்கும்.

## ஆண் குழந்தை ஒன்று, பெண்குழந்தைகள் இரண்டு பெறுபவன்

உபயமே உதய மாகி
ஒளிரமதி புகரோன் நிற்கச்
சபையதாம் உக்கு மத்தைச்
சார்ந்துள புதனும் கேது
அபையமா விரைந்து பார்க்கின்
ஆணொன்று பெண்ணி ரண்டு
இமையரால் அணிப்பொ ருட்டால்
இவைமூன்று பிறக்கும் என்பார். *(507)*

*(இ-ள்.)* உபய இராசிகளான மிதுனம், கன்னி, தனுசு, மீனம் ஆகியவற்றுள் ஒன்று சென்ம இலக்கனமாக, அதில் வளர்பிறைச் சந்திரனும் சுக்கிரனும் இருக்க, இவற்றை இரட்டை இராசிகளைச் சார்ந்திருக்கும் புதனும் கேதுவும் பார்க்க, இச்சாதகனுக்கு ஆண் குழந்தை ஒன்று, பெண் குழந்தைகள் இரண்டு பிறக்கும்.

### கர்ப்பம்

ஏழினிற் சனிஇ ருந்தே
இலக்கனாங் கிசத்தில் ஏற
வாழிய தேவ மந்திரி
மகிழ்வுடன் பாரா னாகில்
நேமியாய் வருட மூன்று
நிறைகர்ப்ப் மாயி ருக்கும்
ஆழியை நிகர்த்த கண்ணாய்!
அறிஞர்கண் டுரைத்த வாறே. *(508)*

*(இ-ள்.)* கடலைப்போன்று நீலநிறக் கண்களை யுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் சனி இருக்க, இலக்கனாங்கிசத்தில் ஏறி நிற்க, குரு இவனைப் பார்க்காவிடில் இச்சாதகனின் மனைவி மூன்று ஆண்டுகளுக்குக் கர்ப்பிணியைப் போன்று தோன்றுவாள் என்று சோதிட வல்லவர்கள் கண்டு கூறியுள்ளார்கள்.

குறிப்பு: இப்பாடலின் பொருள் சரியாக விளங்கவில்லை.

## இதுவுமது

கனிவுறு காமம் தன்னிற்
காரியும் மதியும் கூடி
பினியாய்இலக் கனத்தில் அங்சம்
ஏறியே இருப்பா ராகிற்
பனிரண்டு வருட கர்ப்பம்
படைத்திடும் என்று சொன்னார்
குனிசிலைப் புருவக் காம
கூர்கனை விழியி னாளே ! (509)

(இ-ள்.) வளைந்த வில்லைப் போன்ற புருவங்களையும் காமனின் கூர்மையான மலர்க்கணைகளை ஒத்த கண்களையும் உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் காரியும், சந்திரனும் கூடி, இலக்கனாதிபதியின் அங்கிசத்தில் இருப்பாராகில். இச்சாதகனின் மனைவி, பன்னிரண்டு ஆண்டுகளுக்குக் கர்ப்பிணியைப் போன்று காட்சியளிப்பாள்.

குறிப்பு: இப்பாடலின் பொருள் விளங்கவில்லை.

## வேறு தந்தைக்குப் பிறந்த புதல்வன்

குறிக்குமொன்று நாலாறெட் டொன்பதினுக் கிறைவன்
கூடியே நாலினிற்க பாவர்பார்த் தாலும்
எலிக்குஞ்சத் துருசனி நின்றவங்கி சனுட
இறைவனுமே உடன்கூடிப் பாவவர்க்க முறினும்
பரிக்குநா லாமிடமும் நாலுக்குடை யோனும்
பண்பான காரகனும் பாவர்மத்திய மகாச்
செருக்கும்பாக் கியனுக்கே சுவாமிபலம் தாழ்ந்தே
திகைப்புறினும் அன்யபாதா வின்மகனே என்பார். (510)

(இ-ள்.) இலக்கனம், நான்காமிடம், எட்டாமிடம், ஒன்பதாம் இடம் இவற்றிற்கு அதிபதிகள் நான்காமிடத்தில் இருக்க, இவர்களைப் பாவர்கள் பார்த்தாலும், இச்சாதகனின் புத்திரன் பகைவனாவான். பகைபெற்ற சனி நின்ற அங்கிச

அதிபதியுடன் இலக்கனாதிபதியுடன் கூடி பாவவர்க்கம் பெற்றாலும், நான்காமிடம் நான்காமிடத்திற்கு அதிபதியும் நான்காமிடத்தின் காரகனும் பாவக்கோள்களுக்கு இடையே இருக்க, ஒன்பதாமிடத்திற்கு அதிபதியின் பலம் குறைந்து இருந்தால் இச்சாதகனுக்கு அன்னிய தந்தைக்குப் பிறந்தவனே புதல்வனாக இருப்பான்.

## இதுவுமது

உதயநா லொன்பதினிற் பாவரே இருக்க
ஒன்றுநா லுக்கிறைவர் தனக்குப்பாக் கியத்தோன்
சிதைவுற்றுப் பலம்தாழ்ந்து பாவருடன் கூடச்
செப்பரிய ஒன்றுநா லுக்கதிபர் தானே
விதயமகிழ் சுபவர்க்கம் இல்லாமல் இருக்கின்
இகமீதில் அன்னியபி தாவின்மகன் என்பார்
சுசுமதியை நிகர்முகத்தாய்! கணிதநூற் புலவர்
தொடுத்துரைத்த படியாய்ந்து சொல்லுவர்கற்
றுணர்ந்தோர். *(511)*

(இ-ள்.) குளிர்ந்த நிலவையொத்த முகப்பொலிவை யுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு நான்கா மிடத்தில், ஒன்பதாம் இடத்தில் பாவக்கோள் இருக்க, இலக்கனம், நான்காம் இடம் இவற்றிற்கு அதிபதிகளைக் காட்டிலும் ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி பலம் தாழ்ந்து பாவக் கோளுடன் கூடி நிற்க, இலக்கனம், நான்காம் இடத்திற்கு அதிபர்கள் சுபவர்க்கம் இல்லாமல் இருந்தால், இச்சாதகனின் புத்திரன், அன்னிய பிதாவின் மகன் என்று சோதிடக்கலை வல்லுநர்கள் எடுத்துக் கூறியுள்ளார்கள்.

## இதுவுமது

பரவுசத்ரே சனுநின்ற வாங்கிசா திபனும்
பகரொன்று நாற்கிறையும் புதனுடனே கூடி
விரவியதோர் பாவவர்க்க மடைதிடின்வெண் மதியும்
வெள்ளியுமே பாவவர்க்க மிகுந்துநிற்கு மேனும்

திரமதியும் இலக்கனமும் குருபார்வை இன்றி
தீயோர்கள் வர்க்கமுறச் செங்கதிரைப் பாவர்
ருரனுறவே கூடிநிற்க மதிகூடா திருக்கில்
உரைத்திடுவர் அன்னியபி தாவின்மகன் என்றே. (512)

(இ-ள்.) ஆறாம் இடத்திற்கு அதிபனும் அவன்நின்ற அங்கிசத்திற்கு அதிபனும் இலக்கனாதிபதியும் நான்கா மிடத்திற்கு அதிபதியும் புதனுடன் ஒன்றுகூடி பாவவர்க்கம் அடைந்திடினும் சந்திரனும் சுக்கிரனும் பாவ வர்க்கத்தில் இருப்பினும், சந்திரனும் இலக்கனமும் குரு பார்வையின்றி தீயோர்களின் வர்க்கம் பெற்று இருப்பினும், சூரியனுடன் பாவக்கோள்கள் கூடி இருக்க, சந்திரன் சேராமல் இருந்தாலும் இச்சாதகனின் புதல்வன் அன்னிய தந்தைக்குப் பிறந்தவனாக இருப்பான்.

## இரண்டு தந்தையர்

அம்புலிதான் சனிவர்க்கம் அடைந்தைந்தில் இருக்க
அருக்கனுடன் சுக்கிரனும் அன்பாகப் பார்க்க
விம்பரெனும் புதன்பலவான் ஆகியே இருக்கில்
இரண்டுபிதா பெற்றபிள்ளை என்றுரைப்பர் மேலோர்
கம்பமுமைந் தேழ்மதியைப் புதன்பார்க்கு மேனும்
கலைமதியும் சேய்புதனும் கலந்துநிற்கு மேனும்
சம்பிரமா மாகமிகு உபயபிதா வினுக்கே
தான்பிறந்த பாலனெச் சாற்றுவர்தேன் மொழியே. (513)

(இ-ள்.) சந்திரன், சனி வர்க்கத்தை அடைந்து ஐந்தாம் இடத்தில் இருக்க, அவனைச் சூரியனும் சுக்கிரனும் பார்க்க, புதன் பலம்பெற்று இருக்கில், இச்சாதகனின் பிள்ளைக்கு இரண்டு தந்தையர் என்று கூறுவார்கள். சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில், ஏழாமிடத்தில் நிற்கும் சந்திரனைப் புதன் பார்த்தாலும், வளர்பிறைச் சந்திரனும் செவ்வாயும் புதனும் ஒன்று கூடி இருந்தாலும், இச்சாதகனின் பிள்ளைக்கு இரண்டு தந்தையர் என்று சோதிட வல்வர்கள் கூறுவார்கள்.

## வேறு தந்தை, வேறு தாய்க்குப் பிறந்தவர்கள்

தனமைந்துக் குடையோர்களுக் குப்பெலமே யாகச்
சாற்றுமைந்திற் பாவர்நிற்கப் பத்துடையோ னேனும்
வனமிகுந்த சுபரேனும் ஐந்திடத்தைப் பார்க்கில்
வையமேலன் னியபிதாவின் மகனே என்பார்
இனமான நாலுடையோன் சனிராகு குளிகன்
இவர்களுடன் கூடியே பாவவர்க்கம் அடையில்
வினவுநா லாமிடமும் பாவவர்க்க மடையில்
விபசாரி மைந்தனென விளம்புவர்மின் னொளியே. *(514)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடம், ஐந்தாமிடம் ஆகியவற்றிற்கு அதிபதிகள் பலம் பெற்று இருக்க, ஐந்தாமிடத்தில் பாவக்கோள்கள் இருக்க, பத்தாமிடத்திற்கு அதிபதி அல்லது சுபக்கோள்கள் ஐந்தாமிடத்தைப் பார்க்க, இச்சாதகனின் புதல்வன் அன்னிய தந்தைக்குப் பிறந்தவனாக இருப்பான். நான்காம் இடத்திற்கு அதிபதி, சனி, இராகு, குளிகன் இவர்களுடன் கூடி பாவ வர்க்கம் அடைந்து, நான்காமிடமும் பாவ வர்க்கம் அடைந்திருந்தால், இச்சாதகனின் புதல்வன் விலை மகளுக்குப் பிறந்தவனாக இருப்பான்.

## தீய நடத்தையுடைய தாய்

புத்திரகா ரகனுமைந்துக் கதிபதியும் இவர்கள்
போற்றுமங்கி சாதிபரும் பாவவர்க்கம் அடைய
வைத்தகுரு வீட்சணமில் லாதிருக்கு மேனும்
மதிசெவ்வாய் சத்துருதா னத்திறையைக் கூடி
வித்தகனமாம் நாலினிற்கச் சுபர்பாரா ரேனும்
மிகுராகு ரவிகூடி நாலதனில் இருக்கச்
சுத்தமில்லாப் பாவருடன் கூடவே பார்க்கச்
சுபர்பாரா திருக்கின்விப சாரிபுத்ரன் என்பர். *(515)*

(இ-ள்.) புத்திரக் காரகனும் ஐந்தாம் இடத்திற்கு அதிபதியும் இவர்கள் ஏறியுள்ள அங்கிசாதிபரும் பாவ

வர்க்கம் அடைந்து, குருவின் பார்வை இல்லாமல் இருந்தாலும் சந்திரன், செவ்வாய் இருவரும் ஆறாம் இடத்திற்கு அதிபதியுடன் கூடி நான்காம் இடத்தில் நிற்க, இவரைச் சுபக்கோள் பார்க்கவில்லை என்றாலும், இராகு, சூரியன் இவர்கள் ஒன்றுகூடி, இவர்களுடன் பாவக்கோள்கள் கூடி இருக்க அல்லது பார்க்க, சுபக்கோள் பார்க்கவில்லை என்றாலும், இராகு, சூரியன் இவர்கள் ஒன்றுகூடி, இவர்களுடன் பாவக்கோள்கள் கூடி இருக்க அல்லது பார்க்க, சுபக்கோள் பார்க்கவில்லை என்றாலும், இச்சாதகனின் புதல்வன் தீய நடத்தையுடைய தாயின் பிள்ளை என்பர்.

## இதுவுமது

*மதிபாம்பி னுடன்கூடிச் சனிவர்க்க மடைந்து*
*மதிநாலில் இருக்கப்பொன் பார்வையற்றா ரேனும்*
*அதிராமல் ஒருநாலில் சனிராகு குளிகன்*
*அம்புலியும் கூடிநிற்க நீசரே பார்க்க*
*துதியாக வேநிசியில் சனனமா னாலும்*
*சுக்கிரனிவ் வாறிருக்கப் பகல்சேர்ந்தா ரேனும்*
*சதிரான புவிமீதில் விபசாரி பெற்ற*
*தனயனெனச் சாற்றிடுவர் தவளநகை மயிலே! (516)*

*(இ-ள்.)* சந்திரன், பாம்புடன் சேர்ந்து சனி வர்க்கத்தை அடைந்திருந்தாலும், சந்திரன் நான்காமிடத்தில் இருக்க, குருவின் பார்வை இல்லாமல் இருந்தாலும், நான்காமிடத்தில் சனி, இராகு, குளிகன், சந்திரன் ஆகிய கோள்கள் ஒன்றுகூடி இருக்க, இக்கோள்களைப் பாவக்கோள்கள் பார்க்க, இரவில் பிறந்தவனாக இருந்தாலும் இவன் தீய நடத்தையை உடைய தாய்க்குப் பிறந்தவன் என்று கூறுவார்கள் என்பதை வெண்மையான பற்களையும் மயிலைப் போன்ற சாயலையும் உடைய பெண்ணே! அறிவாயாக.

*தபனன்மதி புதன்செவ்வாய் சுக்கிரனும் கூடிச்*
*சனங்களிக்குந் தபசுடையன் பவுசுடையன் என்ப*
*ரிபமனைய வோரேழின் மதிக்குமெட்டிற் பொன்னே*
*இருக்கினுமூன் றிற்புகர்க்கும் இரண்டதனிற் புகர்க்குச்*

*சுபமான நாலதிப னைந்ததிப னுடனே*
*தோன்றுமெனிற் சுகுணனன்பர் தூய்நெறியன் என்பர்*
*உபமான மாகியதாட் சணியனென உரைப்பர்*
*உரகபணா முடியல்குல் ஒளிர்வேற்கண் மயிலே. (517)*

*(இ-ள்.) நல்ல பாம்பின் படத்தையொத்த அல்குலையும் ஒளிபொருந்திய வேல்போன்ற கண்களையும் மயில் போன்ற சாயலையும் உடைய பெண்ணே! சூரியன், சந்திரன், புதன், செவ்வாய், சுக்கிரன் ஆகிய ஐந்து கிரகங்களும் ஏதேனும் ஒரு வீட்டில் ஒன்றுகூடி இருக்க, இச்சாதகன் தவம் உடையவனாகவும் சிறந்தவனாகவும் இருப்பான். ஏழாம் இடத்திற்கு உரிய சந்திரனுக்கு எட்டாம் இடத்தில் குரு இருந்தாலும் மூன்றாம் இடத்தில் நிற்கும் சுக்கிரனுக்கும் இரண்டாமிடத்தில் இருக்க இச்சாதகன், சிறந்தவனாகவும், தூயநெறியுடையவன் என்றும் கூறுவார்கள்.*

## பல்வேறு கண்டங்கள்

*மீளமதி தனைவெள்ளி பார்த்தக்காற் பெரியோன்*
*வெய்யவனை மதிசெவ்வாய் கூடின்நல்ல புத்தி*
*ஆனரவி மதிவெள்ளி சனியுமே கூடில்*
*அச்சமனோ மதியென்பர் மதியிலக்க னேசன்*
*தானமுறு நாலிநிற்கிற் சலபயமாம் என்பார்*
*சாற்றுமா றெடிலிராகு நிற்கில்சோர பயமாம்*
*ஈனமிலா நேத்திரத்திற் இரவிசனி குளிகன்*
*இருந்தக்காற் பிசாசுபயம் என்றுரைத்தார் தேனே. (519)*

*(இ-ள்.) தேன் போன்ற இனியமொழி பேசும் பெண்ணே! ஏதேனும் ஒரு வீட்டில் சந்திரனைச் சுக்கிரன் பார்க்க, சூரியனுடன் சந்திரன், செவ்வாய் ஆகியவை கூடி இருக்க, இச்சாதகன் நல்ல புத்தியை உடையவன். சூரியன், சந்திரன், சுக்கிரன், சனி ஆகிய கோள்கள் ஒன்றுகூடி இருக்கின், இச்சாதகன், அச்சம் உடையவனாக இருப்பான். சந்திரனும், இலக்கனாதிபதியும் இலக்கனத்திற்கு நான்காம் இடத்தில் இருக்க, நீரினால் அச்சம் (நீரில் கண்டம்)*

உண்டாகும். ஆறாமிடம், எட்டாமிடம் ஆகியவற்றில் இராகு இருந்தால் திருடர்களால் அச்சம் உண்டாகும். இரண்டாமிடத்தில் சனி, சூரியன், சந்திரன் ஆகிய கோள்கள் இருக்க, பிசாசுவால் பயம் உண்டாகும்.

### மனத்துயரம் உடையவன்

குலவிய வெள்ளி ஆறில்நின் றிடினும்
குளிகனே வியத்தில் நின்றிடினும்
நிலவுபொன் வெள்ளி சனியுமே கூடி
நிற்கினும் மனோதுக்கம் என்பர்
குலவிய மதியும் கூடவே இருக்க
ஒன்பதில் உச்சமுற் றிருந்தோர்
நலமுறப் பார்க்கின் மத்திப வயதில்
நல்குமே மனோதுக்கம் என்பர். (519)

(இ-ள்.) சுக்கிரன் ஆறில் நின்றிருந்தாலும், குளிகன் பன்னிரண்டாம் வீட்டில இருந்தாலும், குரு, வெள்ளி, சனி ஆகிய கோள்கள் கூடி நின்றாலும் இச்சாதகன், மனதுக்கத்தை உடையவன் என்பர். இக்கோள்களோடு சந்திரனும் சேர்ந்து இருக்க, ஒன்பதாம் இடத்தில் உச்சம்பெற்று இருந்த கோள்கள் பார்க்க, இச்சாதகன் மத்திய வயதில் மனத்துயரம் அடைபவனாக விளங்குவான்.

மன்னிய நாலிற் தேய்மதி இருக்கின்
மாதுரு வழிதுக்கம் உடையோன்
நுண்ணிய கதிரோன் நீசனே யாக
ஒன்பதுக் கிறைவனும் சனியும்
அன்னிய பாவர் தன்னுடன் கூட
ஐந்தினில் சேயிருந் திடினும்
பன்னிய பிதாவின் வழித்துக்கம் உடையோன்
பாகினும் இனியதேன் மொழியே! (520)

(இ-ள்.) சர்க்கரைப் பாகைக் காட்டிலும் இனிய மொழியினை பேசக்கூடிய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் தேய்மதி இருக்க, தாயின் மூலம் துக்கம் உடையவனாக இச்சாதகன் இருப்பான். சூரியன் நீசம் பெற்று நிற்க, ஒன்பதாம் இடத்திற்கு அதிபதியும் சனியும் பாவக்கோள்களோடு கூடி இருந்தாலும், இலக்கனத்திற்கு ஐந்தாம் இடத்தில் செவ்வாய் இருந்தாலும் இச்சாதகன் தந்தையின் காரணமாக துக்கம் உடையுவனாக இருப்பான்.

## கோபமுடையவன், தீயவன்

நிறையும்பாக் கியத்தில் இரவிசேய் புந்தி
நேயமாய்க் கூடிநின் றாலும்
குறைவிலாக் கதிரோன் புகர்செவ்வாய் ஒன்றாய்க்
கூடினும் கோபியென் றுரைப்பர்
மறைவிலா நாலாம் இடம்முத லேழு
வரையினும் பாவரே இருக்கப்
பொறையுறும் சுபரே நோக்கிடா திருக்கில்
புகலுவர் துர்ச்சனன் என்றே. (521)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்தில் சூரியன், செவ்வாய், புதன் ஆகிய கோள்கள் ஒன்றாகக் கூடி இருந்தாலும், சூரியன் சுக்கிரன், செவ்வாய் ஆகிய கோள்கள் ஒன்றாகக் கூடி இருந்தாலும் இச்சாதகன் கோபம் உடையவன் என்பர். சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடம் முதல் ஏழாம் இடம்வரை பாவக்கோள்கள் இருக்க, சுபக்கோள்களின் பார்வை இல்லாவிடில், இச்சாதகன் தீயவன் என்று எல்லோரும் கூறுவார்கள்.

## கருமி, அற்பபுத்தி, நிலையற்ற புத்தி உடையவர்கள்

ஏழின்வெண் மதியும் இருக்கினும் சனியும்
இராகுவும் கூடினும், கேது
கோளிலா வுதயம் முதலாறு வரையில்
கோளேழும் நிற்கினும் உலுத்தன்

*நீறுறு உதயம் ஏழினிற் குளிகன்*
*நின்றிடில் அற்புத் தியனாம்*
*தாழும் ஏழிற் சனியனே இருக்கிற்*
*சஞ்சலப் புத்தியன் என்பார்.* *(522)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஏழாம் இடத்தில் பூரணச் சந்திரன் இருந்தாலும் சனியும் இராகுவும் கூடி இருந்தாலும், இச்சாதகன் இலக்கனம் முதல் ஆறாமிடம் வரையில் ஏழு கோள்களும் இருக்க, இச்சாதகன் கருமியாக இருப்பான். இலக்கனத்திலும் இலக்கனத்திற்கு ஏழாமிடத்திலும் குளிகன் இருந்தால் இச்சாதகன் அற்ப புத்தியை உடையவன். ஏழாமிடத்தில் சனி இருந்தால், இச்சாதகன் நிலையற்ற புத்தியை உடையவனாக இருப்பான்.

### தீய சிந்தனை உடையவன்

*புந்தியை அன்றி மற்றோர்*
*பொருந்தியே கூடிற் றாலும்*
*இந்துசேய் கூடிப் பத்தில்*
*இருக்கினும் பொல்லாப் புத்தி*
*தந்ததோர் மூன்றில் ஐந்தில்*
*சனிநிற்கப் பாக்கி யத்தில்*
*மந்தமாங் குளிகன் நிற்கில்*
*வந்திடும் பாவ புத்தி.* *(523)*

*(இ-ள்.)* எந்த இடமாக இருந்தாலும் புதனைத் தவிர மற்ற கோள்கள் அனைத்தும் ஒன்றுகூடி இருந்தாலும், சூரியன், செவ்வாய் ஆகிய இரண்டு கோள்களும் ஒன்றுகூடி பத்தாம் இடத்தில் இருந்தாலும், இச்சாதகன் தீய புத்தியை உடையவனாக இருப்பான். சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் அல்லது ஐந்தாமிடத்தில் சனி இருக்க, ஒன்பதாமிடத்தில் குளிகன் இருந்தால், இச்சாதகன் பாவ சிந்தனையை உடையவனாக இருப்பான்.

### குரூர புத்தி, கள்ளம் கபடம் உள்ளவர்கள்

நாலுகேந் திரனும் பாவர்
நண்ணினும் மகரம் தேளும்
சாலுமே உதய மாகச்
சனிநிற்கில் குரூர புத்தி
மாலுடன் செவ்வாய் பானு
மதியுமே கூடிற் றாலும்
காலுறும் ஐந்திற் கேது
கலக்கினுங் கபடி யாமே. (524)

(இ-ள்.) மகரம், விருச்சிகம், கும்பம் ஆகியவற்றுள் ஒன்று சென்ம இலக்கனமாக, அதில் சனி இருக்க, நான்கு கேந்திரத்திலும் பாவக்கோள்கள் இருக்க, இச்சாதகன், குரூர புத்தி உடையவனாக இருப்பான். புதன், செவ்வாய், சூரியன், சந்திரன் ஆகிய நான்கு கோள்களும் ஒன்றாகக் கூடி இருந்தாலும், ஐந்தாம் இடத்தில் கேது நின்றாலும் இச்சாதகன், கள்ளம் கபடம் உள்ளவனாக இருப்பான்.

### அற்பன், செய்நன்றி மறந்தவன்

கூட்டுமொன் றைந்தொன் பானிற்
குளிகனே இருக்க பாவர்
மீட்டுறக் கூடிற் றாலும்
மிகுமாந்தி பவனன் றானும்
மீட்டுற இவ்வா றாக
இருந்திடின் அற்பன் மாந்தி
தீட்டுங்கா மத்தில் நிற்கிற்
செய்நன்றி அறியான் என்பர். (525)

(இ-ள்.) சென்ம இலக்கனம், ஐந்தாமிடம், ஒன்பதாமிடம் இவற்றில் குளிகன் இருக்க, இவனோடு பாவர் கூடியிருந்தாலும், மாந்தி அவ்விடத்தில் இருந்தாலும் அற்பசிந்தனை உடையவனாக இருப்பான். மாந்தி, ஏழாமிடத்தில் இருக்க, இச்சாதகன் செய்நன்றியை மறந்தவனாக இருப்பான்.

### சோம்பல், மந்தபுத்தி உடையவர்கள்

எழிற்காமம் முதலாய்ப் பத்தாம்
இடம்வரை ஏழு கோளும்
கழிப்புற நிற்கில் சோம்பல்
கலைமதி ஆறில் நிற்க
வழிப்பிலா இரண்டில் எட்டில்
ஐந்தினிற் சனியும் நிற்க
ஒழிப்பில்தா மதமாம் புத்தி
உடையவன் என்ன லாமே. *(526)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடம் முதல் பத்தாமிடம் வரையில் ஏழுகோள்களும் நிற்க, இச்சாதகன் சோம்பல் உடையவன். சந்திரன் இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் நிற்க, இரண்டாமிடம், எட்டாமிடம், ஐந்தாமிடம் ஆகியவற்றில் சனி இருக்க, இச்சாதகன் திமிர் பிடித்தவனாக இருப்பான்.

### துராசை, நிராசை, மானம் உடையவர்கள்

குருவெள்ளி அன்றி மற்றோர்
கூடினாற்று ராசை என்பர்
மருவுமொன் றேழொன் பானின்
மாந்தியும் பாம்பு நிற்கில்
வருவுமே மானி என்பர்
மிக்கலா பத்தில் வெய்யோன்
நிருதர்போ லிருக்கின் மாதே!
நிராசயன் என்று கூறும். *(527)*

(இ-ள்.) சாதகத்தில் ஏதாவது ஒரு இடத்தில் குரு, சுக்கிரன் ஆகிய கோள்களையன்றி, மற்றுள்ள கோள்கள் அனைத்தும் ஒன்றுகூடி இருந்தால், இச்சாதகன், தீய ஆசையை உடையவன். சென்ம இலக்கனம், ஏழாமிடம், ஒன்பதாமிடம் இவற்றில் மாந்தியும் பாம்பும் நின்றால், இச்சாதகன் மானஸ்தனாக விளங்குவான். சென்ம இலக்கனத்திற்குப் பதினோராம் இடத்தில் சூரியன் இருந்தால், இச்சாதகன் நிராசையை உடையவன்.

## காரியக் குறைபாடு

அந்தமாம் மூன்று நாலோ
டைந்தெட்டுப் பத்து தன்னில்
மந்தன்சேய் குளிகன் நிற்கின்
மன்னுகா ரியங்கள் தாட்சி
விந்தையாங் காரி யங்கள்
விக்கினம் ஆகும் என்பர்
சந்திர திலகம் போன்ற
தாமரை முகத்தி னாளே. *(528)*

(இ-ள்.) ஒளிபொருந்திய நிலவினைத் திலகமாக வைத்திருக்கக் கூடிய செந்தாமரை போன்ற அழகான முகத்தையுடைய பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடம், நான்காமிடம், ஐந்தாமிடம், எட்டாமிடம், பத்தாமிடம் ஆகிய இடங்களில் சனி, செவ்வாய், குளிகன் நின்றால், நிலைபெற்ற காரியங்கள், முக்கியமான செயல்கள் போன்றவை குறைபாடு உடையவையாகும்.

## பிரபுவாக விளங்குவான்

உரைத்தபுத் திரத்தா னத்தோன்
உச்சகேந் திரகோ ணத்திற்
தரைக்குளெண் ணதிகா ரங்கள்
தனையுறும் பிரபே யாவன்
வரைத்தபுத் திரத்தா னத்தோன்
மகிழ்ந்தெந்தத் தானம் தன்னில்
நிரைத்துநின் றானே அந்த
நிகர்தான பலன்கொ டுப்பன். *(529)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்திற்கு அதிபதி உச்ச கேந்திர திரிகோணங்களில் இருக்க இச்சாதகன் இப்புவியில் பல்வேறு அதிகாரங்களைப் பெற்ற பிரபுவாக விளங்குவான். சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்திற்கு அதிபதியாக எந்த இடங்களில் இருந்தாலும் அந்த இடத்தின் பலனைக் கொடுப்பார்கள்.

## துயரம் மிக்க செல்வன்

கோதறு தனுர்க்குப் பத்திற்
குருநிற்கப் பிரபுக் கேதான்
யேதுவா கனமு டக்கம்
ஏற்ற சத்துருவி ரோதம்
மிதுன மனிதர் மக்கள்
விரோதமாம் சனிமே டத்தில்
ஏதுற நிற்பி னுந்தான்
பிரபுக்கே மிகவும் துன்பம். (530)

*(இ-ள்.)* தனுசு இராசிக்குப் பத்தாமிடத்தில் குரு நிற்க, பிரவுவாக விளங்கினாலும் இச்சாதகனின் வாகனங்கள் செயலற்றுப் போகும். பகைவரின் விரோதம் மிகுதியாகும். மக்கள், உற்ற மனிதர் அனைவரும் விரோதமாவர். சனி, மேட இராசியில் இருந்தால், இச்சாதகன் வசதி படைத்தவனாக இருப்பினும் மிகுந்த துன்பம் உண்டாகும்.

## முத்தி யோகம்

வெள்ளிபொன் புதன்செவ் வாய்க்கு
வெண்மதி பலமே யாகி
ஒள்ளிய பிரபுக் கேதான்
உச்சமாக முத்தி யோகம்
தெள்ளிய தனலா பங்கள்
சிறப்புள மகிழ்ச்சி யுண்டாம்
வள்ளிய கமலப் போதில்
வாழ்திரு வனைய தேனே! (531)

*(இ-ள்.)* தாமரைக்கொடியில் மலர்ந்துள்ள மலரில் வாழ்ந்திருக்கும் திருமகளையொத்த அழகையுடைய இனிய மொழி பேசும் பெண்ணே! சுக்கிரன், குரு, புதன், செவ்வாய், வளர்பிறைச் சந்திரன் ஆகியவை பலம் பெற்று விளங்க, இச்சாதகன் உயர்ந்த பதவியில் இருப்பான். செல்வம் இலாபமாகக் கிடைக்கும் மிகுந்த மகிழ்ச்சியை உடையவனாக விளங்குவான்.

## ஐந்தாம் பாவத்தில் சூரியன், சந்திரன் நின்ற பலன்

*செய்யவைந்தினில் இரவிநிற்கில் புத்திதிர ஞானம்*
*தரித்திரம்புத் திரநாசம் பிதுர்த்தோஷம் அல்லால்*
*வையமேற் சருவசன விரோதமுண்டாங் காந்தன்*
*வனவாசச் சஞ்சாரம் சரமன்னர் கோபம்*
*ஐயமிலா நிர்வித்தை யற்பாயுள் ஐந்தில்*
*அலவனுறிற் தாய்க்கிடரும் புத்திதனம் தயவு*
*துய்யமாந்த் ரீகவித்தை உடையன்முற் கோபி*
*சோம்பல்கா மிசவுபாக்யன்துலங்கியசரீரன். (532)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாம் இடத்தில் சூரியன் நிற்கில் இச்சாதகன் நிலையான புத்தி, ஞானம் உடையவன்; வறுமை அடைவன்; புத்திரதோசம் உண்டாகும். தந்தைக்கு தோஷம் அல்லது தந்தையுடன் விரோதம் உண்டாகும். பிற தேசங்களுக்குச் சென்று அலைவான்; மன்னர் கோபம் உடையவன்; வித்தையற்றவன்; ஐந்தாமிடத்தில் சந்திரன் இருக்க, இச்சாதகனின் தாய்க்குத் துன்பம் நேரும். நல்ல புத்தி, செல்வம், கோபம் கருணை உடையவன்; மாந்திரீக வித்தை தெரிந்தவன்; சோம்பல் உடையவன்; காமம் மிக்கவன்; அனைத்து பாக்கியங்களையும் பெற்றவன்; பொலிவு பெற்ற உடலை உடையவன்.

## ஐந்தாம் பாவத்தில் செவ்வாய் நின்ற பலன்

**வக்கிரனே ஐந்திநிற்கில் புண்படுகி லேசி**
**மனமடிவு சஞ்சாரம் கோபிதன நாசம்**
**மிக்ககா ரியநாசம் பாவசிந்தை கலகி**
**விளங்கியபுத் திரநாசம் நீசகன்மம் உடையன்**
**தக்கவை ராக்கியப ராக்கிரமம் உடையன்**
**தைரியமும் உடையனெனச் சாற்றிடுவர் மேலோர்**
**திக்கயமும் குலகிரியும் வெருவுவதும் மீறித்**
**தேவகுரு பீடமெனச் சிறந்ததன மயிலே! (533)**

*(இ-ள்.)* எட்டுத்திசையானைகளும், மலைகளும் அச்சம் கொள்ளும்படியாக உயர்ந்த தேவகுரு பீடத்தைப் போன்று விளங்கும் தனங்களையும் மயில் போன்ற சாயலையும் உடைய பெண்ணே! செவ்வாய், சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் இருந்தால், இச்சாதகன் மனம் புண்படுகின்ற கவலைகளை உடையவன்; அலைச்சலைக் கொண்டவன்; கோமுடையவன்; இவன் செய்யும் செயல்கள் நாசமடையும், பொருள் நாசமடையும்; இவன் கலகம் செய்பவன்; பாவசிந்தனை உடையவன்; புத்திர நாசம் உடையவன்; தீய செயல்களைச் செய்பவன்; வைராக்கியமும் தைரியமும், வீரமும் உடையவன் என்று சோதிட வல்லுநர்கள் கூறுவார்கள்.

## ஐந்தாம் பாவத்தில் புதன், குரு நின்ற பலன்

*புந்தியைந்தில் இருக்கின்மாதுருபுத்ர தோஷம்*
*புராணகதை கேள்விகல்வி மான்ஞானி யாவன்*
*சிந்தைமகிழ் பிரதாபி சம்பத்து கீர்த்தி*
*செய்யபுத்தி மணிமந்திர அவுஷதவல் லவனாம்*
*மந்திரியே ஐந்திநிற்கிற் பெரியோர்கள் உறவு*
*வாய்ச்சாலன் தீர்க்காயுள் வலியுளவி வேகி*
*சந்திரசாத் திரநிபுணன் மன்னவர்சி நேகன்*
*தாயைப்பெற் றோர்க்கரிட்டம் உன்னதச ரீரன். (534)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் புதன் இருக்க, இச்சாதகனுக்குத் தாய், புதல்வர்க்குத் தோசமாகும். புராண கதை, கேள்விகளில் சிறப்புடன் விளங்குவான்; கல்வி கற்று தேர்ந்தவன்; ஞானியாக இருப்பான்; மகிழ்ச்சி உடையவன்; புகழ் உடையவன்; செல்வம் சேரும்; மணி மந்திரம் மருத்துவத்தில் புகழ் உடையவன். ஐந்தாமிடத்தில் குரு இருக்கப் பிறந்த சாதகன், பெரியோர்களுடன் நட்பு உடையவன்; பேச்சாற்றல் மிக்கவன், தீர்க்காயுள் கொண்டவன், விவேகி; சாத்திரங்களைக் கற்றுத் தேர்ந்தவன். மன்னவர்களிடம் நட்புறவு பூண்டவன்; தாயின் பெற்றோர்க்கு மரணம் ஏற்படும். நல்ல உடலுடையவன்.

## ஐந்தாம் பாவத்தில் சுக்கிரன் நின்ற பலன்

*சுங்கனைந்தில் இருக்கில்சுயங் கவித்வப்பிர சங்கன்*
*சுகதேகன் பெண்பிரசை யுளன்தூய புத்தி*
*இங்கிதவிநோ தப்பிரியன் சனமித்திர னாகும்*
*இலங்குமட வார்சரசக் கலவியினிற் பிரியன்*
*பொங்கமுறு நன்மனது வெகுசனக்கூட் டுறவு*
*புவிராசர் நட்புடையன் மிகுகீர்த்தி உடையன்*
*சங்கையுறு மந்திரிச்சொல் சேனாதிபதி தன்மம்*
*சகத்தினா லாவிதமுந் தனமுடையன் என்பர். (535)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் சுக்கிரன் இருக்க, இச்சாதகன் சுயமாகக் கவிகளை இயற்றுவதிலும் பிரசங்கங்கள் செய்வதிலும் வல்லவன்; ஆரோக்கியமான உடலைக் கொண்டவன்; பெண்கள் மீது ஆசை உடையவன்; தூய அறிவினை உடையவன்; விநோதங்களில் ஆர்வம் கொண்டவன்; உற்றார் உறவினர் களுக்கு நண்பனாக விளங்குபவன். பெண்களோடு சரசம் செய்வதிலும் கூடுவதிலும் மகிழ்ச்சி கொள்பவன்; நல்ல மனதைக்கொண்டவன்; அதிக சனங்களோடு நட்புறவு கொண்டவன்; மன்னர்களோடு நல்லுறவு கொண்டவன்; மிகுந்த புகழையுடையவன்; மந்திரி, சேனாதிபதி போன்ற பெரும்பதவிகளில் இருப்பான். தர்மங்களைச் செய்பவன்; இவ்வுலகில் நாலாவகையிலும் பொருள் வரவு உடையவன்.

## ஐந்தாம் பாவத்தில் சனி நின்ற பலன்

*காரியே ஐந்தினிற்கிற் றருமசிந் தையுடயன்*
*கட்டைப்புத்தி அற்பாயுள் சத்ருமைந்தர் நாசம்*
*பாரிலுத யம்பிறக்கிற் தத்துவருந் தப்பிற்*
*பகருவர்தீர்க் காயுளுண்டாம் பவமிருந்து உண்டாம்*
*சீரியதோர் பிதுர்த்தோஷம் புத்திரது வேஷம்*
*தேவீனன் பிறரைநிந் திப்பன் பொல்லான்*
*நேரியதோர் குலமத்தன் சதாதுக்கி அற்பன்*
*நிகரான கணிதநூல் நிகழ்த்தியதிவ் வகையே. (536)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் சனி இருக்க, இச்சாதகன், தரும சிந்தனை உடையவன்; அறிவு குறைந்தவன்; அற்பாயுள் உடையவன்; பகைவர்களும் புத்திரர்களும் அழிவர்; இலக்கனத்தில் சனி இருக்க, கண்டம் உண்டாகும்; அதிலிருந்து தப்பிவிட்டால் தீர்க்காயுள் உண்டாகும்; ஆனால் மரணத்திற்கு ஒப்பான கண்டம் ஏற்படும்; தந்தைக்கும் கண்டம் ஏற்படும்; புத்திரர்கள் மீது பகைமை பாராட்டுவான்; உடல்நலக் குறைபாடு உடையவன்; பிறரைத் திட்டக்கூடியவனாக விளங்குவான்; பொல்லாதவனாக இருப்பான்; சாதகாலமும் துக்கமுடைய வனாக விளங்குவான்; அற்ப சிந்தனை உடையவன் என்று சோதிடக்கலை வல்லுநர்கள் கூறியுள்ளார்கள்.

## இராகு நின்ற பலன்

*பலஇராகு ஐந்திநிற்கிற் றாவுதலைப் பிள்ளை*
*பெண்பெறுவன் அபகேடி அற்பபுத்திர ருடையன்*
*பலவேசை பரிகாசஞ் சரசவிநோ தங்கள்*
*பண்புறுசெப் பிடுவித்தை படித்தோர்க ளிடத்தில்*
*நலமான நேசமுளன்கிராமசஞ் சாரன்*
*நன்மையிலாப் பாவசிந்தை மனோபீதி தரித்திரன்*
*விலக்கியதுர்க் காமியனா சாரன்வஞ் சகனாம்*
*வெற்பனைய தனமயிலே விளங்குமிளங்*
*குயிலே! (536)*

(இ-ள்.) மலையையொத்த தனங்களையும் மயில் போன்ற சாயலையும் கொண்டு இளம் குயிலின் இனிய குரலையும் பெற்று விளங்கும் பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் இராகு இருப்பின், இச்சாதகனுக்குப் பெண்பிள்ளை முதல் குழந்தையாகப் பிறக்கும். இவன் அபகேடு உடையவன், பரிகாசம், சரசம், விநோதங்கள், செப்பிடு வித்தைகள் செய்பவன், படித்தவர்களிடம் நட்பு பூண்டவன், கிராமம் கிராமமாக அலைபவன். நன்மையல்லாத பாவ சிந்தனை உடையவன்; தீய விருப்பம் உடையவன்; ஆசாரம் தவறுபவன்; வஞ்சகன்.

## ஐந்தாம் பாவத்தில் கேது, குளிகன் நின்ற பலன்

கேதுவேஐந் தினிற்கின் ஞானியன்புண் பட்ட
கிலேசபுத் திரநாசம் மிகுவஞ்சன் குரூரன்
மீதுசதா ரோகிமைந்தர் தனைபெற்றே இழப்பன்
மிக்கஐந்திற் குளிகநிற்கிற் பூதவயித் தியனாம்
கோதுடைய துர்க்கருமி சதாதுக்கி பாவி
கூறரிய சஞ்சலமாம் பாவபுத்தி உடையன்
ஓதுமடஞ் சத்திரத்திற் பிறர்மனையிற் பொசிப்பன்
உலைவுறுதுர்ச் சீவனமென் றுரைத்திடுவர்
மயிலே. *(538)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் கேது இருக்க, இச்சாதகன் ஞானியாவான். கவலையை உடையவன்; புத்திரர்க்கு அழிவு உண்டாகும்; மிகுந்த வஞ்சகன்; குரூரமாக விளங்குபவன்; எப்பொழுதும் நோயுடையவன்; பிள்ளைகளைப் பெற்று இழப்பான்; சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் குளிகன் இருக்க, இச்சாதகன் அறுவை மருத்துவனாக விளங்குவான்; தீய செயல்களைச் செய்வான்; எந்நேரமும் துக்கம் உடையவன்; பாவ காரியங்களைச் செய்பவன்; சஞ்சல மனம் உடையவன்; பாவ சிந்தனை உடையவன்; வேதபாடங்களை ஓதும் மடங்களிலும், சத்திரங்களிலும் பிறர் மனைகளிலும் உணவு உண்பான். மனத்துயரம் செய்யும் தீய தொழிலைச் செய்பவனாக இருப்பான்.

## ஐந்தாம் பாவத்தில் மாந்தி நின்ற பலன்

நிகளமாந் திபவன் ஐந்தில்
நிற்கபுத்தி ரர்கள் நாசம்
இகழ்சதா துக்கி யென்பர்
எதிருறப் பாவர் நிற்கின்

மகிழ்புத்தி புத்திர தோஷம்
மன்னமே ழெட்டுக் குள்ளோர்
தருமைந்திற் நிற்கிற் றாரந்
தாசிதா சாளும் நஷ்டம். (539)

(இ-ள்.) மாந்தி, ஐந்தாம் இடத்தில் நிற்க, இச் சாதகனின் புத்திரர்களுக்கு மரணம் நேரிடும். மேலும், இவன் எந்நேரமும் துக்கமுடையவனாக இருப்பான். இம்மாந்தியைப் பாவக்கோள்கள் நோக்க, அறிவு மயக்கம் ஏற்படுவதோடு, புத்திரதேஷம் உண்டாகும். ஏழாமிடம், எட்டாமிடம் இவற்றிற்கு அதிபதிகள், ஐந்தாமிடத்தில் இருந்தால், மனைவியும், ஆசை நாயகிகளும் மரணம் அடைவார்கள்.

**மேற்படி கிரகங்கள் சகிதாதிய பலன்**

கடகம்ஐந் தாகிற் பானு
கலந்திடில் வெகுபுத் ராளாம்
மடிபுனைச் செவ்வாய் நிற்கின்
முந்தினதாரத் துக்கே
டறுதீர்ப் பிள்ளை இல்லை
இரண்டாந்தா ரந்த னக்கே
டமுறு பிள்ளை உண்டாம்
சேயரி கண்ணி னாளே. (540)

(இ-ள்.) சிவந்த மகனின் கண்களை ஒத்த அழகான கண்களையுடைய பெண்ணே! கடகம் ஐந்தாமிடமாகி அதில் சூரியன் இருக்க, இச்சாதகனுக்குப் புத்திரர்கள் அதிகமாகப் பிறப்பார்கள். செவ்வாய் நிற்கின், இச்சாதகனின் முதல் தாரத்திற்குப் புதல்வர்கள் இல்லை. இரண்டாம் தாரத்திற்குப் புதல்வர்கள் பிறப்பார்கள்.

## அதிக புத்திரர்

மதிக்கைந்து கடக மாகி
ஐந்தனே இருப்பா னாயின்
விதித்திரு போர்க்க ளத்தின்
மேவுவன் சாமி ராசி
அதிர்ப்பொடு பாவ மத்ய
மாகியே ஐந்தின ராசிக்
கதிப்பொடு வெகுபுத் ராளைக்
கனம்பெறப் பெறுபவன் தானே. *(541)*

*(இ-ள்.)* சென்ம இராசிக்கு ஐந்தாமிடம் கடக இராசியாகி ஐந்தாமிடத்திற்கு அதிபதி இருப்பானாயின், இச்சாதகன், போர்க்களத்திற்குச் செல்வான் என்றவாறு. இலக்கனாதிபதி அல்லது சென்ம இராசி பாவக்கோள்களுக்கு இடையிலமைந்து ஐந்தாம் இடத்தின் இராசி பலம்பெற்று விளங்க, இச்சாதகன் அதிக எண்ணிக்கையில புத்திரர்களைப் பெறுவான்.

## குறைந்த புத்திரர், புத்திரர் அழிவு

இடபத்தேள் மிதுனம் கன்னி
இலங்கிய சிங்கம் ஐந்தாம்
இடமெனில் அற்ப புத்ராள்
என்றனர் மகரம் ஐந்தாம்
தடமுற வியாழன் நிற்கிற்
றனயரே நாச மாகும்
அடர்பொன்னுக் கைந்திற் பாவர்
அமர்ந்திடிற் புத்ர நாசம். *(542)*

*(இ-ள்.)* இடபம், விருச்சிகம், மிதுனம், கன்னி, சிம்ம இராசிகள் ஐந்தாமிடமாக இருக்கக் கூடிய சாதகர்களுக்கு குறைந்த எண்ணிக்கையில் புதல்வர்கள் தோன்றுவர். மகரம் ஐந்தாம் இடமாக, அதில் குரு இருக்க, இச்சாதகனுக்குப் பிறக்கக் கூடிய புதல்வர்களுக்கு அழிவுண்டாகும். குருவிற்கு ஐந்தாம் இடத்தில் பாவக்கோள்கள் அமர்ந்திருக்க, இச்சாதகனின் புதல்வர்களுக்கு அழிவுண்டாகும்.

### புத்திரர் அழிவு, அதிக புத்திரர்

ஒற்றித்த இராசி ஐந்தில்
　　ஒளிர்மதி செவ்வாய் பொன்னோன்
சுற்றியே பார்ப்பா ராகிற்
　　சொல்லிய புத்ர நாசம்
வெற்றியைந் துடையோன் தன்னை
　　வெள்ளிவெண் மதியும் கூடிற்
றெற்றியே பார்க்கு மேனுஞ்
　　செப்புவர் வெகுபுத் ராளே. *(543)*

(இ-ள்.) ஒற்றை இராசி ஐந்தாமிடமாக அதனை வளர்பிறைச் சந்திரன், செவ்வாய், குரு ஆகிய கோள்கள் பார்ப்பாராகில், இச்சாதகனின் புதல்வர்கள் மரணம் அடைவார்கள். சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்திற்கு அதிபதியுடன் சுக்கிரன், வளர்பிறைச் சந்திரன் ஆகியவை ஒன்றுகூடி இருந்தாலும் அல்லது ஐந்தாமிடத்தை இக்கோள்கள் பார்த்தாலும் இச்சாதகனுக்குப் புத்திரர்கள் மிகுதியாக இருப்பார்கள்.

### மூடவன், புத்திர விரோதி

கரியவன் உதயம் நிற்கக்
　　கடகத்திரி கோணாம் தத்தில்
வலியதோர் வெள்ளி நிற்க
　　ஐந்தினைச் சுபர்நோக் காரேல்
முரிவுள முடவன் ஐந்தின்
　　மொழியுமட் டத்தோன் நிற்கில்
புரியும்புத் திரராற் சேதம்
　　புத்திர விரோதி யாமே. *(544)*

(இ-ள்.) சனி, இலக்கனத்திற்கு நிற்க, கடகம் திரிகோணமாக அதில் சுக்கிரன் வலிமை பெற்று நிற்க, ஐந்தாமிடத்தை சுபக்கோள்கள் நோக்காவிடில் இச்சாதகன் உடல் ஊன முற்றவனாக இருப்பான். சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் எட்டாமிடத்திற்கு அதிபதி இருந்தால் இச்சாதகனுக்குப் புத்திரர்களால் பொருள் சேதம் நேரும். இவன் புத்திரர்களுக்குப் பகைவனாக விளங்குவான்.

இனியபுத் திரத்தா னத்திற்
இலக்கனா திபனே நிற்கிற்
கனியுறு நல்ல புத்தி
கனராசப் பிரபு சேவை
முனிவில்சந் ததிவிர்த் திக்கு
முற்றுந்தீர்க் காயுள் உண்டாம்
வனிதையர்க் கரசே கேளாய் !
வகுத்தனர் கணித நூலோர். *(545)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் இலக்கனாதிபதி இருக்க, இச்சாதகன், நல்ல அறிவாளியாக விளங்குவான். இராசசேவை செய்பவனாக விளங்குவான். இச்சாதகனின் சந்ததியினருக்குதீர்க்காயுள் உண்டாகும் என்று சோதிட நூலில் வல்லவர்கள் கூறியுள்ளார்கள்.

**ஐந்தாம் பாவம் முற்றிற்று.**



# ஆறாம் பாவம்

அட்டமத்தோன் ஆறினிற்கிற் றன்வார்த்தை மூப்பு
அதிகசவு ரியம்போக ஆன்றிடசரீரம்
கொட்டமிடு பாவசிந்தை சத்ருசெயங் கலகம்
கூட்டுகோளிற்பிரியன் என்பருத யத்தோன்
றொட்டசத் துருவைவஞ்சம் செய்தல்பல வீனம்
தொகுத்திருமற் பாயுளடிக் கடிமிருத்துத் தோஷங்
கட்டழகும் ஒப்பனையுங் கண்டிளைஞர் மடலூர்
கனிந்திளகிப் புளகிதஞ்செய் களபமுலை மயிலே! (546)

(இ-ள்.) கட்டழகோடு ஒப்பனையால் மேலும் அலங்கரித்துக்கொண்டு காணும் இளைஞர்களை யெல்லாம் மடலூரும்படியான நிலைக்கு இட்டுச்செல்லும் கனிந்து இளகி, மயிர்க்கூச்சொரியுச் செய்யும் சந்தனம் பூசப்பட்ட தனங்களையும் மயிலின் சாயலையும் உடைய பெண்ணே! எட்டாமிடத்திற்கு அதிபதி ஆறாமிடத்தில் இருக்க, அதிகமாகவும் திமிராகவும் பேசுபவன்; அதிக வசதிகளும் இன்பமும் அடைபவன்; நல்ல திட உடல் உடையவன்; பாவ சிந்தை மிக்கவன்; பகைவர்களை வெற்றிகொள்பவன்; கோள் சொல்வதில் விருப்பம் உடையவன். சென்ம இலக்கனாதி பதியைச் சேர்ந்து இருக்க, வஞ்சம் செய்பவன்; பலவீனம் உடையவன், அடிக்கடி மரண கண்டம் இவனுக்கு நேரிடும்.

**ஞானி**

பகரும் சாமியும் பாவரும் கூடியே
நிகரில் ஆறிடம் நின்றின் ஞானியாம்
மிகவும் சத்துரு விர்த்தி கலக்கமாம்
அகலும் பாலா ரிஷ்டனு ரோகியே. (547)

(இ-ள்.) சென்ம இலக்கனாதிபதியும் பாவக் கோள்களும் கூடி ஆறாமிடத்தில் இருந்தால், இச்சாதகன் ஞானியாக இருப்பான். பகைவர்கள் இவனுக்கு அதிகமாக இருப்பார்கள். எந்நாளும் கலகம் செய்வர்; இவனுக்குச் சிறுவயதில் கண்டங்கள் வந்து உயிர்க்கு ஆபத்து ஏற்பட்டு விலகும். இவன் எப்பொழுதும் வியாதியையுடையவனாக விளங்குவான்.

### தைரியவானும் வெற்றியுடையவனும்

பன்னியரி புத்தா னத்திற்
பாவர்கள் கூடி நிற்கின்
மின்னிய தயிரி யத்தன்
வெகுபசி வெகுபொ சிப்பன்
மன்னிய ஆறிற் செவ்வாய்
மதிரவி கூடி நிற்கில்
துன்னிய பகைஞர் தம்மை
உபாயத்தாற் செயம்செய் வானே. (548)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்திற் பாவக்கோள்கள் கூடி இருந்தால், இந்தச் சாதகன் மிகுந்த தைரியமுடையவனாக விளங்குவான்; அதிக பசியை உடையவனாகவும் மிகுந்த உணவை உண்பவனாகவும் இருப்பான். சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் செவ்வாய், சந்திரன், சூரியன் ஆகிய கோள்கள் ஒன்றுகூடி இருந்தால், பகைவர்களைத் தன் திறமையினால் வெற்றி கொள்பவனாக விளங்குவான்.

### அவமானம், நோய் உள்ளவன், பகைவர்களை வெல்பவன்

பாவருடன் புகர்கூடி ஆறிடத்தில் நிற்கின்
பரதாரவிடயத்தாற் கலகமவ மானம்
மேவருவக் கியாதி விடயரோ கத்தன்
விடயவிரோதன்மனைவி விரோதனெனப் புகல்வார்
தாவவருஞ் சனிசெவ்வாய் கூடியே ஆறிற்
சார்ந்துநிற்கிற் பலங்கீர்த்தி பிரசித்தன் தனவான்
காவனைய சத்ருசெயன் ஆறியிரா கிருக்க
காரியைந்தி லிருக்கில்வரும் சத்ருசெயன் என்பர். (549)

(இ-ள்.) பாவக்கோள்களுடன் சுக்கிரன் கூடி ஆறாமிடத்தில் இருந்தால், பிற பெண்களுடனான விஷயத்தால் கலகமும் அவமானம் உடையவன்; பெண்களால் வரக்கூடிய நோயினை உடையவனாக

இருப்பான்; தன் மனைவியிடம் பகை பாராட்டுபவன். சனி, செவ்வாய் ஒன்றுகூடி ஆறாம் இடத்தில் இருந்தால், இச்சாதகன் பலவான்; புகழ் உடையவன்; பலராலும் அறியப்படுபவன்; செல்வன்; பகைவரை வெல்பவன். ஆறாமிடத்தில் இராகு இருக்க, சனி ஐந்தாமிடத்தில் இருக்க இச்சாதகன் பகைவர்களை வெல்பவன்.

## பகைவர்களை வெற்றி கொள்பவன்

வகையுறு மாறுக் குடையன் பாவர்
மத்திய மாகவே எட்டில்
துகையிறும் இலாப வியத்தினில் இருக்கச்
சொல்லிய இலக்கனம் அதனிற்
பகையிலாச் சாமி இலக்கன கேந்திரம்
பண்புறு கோணத்தி லுறினும்
மிகையுறு சந்துரு செயம்செய்ய வல்லன்
வேலெனச் சிவந்தநல் விழியாய் ! (550)

(இ-ள்.) வேலைப் போன்று கூரியதாவும் சிவந்ததாகவும் விளங்கக்கூடிய அழகான நல்ல விழிகளையுடைய பெண்ணே ! ஆறாமிடத்திற்கு உடையவன் சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் பதினோராமிடத்தில், பன்னிரண்டாமிடத்தில் பாவர்களுக்கு இடையே இருக்க, இலக்கனாதிபதி, சென்ம இலக்கனத்தில் அல்லது இலக்கன கேந்திரங்களான நான்கு, ஏழு, பத்து ஆகிய இடங்களில் இருந்தாலும் திரிகோணமாகிய ஐந்து, ஏழு ஆகிய இடங்களில் இருந்தாலும் பகைவர்களை வெற்றிகொள்பவனாக விளங்குவான்.

## இதுவுமது

பன்னிய ஆறுக் கிறைவனும் சேயும்
பாவர்மத் தியத்திருந் தாலும்
துன்னிய நீச மூடமுற் றாலும்
சொன்னதுர்த் தானத்திற் பாவர்

தன்னுடன் கூடி இருக்கினும் மூன்றிற்
தபனனே இருக்கமந் திரிதான்
மன்னிய உதயம் ஆறினில் இருக்கில்
வல்லசத் துருசெயன் என்பார். (551)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஆறாம் இடத்திற்கு அதிபதியும் செவ்வாயும் பாவக்கோள்களுக்கு இடையில் இருந்தாலும், நீசம், அஸ்தமனம் பெற்றிருந்தாலும் எட்டு, பன்னிரண்டு முதலான தீய இடங்களில் பாவக்கோள்களுடன் கூடி இருந்தாலும், மூன்றாமிடத்தில் சூரியன் இருக்க குரு, சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் இருக்க, இவன் பகைவர்களை வெல்பவனாக இருப்பான்.

## இதுவுமது

நிலைதரு குளிகன் பவனனே ஆறில்
நிற்கினும் புகர்சனி குருமால்
உலைவிலா உதய நாலிட வரையில்
உதித்திடிற் சத்துரு நாசம்
மலையுறு பாவர் சுபருடன் கூடி
வகுத்தபாக் கியத்திருந் தாலும்
துலைவிலாப் பகைஞர் நாசமே யாகும்
சுதைமதி முகவன மயிலே ! (552)

(இ-ள்.) குளிகன் நின்ற இராசியாதிபதி சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் இருந்தாலும் சுக்கிரன், சனி, குரு, புதன் ஆகிய கோள்கள் சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் இருக்க, இச்சாதகனின் பகைவன் அழிந்து போவான். பாவக்கோள்கள் சுபக்கோள்களுடன் கூடி ஒன்பதாமிடத்தில் இருந்தாலும் இச்சாதகனின் பகைவர்கள் அழிவர்.

### பகைவர்களால் கவலை அடைபவன்

*அஞ்சின்மதி ஆறின்மால் இரவியிருந் தாலும்*
*அருக்கன்மதி புகர்கூடி உதயமிருந் தாலும்*
*மிஞ்சுகுரு மதிஇரவி புகர்கூடிற் றாலும்*
*வெய்யவன்மால் பாக்கியத்தின் வீற்றிருக்கு மேனும்*
*விஞ்சமுறு ஆறின்வெகு பாவரிருந் தாலும்*
*வருமாறுக் குடையவனே அதிகபல மாகி*
*நஞ்சனைய பாவருடன் கேந்திரத்தில் இருக்கில்*
*நாடுமொண்ணார் கிலேசியென நவிலுவர்பெண்*
*ணரசே! (553)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் சந்திரன் இருக்க, ஆறாமிடத்தில் சுக்கிரன் சூரியன் இருந்தாலும், சூரியன், சந்திரன், சுக்கிரன் ஆகியோர் சென்ம இலக்கனத்தில் இருந்தாலும் குரு, சந்திரன், சூரியன், சுக்கிரன் ஆகியோர் கூடி இருந்தாலும், சூரியன், புதன் ஆகியோர் ஒன்பதாமிடத்தில் இருந்தாலும், ஆறாமிடத்தில் அதிக பாவக் கோள்கள் இருந்தாலும் ஆறாமிடத்திற்கு உடையவன் அதிக வலிமையுடையவனாகி, பாவக்கோள்களுடன் கேந்திரங்களில் இருக்க, பகைவர்களால் மனக்கவலை உடையவனாக இருப்பான் என்று சொல்லுவார்கள்.

### பகைவனுக்குக் கவலை தருபவன்

*அஞ்சினுக் குடையோன் உதயநா யகனுக்*
*கதிகமும் சத்துரு வெனினும்*
*மிஞ்சிய சாமி பாவர்மத் தியத்தின்*
*மேவினும் ஆறிற்சேய் இருக்க*
*வஞ்சமில் சனியன் பார்க்கிலும் பாவர்*
*மலிந்திலக் கனகத்தில்நின் றாலும்*
*தஞ்சமொன் றாறுக் குடையவர் கிரகம்*
*தான் மாறிற் சத்துருக்கி லேசி. (554)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்திற்கு உடையவன் சென்ம இலக்கனாதிபதிக்குப் பகையாக இருந்தாலும், இலக்கனாதிபதி பாவக்கோள்களுக்கு இடையே இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் செவ்வாய் இருக்க, இவனைச் சனி பார்த்தாலும், பாவக்கோள்கள் இலக்கனத்தில் இருந்தாலும், இலக்கனாதிபதியும் ஆறாமிடத்திற்கு அதிபதியும் பரிவர்த்தனை பெற்று இருப்பின், பகைவனுக்குக் கவலையைத் தருவான்.

**இதுவுமது**

ஆரல் இரவி சனிகுளிகன்
ஆகி நால்வர் இலக்கனத்திற்
பார முறத்தான் கூடிடினும்
பகர்சா மியைத்தான் கூடிடினும்
கோர மூன்றிற் குருவிருக்கக்
குறிக்கும் ஆறிற் புதன்செவ்வாய்
வார மாக இருந்தக்கால்
வன்சத் துருவின் கிலேசியென்பார். (555)

(இ-ள்.) செவ்வாய், சூரியன், சனி, குளிகன் ஆகியவை சென்ம இலக்கனத்தில் கூடி இருந்தாலும் அல்லது இலக்கனாதிபதியைக் கூடியிருந்தாலும், இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் குரு இருக்க, ஆறாமிடத்தில புதன், செவ்வாய் ஆகிய கோள்கள் இருக்க, இச்சாதகன் வலிமை யானவனாகப் பகைவனைக் கவலையில் ஆழ்த்துவான்.

**பகைவர்களை வெல்பவன், கலகம் செய்பவன்**

தக்க உதயம் தனிலிரவி
சனியும் கூடி-இருந்தக்காற்
றொக்கப் பகைஞர் கிலேசியனாம்
சொல்லும் இரவி சனிபொன்மால்
ஒக்கக் கூடி இருந்தக்கால்
உலகில் கிலேசி எனச்சொல்வார்
மிக்கப் புகர்க்கு மூன்றிடத்தில்
விடராக கிருக்கில கலகியென்பார். (556)

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் சூரியனும் சனியும் கூடி இருந்தால், பகைவர்களால் கவலையை உடையவன். சூரியன், சனி, குரு, புதன் ஆகிய நான்கு கோள்களும் ஒன்றுகூடி இருந்தால், இச்சாதகன் கவலையை உடையவன். சுக்கிரனுக்கு மூன்றாமிடத்தில் இராகு இருக்க, இச்சாதகன் கலகம் செய்பவனாக இருப்பான்.

## உறவினர்களுக்குப் பகைவன்

சனிசேய் இரவி கூடிடினும்
சனிபொன் புகர்சேய் இருக்கினும்தான்
மினிதாய்க் கூடி இருந்தாலும்
இரவி மதிபொன் புகர்சனியும்
கனிவிற் கூடி இருந்தாலும்
கருது நூலிற் சனிஇராகு
முனிவிற் கூடி இருந்தாலும்
முற்றும் சனத்துள் விரோதியென்பார். (557)

(இ-ள்.) சனி, செவ்வாய், சூரியன் கூடி இருந்தாலும், சனி, குரு, சுக்கிரன், செவ்வாய் ஆகிய கோள்கள் ஒன்றுகூடி இருந்தாலும், சூரியன், சந்திரன், குரு, சுக்கிரன், சனி ஆகிய ஐந்து கோள்களும் ஒன்றாகக் கூடி இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் சனி, இராகு ஆகிய கோள்கள் ஒன்றுகூடி இருந்தாலும், இச்சாதகன் தன் உற்றார் உறவினர்களுக்குப் பகையாவான் என்பர்.

## மக்கள் விரோதி

உகந்தலா பத்திற் கேது
ஒன்பதில் இரவி காரி
மிருந்தமாந் தியுமே நிற்கின்
வெகுசன விரோதி யாவன்
மகந்தரு குருமா லல்லான்
மற்றவர் கூடி யேதான்
புகழ்ந்தபாக் கியத்தில் நிற்கிற்
புகல்சன விரோதி யாமே. (558)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பதினோரா மிடத்தில் கேது இருக்க, ஒன்பதாமிடத்தில் சூரியன், சனி, மாந்தி ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி இருப்பின், இச்சாதகன் மக்கள் விரோதியாக விளங்குவான். குருவையும் புதனையும் தவிர மற்றகோள்கள் சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடத்தில் இருக்க, இச்சாதகன் மக்களைப் பகைத்துக் கொள்வான்.

குறிப்பு: குருவையும் புதனையும் தவிர மற்ற கோள்கள் என்பதில் இராகு அல்லது கேது மட்டுமே இருக்கும் என்பதை மனதில் கொள்ளவேண்டும்.

### உறவினர்க்குப் பகைவன்

நாலிற் பாவர் இருந்தாலும்
நாலில் ஐந்திற் கதிருறினும்
மேலில் இரண்டில் நாலாறில்
வியத்திற் சனியே இருந்தாலும்
ஏலும் இரவி மதிசனியும்
இயல்பாக் கியத்தில் இருந்திடினும்
நீலன் இராகும் மதிபத்திற்
நிற்கிற் சனத்துள் விரோதியென்பார். (559)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் பாவக்கோள் இருந்தாலும், நான்காமிடம் அல்லது ஐந்தாமிடத்தில் சூரியன் இருந்தாலும், இரண்டாமிடம், நான்காமிடம், ஆறாமிடம், பன்னிரண்டாமிடம் இவற்றில் ஒன்றில் சனி இருந்தாலும், சூரியனும், சந்திரனும், சனியும் சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடத்தில் இருந்தாலும், சனியும் இராகுவும், சந்திரனும் பத்தாமிடத்தில் இருந்தாலும் இச்சாதகன், தன்னுடைய உறவினர்களுக்குப் பகையாக இருப்பான்.

### ஞானிகளுக்கு விரோதி

புகலும் ஆறிற் குளிகன்நிற்ப
பொன்னோன் பாரா திருந்தாலும்
திகழும் ஆறுக் குடையவனும்
சேயும் உதயத் திருந்தாலும்

பகரும் சனத்துள் விரோதியென்பர்
பானு செவ்வாய் சனி யுறினும்
இகலும் ஆறு வியமூன்றில்
இருக்கின் ஞானி விரோதியென்பார். *(560)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் குளிகன் நிற்க, அவனைக் குரு பார்க்காமல் இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்திற்கு அதிபதியும் செவ்வாயும் சென்ம இலக்கனத்தில் இருந்தாலும், மக்களைப் பகைத்துக்கொள்பவனாக இருப்பான். சூரியன், செவ்வாய், சனி ஆகிய மூன்று கோள்களும் சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடம், பன்னிரண்டாமிடம், மூன்றாமிடம் ஆகிய இடங்களில் இருந்தாலும் இச்சாதகன் ஞானிகளுக்கு விரோதியாக விளங்குவான்.

**குடும்பத்தினரிடம் பகை உடையவன்**

வியமே ழிரண்டில் சேயிருக்கின்
மிகுந்த நட்போர் விரோதியராம்
நயமாம் தேளில் இரவிமதி
நண்ணின் மனையாள் விரோதியென்பர்
பயமாம் ஒரே ழிரண்டுடையோர்
பாவ வர்க்கம் அடைந்தக்காற்
செயமாம் குடும்பம் விரோதியென்பர்
சீரார் கமலச் செழுந்தேனே! *(561)*

*(இ-ள்.)* சிறப்பு மிக்க செந்தாமரை மலரிலுள்ள நிறைந்த தேனைப் போன்ற இனிமையுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாமிடம், ஏழாமிடம், இரண்டாமிடம் ஆகிய இவ்விடங்களில் செவ்வாய் இருந்தால், இச்சாதகனிடம் மிகுந்த நட்புடன் விளங்கியவர்கள் விரோதியாவார்கள். விருச்சிகத்தில் சூரியன், சந்திரன் ஆகிய இரண்டு கோள்களும் இருக்க, இச்சாதகனிடம் இவனுடைய மனைவி பகை கொள்ளுவாள். இலக்கனம், ஏழாமிடம், இரண்டாமிடம் ஆகியவற்றின் அதிபதிகள் பாவ வர்க்கத்தை அடைந்திடில் இச்சாதகனுக்குக் குடும்பத்தோர் பகையாளியாக விளங்குவர்.

### சகோதரர்களுக்கு விரோதி

தனத்தோனுடனே புதன்கூடிற்
சாற்றும் வாக்கு விரோதியென்பார்
கனக்கும் இலாப விக்கிரமம்
காணும் இறைவர் செவ்வாயை
வனப்பிற் கூடி இருந்தக்கால்
மன்னும் துணைவர் விரோதியதாம்
சினக்கும் கதிர்வேல் விழியனமே!
தெகிட்டா அமுதே தேன்மொழியே! *(562)*

(இ-ள்.) பகைவர்கள் மீது சினக்கும் கதிர்வேலை ஒத்த கண்களையும் அன்ன நடையையும், தெவிட்டாத தெள்ளமுது போன்ற இனிய மொழிகளையும் உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்திற்கு அதிபதியோடு, புதன்கூடி இருந்தால், இச்சாதகன் தான் பேசும் பேச்சுக்களால் மற்றவர்க்குப் பகையாவான். சென்ம இலக்கனத்திற்குப் பதினோராம் இடத்திற்கு அதிபர் மூன்றாம் இடத்திற்கு அதிபர் செவ்வாயைக் கூடி இருந்தால், இச்சாதகனுக்கு உடன்பிறந்த சகோதரர்களுக்கு விரோதிகளாக விளங்குவார்கள்.

### அயலாரைப் பகைப்பவன்

உற்ற நாலோன் மதிபுகரை
உகந்து கூடி இருந்தக்காற்
பெற்ற தாயை விரோதிப்பன்
பேசும் நாலோன் புதனுடனே
கொற்ற முறவே கூடிநிற்கிற்
குலவும் இனத்தை மாதுலனைச்
சொற்றக் கிரகம் அல்லசலைத்
துணிந்து விரோதம் செய்குவனே. *(563)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்திற்கு அதிபதி, சந்திரனையும் சுக்கிரனையும் கூடி இருந்தால்,

இச்சாதகன் தாயாரிடத்துப் பகைகொள்ளுவன். நான்கா மிடத்திற்கு உடையவன் புதனுடன் கூடி இருப்பின், தன் இனத்தாரையும் மாமனையும் வீட்டினரையும் தவிர அயலாரையும் துணிவுடன் பகைத்துக் கொள்வான்.

## குருவை, தந்தையைப் பகைப்பவன்

குருவும் ஐந்துக் குடையோனும்
கூடி யிருக்கிற் புத்திரனை
மருவு மறையோர் மன்னவரை
மாற்ற மன்றி விரோதிப்பன்
தருபாக் கியனை இரவிசனிதான்
தானே கூடி இருந்தக்கால்
அருள்சேர் குருவைப் பிதுர்தன்னை
அரிய விரோதம் செய்குவனே. *(564)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்திற்கு அதிபதியும் குருவும் ஒன்றுகூடி, இருந்தால், இச்சாதகன் பிள்ளையை, அந்தணரை, மன்னரை விரோதிப்பவனாக இருப்பான். சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி, சூரியன், சனி ஆகியோர் ஒன்றுகூடி இருப்பின், இச்சாதகன் தன் ஆசிரியரைத், தந்தையைப் பகைப்பவனாக விளங்குவான்.

## கேமத்துரும யோகம்

வடிவுறு பத்துக் குடையவனே
மற்றும் உள்ள காரகன்தான்
கடிதிற் கூடி லந்தந்தக்
கருமம் தனக்கு விரோதியராம்
மடியிற் றேய்ந்த மதிநீச
மாகிப் பாவ ருடன்கூடத்
தடிவில் ஒன்ப தோன்பார்க்கிற்
தரித்திரன் கேமத் துருமென்பார். *(565)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு பத்தாம் இடத்திற்கு அதிபதியை அதன் காரகன் கூடி இருக்க, இச்சாதகன் அந்தத் தொழிலுக்கு விரோதியாக விளங்குவன். தேய்பிறைச் சந்திரன் நீசமாகி, பாவக்கோளுடன் சேர்ந்திருக்க, இதனை ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி பார்க்க, இச்சாதகன் வறுமையை யுடையவனாக விளங்குவான்.

## இதுவுமது

குறைந்த மதியும் பாவருடன்
கூடிப் பாவர் மத்தியமாய்
உறைந்தாற் கேமத் துருமெனன
உயர்வாக் கனம்பற் றிரந்துன்பன்
அறைந்த மதிக்குப் பின்னுமுன்னும்
அரிய தீயோர் சுபருமல்லாற்
குறைந்த பாவர் இருந்தக்காற்
கூறில் கேமத் துருவனென்றே. (566)

(இ-ள்.) தேய்பிறைச் சந்திரன் பாவக்கோள்களுடன் சேர்ந்து இருந்தாலும், இரண்டு பாவக் கோள்களுக்கு இடையே இருந்தாலும், இச்சாதகன் வறுமையை உடையவனாக விளங்குவான். சந்திரனுக்கு முன்னும் பின்னும் பாவக்கோள்கள் சுபக்கோள்களையன்றி பாவக்கோள்கள் மட்டும் இருந்தாலும், இச்சாதகன் வறுமையை உடையவனாக இருப்பான்.

## இதுவுமது

அம்புலித்தா னீசத்தில் நீசாங்கம் அதனில்
ஆகவல்லால் நீசருடன் அடைந்திருக்கு மேனும்
வெம்பியதேய் மதிபாவ ருடன்கூடிப் பாவர்
மீறுமங்சந் தனிலிருக்க நீசர்பார்த் தாலும்
நம்புறுதேய் மதிக்கெட்டிற் பாவர்தான் இருக்க
நண்ணுசுபர் பாராம லேயிருக்கு மேனும்
இம்பர்தேய் மதியுமுப சயத்தில்பரி வேடம்
எய்தவே சுபர்பார்க்கிற் றான்கேமத் துருமன். (567)

(இ-ள்.) சந்திரன் நீச இராசியில் நீசாங்கிசம் பெற்று இருந்தாலும் நீசருடன் சேர்ந்து இருந்தாலும், தேய்பிறைச் சந்திரன் பாவக்கோளுடன் சேர்ந்து இருந்தாலும் பாவ அங்கிசத்தில் இருக்க, அவனைப் பாவக்கோள் பார்த்தாலும், சுபக்கோள் பார்க்காமல் இருந்தாலும், தேய்பிறைச் சந்திரன், சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடம், ஆறாமிடம், பத்தாமிடம், பதினோராமிடம் ஆகியவற்றில் ஒன்றில் இருந்தாலும் பரிவேடம் பெற்று இருப்பினும் சுபக்கோள் பார்க்க, இச்சாதகன் தரித்திரனாக விளங்குவான்.

## இதுவுமது

மதிக்கா றெட்டில் பன்னிரண்டில்
மன்னு குருவே இருந்தாலும்
கதிக்கு நீசாங் கிசந்தன்னிற்
கருதுங் கோண கேந்திரத்திற்
கொதிப்புற் றிருக்க கொடும்பாவர்
கூடப் பார்க்க நெருங்கிடினும்
விதிக்கு மூன்று கோணீசன்
மேவிற் கேமத் துருமனென்பார். (568)

(இ-ள்.) சந்திரனுக்கு ஆறாமிடம், பன்னிரண்டாமிடம் இவற்றில் ஒன்றில் குரு இருந்தாலும், நீசாங்கிசத்தில் அல்லது திரிகோண கேந்திரங்களில் சந்திரன் இருக்க, இவனுடன் பாவக்கோள்கள் சேர, அல்லது பார்த்தாலும், சாதகத்தில் மூன்றுகோள்கள் நீசம்பெற்று இருந்தாலும், இச்சாதகன் தரித்திரனாக விளங்குவான்.

## இதுவுமது

சயமதியம் சரராசி சராங்கிசத்தில் இருக்கச்
சத்துரு நீசம்மூடம் சார்ந்தகோள் பார்க்க
நயமுறவே கூடிடினும் கேமத்துரு மந்தான்
நலமுடைய சிங்கந்தான் இலக்கன மதாக

இயலாக வேயிரண்டு மூன்றுபத்தோ டைந்தும்
இவைநேரே புகரிரவி குருதேயம் புலியும்
பயனுறவே இருக்கவே ருடன்பாவர் கூடப்
பார்க்கினுங்கே மத்துருமன் பனிமலர்ப்பூங்
குழளே! *(569)*

(இ-ள்.) குளிர்ச்சியான மலர்களைக் கூந்தலில் சூடியுள்ள பெண்ணே! சந்திரன் சர இராசியில் சர அங்கிசத்தில் இருக்க, அவனை பகை, நீசம், மூடம் பெற்ற கோள் பார்க்க, அல்லது ஒன்றுகூட இச்சாதகன் வறுமையுடையவனாக இருப்பான். சென்ம இலக்கனம் சிம்மமாக இருக்க, சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடம், பத்தாமிடம், ஐந்தாமிடம் இவற்றில் ஒன்றில் சுக்கிரன், சூரியன், குரு, செவ்வாய், சந்திரன் இவர்கள் ஒன்றுகூடி இருக்க, இவர்களுடன் பாவக்கோள்கள் சேர அல்லது பார்க்க, இச்சாதகன் வறுமையுடையவனாக விளங்குவான்.

## இதுவுமது

சந்திரன் தனக்குப் பத்திற்
சனிஇரவி இருக்கு மாகில்
உந்திய பெரியோ னாகி
உலகில்பூ சிதவா னாகி
அந்தமிற் றரித்திர னாகி
ஆதுலன் எனும்பே ராவான்
மந்தர கிரிபோல் ஓங்கி
வளர்ந்தெழு தனத்தி னாளே. *(570)*

(இ-ள்.) மந்தர மலையைப் போல வளர்ந்தெழுந்த உயர்ந்த கொங்கைகளையுடைய பெண்ணே! சந்திரனுக்குப் பத்தாமிடத்தில் சனியும் சூரியனும் ஒன்றுகூட இருக்கு மாயின் இச்சாதகன் உலகோரால் போற்றப்படுவனாக விளங்குவான். ஆயினும் வறுமையுடையவனாக இருப்பான்.

## காமம் மிக்கவன்

சொல்லிய குடும்பம் தன்னிற்சனி இருக்கிற்
சுபர்பார்வை யோயொழிந் திடினும்
மல்லனால் இரண்டு வியத்தில்சேய் இருக்க
ஆறெட்டில் வியத்தில்பொன் னுறினும்
புல்லுமைந் திரண்டிற் பாம்புறக் காமம்
புகலுமெட் டொன்பதுவி யத்திற்
கொல்லுறு சனியன் இருக்கிலா துலனாங்
கோதறு குதலைமென் மொழியே! (571)

(இ-ள்.) குற்றமற்ற மென்மையான குழந்தையைப் போல் பேசக்கூடிய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் சனி இருக்க, அச்சனியைச் சுபக்கோள்கள் பார்க்காமல் இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடம், பன்னிரண்டாமிடம் இவற்றில் ஒன்றில் செவ்வாய் இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடம் எட்டாமிடம், பன்னிரண்டாமிடம் இவற்றில் ஒன்றில் குரு இருந்தாலும்; சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் இராகு அல்லது கேது இருந்தாலும் இச்சாதகன் காமம் மிக்கவனாக விளங்குவான். சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடம், ஒன்பதாமிடம், பன்னிரண்டாமிடத்தில் சனி இருக்க, இச்சாதகன் வறுமையுடையவனாக விளங்குவான்.

## வறுமை யுடையவன்

ஆறினிற் புக்கும் வியத்திலம் புலியும்
அருண்மாந்தி பவனனுற் றுடினும்
பேறுள வேழெட் டைந்தினிற் கதிர்க்குப்
பின்முன்னர் புதனிருந்தாலும்
மீறிய வாறு வியத்தினிற் பாவர்
மேவிய வுதயமு மிரண்டும்
பாரிய பாவ வர்க்கமாய்ப் பாவர்
பார்க்கினும் ஆதுலன் என்பார். (572)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் சுக்கிரனும் பன்னிரண்டாம் இடத்தில் சூரியனும் மாந்தியும் ஒன்றுகூடி இருப்பினும் சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடம், ஐந்தாமிடம் ஆகியவற்றில் ஒன்றில் சூரியன் இருக்க, இவனுக்கு முன்னிடம் பின்னிடம் ஆகியவற்றில் ஒன்றில் புதன் இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடம், பன்னிரண்டாமிடம் இவற்றில் ஒன்றில் பாவக்கோள்கள் இருக்க, இலக்கனமும் இரண்டாமிடமும் பாவ வர்க்கமாய் அவ்விடங்களைப் பாவக்கோள் பார்த்தாலும் இச்சாதகன் வறுமையுடையவனாக விளங்குவான்.

## இதுவுமது

*கதிர்சனி மதிசேய் கூடிநின் றாலுங்*
*கலைமதி சனியைக்கூ டிடினும்*
*புகர்மதி சனிமால் இரவிகூ டிடினும்*
*பொன்கதிர் சேய்சனி யுறினும்*
*நிகர்துலா முதய மாகவே கதிரோன்*
*நீலன்தான் உறைந்திடு மேனும்*
*பகரும்பிற் பக்க நாலிற்சா மியைத்தான்*
*பாவரேகூடில் ஆதுலனே.* *(573)*

(இ-ள்.) சூரியன், சனி, சந்திரன், செவ்வாய் ஆகிய கோள்கள் ஒன்றுகூடி இருந்தாலும், சந்திரனும் சனியும் ஒன்றுகூடி இருந்தாலும், சுக்கிரன், சூரியன், சனி, புதன், சூரியன் ஆகிய ஐந்து கோள்களும் ஒன்றுகூடி இருப்பினும் குரு, சூரியன், செவ்வாய், சனி ஆகிய நான்கு கோள்களும் ஒன்றுகூடி இருந்தாலும், சென்ம இலக்கனம் துலாமாக இருக்க சூரியன், சனி ஆகிய கோள்கள் ஒன்றுகூடி இருப்பினும், பிற்பக்கம் நான்காமிடத்தில் இலக்கனாதி பதியைப் பாவக்கோள் கூடினாலும், இச்சாதகன் வறுமையுடையவனாக விளங்குவான்.

குறிப்பு: பிற்பக்கம் பொருள் விளங்கவில்லை.

## இதுவுமது

இலக்கனம் சாமி அதிபதி பவனன்
இவர்சுக ராசியா யிடினும்
குலவுபொன் னவர்க்கே ஐந்தெட்டில் குளிகன்
கூர்ந்திடச் சனிக்குநா லெட்டிற்
பலமுறு பாவர் நிற்கினும் இரண்டிற்
பிறையுடன் பாவரும் கூட
**விலகிவில் லுமிழங் கதிரவன் நாலின்**
மேவிடில் ஆதுலன் என்பார். *(574)*

(இ-ள்.) சென்ம இலக்கனம், இலக்கனாதிபதி, இராசி, இராசியாதிபதி ஆகியவை சுப இராசிகளாக இருந்தாலும், குருவிற்கு ஐந்தாமிடத்தில், எட்டாமிடத்தில் குளிகன் இருந்தாலும் சனிக்கு நாலாமிடம், எட்டாம் இடத்தில் பாவக்கோள் இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்தில் சந்திரனுடன் பாவக்கோள் இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்தில் சந்திரனுடன் பாவக்கோள் ஒன்றுகூடி இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடத்தில் சூரியன் இருந்தாலும், இச்சாதகன் வறுமையுடையவனாக விளங்குவான்.

## இதுவுமது

மூலமுற் றாலிற் சனனம தாக
மூர்க்கமாம் பாவர்பார்த் தாலும்
காலுற இடபந் தனிலெட் டாமங்சம்
கலைமதி இருக்கசேய் பார்க்கின்
மேலுறு மிதுனம் விருட்சிகம் வியமாய்
வெண்திற மதியிருந் தாலும்
கோலிய ஏழு முதற்பத்து வரையிற்
கோளேழு நிற்கிலா துலனே. *(575)*

*(இ-ள்.)* மூல நட்சத்திரக்காலில் சாதகன் பிறக்க, பாவக்கோள் பார்த்தாலும் இடப இராசியின் எட்டாம் அம்சத்தில் சந்திரன் இருக்க, இந்தச் சந்திரனைச் செவ்வாய் பார்த்தாலும், மிதுனம், விருட்சிகம் ஆகிய இரண்டு இராசிகளில் ஒன்று சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் இடமாக, நிறைந்த சந்திரன் இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடம் முதல் பத்தாமிடம் வரை இராகு கேதுக்களைத் தவிர ஏழுகோள்களும் நின்றாலும், இச்சாதகன் வறுமையுடையவனாக விளங்குவான்.

## இதுவுமது

இலகு மூன்று இராசியினில்
ஏழு கோளும் நின்றாலும்
அலது தனத்தில் இலக்கனத்தில்
அடுத்தே ஏழு கோளுறினும்
உலவு மேடத் திரவிமதி
உறையச் சனியன் பார்த்தாலும்
புலமைப் பெண்ணிற் கன்னியாங்சம்
புகரோன் இருக்கில் ஆதுலனே. (576)

*(இ-ள்.)* பன்னிரு இராசிகளில் ஏதேனும் மூன்று இராசிகளில் இராகு கேதுக்களைத் தவிர ஏழு கோள்களும் நின்றாலும், சென்ம இலக்கனத்திலும் இரண்டாமிடத்திலும் ஏழு கோள்களும் நின்றாலும், மேட இராசியில் சந்திரன் இருக்க, அதனைச் சனி பார்த்தாலும், கன்னி இராசியில், கன்னியங்கிசத்தில் சுக்கிரன் இருந்தாலும் இச்சாதகன் வறுமையுடையவனாக இருப்பான்.

## இதுவுமது

உத்திரங்கார்த் திகைபரணி நாள்விசாகம் கேட்டை
உயர்மிருக சீரிடஞ்சதயமத்தத் தோடு
மற்றுமுத்தி ரட்டாதி தனிற்சனியன் இருக்க
மகம்பூரம் அவிட்டமசு பதியுரோ கணியிற்

புற்றுறையும் இராகுவிருந் தாலும்ஆ துலனாம்
போற்றுமா திரையத்தம் ரேவதியா யிலியஞ்
சித்திரைபூ ரட்டாதி தனிலிரவி இருக்கத்
திகழ்மூலம் பூசத்திற் பொன்னுறிலா துலனே. (577)

(இ-ள்.) உத்திரம், கார்த்திகை, பரணி, விசாகம், கேட்டை, மிருகசீரிடம், சதயம், அத்தம், உத்திரட்டாதி ஆகிய நட்சத்திரக்கால்களில் சனி இருந்தாலும், மகம், பூரம், அவிட்டம், அசுவதி, ரோகணி ஆகிய நட்சத்திரக் கால்களில் இராகு இருந்தாலும் இச்சாதகன் மருத்துவனாக விளங்குவான். திருவாதிரை, அத்தம், இரேவதி, ஆயிலியம், சித்திரை, பூரட்டாதி ஆகிய நட்சத்திரக் கால்களில் சூரியன் இருந்தாலும், மூலம், பூசம் ஆகிய நட்சத்திரக்கால்களில் குரு இருந்தாலும் இச்சாதகன் வறுமையுடையவனாக இருப்பான்.

## இதுவுமது

அருள்பெறும் அத்தம் தன்னில்
அசுரர்மந் திரியே நிற்க
மிருகசீ ரிடம விட்டம்
விளங்கிய பரணி தன்னில்
இருமையாங் கேதுற் றாலும்
மின்னாளில் இக்கோள் நிற்க
மருவிய உதய மாகின்
வருந்துமா துலனே என்பார். (578)

(இ-ள்.) அஸ்த நட்சத்திரத்தின் கால்களில் ஒன்றில் சுக்கிரன் இருக்க, மிருகசீரிடம், அவிட்டம், பரணி ஆகிய நட்சத்திரக் கால்களில் கேது இருந்தாலும், கன்னி இலக்கனமாக, அதில் கேது இருந்தாலும், இச்சாதகன் வறுமையுடையவனாக இருப்பான்.

## இதுவுமது

சனிசெவ்வாய் புகர்மால் பொன்னோன்
சாற்றுநா லைந்தா றெட்டில்
இனியபத் துடன்வி யத்தில்
இருந்திட இலக்க னம்தான்
முனிவுறு பாவ மத்திய
முறச்சாமி பலமே தாழிற்
கனியுறு புவியின் மீதே
கருதுமா துலனாம் என்பார். *(579)*

(இ-ள்.) சனி, செவ்வாய், சுக்கிரன், புதன், குரு ஆகிய கோள்கள் நான்காமிடம், ஐந்தாமிடம், ஆறாமிடம், எட்டாமிடம், பத்தாமிடம், பன்னிரண்டாமிடம் ஆகிய இடங்களில் இருந்திட, சென்ம இலக்கனம் பாவக்கோள் களுக்கு இடையே இருக்க, இலக்கனாதிபதி பலம் குறைந்து இருக்க, இச்சாதகன் வறுமையுடையவனாக விளங்குவான்.

## இதுவுமது

திரராசி தனின்முற் கூறிற்
திகழ்சர இராசி தன்னிற்
பரவிய வந்தந் தன்னிற்
பண்புறு உபய இராசி
விரவிய நடுவிற் றேய்ந்த
வெண்ணில விருக்க வேதான்
னுரமிகு சலரா சிக்குள்
உதிக்கிலா துலனென் றோதும். *(580)*

(இ-ள்.) திரராசியின் முதற் கூறில், சர இராசியில் கடைசி கூறில், உப இராசியில் நடு கூறில் தேய்பிறைச் சந்திரன் இருக்க, அல்லது சல இராசி இலக்கனமாக அதில் தேய்பிறைச் சந்திரன் இருக்க, இச்சாதகன் வறுமையுடைய வனாக இருப்பான்.

## இதுவுமது

பத்துபன் னிரண்டிற் பாவர்
பற்றிடச் சாமி சேயை
ஒத்துறக் கூடிற் றாலும்
உயர்பாவர் நீசம் ஏறி
வைத்தஉச் சாங்கி சத்தின்
மன்னுமா றெட்டீ ராறில்
விந்துநற் கோணப் பார்க்கின்
விளம்பும்ஆ துலனாம் மின்னே! (581)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்குப் பத்தாமிடம், பன்னிரண்டாமிடம் ஆகிய இடங்களில் பாவக்கோள்கள் இருக்க, இலக்கனாதிபதி, செவ்வாயுடன் ஒன்றுகூடி இருந்தாலும், பாவக்கோள் நீசம்பெற்று, உச்சாங்கிசத்தில் ஆறு, எட்டு, பன்னிரண்டாமிடத்தில் உள்ள சுபக்கோளைப் பார்க்க, இச்சாதகன் வறுமையுடையவனாக விளங்குவான்.

## இதுவு[illegible]

மேவுபாக் கியத்தா னத்தோன்
வியத்தினில் இருக்கக் கேந்திரம்
பாவரே இருக்கு மேனும்
பலராகு பவன னோடே
தாவுறும் இரவி திங்கள்
சனியும்கேந் திரத்தி ருக்க
மேவுறு சுபர்பா ராரேல்
விளம்புமாதுலனென் பாரே. (582)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாம் இடத்திற்கு அதிபதி பன்னிரண்டாம் இடத்தில் இருக்க, இலக்கனம், நான்காமிடம், ஏழாமிடம், பத்தாமிடம் ஆகியவற்றில் ஒன்றில் பாவக்கோள் இருந்தாலும் இராகு இருந்த இராசிக்குக் கேந்திரத்தில் சூரியன், சந்திரன், சனி இருக்க, இவர்களைச் சுபக்கோள் பாராவிடில் இச்சாதகன் வறுமையுடையவனாக விளங்குவான்.

## இதுவுமது

குருபுதன் சனிசேய் நீசம்
கூர்ந்துதான் ஐந்தோ டாறு
மிருள்கொளீ ராறு பத்தோ
டெட்டுபன் னொன்றில் நிற்க
ஒருகோளாதுலனாம் மீன்கோள்
உதிப்பமால் கதிரோன் நிற்பத்
தருமொன்பான் இடத்தில் நின்ற
சனிபார்க்கில் ஆது லன்தான். *(583)*

(இ-ள்.) குரு, புதன், சனி, செவ்வாய் ஆகிய கோள்கள் நீசம் பெற்று ஐந்தாமிடம், ஆறாமிடம், பன்னிரண்டாமிடம், பத்தாமிடம், எட்டாமிடம், பதினோராமிடம் இவற்றில் நிற்க, இச்சாதகன், வறுமையுடையவனாவான். சென்ம இலக்கனம், மீனமாக, புதனும் சூரியனும் இருக்க, ஒன்பதாம் இடத்தில் நின்ற சனி பார்க்க, இச்சாதகன் வறுமையுடையவனாக இருப்பான்.

## இதுவுமது

தருதுலாம் உதய மாகச்
சனிஇரவி பார்க்கு மேனும்
திருவளர் திரத்திற் றோன்றத்
திவாவினிற் பிறக்கப் பாவர்
அருளிற்கேந் திரிக்க நல்லோர்
ஆறெட்டுப் பன்னி ரண்டின்
மருவியே இருப்ப ராகில்
வகுப்பரா துலனாம் என்றே. *(584)*

(இ-ள்.) சென்ம இலக்கனம் துலாமாக இருக்க, அதனைச் சனி, சூரியன் ஆகிய கோள்கள் பார்த்தாலும் திர இராசிக்குக் கேந்திரத்தில் பாவக்கோள் இருக்க, சுபக்கோள்கள் சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாமிடம் இவற்றில் இருக்க, இச்சாதகன் வறுமையுடையவனாக விளங்குவான்.

## இதுவுமது

வாசியாம் இரண்டு நூலின்
மதிநிற்க வியத்திற் பொன்னோன்
பூசிய பத்திற் காரி
பொருந்திடில் ஆது லன்றான்
வீசிய கிரக மேழும்
மிகுபகை நீச மூடம்
தூசலிற் றோல்வை யாகில்
உரைப்பரா துலனாம் என்றே. (585)

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடம், நான்காமிடம் இவற்றிலொன்றில் சந்திரந் நிற்க, பன்னிரண்டா மிடத்தில் குருவும் பத்தாமிடத்தில் சனியும் இருக்க, இச்சாதகன் வறுமையுடையவனாக விளங்குவான். கோள்கள் ஏழும் பகை, நீசம், அஸ்தமனம் பெற்று தோல்வியடையின், இச்சாதகன் வறுமையுடையவனாக விளங்குவான்.

## தரித்திர யோகம்

இரவிபொன் வெள்ளி சாமி
இவர்பவ வர்க்கம் ஏறிப்
பரவிய நீச மூடம்
பற்றிட நாலுக் குள்ளோன்
அரனுறு பாவர் கூடி
ஆறெட்டுப் பன்னி ரெண்டிற்
றிரமுற நிற்க ரேகை
யாகிய தரித்திர யோகம். (586)

*(இ-ள்.)* சூரியன், குரு, சுக்கிரன், இலக்கனாதிபதி ஆகியோர் பாவ வர்க்கம் ஏறி இருக்க, நீச, மூடம் பெற்றிருக்க, சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்திற்கு அதிபதியுடன் பாவக்கோள் ஒன்றுகூடி, ஆறாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாம் இடத்திலொன்றில் இருக்க, இச்சாதகன் வறுமையுடையவனாக விளங்குவான்.

## வறுமை உடையவன்

அஞ்சுபன் னொன்றுக் குள்ளோர்
அதிநீச மூட மாகத்
தஞ்சமில் கிரக யுத்தஞ்
தனிலப செயமாம் கோளும்
உஞ்சலாய் நின்ற பொன்னை
உரைக்குங்கேந் திரத்தான் பார்க்கின்
மிஞ்சிய ரேகை என்றே
விளம்பினர் கணிதர் தாமே. (587)

(இ-ள்.) ஜென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடம், பதினொன்றாமிடம் ஆகியவற்றிற்கு அதிபதிகள் அதி நீச மூடமாகக்,கிரயுத்தத்தில் தோற்ற குருவைக் கேந்திரத்தோன் பார்க்க, இச்சாதகன் வறுமையுடையவனாக விளங்குவான் என்று சோதிடக்கலையில் வல்லவர்கள் கூறியுள்ளார்கள்.

## அவமானமும் செல்வமும் உடையவன்

அருட்சாமி பலமே தாழ
அட்டமத்துடையோன் பார்க்கக்
குருத்தான் மூடஞ் செலுங்காற்
கூறவ மான மாக
வருத்திடு வியத்தோன் பார்க்கில்
வருந்தன ரேகை யாகும்
பருத்துபூ ரித்து விம்மிப்
பனைத்தெழுந்த தனத்தி னாளே. (588)

(இ-ள்.) பெரியதான புடைத்து விம்மி திமிர்ந்த கொங்கைகளை உடைய பெண்ணே! ஜென்ம இலக்கனாதிபதி பலம் குறைந்திருக்க, இவனை எட்டாமிடத்திற்கு அதிபதி பார்க்க, குரு அஸ்தமனம் பெற்று இருக்க, இச்சாதகன் அவமானத்தை அடைவான். பன்னிரண்டாம் இடத்திற்கு அதிபதி பார்க்க, இச்சாதகன் செல்வனாக இருப்பான்.

## இதுவுமது

துய்யஆ றெட்டீ ராறிற்
சுபர்பாவர் கேந்திரம் ஏறப்
பையசேய் பலமே தாழிற்
பகருவர் இரேகை என்றே
றையுறா உதயம் தொட்டே
நாலிரா சியிலே பாவர்
தையலே அடுக்காய் நிற்கிற்
சாற்றுவர் இரேகை என்றே. *(589)*

(இ-ள்.) பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாமிடம் சுபக்கோள் பாவக்கோள் ஆகியவை இருக்க, அல்லது கேந்திரங்களில் இருக்க, செவ்வாய் பலம் தாழ்ந்து இருந்தால் இச்சாதகன் வறுமையை உடையவன். சென்ம இலக்கனம் முதல் நான்காம் இடம் வரை பாவர்கள் தொடர்ந்து இருப்பின், இச்சாதகன் வறுமையுடையவன்.

## பிச்சையெடுத்து உண்பவன்

ஒழுங்குறும் ஒன்றி ரண்டுக்
குடையவர் நீச மூடத்
தழுந்திடப் பாவர் மூட
மாகியே பார்க்க ஒன்பான்
விழுங்கிறை பார்க்கின் மாதே!
வீதிதோ றுந்தி ரிந்தே
புழுங்கிமெய் சோர்ந்து பிச்சை
புகுந்துண்ப தென்ப ரேகை. *(590)*

(இ-ள்.) பெண்ணே! சென்ம இலக்கனாதிபதி, இரண்டாமிடத்திற்கு அதிபதி ஆகிய இருவரும் நீச மூடம் பெற்று, பாவக்கோள்கள் மூடமாகிப் பார்க்க, சென்ம இலக்கனத்திற்கு ஒன்பதாமிடத்திற்கு அதிபதி பார்க்க, இச்சாதகன் வறுமையுடையவனாகி, பிச்சையெடுத்து உண்பான்.

## இதுவுமது

இனிய மூன்றுக் கிறையுதயம்
இரண்டுக் குடையோர் தனைக்கூடி
அனைய எட்டாம் இடத்திருக்க
ஆறுக் குடையோன் பார்த்தாலும்
வனைய மீனிற் புதனிருக்க
மந்தன் புகரோன் றனைக்கூட
வினையப் பாவர் பலம்தாழின்
மின்னே! இரேகை எனச்சொல்வார். *(591)*

(இ-ள்.) மின்னலை யொத்த பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு மூன்றாம் இடத்திற்கு அதிபதி, இரண்டாம் இடத்திற்கு அதிபதியுடன் கூடி எட்டாம் இடத்தில் இருக்க, இவர்களை ஆறாம் இடத்திற்கு அதிபதி பார்த்தாலும், மீன இராசியில் புதன் இருக்க, இந்தப் புதனுடன் மந்தனும் சுக்கிரனும் கூடி இருக்க, பாவக்கோள்கள் பலம் குறைந்து இருப்பின், இச்சாதகன் வறுமையுடயவனாக விளங்குவான்.

## திருடன்

கொழுங்க திர்புதன் சேய்வெள்ளி
குறித்தொன்றாய் கூடி னாலும்
மழுங்கிடா புகரை விட்டு
மற்றவர் கூடி னாலும்
எழுந்தண்டின் மதியம் தன்னை
இருஞ்சனி நோக்கி னாலும்
தொழும்புதன் இரவி அல்லாற்
கூடினும் சோர னாமே. *(592)*

(இ-ள்.) சூரியன், புதன், செவ்வாய், வெள்ளி ஆகிய நான்கு கோள்களும் ஒன்றாய்ச் சேர்ந்து இருந்தாலும், சந்திரன், சூரியன், செவ்வாய், புதன், குரு, சனி ஆகிய ஆறு கோள்களும் ஒன்றாகக் கூடி இருந்தாலும், மிதுன இராசியில் உள்ள சந்திரனைச் சனி நோக்கினாலும் சந்திரன், செவ்வாய், குரு, சுக்கிரன், வெள்ளி ஆகிய ஐந்து கோள்களும், இச்சாதகன் திருடனாக இருப்பான்.

## இதுவுமது

*சீறா றாறெட்டில் இராசிக்கும்*
*செவ்வாய் சனியன் பார்த்தாலும்*
*கூறா ரிடபத் தருமதியைக்*
*கூர்ந்து கணக்கன் பார்த்தாலும்*
*தாறா ராறுக் குடையவன்சேய்*
*தன்னைக் கூடி சேய்வீட்டில்*
*நேரா திருக்கு இராகுவுந்தான்*
*நோக்கிற் சோரன் எனச்சொல்வார். (593)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடம், எட்டாமிடம் ஆகியவற்றில் இராகு இருக்க, இதனைச் செவ்வாய், சனி ஆகிய கோள்கள் பார்த்தாலும், இடப இராசியில் நிற்கும் சந்திரனைப் புதன் பார்த்தாலும், சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்திற்கு அதிபதி செவ்வாயுடன் கூடி, செவ்வாயின் வீட்டில் இருக்க, இவர்களை இராகு பார்த்தாலும் இச்சாதகன் திருடனாக இருப்பான்.

## இதுவுமது

*பூசமதிற் புதனுமா திரையதில்செவ் வாயும்*
*பொருந்துமா யிலியங்கார்த் திகைசனியே இருக்கப்*
*பேசுமிவை இலக்கனமே யாயிடினும் சொன்ன*
*பெட்புறுகேட் டையிராகும் அவிட்டத்திற் கதிரும்*
*மாசின்மகந் தனின்வெள்ளி இருக்கயிவை உதய*
*மானாலும் மிருகசீரி டத்திற்சேய் இருக்க*
*வீசியஉத் திரநாளிற் சன்மிக்கிற் சோரன்*
*மென்சுணங்கு பரந்தழகு விளங்குதன மயிலே. (594)*

(இ-ள்.) மெல்லிய தேமல் பரந்து அழகுடன் விளங்கக் கூடிய கொங்கைகளைக் கொண்ட மயிலின் சாயலையுடைய பெண்ணே! பூச நட்சத்திரக்காலில் புதனும், திருவாதிரை நட்சத்திரக்காலில் செவ்வாயும், ஆயிலியம், கார்த்திகை நட்சத்திரக்கால்களில் சனியும் இருக்க, இவை இலக்கனங்

களாக இருக்க, கேட்டை நட்சத்திரக்காலில் இராகுவும் அவிட்ட நட்சத்திரக்காலில் சூரியனும், மக நட்சத்திரக்காலில் சுக்கிரனும் இவை இலக்கனங்களாக இருந்தாலும் மிருக சீரிட நட்சத்திரக்காலில் செவ்வாயும் உத்திராட நட்சத்திரக்காலில் பிறக்க, இச்சாதகன் திருடனாக விளங்குவான்.

## இதுவுமது

அசுவனியிற் சனிசெவ்வாய் இருக்கவஃ துதயம்
ஆனாலும் பரணியிலே ராகுரவி யுறினும்
வசமிகுபூ ரட்டாதி கேட்டையனு டத்தின்
மன்னியரா குக்கேது குருவுமுடன் இருக்க
விசுப்புனர்பூ சத்தினிலே சனியிருக்க இவைதான்
விளங்குதய லக்கனமாய்ப் பிறந்திடினும் சோரன்
கசடறுகுங் குமகதம்பச் சேறணைந்து விம்மிக்
கனத்திறுமாந் தெழுந்துணைக்குங் கனதனப்பெண்
ணமுதே ! (595)

(இ-ள்.) குற்றமற்ற குங்குமக்குழம்பின் கலவைப் பூசப்பட்ட பூரிப்புடன் கனத்து விம்மி எழுந்த இரு கொங்கைகளையும் அமுதைப் போன்ற இனிமையையும் உடைய பெண்ணே! அசுவதி நட்சத்திரக்காலில் சனி அல்லது செவ்வாய் இருந்தாலும் அதுவே இலக்கனமாக இருந்தாலும் பரணி நட்சத்திரக்காலில் இராகு, சூரியன் இருந்தாலும் பூரட்டாதி, கேட்டை, அனுஷ நட்சத்திரக் கால்களில் ராகு, கேது இவற்றிலொன்றுடன் குருவும் இருக்க, புனர்பூச நட்சத்திரக் கால்களில் சனி இருக்க, இவை சென்ம இலக்கனமாக இருக்கப் பிறந்த சாதகன் திருடனாக இருப்பான்.

## இதுவுமது

ஆயிலியம் அத்தமுரோ கணிபுகர்தான் இருக்க
ஆங்கதிலக் கனமாகச் சனியுடன்செவ் வாயும்
நேயமுடன் ஆட்சியுற்று மதியைப்பார்த் தாலும்
நேருதயந் தனிற்செவ்வாய் ராகுவுவந் திருக்க

*மாயமுறு சத்துருவீட் டிறைவன்சேர்ந் திருக்க*
*வன்சாமி பலவீன மாகவே பொன்னோன்*
*றாயகமாய்ப் பாராமல் இருந்தக்காற் சோரன்*
*சகலகலை வல்லரிவை சாற்றின் பூங்குயிலே! (596)*

(இ-ள்.) பூங்குயிலே ஒத்த பெண்ணே ! ஆயில்யம், அத்தம், உரோகணி ஆகிய நட்சத்திரக்கால்களில் ஒன்றில் சுக்கிரன் இருக்க, அவையே சென்ம இலக்கனமாக இருக்க, அதில் சனி, செவ்வாய் இவற்றிலொன்று ஆட்சிபெற்று விளங்க, இவற்றைச் சந்திரன்பார்த்தாலும், சென்ம இலக்கனத்திற் செவ்வாயும் இராகுவும் இருக்க, இவர்களுடன் பகைவீட்டிற்கு அதிபதி சேர்ந்திருக்க, இலக்கனாதிபதி பலவீனமாக இருக்க, குரு பாராமல் இருந்தாலும், இச்சாதகன் திருடனாக இருப்பான்.

## பரத்தையர் உறவு, அடிமை

*சாற்றுமிரண்டேழுபத்துக் கிறைவர்பத்தில் இருக்கச்*
*சாமிபா ராதிருக்கிற் பரஸ்திரிகள் சோரன்*
*றோற்றுமதி தன்னைமதி பவனனைச்செங் கதிரோன்*
*தூய்சனிபார்க் கப்பத்திற் பாவரே இருக்கப்*
*போற்றுகுரு வர்க்கமில்லா திருதந்தக்காற் றாசன்*
*பூமகநீ லன்பொருந்து மூன்றுநா லிரண்டேழ்*
*ஏற்றமுடன் இருக்கரவி புகர்கூடிப் பத்தில்*
*இருந்தக்காற் றாசனென விளம்புவர்தெள் ளமுதே! (597)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடம், ஏழாமிடம், பத்தாமிடம் ஆகிவற்றுக்கதிபதிகள் பத்தாமிடத்தில் இருக்க, இவர்களை இலக்கனாதிபதிகள் பாராமல் இருந்தால், இச்சாதகன் பரத்தையர்களோடு உறவு கொள்வான். சந்திரன் நின்ற இராசியாதிபனைச் சூரியன், சனி ஆகிய கோள்கள் பார்க்க, சென்ம இலக்கனத்திற்குப் பத்தாமிடத்தில் பாவக்கோள்கள் இருக்க, குருவர்க்கம் இல்லாமல் இருந்தால், இச்சாதகன் அடிமையாக இருப்பான். செவ்வாய், சனி ஆகிய கோள்கள், சென்ம இலக்கனத்திற்கு

மூன்றாமிடம், நான்காமிடம், ஏழாமிடம் ஆகியவற்றில் இருக்க, சூரியன், சுக்கிரன் ஒன்றுகூடி பத்தாமிடத்தில் இருந்தால், இச்சாதகன் அடிமையாக இருப்பான்.

## இதுவுமது

உன்னுநிசி யிற்பிறக்கச்சரராசி உதிப்ப
ஒன்றிரண்டுக் கிறையவரும் குருவுமெட்டில் இருக்க
மன்னுமதி ஏழினிற்க வெள்ளியொன்பான் இருக்கில்
வருதாச னாகுமெட்டுக் கிறைபத்தின் மேவ
பொன்னவன்றன் வர்க்கமிலா திருக்கப்பன்னி ரண்டிற்
புதியமதி பாவரங்க மேறிநிற்கிற் றாசன்
துன்னுதிவா விற்பிறக்கிற் றிரமுதிப்பச் சனிபொன்
சுன்மதிகேந் திரகோணம் வீற்றிருக்கிற் றாசன். (598)

(இ-ள்.) சாதகன், இரவில் பிறக்க, சரஇராசி இலக்கனமாக இருக்க, சென்ம இலக்கனம், இரண்டாமிடம் இவற்றிற்கு அதிபதிகளும் குருவும் சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் இருக்க, சந்திரன் ஏழாமிடத்தில் இருக்க, சுக்கிரன் ஒன்பதாமிடத்தில் நிற்க, அடிமையாக இருப்பான். சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்திற்கு அதிபதி பத்தாமிடத்தில் குரு வர்க்கம் இல்லாமல் இருக்க, பன்னிரண்டாமிடத்தில் சந்திரன் பாவரங்சம் ஏறியிருக்க, இச்சாதகன், அடிமையாக இருப்பான். சாதகன், பகலில் பிறக்க, இலக்கனம் திர இராசியாக இருக்க, சனி, குரு, சந்திரன் மூவரும் இலக்கனம், நான்காமிடம், ஐந்தாமிடம், ஏழாமிடம், ஒன்பதாமிடம், பத்தாமிடம் ஆகியவற்றிலிருக்க, இச்சாதகன் அடிமையாக இருப்பான்.

## இதுவுமது

தருநிசியில் சன்மிக்கச் சரமுதிக்கப் பாவர்
தான்கேந்த்ர முறச்சாமி பலந்தாழிற் றாசன்
ஒருநாலிற் குருவாறிற் சனிஎட்டிற் புதனும்
உறச்சாமி பலம்தாழ்ந்து மறைந்திடினுந் தாசன்

பொருநிசியிற் பிறக்கச்சர லக்கனத்திற் பாவர்
பொருந்திநிற்கில் சாமியுடன் குருகூடி வியத்தின்
மருவியுற அமாவாசை தனிற்பிறக்க தாசன்
மகரகே தனன்சிலையை வருத்தியநல் நுதலே. (599)

(இ-ள்.) மீன் கொடியையுடைய மன்மதனின் கரும்புவில்லைப் பழிக்கும் அழகான நெற்றியையுடைய பெண்ணே! சாதகன் இரவு நேரத்தில் பிறக்க, சரஇராசி சென்ம இலக்கனமாக, பாவக்கோள்கள் கேந்திரங்களில் இருக்க, சென்ம இலக்கனாதிபதி பலம் இழக்க, இச்சாதகன் அடிமையாக இருப்பான். சென்ம இலக்கனத்திற்கு நான்கா மிடத்தில் குருவும், ஆறாமிடத்தில் சனியும் எட்டாமிடத்தில் புதனும் இருக்க, சென்ம இலக்கனாதிபதி பலம் குறைந்து மறைந்தாலும் இச்சாதகன், அடிமையாக இருப்பான். சாதகன் இரவு நேரத்தில் பிறக்க, சர இராசி சென்ம இலக்கனமாக அதில் பாவர்கள் நிற்க, இலக்கனாதிபதியுடன் குரு ஒன்றுகூடி பன்னிரண்டாமிடத்தில் இருக்க, அமாவாசையில் பிறக்க, இச்சாதகன், அடிமையாக இருப்பான்.

## அடிமை, தொழுத்தை புத்திரன்

விக்கிரம நாலேழிற் புதனிருக்கத் தனத்தின்
மிகுமைத்திற் றேய்மதியைப் பாவருநிற் றாசன்
தக்கதுலா முதிக்கரவி மதியேழில் இருக்க
சனியேழில் அங்கிசமுற் றேகடிதிற் பார்க்கச்
சுக்கிரநீ சத்தையுற மூன்றினிற்சே யுறினுஞ்
சொல்லெளிய தாசனென்ப ரிவன்தன்னைப் பயின்றாள்
வெட்கமிலா தொழுத்தையென விதித்திடவு மாகும்
விகசிதபங் கயமலரின் வீற்றிருக்கு மனமே. (600)

(இ-ள்.) தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளை ஒத்த அழகினையும் அன்ன நடையினையும் உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடம், நான்காமிடம், ஏழாமிடம் இவற்றிலொன்றில் புதன் இருக்க, இரண்டா மிடத்தில் அல்லது ஐந்தாமிடத்தில் சந்திரன், பாவக்கோளோடு

சேர்ந்து இருக்க, இச்சாதகன் அடிமையாக இருப்பான். சென்ம இலக்கனம் துலாமாக, அதற்கு ஏழாமிடத்தில் சூரியன், சந்திரன் ஆகிய இரண்டு கோள்களும் ஒன்றுகூடி இருக்க, அல்லது ஏழாமிடத்தில் சனியங்கமடைந்து பார்க்க, சுக்கிரன் நீசத்தை அடைய, சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் செவ்வாய் இருக்க, இச்சாதகன் அடிமையாக இருப்பான். இவனுடைய தாய் இழிவான நடத்தை உடையவளாக இருப்பாள்.



# ரோக பலன்

### வாத ரோகம்

ஆறிற் பாவ ருடன்மதியுற்
றாலும் பாவர் இருந்தாலும்
வீறும் ஆறுக் குடையவன்பால்
வெய்யச் சனிதான் கூடிடினுங்
கூறும் உதயம் ஆறெட்டிற்
குறிக்கும் புதன்றான் நின்றிடினும்
மூறு நாலா றினிற்சனியன்
உறினும் வாத வாயுவென்பார். (601)

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் பாவக் கோளுடன் சந்திரன் இருந்தாலும் அல்லது பாவக்கோள்கள் மட்டும் இருந்தாலும், ஆறாமிடத்திற்கு உடையவனோடு சனி கூடி நின்றாலும், இலக்கனம், ஆறாமிடம், எட்டாமிடம் ஆகியவற்றில் ஒன்றில் புதன் நின்றாலும் சென்ம இலக்கனத்திற்கு நான்காமிடம், ஆறாமிடம் இவற்றி லொன்றில் சனி நின்றாலும், இச்சாதகனுக்கு வாத வாயு நோய் உண்டாகும்.

## விப்புருதி, குஷ்டம்

குருவு மூன்றுக் குடையவனைக்
கூடிப் பலமே குறைந்தாலும்
மருவும் உதயம் தனிற்செவ்வாய்
மந்தன் இரவி இருந்தாலும்
அருளும் உதயம் குசனிருக்க
அருக்கன் சனியன் பார்த்தாலும்
**பொருவிப் புருதிக் குட்டமெனப்**
புகல்வர் சுகரஞ் சிதமயிலே ! (602)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு மூன்றாம் இடத்திற்கு அதிபதியுடன் குரு ஒன்றுகூடி பலம் குறைந்தாலும், சென்ம இலக்கனத்தில் செவ்வாய் இருக்க, இந்தச் செவ்வாயைச், சூரியன், சனி ஆகிய இரு கோள்களும் பார்த்தாலும், இச்சாதகனுக்கு விப்புருதி, குட்டம் முதலான நோய்கள் தோன்றும்.

## குஷ்டம், பிளவை, தந்த ரோகம், முகரோகம்

எட்டாறிற் சனியிருக்கிற் கடிநோயுங் குட்டம்
இலகுவெள்ளி தவிரமற்றோர் கூடிடினும் குட்டம்
மட்டார்சித் திரையிற்சேய் இருந்திடினும் குட்டம்
வரும்அனுடச் சனிபாம்புக் கேகுறைவி யாகி
பட்டார்பூ ரட்டாதி தனிற்சேய்க்குக் குட்டம்
பகர்பிளவை எட்டிலுறும் இராகுவுக்குப் பிளவை
கட்டாகும் தனந்தனிலே பாவரே இருக்கிற்
கருதுதந்தரோகமுக ரோகமெனக் காணே. (603)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில், ஆறாமிடத்தில் சனி இருப்பின், இச்சாதகனுக்குக் கடிநோய், குட்டம் ஆகியவை தோன்றும். இராகு, கேது, சுக்கிரனைத் தவிர மற்ற கோள்கள் ஒன்றுகூடி இருந்தால், இந்தச் சாதகனுக்குக் குட்டநோய் உண்டாகும். சித்திரை நட்சத்திரக் காலில் செவ்வாய் நிற்க, இச்சாதகனுக்குக் குட்டநோய்

உண்டாகும். அனுட நட்சத்திரத்தின் கால்களில் சனி, பாம்பு ஆகியவைகள் நிற்க இச்சாதகனுக்கு உடலின் பாகங்களைக் குறைக்கும் குறைவியாதியான குட்டநோய் தோன்றும். பூரட்டாதி நட்சத்திரக்காலில் செவ்வாய் இருக்க, இச்சாதகனுக்கு குட்டநோய் உண்டாகும். மேலும் பிளவை நோயும் ஏற்படும். சென்ம இலக்கனத்திற்கு எட்டாம் இடத்தில் இராகு இருக்க, இச்சாதகனுக்குப் பிளவை நோய் உண்டாகும். சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்தில் பாவக்கோள் இருக்கில், இச்சாதகனுக்கு பல் நோயும் முகநோயும் உண்டாகும்.

### பிளவை, முகவாதம், முக சன்னி

அருள்பெறுசேய் அங்கிசத்தில் அருக்கனே இருக்க
　　அன்னதிலக் கனமாகத் தேய்மதியும் பாம்பு
ஒருகாலிற் கூடிடினும் பிளவைமுக ரோகம்
　　உற்றரெண்டுக் கிறைபுதனும் இராகுவுமே கூடிற்
திருகுமுக வாதமுண்டாம் ஆறிறைவன் ஆறிற்
　　நீட்டுபுதன் சனிராகு தனைக்கூடி னாலும்
வருசனிபா ராதிருக்கு மேனுமுக சன்னி
　　வருமென்பர் கணிதநூல் வகுத்தபலன்
　　　　　　　　　　　　இவையே. *(604)*

(இ-ள்.) செவ்வாய் அங்கிசத்தில் சூரியன் இருக்க, அது இலக்கனமாகத் தேய்பிறைச் சந்திரனும் இராகு அல்லது கேது ஒருகாலில் இருந்தாலும் பிளவை நோயும் முகரோகமும் உண்டாகும். இலக்கனத்திற்கு இரண்டாமிடத்திற்கு அதிபதியும் புதனும் இராகுவும் ஒன்றுகூடி இருக்கில், இச்சாதகனுக்கு முகவாதம் உண்டாகும். ஆறாம் இடத்திற்கு அதிபதி ஆறாம் இடத்தில் இருந்து புதன், சனி, இராகு ஆகிய கோள்கள் ஒன்றுகூடி இருந்து, சனி இக்கோள்களைப் பார்க்காமலிருந்தாலும் இச்சாதகனுக்கு முகசன்னி நோய் வருமென்று சோதிடநூலில் வல்லவர்கள் வகுத்துக் கூறியுள்ளார்கள்.

## நாசிகா ரோகம், முகரோகம், தந்த ரோகம்

*தனத்திறைவன் சேயுடனே உதயத்தில் இருக்கிற்*
*றருநாசி ரோகமுக ரோகமுமே உண்டாம்*
*வனித்துரெண்டிற் சனிஇரவி இருந்திடினும் ஆறின்*
*மதிக்குமெட்டிற் குளிகனுக்கு முகரோகம் காணும்*
*தொனித்தமூன் றைந்தாறில் இலாபம்பாக் கியத்திற்*
*றுன்றுதீ யோரிருக்க வேழிலுறச் சுபர்தான்*
*கனத்ததனத் திறைவனிரா குடனாறிற் கூடிற்*
*கருதுதந்த ரோகமுண்டாங் களபமுலை மயிலே!(605)*

(இ-ள்.) சந்தனம் பூசப்பட்ட கொங்கைகளையும், மயில் போன்ற சாயலையும் உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்தில் இரண்டாம் இடத்திற்கு அதிபதி செவ்வாயுடன் சேர்ந்து இருந்தால், இச்சாதகனுக்கு முகத்தில் நோயும் மூக்கில் நோயும் உண்டாகும். சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்தில் சனி, சூரியன் ஆகிய இரண்டு கோள்களும் இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் சந்திரன் இருந்தாலும் எட்டாமிடத்தில் குளிகன் இருந்தாலும், இச்சாதகனுக்கு முகத்தில் நோய் உண்டாகும். சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில், ஐந்தாமிடத்தில், ஆறாமிடத்தில், பதினோராமிடத்தில், ஒன்பதாமிடத்தில் பாவக்கோள்கள் இருக்க, ஏழாமிடத்தில் சுபக்கோள் இருக்க, இரண்டாமிடத்திற்கு அதிபதி, இராகுவுடன் சேர்ந்து ஆறாமிடத்தில் இருக்க, இச்சாதகனுக்குப் பல்லில் நோய் உண்டாகும்.

## தந்த ரோகம், நாவில் ரோகம்

*இரண்டாறுக் குடையவரும் அங்கிசா திபரும்*
*இசைந்தொன்றாய்க் கூடிடினும் இரண்டிலிரண்*
*டுடையோர்*
*நிரந்தரமாம் இரவிசனி சேயும்கூ டிடினும்*
*நீடுதனம் தனிலெட்டில் இரவிஇருந் தாலும்*

விரவுரெண்டுக்க கிறைராகு தனைக்கூடி மறைய
இராகுபவ னனைத்தானும் கூடிமறைந் தாலும்
பரவுதந்த ரோகமென்பர் தனேசன்மா லுடனே
பண்பாகக் கூடிமறைந் தானாவில் ரோகம். (606)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்திற்கு அதிபதி, ஆறாமிடத்திற்கு அதிபதியும் அங்கிசாதிபரும் ஒன்றாகக் கூடி இருந்தாலும், இரண்டாமிடத்தில் இரண்டா மிடத்திற்கதிபதி, சூரியன், சனி, செவ்வாய் ஆகிய கோள்கள் ஒன்றுகூடி இருந்தாலும், இரண்டாமிடத்தில் அல்லது எட்டாமிடத்தில் சூரியன் இருந்தாலும், இரண்டாமிடத்திற்கு அதிபதி இராகுவுடன் ஒன்றுகூட அல்லது மறைய இராகு நின்ற இராசியாதிபதி ஒன்றுகூட அல்லது மறைய, இச்சாதகனுக்குப் பல்லில் நோய் உண்டாகும். இரண்டா மிடத்திற்கு அதிபதி, புதனுடன் ஒன்றுகூடி மறைந்தால், இச்சாதகனுக்கு நாக்கில் நோய் உண்டாகும்.

## கண்ட ரோகம்

என்றதோர் மூன்றுக் கிறைபுத னுடனே
இலக்கன முறிற்கண்ட ரோகம்
கான்றசத் துருவின் வர்க்கிவ ரடையிற்
காட்டிடும் கண்டரோ கம்தான்
மூன்றினிற் குளிகன் புதனுடன் பாவர்
முயங்கியே கூடிநின் றாலும்
ஊன்றிய தீயோர் இருந்திடப் பாவர்
உற்றுநோக் கினும்கண்ட ரோகம். (607)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்திற்கு அதிபதி, புதனுடன் ஒன்றுகூடி சென்ம இலக்கனத்தில் இருக்க, இச்சாதகனுக்குக் கழுத்தில் நோய் உண்டாகும். மூன்றாமிடத்திற்கு அதிபதி, புதன் ஆகிய இருகோள்களும் பகை வர்க்கத்தைச் சேர, இச்சாதகனுக்குக் கழுத்தில் நோய் உண்டாகும். சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் குளிகன், புதன் ஆகியோருடன் பாவக்கோள் சேர்ந்து

நின்றாலும், மூன்றாமிடத்தில் பாவக்கோள்கள் இருக்க, அவற்றைப் பாவக்கோள்கள் பார்த்தாலும், இச்சாதகனுக்குக் கழுத்தில் நோய் உண்டாகும்.

## இதுவுமது

நலிவுறு பாவர் நின்ற
நட்சத்திரம் தனக்குப் பின்னர்
**மலியுநட் சத்தி ரத்தில்**
வந்து ஏகவே றாகிப்
பலிகொள்ளு மெட்டில் எட்டான்
பார்த்திபனிற் பானா கிற்றான்
பொலிவுறு கண்ட ரோகம்
பொருந்துமென் றுரைப்பாய் மாதே! *(608)*

*(இ-ள்.)* பெண்ணே! ஒரு சாதகத்தில் பாவக்கோள் நின்ற நட்சத்திரத்திற்குப் பின்பு உள்ள நட்சத்திரம் வர சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் எட்டாமிடத்திற்கு அதிபதி, சூரியன் ஆகிய இரண்டு கோள்களும் நின்றால், இச்சாதகனுக்குக் கழுத்தில் நோய் உண்டாகும் என்றே உரைப்பாயாக.

குறிப்பு: இப்பாடலின் முதல் பாடலடிகளுக்குப் பொருள் விளங்கவில்லை.

## இதுவுமது

கறையிலா மூன்று நீசர்
கலந்துதான் இருக்க, மூன்றுக்
கிறையவன் எட்டில் நிற்கின்
எய்திடும் கண்ட ரோகம்
மறையுமோர் இரண்டு மூன்றுக்
கதிபரை இராகு கூடி
உறையினும் ஆறிற் செவ்வாய்
உதிக்கினும் கண்ட ரோகம். *(609)*

(இ-ள்.) ஒரு சாதகத்தில் மூன்று நீசக்கோள்கள் இருக்க, மூன்றாம் இடத்திற்கு அதிபதி எட்டாமிடத்தில் இருக்க, இச்சாதகனுக்குக் கண்டரோகம் உண்டாகும். சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்திற்கு அதிபதி, மூன்றாம் இடத்திற்கு அதிபதி ஆகியோருடன் இராகு ஒன்றுகூடி இருப்பினும், சென்ம இலக்கனத்திற்கு ஆறாம் இடத்தில் செவ்வாய் இருந்தாலும், இச்சாதகனுக்குக் கண்டரோகம் உண்டாகும்.

## களரோகம், கண்ட ரோகம்

*எதிரு மூன்றாம் இடத்திறைவன்*
*இருந்த இராசி திரேகாணம்*
*பதியோன் இருந்த அங்கிசத்தோன்*
*பாவ வர்க்க முறிற்காண*
*அதிக மாகும் களரோகம்*
*அல்லாற் கண்ட ரோகமுண்டாம்*
*மதியைத் தேனார் செழுங்கமல*
*மலரைப் பழிக்கும் வதனமின்னே! (610)*

(இ-ள்.) நிறைந்த சந்திரனையும், தேன் நிறைந்த வளப்பமான செந்தாமரையையும் காட்டிலும் அழகு பொருந்திய பொலிவுபெற்ற முகத்தையுடைய, மின்னலை யொத்த பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு மூன்றாம் இடத்திற்கு அதிபதியாக நின்ற இராசி திரேகாணம் பதியோன் இருந்த அங்கிசத்தோன் பாவவர்க்கமுற்றால், இச்சாதகனுக்குக் களரோகமும் கண்டரோகமும் உண்டாகும்.

## கண்டரோகம், கன்ன ரோகம்

*நினையுமூன் றுக்கதிபன் புதனுடனே கூடி*
*நீசசத்ரு வர்க்கமதை நிகராகு மேனும்*
*அனையமூன் றோனிரவி சனிராகு தன்னை*
*அடைந்துபவ நீசர்க்கா கிற்கண்ட ரோகம்*

புனையமூன் றிற்செவ்வாய் மாந்தியுடன் பாவர்
பொருந்திடினும் மூன்றிறையோ டாறில்சனி உறினும்
வனையமொன்றின் மூன்றுபதி னொன்றின்மதி நிற்க
வன்பாவ ருடன்கூடிப் பார்க்கில்கன்ன ரோகம். (611)

(இ-ள்.) சென்ம இலக்ககனத்திற்கு மூன்றாம் இடத்திற்கு அதிபதி, புதனுடன் கூடி நிற்க, பகை வர்க்கத்தை அடைந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்திற்கு அதிபதி, சூரியன், சனி, இராகு இவர்களோடு பாவ, நீச வர்க்கத்தை அடைந்தாலும் இச்சாதகனுக்குக் கண்டரோகம் உண்டாகும். சென்ம இலக்கனத்திற்கு மூன்றாம் இடத்தில், செவ்வாய், மாந்தியுடனும் பாவக்கோள்களுடனும், பொருந்தி இருந்தாலும், மூன்றாம் இடத்திற்கு அதிபதி ஆறில் இருக்க, இவனுடன் சனி ஒன்று கூடி இருந்தாலும், இலக்கனம், மூன்றாமிடம், பதினோராமிடம் இவற்றிள் ஒன்றில் சந்திரன் இருக்க, இவன் பாவக்கோள்களோடு ஒன்றுகூடி இருக்க, அல்லது இவனைப் பாவக்கோள்கள் பார்க்க, இச்சாதகனுக்குக் கன்னரோகம் உண்டாகும்.

### கன்னரோகம், சிரரோகம், பீனசம்

நிலைபெறும் ஐந்தில் ஒன்பதிற் பாவர்
நிற்கினும் கன்னரோ கந்தான்
அலைசிர ரோகம் புகர்சனி குருமால்
அம்புலி இரவிகூ டிடினும்
கலையுறு மூன்றில் ஆறினில் அருக்கன்
கலக்கினும் மேசிர ரோகம்
குலைவுறும் ஆறிற் குருவின்றி மற்றோர்
கூடினும் பீனச ரோகம். (612)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் அல்லது ஒன்பதாம் இடத்தில் பாவக்கோள்கள் நின்றால், இச்சாதகனுக்குக் கன்ன ரோகமும், தலையில் ரோகமும் உண்டாகும். சுக்கிரன், சனி, குரு, புதன், சந்திரன், சூரியன்

ஆகிய ஆறு கோள்களும் ஒன்றாகக் கூடியிருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில், ஆறாமிடத்தில் சூரியன் நின்றால், இச்சாதகனுக்குத் தலையில் ரோகம் உண்டாகும். சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் குருவைத் தவிர அங்குள்ள கோள்களுடன் மற்ற கோள்கள் கூடி நின்றால், இச்சாதகனுக்குப் பீனிசரோகம் உண்டாகும்.

## பீனிச நோய்

பகைத்தானம் மதிஇரவி ராகுசேய் பார்த்தாலும்
பகரும் ஆறின்
மிகைப்பான சனிமாந்தி கூடிநிற்கத் தீக்கோட்கள்
வியம்நின் றாலும்
திகைப்பானஆறெட்டிற் சனிமதிய முறவியத்திற்
தீக்கோ ளானோர்
தகைப்பாய்நின் றிடப்பார்க்க பீனிசரோ கங்காணும்
தடங்கண் மானே! (613)

*(இ-ள்.)* பெரிய கண்களைக்கொண்ட மான் போன்ற பெண்ணே! சூரியன், சந்திரன், இராகு, செவ்வாய் ஆகிய நான்கு கோள்களும் பகைத் தானத்தைப் பார்த்தாலும், சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் சனி, மாந்தி ஆகிய கோள்கள் கூடி நின்றாலும், பாவக்கோள்கள் சென்ம இலக்கனத்திற்குப் பன்னிரண்டாம் இடத்தில் நின்றாலும், இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் அல்லது எட்டாம் இடத்தில் சனியும் சந்திரனும் இருக்க, பன்னிரண்டாமிடத்தில் பாவக்கோள்கள் நிற்க, அல்லது இவர்களைப் பாவக்கோள்கள் பார்க்க, இச்சாதகனுக்குப் பீனிசரோகம் உண்டாகும்.

## தலையில் புண்கள்

கந்தலக் கனத்திற் காரி
தானிற்கப் பார்க்கு மேனும்
மந்தலக் கனத்தில்
வக்கிர னுடனே சாமி

தொந்கமாய் கூடி நிற்கத்
துடிப்பொட பாவர்பார்க்கிற்
சிந்தையாம் மனது நொந்து
சிரசினில் விரணம் தோன்றும். (614)

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் சனி நின்றாலும் அல்லது சென்ம இலக்கனத்தைச் சனி பார்த்தாலும் அல்லது சென்ம இலக்கனத்தில், இலக்கனாதிபதி செவ்வாயுடன் கூடி இருக்க, அவனைப் பாவக்கோள்கள் பார்த்தாலும் மனவேதனை மிகுவதோடு இச்சாதகனுக்குத் தலையில் புண்கள் உண்டாகும்.

## இதுவுமது

தெறிக்கும் உதய நாயகனைச்
செவ்வாய் கூடப் பார்த்தாலும்
முறிக்கும் ஆறுக் கிறையாறில்
மூர்த்தி இருக்கப் பார்த்தாலும்
தறிக்கும் சனிசேய் தான்பார்க்கச்
சாமி பாரா திருந்தாலும்
கறிக்கும் மூன்றின் மூன்றோனுங்
கதிர்சேய் கூடிற் றலைவிரணம். (615)

(இ-ள்.) சென்ம இலக்கனாதிபதியுடன் செவ்வாய் சேர்ந்து இருந்தாலும் அல்லது சென்ம இலக்கனத்தைச் செவ்வாய் பார்த்தாலும், ஆறாம் இடத்திற்கு அதிபதி, இலக்கனாதிபதி இருவரும் ஆறமிடத்தில் ஒன்றுகூடி இருப்பினும் அல்லது ஆறாமிடத்திலுள்ள ஆறாமிடத்திற்கு அதிபதியை இலக்கனாதிபதி பார்த்தாலும், இவர்களைச் சனி, செவ்வாய்ப் பார்க்க, இலக்கனாதிபதி பாராமல் இருந்தாலும், மூன்றாமிடத்தில் மூன்றுக்கதிபதியுடன் சூரியனும் செவ்வாயும் சேர்ந்து இருந்தாலும் இச்சாதகனுக்குத் தலையில் புண்கள் உண்டாகும்.

### குய்ய விரணம்

·செப்பு மூன்றில் மூன்றோனைச்
செவ்வாய் இராகு சனிகூடி
அப்புங் குயத்தில் விரணமுண்டாம்
ஆறா மிடமே யாழ்கன்னி
ஒப்ப மாகித் தீக்கோளே
வறினும் ஆறெட் டுடையோரைத்
தப்பாக் குசனே பார்த்தாலுஞ்
சாற்றீர் குய்ய விரணமென்றே. *(616)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் அல்லது மூன்றாம் இடத்திற்கு அதிபதியுடன் செவ்வாய், இராகு, சனி ஆகிய கோள்கள் கூடி இருக்க, இச்சாதகனுக்குக் குய்யத்தில் புண்கள் உண்டாகும். சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடம் மிதுன இராசி அல்லது கன்னி இராசியாக இருந்து அவ்விடங்களில் பாவக்கோள்கள் இருந்தாலும், ஆறா மிடத்திற்கு அதிபதி, எட்டாமிடத்திற்கு அதிபதி ஆகிய இருவரையும் செவ்வாய் பார்த்தாலும், இச்சாதகனுக்குக் குய்யத்தில் புண்கள் உண்டாகும்.

### குய்ய விரணம், பாதரோகம், முகவிரணம்

ஏரும் மதிக்கே எட்டினிற்சேய்
இருக்கிற் குய்ய விரணமுண்டாம்
போகும் வியத்தில் இராகுவுறில்
பொருந்தும் பாத வியாதியுண்டாம்
ஆகும் இரண்டிற் சேய்பாவ
அடவே நோக்கின் முக விரணம்
பாகும் அமுதும் செழுந்தேனும்
பாலுங் கலந்த பனிமொழியே! *(617)*

(இ-ள்.) சர்க்கரைப் பாகையும் அமுதத்தையும் செழுமையான தேனையும், பாலையும் கலந்தது போன்ற குளிர்ந்த இனிய மொழியைப் பேசக்கூடிய பெண்ணே! சந்திரன் இருந்த இராசிக்கு எட்டாமிடத்தில் செவ்வாய்

இருந்தால், குய்யத்தில் புண் உண்டாகும். பன்னிரண்டாம் இடத்தில், இராகு இருந்தால் பாதத்தில் நோய் உண்டாகும். இரண்டாமிடத்தில் செவ்வாய் இருக்க, பாவக்கோள் பார்க்க முகத்தில் காயம் அல்லது பூண் உண்டாகும்.

### விரண சரீரம், லிங்க விரணம்

என்னுமீ இரண்டில் எட்டினிற்றான்
இனிய கேது இருந்தாலும்
முன்னும் ஆறுக் கிறைபாவி
யுடனே கூடி ஒன்றெட்டில்
நண்ணில் விரணச் சரீரமதாம்
நவிலா றேழுக் குடையோர்கள்
பண்ணு மெட்டில் இருக்கச்சேய்
பார்க்கில் லிங்க விரணமதாம். (618)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் அல்லது எட்டாமிடத்தில் கேது இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு ஆறாம் இடத்திற்கு அதிபதி பாவக் கோளுடன் ஒன்று சேர்ந்து சென்ம இலக்கனத்தில் அல்லது எட்டாமிடத்தில் இருக்கில், இச்சாதகனுக்கு உடல் முழுவதும் புண்கள் உண்டாகும். சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடம், ஏழாமிடம் ஆகியவற்றிற்கு அதிபதிகள் எட்டாமிடத்தில் இருக்க, இவர்களைச் செவ்வாய் பார்க்கில், இச்சாதகனுக்கு லிங்கத்தில் புண்கள் உண்டாகும்.

### இதுவுமது

இகலு மாறுக் கிறையுதயத்
திருக்கச் செவ்வாய் பார்த்தாலும்
திகழு மிரண்டே ழுக்கிறைவர்
செவ்வாய் வர்க்கந் தனையடையப்
புகரு முதயந் தனிலாறுக்
குடையோன் றானே புகுந்திடினும்
பக்குமி லிங்க விரணமென்றே
பகர்வார் கமலப் பசுந்தேனே! (619)

(இ-ள்.) தாமரை மலரின் இனிய தேனைப் போன்று இனிமையுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்திற்கு அதிபதி இலக்கனத்தில் இருக்க, இவனைச் செவ்வாய்ப் பார்த்தாலும், இரண்டாமிடத்திற்கதிபதி, ஏழாமிடத்திற்கு அதிபதி செவ்வாய் வர்க்கத்தையடைய, சுக்கிரன் இலக்கனத்தில் இருக்க, ஆறாமிடத்திற்கு அதிபதி அவனுடன் சேர்ந்து இருந்தாலும், இச்சாதகனுக்கு லிங்க விரணம் தோன்றும் என்று கூறுவார்கள்.

## பைத்தியம்

கார்க்குமெட்டில் இரவிநிற்க, தனத்தில்சனி யுறப்பாவர்
காணு மேனும்
ஏர்க்குதய மெட்டினுக்கு இறைவருடன் புதன்கூடி
இருக்க மேனும்
கூர்க்குமா றினுக்கதிப னாறதனிற் புகருடனே
கூடி னாலும்
பார்க்குமாறுளன்மதிபொன் கன்னிரவி சனியுறினும்
பயித்தியம் தானே. (620)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் சூரியன் நிற்க, இரண்டாமிடத்தில் சனி இருக்க, இவற்றை பாவக்கோள் பார்த்தாலும், சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்திற்கு அதிபதியுடன் புதன் கூடி இருந்தாலும் ஆறாமிடத்திற்கதிபதி, சுக்கிரனுடன் ஆறாமிடத்தில் ஒன்று கூடி இருந்தாலும் ஆறாமிடத்திற்கு அதிபதி, சந்திரன், குரு, சனி ஆகிய கோள்கள் கன்னி இராசியில் நின்ற சூரியனுடன் சேர, இச்சாதகன் பைத்தியமாக இருப்பான்.

## பித்த ரோகம், பிசாசு பீடை

தெரிக்குமா றுடையோன் சேயைச்
சேர்ந்திட இரத்த பித்தம்
முறித்தவ தலத்து ராகு
உறிற்பித்த பிசாசு பீடை

கரிக்குமாந் திரத்தின் மாந்தி
காரியுங் கூடி னாலும்
விரிக்குமோ ரெட்டிற் கேது
மேவினும் பிசாசு பீடை. (621)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்திற்கு அதிபதி செவ்வாயைச் சேர்ந்திருக்க இரத்த பித்தம் உண்டாகும். ஆறாமிடத்தில் இராகு இருக்க பித்த நோய், பிசாசு, பீடை உண்டாகும். திர ராசியில் மாந்தியும் சனியும் ஒன்றுகூடி இருந்தாலும், எட்டாமிடத்தில் கேது இருந்தாலும் பிசாசு, பீடை உண்டாகும்.

**பிசாசு பீடை**

பலமற்ற மதியு மெட்டிற்
பெற்புற சனியும் பாம்பும்
பலமுறக் கூடி நின்றாற்
பிசாசினாற் பயமுண் டாகும்
இலகிய வாறில் ஆறுக்
கிறைபாம்பைக் கூடி னாலும்
கலகமாய்ப் பிசாசு பீடை
காட்டிடுங் கயற்க ணாளே! (622)

(இ-ள்.) கயல் மீன்களைப் போன்ற கண்களையுடைய பெண்ணே ! பலமற்ற சந்திரனும், சனியும், பாம்பும் ஒன்றுகூடி சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் நின்றால், பிசாசினால் அச்சம் உண்டாகும். சென்ம இலக்கனத்திற்கு ஆறாம் இடத்தில் ஆறாம் இடத்திற்கு அதிபதி பாம்புடன் கூடி இருந்தாலும் பிசாசினால் துன்பம் உண்டாகும்.

**இதுவுமது**

நுவலிலக் கனத்தைச் செவ்வாய்
நோக்கிட ஆறுக் குள்ளோன்
நவமிலா ஏழில் நிற்கில்
அலகையால் பீடை காட்டும்

தவறிலா நாலிற் செவ்வாய்
சனிரவி இருக்கிற் பார்க்கிற்
கவலையாம் பிசாசு பீடை
காணுங்கற் பகப்பூந் தேனே! (623)

(இ-ள்.) கற்பகச் சோலையில் மலர்ந்த மலரிலுள்ள தேனைப் போன்று இனிமையான பெண்ணே ! சென்ம இலக்கனத்தைச் செவ்வாய்ப் பார்த்தாலும், சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்திற்கு அதிபதி ஏழாமிடத்திற் நிற்க, இச்சாதகனுக்குப் பேயினால் துன்பம் உண்டாகும். சென்ம இலக்கனத்திற்கு நாலாமிடத்தில் செவ்வாய், சனி, சூரியன் இருக்க அல்லது சென்ம இலக்கனத்தைப் பார்க்க, இச்சாதகனுக்குப் பிசாசினால் துன்பம் உண்டாகும்.

## இருமல், ஓதம்

மதிபுதனா றிற்பாவ ரோடுறையிலே
வந்திடும் இருமல்தான் என்பார்
புதியதோர் பத்தில் கேதுவே இருக்கில்
பொருந்திடும் இருமல்வந் தெய்தும்
எதிரும்லக் கனத்தில் குளிகனே இருக்க
எட்டினிற் சாமிநின் றாலும்
துதிசனி இராகு சேயுத யத்தாற்
சுபர்நோக்க மற்றிடில் ஓதம். (624)

(இ-ள்.) சந்திரனும், புதனும் சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் பாவக்கோள்களோடு சேர்ந்திருக்க, இருமல் தோன்றும். சென்ம இலக்கனத்திற்குப் பத்தாமிடத்தில் கேது இருக்க, இச்சாதகனுக்கு இருமல் தோன்றும், சென்ம இலக்கனத்தில் குளிகன் இருக்க, எட்டாமிடத்திற் இலக்க னாதிபதி நின்றாலும், இலக்கனத்தில் சனி, செவ்வாய், இராகு ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி இருக்க, இவற்றைச் சுபக்கோள்கள் பார்க்கவில்லையென்றாலும் இச்சாதகனுக்கு ஓத நோய் உண்டாகும்.

## ஓதம்

திருந்திலக் கனத்தி இராகுவு மெட்டில்
சேயுறக் கோணத்தின் மாந்தி
இருந்திடு மேனும் ஏழிற்சே யிருக்க
ஏழிறை மூன்றில்நின் றாலும்
வருந்திய சாமியங் கிசாதிபனும்
வன்சனி இராகுசேய் குளிகன்
பொருந்தியே கூடி இருந்திடில் ஓதம்
பொருமியே வருமெனப் புகல்வார். (625)

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் இராகுவும் எட்டா மிடத்தில் செவ்வாயும், திரிகோணங்களாகிய இலக்கனம்; ஐந்தாமிடம், ஏழாமிடம் இவற்றில் ஒன்றில் மாந்தி இருந்தாலும், ஏழாமிடத்தில் செவ்வாய் இருக்க, ஏழாமிடத் திற்கு அதிபதி, மூன்றாமிடத்தில் இருந்தாலும், இலக்க னாதிபதி, நின்ற அங்கிசாதிபனும் சனி, இராகு, செவ்வாய், குளிகன் இவர்களோடு ஒன்று கூடி இருப்பின், இச்சாதகனுக்கு ஓதநோய் வரும் என்று சொல்வர்.

## விரண தேகம்

இயங்குமா றினுக்குடையோன் இரவியுட லக்கனத்
திருக்கு மேனும்
பயன்றரு மூன்றினிற்செவ்வா யுறினும்மூன் றினிற்கதிர்
பாவ ரோட
வயங்கிடினும் எட்டாறில் சாமியு நீசமுட
வக்கிர மாக
தியங்கியசற் குருவர்க்க மடைந் திடினும் விரணமுள்ள
தேக மாமே. (627)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்திற்கு அதிபதி சூரியனுடன் ஒன்றுகூடி இலக்கனத்தில் இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு மூன்றாமிடத்தில் செவ்வாய் இருந்தாலும், மூன்றாமிடத்தில் சூரியன் பாவக்

கோள்களோடு சேர்ந்து இருந்தாலும் சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் அல்லது ஆறாமிடத்தில் இலக்கனாதிபதியும் நீச, மூட, வக்கிரம் பெற்று குரு வர்க்கமடைந்து இருந்தாலும், இச்சாதகனுக்கு உடலில் புண்கள் நிறைந்திருக்கும்.

**இதுவுமது**

*சனிசெவ்வாய் சாமிதனைப் பார்த்தாலுஞ் சாமிபல*
*வீன மாகி*
*கனியுறுதீக் கோளுடனே கூட ஆறு எண்பார்வை*
*நண்ணி னாலும்*
*மினியவெள்ளி ஆறிநிற்க பூமன்பார்ந் தாலும்வாய்த்*
*திலங்குந் திங்கள்*
*முனிவிலாதிருக் கத்தீயோர் பார்க்கின்விர ணமெய்யாம்*
*மோக மானே!* *(627)*

(இ-ள்.) மோக மானே ! இலக்கனாதிபதியை சனி, செவ்வாய் ஆகிய கோள்கள் பார்த்தாலும், இலக்கனாதிபதி பலவீனமாகி தீயக்கோள்களுடன் சேர்ந்திருக்க, இவனை ஆறாமிடத்திற்கு அதிபதி பார்த்தாலும், சுக்கிரன் ஆறாமிடத்தில் இருக்க, அவனைச் செவ்வாய் பார்த்தாலும், சந்திரனைத் தீயக்கோள்கள் பார்த்திருக்க, இச்சாதகனுக்கு உடலில் புண்கள் இருக்கும்.

**விரண ரோகம், நேத்திர ரோகம்**

*சாமியங் கிசனுக் குவியற் தீக்கோ ளுறினும்*
*சாமிக் குத்தான்*
*காமிலக் கினந்தனக்கும் வியத்திற்கோள் இருந்தாலும்*
*கருது மேடம்*
*வீமிசைதே ளினிற்செவ்வா யுறத்தீயோர் பார்த்தாலும்*
*விரண தேகம்*
*நேமிவ்வா றினில்வியத்திற் பாவர்நிற்ப ராலிடது*
*நேத்திர ரோகம்.* *(628)*

(இ-ள்.) சென்ம இலக்கனாதிபதி நின்ற அங்கிசாதி பதிக்குப் பன்னிரண்டாமிடத்தில் பாவக்கோள்கள் இருந்தாலும் சென்ம இலக்கனத்தில், பன்னிரண்டாம் இடத்திற்கு அதிபதி அமர்ந்திருப்பினும், மேட இராசி, விருச்சிக இராசியில் செவ்வாய் நிற்க, அவனைத் தீயோர் பார்த்தாலும், இச்சாதகனுக்கு உடல் முழுவதும் புண்கள் தோன்றும். சென்ம இலக்கனத்திற்கு ஆறாம் இடத்தில் அல்லது பன்னிரண்டாம் இடத்தில் பாவக்கோள்கள் இருக்க, இச்சாதகனுக்கு இடது கண்ணில் நோய் உண்டாகும்.

### இடது கண், வலது கண் ஆகியவற்றில் நோய்

கடவுமொன் றேழில் வெய்யோன்
கலந்திடப் பாவர் பார்க்கில்
இடதுநேத் திரவி யாதி
இரண்டெட்டிற் பாவர் நிற்கில்
வடவுள வலக்கண் நோயாம்
மறையுமொன் றேழில் வெய்யோன்
கடமுற இருக்க இராகு
சனிபார்க்கில் வலக்கண் நோயாம். (629)

(இ-ள்.) சென்ம இலக்கனம், ஏழாமிடம் ஆகியவற்றில் ஒன்றில் சூரியன் இருக்க, இவனைப் பாவக்கோள் பார்க்க, இச்சாதகனுக்கு இடது கண்ணில் நோய் உண்டாகும். சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடம், எட்டாமிடம் ஆகியவற்றில் பாவக்கோள்கள் நிற்க, இச்சாதகனுக்கு வலது கண்ணில் நோய் உண்டாகும். சென்ம இலக்கனம், ஏழாமிடம் இவற்றில் ஒன்றில் சூரியன் இருக்க, இவனை இராகு, சனி பார்க்க, இச்சாதகனுக்கு வலது கண்ணில் நோய் உண்டாகும்.

### இருகண்களிலும் நோய்

ஆறினில் மதியும் எட்டில்
அருக்கனும் வியத்தில் காரி
கீறிய தனத்திற் சேயும்
மேவிடில் இருகண் ணோயாம்

*ஏறிய எட்டிற் காரி*
*இருந்திடப் பாவர் பார்க்கில்*
*ஊறிய உபய நேத்திர*
*ரோகியென் றுரைப்பர் நூலோர். (630)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் சந்திரனும், எட்டாமிடத்தில் சூரியனும், பன்னிரண்டாமிடத்தில் சனியும், இரண்டாமிடத்தில் செவ்வாயும் இருக்க, இச்சாதகனுக்கு இரு கண்களிலும் நோய் உண்டாகும். சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் சனி இருக்க, அந்தச் சனியைப் பாவக்கோள் பார்க்க, இச்சாதகனின் இரண்டு கண்களிலும் நோய் உண்டாகும் என்று கூறுவார்கள்.

## இதுவுமது

*பெறுமுதய மிரண்டைந்தே ழொன்பதினுக் கிறைவர்*
*பலமாகி ஆறெட்டில் வியத்திலிருந் தாலும்*
*நெறிகுருவுக் கைந்தெட்டிற் சேயிருக்கப் பாவர்*
*நேராகப் பார்த்தாலும் இரண்டிற்சே யுறினும்*
*குறிவியத்தினிற் சனியிருக்க குளிகனெட்டி லுறினும்*
*கூறுமிரண் டேழெட்டில் வியத்தில்ரவி யுறினும்*
*செறிதனத்தோன் பாவியுடன் கூடரவி புகர்சேய்*
*சேர்ந்தொன்றாய்ப் பார்த்தாலும் செப்புவர்கண்*
*ணோயே. (631)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனம், இரண்டாமிடம், ஐந்தாமிடம், ஏழாமிடம், ஒன்பதாமிடம் ஆகியவற்றிற்கு அதிபதிகள் பலம் பெற்று ஆறாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாமிடம் ஆகியவற்றில் இருந்தாலும், குருவுக்கு ஐந்தாமிடம், எட்டாமிடம் ஆகியவற்றில் ஒன்றில் செவ்வாய் இருக்க, அதனைப் பாவக்கோள் பார்த்தாலும், சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் செவ்வாய் இருக்க, பன்னிரண்டாமிடத்தில் சனி இருக்க, குளிகன் எட்டாம் இடத்தில் இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடம், ஏழாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டா

மிடம் இவற்றில் சூரியன் இருந்தாலும், இரண்டாம் இடத்திற்கு அதிபதியுடன் பாவக்கோள் இருக்க, அவர்களை சூரியன், சுக்கிரன், செவ்வாய் ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி பார்த்தாலும், இச்சாதகனுக்கு கண்ணோய் என்று கூறுவார்கள்.

## இதுவுமது

*உயர்சாமி தனத்திறையைக் கூடியது பலத்தால்*
*ஓரிரண்டிற் றீக்கோளே உறுதியினின் றாலும்*
*இயல்வெள்ளி பொன்னிரவி கூடியிருந் தாலும்*
*இரவிசேய் குருபுந்தி இணங்கியிருந் தாலும்*
*நயமுடைய கதிர்செவ்வாய் பொன்வெள்ளி மதியும்*
*நன்மையுடன் கூடிடினும் இரவிமதி புகர்மால்*
*சயமுடைய சனியுமொன்றாய்க் கூடிடினும் மாதே!*
*சாற்றுவார் நேத்திரரோகம் தானென்பர் உறவோர்.* (632)

*(இ-ள்.)* சென்ம இலக்கனாதிபதி இரண்டாம் இடத்திற்கு அதிபதியுடன் ஒன்றுகூடி பலத்துடன் நின்றாலும், இலக்கனத்தில், இரண்டாம் இடத்தில் பாவக் கோள்கள் நின்றாலும், சுக்கிரன், குரு, சூரியன் ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி இருந்தாலும், சூரியன், செவ்வாய், குரு, புதன் ஆகிய நான்கு கோள்களும் ஒன்றுகூடி இருந்தாலும், சூரியன், செவ்வாய், குரு, சுக்கிரன் சந்திரன் ஆகிய நான்கு கோள்களும் ஒன்றுகூடி இருந்தாலும், சூரியன், சந்திரன், சுக்கிரன், புதன், சனி ஆகிய ஐந்து கோள்களும் ஒன்றுகூடி இருந்தாலும், இச்சாதகனுக்கு கண்நோய் உண்டாகும் என்று கூறுவர்.

## மாலைக்கண், கரும்படலைக்கண்

*அடுக்குமிரண் டினுக்கிறைவன் பாவியுடன் கூடி*
*அருணாதயந் தனிலிருக்கச் சுபம்பார்க்கு மேனும்*
*எடுத்தசிங்கம் உதயமாய் இரவிமதி கூடி*
*இருந்திடினும் மதிவெள்ளி தனத்தோன்கூ டிடினும்*

தொடுத்தசிங்க முதயமாய் உச்சர்பார்த் தாலுந்
துலக்கமுற் றிடுமாலைக் கண்ணெனச் சொல்வர்
கடுத்தகொறி உதயமாய் இரவியே இருக்கிற்
கரும்படலைக் கண்ணனெனக் கட்டுரைப்பர்
மயிலே! *(633)*

(இ-ள்.) மயில் போன்ற சாயலையுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்திற்கு அதிபதி பாவக்கோளுடன் கூடி இலக்கனத்தில் இருக்க, இவர்களைச் சுபர் பார்த்தாலும், இலக்கனம் சிம்மமாக அதில் சூரியனும் சந்திரனும் கூடி இருந்தாலும், சந்திரன், சுக்கிரன், இரண்டாமிடத்திற்கு அதிபதி ஆகிய மூவரும் ஒன்று கூடி இருந்தாலும், இலக்கனம் சிம்மமாக இருந்து அதனை உச்சக்கோள் பார்த்தாலும், இச்சாதகனுக்கு மாலைக்கண் நோய் உண்டெனச் சொல்வர். இலக்கனம் மேஷமாக இருக்க, அதில் சூரியன் இருக்க, இச்சாதகனுக்குக் கரும்படலைக்கண் என்று கூறுவர்.

**உச்சிக்கண், பூனைக்கண், நேத்திர சலரோகம்**

மங்காத சாமியுடன் இரவிமதி கூடி
மறையிலுச்சிக் கண்ணனென்பர் மால்செவ்வாய்
சனியும்
தங்காமுன் கூடிநிற்கில் பூனைக்கண் ணென்பர்
சாற்றுமிரண் டாறெட்டில் வியத்தில்மதி இருக்கப்
பொங்கார மானதீக் கோளெதிர்பார்த் தாலும்
பொற்பாகு மிரண்டாறில் வெள்ளியிருந் தாலும்
சிங்கார நேத்திரத்திற் சலரோகம் காட்டும்
திரண்டெழுந்த சுணங்குபொன் திலங்குதனத்
திருவே! *(634)*

(இ-ள்.) பருத்து உயர்ந்த, பொன் போன்று தேமல் விளங்கக்கூடிய கொங்கைகளைக் கொண்ட திருமகளைப் போன்ற அழகுடைய பெண்ணே! சென்ம இலக்கனாதிபதியுடன் சந்திரன், சூரியன் ஒன்றுகூடி மறைய, இச்சாதகன்

உச்சிக்கண்ணை உடையவனாக இருப்பான். புதன், செவ்வாய், சனி ஆகிய கோள்கள் மூன்றும் ஒன்றுகூடி இருக்க, இச்சாதகன் பூனைக் கண்ணைக் கொண்டவனாக இருப்பான். சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாமிடம் ஆகியவற்றில் ஒன்றில் சந்திரன் இருக்க, இதனைப் பாவக்கோள்கள் பார்த்தாலும், சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடம், ஆறாமிடம் இவற்றில் ஒன்றில் சுக்கிரன் இருந்தாலும் இச்சாதகனுக்குக் கண்ணில் சலரோகம் உண்டாகும்.

## நேத்திரரோகம், அண்ட ரோகம்

பரிந்திரண்டு தனத்தோறும் பாவவர்க்க மடையப்
பாவரே பார்த்தாலும் மூன்றிலுச்சர் நிற்க
முரிவுறுதீ யோர்பார்க்கக் கதிர்மதிகூ டிடினும்
மொழியுமைந் தாறுக்கிறை வர்புகரைக் கூடிடினும்
மரியநேத் திரரோகம் ஏழுதனிற் சனிசேய்
அன்புடனே கூடிநிற்க அல்லதுபார்த் தாலும்
புரியுமே ழினிற்செவ்வாய் சனிராகு இருக்கப்
புகலுமெட்டில் நீசர்நிற்கிற் பூணுமண்ட ரோகம். (635)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடமும், இரண்டாம் இடத்திற்கு அதிபதியும் பாவவர்க்கம் அடைய, பாவக்கோள்கள் பார்த்தாலும், மூன்றாமிடத்தில் உச்சக் கோள்கள் இருக்க, அவர்களைப் பாவக்கோள்கள் பார்க்க அவர்களோடு சூரியன், சந்திரன் ஆகிய இரண்டு கோள்கள் ஒன்றுகூடி இருந்தாலும் சென்ம இலக்கனத்திற்கு ஐந்தா மிடத்திற்கு அதிபதியும், ஆறாமிடத்திற்கு அதிபதியும் சுக்கிரனோடு ஒன்றுகூடி இருந்தாலும், இச்சாதகனுக்குக் கண்ணில் நோய் உண்டாகும். சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் சனியும் செவ்வாயும் ஒன்றுகூடி நின்றாலும் அல்லது இரண்டும் ஏழாமிடத்தைப் பார்த்தாலும், ஏழா மிடத்தில் செவ்வாய், சனி, இராகு ஆகிய மூன்று கோள்களும் இருக்க, எட்டாமிடத்தில் நீசக்கோள் இருக்க, இச்சாதகனுக்கு அண்டரோகம் உண்டாகும்.

## அண்டரோகம், சுவாசகாசம்

அண்டியதோர் ஒன்றேழில் பாவரே இருக்க
அதற்குடை யோரும்புகரு நீசவர்க்க முறினும்
கொண்டமக ரத்திறைவன் நீசமுற்றா ரெட்டிற்
கூர்வியத்தி லிருக்கவெள்ளி நீசமாய் நாலிற்
தண்டியே இருந்தாலும் வருமண்ட ரோகம்
சனிசெவ்வாய் இராகுவுமே இலக்கனத்தில் இருக்கிற்
துண்டமுமார் புந்துடிக்கச் சுவாசகா சந்தான்
றோற்றிடும் அம்புயமலரிற் றோகையிள
மயிலே! (636)

(இ-ள்.) செந்தாமரை மலர் போன்ற முகத்தையும் மயில்தோகை போன்ற கூந்தலையும் உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்தில் அதற்கு ஏழாமிடத்தில் பாவக் கோள்கள் இருக்க, அதற்கு அதிபதிகளும் சுக்கிரனும் நீசவர்க்கமுற்று இருந்தாலும், மகர இராசிக்கு அதிபதி நீசமுற்று சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாம் இடம் ஆகிய இவற்றிலொன்றில் இருக்க, சுக்கிரன் நீசமாகி நான்காம் இடத்தில் இருந்தாலும், இச்சாதகனுக்கு அண்டரோகம் உண்டாகும். சென்ம இலக்கனத்தில் சனி, செவ்வாய், இராகு ஆகிய கோள்கள் ஒன்றுகூடி இருக்க, இச்சாதகனுக்கு மார்பு படபடப்பு இருப்பதோடு சுவாச காச நோய் உண்டாகும்.

## ஈளை, உதரரோகம்

இலக்கனத் தையிலக்க னேசனையும் சேய்ராகு
எதிர்பார்க்க உடன்கூட வேஈளை நோயாம்
கலக்கியவன் தனிற்சனியும் மகரமதில் மதியுங்
கடும்பாவ ருடன்கூடில் உதரவே தனையாம்
அலக்கணுறு மகரகும்ப மாறெட்டே யாக
வரியதேய் மதியிருக்கப் பாவர்பார்த் தாலும்
விலக்கிலா உதயத்திற் செங்கதிரும் சனியும்
வெள்ளியுமே கூடிநிற்கில் உதரவே தனையே! (637)

(இ-ள்.) சென்ம இலக்கனத்தையும் இலக்கனாதி பதியையும் செவ்வாய், இராகு ஆகிய கோள்கள் பார்க்க அல்லது இலக்கனத்தையோ இலக்கனாதிபதியையோ ஒன்றுகூடி இருப்பின், இச்சாதகனுக்கு ஈளைநோய் உண்டாகும். கடக இராசியில் சனியும், மகர இராசியில் சந்திரனும் இருக்க, இவர்களுடன் பாவக்கோள்கள் ஒன்றுகூடி இருப்பின், இச்சாதகனுக்கு வயிற்றுவலியால் துன்பம் உண்டாகும். மகரம், கும்பம் ஆகிய இரு இராசிகளும் ஆறாமிடமாகவோ எட்டாமிடமாகவோ இருக்க, இவற்றில் தேய்மதி சந்திரன் இருக்க, இச்சந்திரனைப் பாவக்கோள்கள் பார்த்தாலும், சென்ம இலக்கனத்தில் சூரியனும் சனியும், சுக்கிரனும் ஒன்றுகூடி இருக்க, இச்சாதகனுக்கு வயிற்று வலியால் துன்பம் உண்டாகும்.

## உதர ரோகம்

*பிணியுறுமா றுக்கிறையும் அவனங்கிசத் தோனும்*
*பலவீனமுற றச்செவ்வாய் கூடப்பார்த் தாலும்*
*மணியுமா றின்மதியைச் சனிசெவ்வாய்க் கூட*
*அல்லதுபார்த் தாலுமா றிற்புதனும் சனியும்*
*துணிவுறும்பாம் புங்கூடப் பாத்திடினு மாகும்*
*சொலுநாலிற் கேதுவுறச் சத்துருதா னத்தோன்*
*றணிவாகப் பார்த்தாலும் உதரவேதனை யாகும்*
*சதுர்மன தைக்கவருந் தடங்கண்மதி நுதலே! (638)*

(இ-ள்.) திறமைமிக்கோரின் மனதையும் கொள்ளை கொள்ளும் பெரிய கண்களையும் பிறைபோன்ற நெற்றியையும் உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஆறாம் இடத்திற்கு அதிபதியும் அவன் அங்கிசத்தோனும் பலவீனமாக இருக்க, இவர்களோடு செவ்வாய் சேர்ந்திருந் தாலும், இவர்களைப் பார்த்தாலும் ஆறாம் இடத்தில இருக்கக் கூடிய சந்திரனுடன் சனி, செவ்வாய் சேர்ந்தாலும் அல்லது அந்தச் சந்திரனை இந்த இரண்டு கோள்களும் பார்த்தாலும், சென்ம இலக்கனத்திற்கு ஆறாம் இடத்திற் புதனும் சனியும்

இராகு கேது இவற்றில் ஒன்றுகூடி இருப்பினும் அல்லது ஆறாம் இடத்தைப் பார்த்தாலும், சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்தில் கேது இருக்க, ஆறாம் இடத்திற்கு அதிபதி அவர்களைப் பார்த்தாலும் இச்சாதகன் வயிற்றுவலியால் துன்பமுறுவான்.

### நீராமை, பெரும்வயிறு, ஆசனரோகம்

*கற்கடகந் தனிற்சனியுங் காற்றதனிற் பிறையும்*
*கதிரும்சல ராசியா றாகியதிற் கூடி*
*வர்க்கமுடன் ஆறிலங்ச மாகியே யிருக்கில்*
*வருந்துநீ ராமைபெரு வயிறுமென வுரைப்பர்*
*சொர்க்கமுறுஞ் சாமியுடன் புதன்செவ்வாய் கூடித்*
*துன்னியவா றினிலிருக்கி ஆசனத்தில் வியாதி*
*தர்க்கமுறுங் கடகக்கும்பம் விருட்சிகத்தின் மதியும்*
*தானிருந்தங் கிசஞ்செய்யா லாசனத்தில் வியாதி. (639)*

(இ-ள்.) கடக இராசியில் சனியும் சுவாதி நட்சத்திரக் கால்களில் சந்திரனும் சூரியனும், சல இராசியாகிய சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் கூடி, அங்கிசமாக இருக்க, இச்சாதகனுக்கு நீராமை, பெருவயிறு முதலான நோய்கள் உண்டாகுமென்று கூறுவர். சென்ம இலக்கனாதிபதியுடன் புதன், செவ்வாய் கூடி, சென்ம இலக்கனத்திற்கு ஆறா மிடத்தில் இருக்கில், இச்சாதகனுக்கு ஆசன வியாதி உண்டாகும். கடகம், கும்பம், விருச்சிகம் ஆகிய இராசிகளில் சந்திரன் இருந்து அங்கிசம் பெற, இச்சாதகனுக்கு ஆசன வியாதி உண்டாகும்.

குறிப்பு: காற்று - சுவாதி நட்சத்திரம்.

### மூத்திரக் கிரிச்சனம்

இலங்கிய எட்டி லாறினிற் பாவர்
இருந்திட ஆறினுக் கிறைவன்
துலங்கு இலக்கனத் திருந்திடு மேனும்
சொல்சல ராசியில் மதிதான்

*பலம்பெற இருக்கப் பாவரே பார்க்கப்*
*பிறைநின்ற ராசியோன் நாலிற்*
*கலந்துற நிற்க கர்மத்தோன் பார்க்கக்*
*காணுமூத் திரக்கிரிச் சனமே.* *(640)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில், ஆறாமிடத்தில பாவக்கோள்கள் இருக்க, ஆறாமிடத்திற்கு அதிபதி சென்ம இலக்கனத்தில் இருந்தாலும், சல இராசியில் சந்திரன் பலம்பெற்று இருக்க, இவனைப் பாவக்கோள் பார்த்தாலும் சந்திரன் நின்ற இராசியாதிபதி நாலாமிடத்தில் இருக்க, இவனைப் பத்தாம் இடத்திற்கு அதிபதி பார்த்தாலும் இச்சாதகனுக்கு மூத்திரக்கிரிச்சனம் நோய் உண்டாகும்.

## இதுவுமது

*மிதுனமே யுதிக்கப் புந்திகேந் திரிக்க*
*வெள்ளிதான் பாவர்வர்க்க முறினும்*
*மதிமோ ராறாமிடம் சலராசி யாகி*
*சேய்சனி சுக்கிரன் இருக்கப்*
*புதன்மிகு பாவ மத்திய மிதுனம்*
*பொருந்திடக் குருவுடன் பாவர்*
*முதுமையாய்க் கூடி இருக்கினு மாதே !*
*மூத்திரக் கிரிச்சன முண்டாம்.* *(641)*

(இ-ள்.) சென்ம இலக்கனம் மிதுனமாக, இதற்கு நான்காமிடம், ஏழாமிடம், பத்தாமிடம் ஆகியவற்றில் ஒன்றில், புந்தி, இருக்க, சுக்கிரன் பாவர்வர்க்கம் பெற்று இருந்தாலும், மதி நின்ற இராசிக்கு ஆறாமிடம் சல இராசியாகி செவ்வாய், சனி, சுக்கிரன் ஆகிய கோள்கள் ஒன்றுகூடி இருக்க, புதன் பாவக்கோள்களுக்கு இடையே மிதுனத்தில் பொருந்திட, குருவுடன் பாவக்கோள் கூடியிருந் தாலும், இச்சாதகனுக்கு மூத்திரக் கிரிச்சனம் உண்டாகும்.

## நீர்க்கடுப்பு

ஒதுமொன் றாறு மேடந்தே ளாகி
ஒளிமதி சேயுமே இருக்க
கோதுறு மாறுக் கிறைசலக் கோளைக்
கூடிபார்த் திடினும்நீர்க் கடுப்பாம்
போதுறு மெட்டின் மதிதனைப் பாவர்
பொற்புற நோக்கிடு மேனும்
ஏதுவாம் ஏழிற் சனியிருந் தாலும்
எய்திடும் நீர்க்கடுப் பென்பார். (642)

(இ-ள்.) சென்ம இலக்கனம், இலக்கனத்திற்கு ஆறாமிடம், மேட இராசி அல்லது விருச்சிக இராசியாக இருக்க, அவற்றில் சந்திரனும் செவ்வாயும் இருக்க, ஆறாம் இடத்திற்கு அதிபதி, சலக்கோளோடு கூடி இருப்பினும் அல்லது சலக்கோளால் பார்க்கப்பட்டாலும், இச்சாதகனுக்கு நீர்க்கடுப்புத் தோன்றும். சென்ம இலக்கனத்திற்கு எட்டா மிடத்தில் உள்ள சந்திரனைப் பாவக்கோள் பார்த்தாலும், ஏழாமிடத்தில் சனியிருந்தாலும் இச்சாதகனுக்கு அடிக்கடி நீர்க்கடுப்புத் தோன்றும்.

## சலக்கழிச்சல்

ஏடவிழு மதிவெள்ளி அட்டமத்தி லிருக்க
இவர்களங் கிசைதிபர்க் குஞ்சாமிக்கும் எட்டே
நீடரிய சலராசி யாகியசலக் கிரகம்
நின்றிடினும் எட்டிறையும் சனிபுகருங் கூடி
தேடருமா றாமிடமே சலராசி யாகிச்
சென்றிருக்கக் காமத்தோன் இருக்கினும்பார்த் தாலும்
நாடியகர்க் கடகத்தில் சனிமகர மதியும்
நயந்தேழி லங்கமுறிற் சலக்கழிச்சல் எய்தும். (643)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு எட்டாம் இடத்தில் சந்திரனும் சுக்கிரனும் இருக்க, இவர்களுடைய அங்கிசாதி பதிக்கும் இலக்கனாதிபதிக்கும் எட்டாமிடம் சல இராசியாகி

அதில் சலக்கிரகம் இருந்தாலும், எட்டாமிடத்திற்கு அதிபதியும் சனியும் சுக்கிரனும் ஒன்றுகூடி சல இராசியான ஆறாமிடத்தில் இருக்க, இவர்களோடு ஏழாமிடத்திற்கு அதிபதி இருந்தாலும், பார்த்தாலும் கற்கடக இராசியில் சனியும் மகர இராசியில் சந்திரனும் ஏழாமிடத்தில் இருந்தாலும் இச்சாதகனுக்குச் சலக்கழிச்சல் வரும்.

## பிரமேகம்

மதிவெள்ளி ஆறில்நிற்கச் சேய்சனிபார்த் தாலும்
வருமாறே னுக்கிறைவன் கூடமதி வெள்ளி
எதிராகப் பார்த்தாலும் ஏழெட் டுக் கிறைவன்
இயன்மதியி னுடன்கூட ஆறிறைநோக் கிடினுந்
சதிராக வருமேழும் ஏழினிறை தானும்
சனிசெவ்வாய் ராகுவர்க்கந் தனையடையு மேனும்
பதிகாமத் தோனைச்சது ரேசனுமே பார்க்கப்
பொருந்தியே கூடிடினும் பிரமேகம் என்பார். *(644)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஆறாம் இடத்தில் சந்திரனும் சுக்கிரனும் இருக்க, இவர்களைச் செவ்வாயும் சனியும் பார்த்ததாலும், ஆறாம் இடத்திற்கு அதிபதி இவர்களோடு சேர்ந்தாலும் இவர்களைச் சந்திரனும் சனியும் பார்த்தாலும் சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்திற்கு அதிபதி, எட்டாமிடத்திற்கு அதிபதி இவர்களோடு சந்திரன் சேர்ந்து இருந்தாலும் இவர்களை ஆறாம் இடத்திற்கு அதிபதி பார்த்தாலும், ஏழாமிடம் ஏழாமிடத்திற்கு அதிபதி, சனி, செவ்வாய் ஆகியவை இராகு வர்க்கத்தை அடைந்து இருந்தாலும், ஏழாமிடத்திற்கு அதிபதியை நான்கா மிடத்திற்கு அதிபதி பார்த்து இருந்தாலும், அதனுடன் ஒன்றுகூடி இருந்தாலும் பிரமேகம் என்பர்.

## பிரமேகம், பேதமை

களத்திரத்தா னத்திபன் அங்கிசா திபனும்
காட்சியா கியபுகரும் பாவவர்க்க முற்றால்
அளப்பரிய பிரமேக இலக்கனத்திற் கதிரோ
னாகச்சேய் ஏழினிற்கச் சாமியும்ப லம்தான்
வளப்புறுநற் சுபர்நோக்க மில்லையே யாகில்
வையகமே லறிவின்மை யுடையனென வகுத்தார்
இளக்கமுற்று கனத்திறுகிப் புடைபரந்து விம்மி
இரதிமத னினைமுடிபோல் எழுந்ததன மயிலே! *(645)*

(இ-ள்.) இளக்கமுடையதாகவும் கனத்ததாயும் பரந்து பூரித்து, இரதி மன்மதன் ஆகியோரின் மகுடங்களைப் போல உயர்ந்தெழுந்த கொங்கைகளையுடைய, மயிலின் சாயலைக் கொண்ட பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஏழாம் இடத்திற்கு அதிபதியும் அங்கிசாதிபதியும், சுக்கிரனும் பாவ வர்க்கம் பெற்று இருப்பின், இச்சாதகனுக்குப் பிரமேக நோய் உண்டாகும். சென்ம இலக்கனத்திற் சூரியன் இருக்க, செவ்வாய் ஏழாமிடத்தில் இருக்க, சென்ம இலக்கனாதி பதியும் பலம் பெற்று விளங்க, இவர்களைச் சுபக்கோள்கள் பார்க்கவில்லையானால், இச்சாதகன் அறிவின்மையுடைய வனாக இருப்பான்.

## இதுவுமது

உதயமைந்தேம ழினுக்கிறைவர் சனிசெவ்வாய்ப் பாம்பின்
உரியவர்க்கந் தனையடைந்து துர்த்தானத் திருக்கச்
சிதைவில்லாப் புதனீச மூடமே யாகி
தீக்கோட்கள் மத்தியத்திற் சென்றிருக்கு மேனும்
இதயமுறு இலக்கனத்தின் திரிகோணந் தன்னில்
இரவிமதி கூடிநிற்க மூன்றிற்பொன் நிற்க
வதைசெயுந்தீ யோர்பார்க்கில் அறிவின்மை தானே
வருமெனவே வகுத்துரைத்தார் வடமொழியிற்
றானே. *(646)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்தின் ஐந்தாமிடத்திற்கு அதிபதி, ஏழாமிடத்திற்கு அதிபதி, சனி, செவ்வாய் ஆகியவை பாம்பின் வர்க்கத்தையடைந்து, ஆறாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாமிடம் போன்ற தீய இடங்களில் இருக்க, புதன் நீச மூடம் பெற்று தீய கோள்களுக்கு இடையே இருந்தாலும், சென்ம இலக்கனத்தில் அல்லது சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடம், ஒன்பதாமிடம் ஆகியவற்றில் சந்திரனும், சூரியனும் ஒன்றுகூடி இருக்க, சென்ம இலக்கனத்திற்கு மூன்றாம் இடத்தில் குரு இருக்க, இந்த குருவைத் தீயக்கோள்கள் பார்க்கில், இச்சாதகன் அறிவின்மையைக் கொண்டவனாக விளங்குவான் என வடமொழியில் பெரியோர்கள் வகுத்துரைத்துள்ளார்கள்.

## இதுவுமது

*அஞ்சுமசுக் கிறை யவனும் அறிந்துகுரு சாமியுமே*
*மிஞ்சியசத் துருநீச விருமூடம் தனைச்சேரில்*
*வஞ்சமிலா அறிவின்மை வந்திடுமென் றேயுரைத்தார்*
*பஞ்சினுமெல் லடியார்பொற் பாவைக்கும்*
*பாவையன்னாய்!* **(647)**

(இ-ள்.) பஞ்சைக் காட்டிலும் மென்மையான பாதங்களைக் கொண்ட பொன் போன்ற பொலிவுடைய பெண்ணிற்குப் பெண்ணைப் போன்றவளே ! சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடம், ஐந்தாமிடத்திற்கதிபதி, குரு, சென்ம இலக்கனாதிபதி ஆகியோர் நால்வரும் பகை, நீச, மூடம் இவற்றை அடைந்திருப்பின், இச்சாதகன் அறிவின்மையை உடையவான விளங்குவான்.

## இதுவுமது

*தனுவாகி லக்கனமாய்ச் சாமன்கதிர் கேந்திரத்துண்*
*முனிவான பாவரங்க முற்றிடவே யைந்துடையோன்*
*தொனிநீச மூடமுற்றுத் துர்த்தானம் தனிலிருக்கில்*
*இனியசித்த பிரமையென்பர் இயற்றுமறி*
*வின்மையென்பார்.* **(648)**

*(இ-ள்.)* சென்ம இலக்கனம் தனுசுவாக அதில் புதன், சூரியன் கேந்திரத்தில் பாவரங்கிசத்தில் இருக்க, சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்திற்கு அதிபதி நீச மூடமாகில், இச்சாதகனுக்குச் சித்த பிரமை தோன்றும். மேலும் இவன் அறிவாற்றவனாக விளங்குவான் என்று கூறுவார்கள்.

## பேயன்

*கீர்த்தியனுக் கைந்தெட்டிற் கேதுநிற்க அதற்குளரும்*
*மார்த்தசிகி யுங்கூடி ஆகுமோ ராங்கிசத்திற்*
*பாத்திதமா கக்கலந்து பன்னியதுர்த் தானமுறிற்*
*சீற்றமிகும் பேயனெனச் செப்புவர்கள் தேன்மொழியே.(649)*

*(இ-ள்.)* தேன்மொழியே! சென்ம இலக்கனாதிபதிக்கு ஐந்தாமிடத்தில் அல்லது எட்டாமிடத்தில் கேது நிற்க, இவ்விரண்டு இடங்களுக்கும் அதிபதிகள் கேதுவுடன் ஒன்றுகூடி ஒரே அங்கிசத்தில் கலந்து, துர்த்தானங்களில் இருக்க, இச்சாதகனை கோபம் மிகுந்து பேய்த்தன்மை யுடையவன் என்று அனைவரும் கூறுவார்கள்.

## இதுவுமது

*அகலுமைந்திற் கேதுநிற்க ஐந்துடையோன் பலம்தாழ*
*நிகர்சாமிக் கைந்தெட்டில் நீசச்சனி ராகுவுடன்*
*தகைமையுள கேந்திரத்தோன் தான்பார்க்கிற் பேயென்பார்*
*சிகரகிரி யெனப்பணைத்துத் திரண்டெழுந்த தனமயிலே! (651)*

*(இ-ள்.)* மலையின் முகட்டினைப் போன்று பருத்த, திரண்ட, உயர்ந்த கொங்கைகளையும் மயிலின் சாயலையும் உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் கேது நிற்க, ஐந்தாமிடத்திற்கு அதிபதி பலவீனமாக இருக்க, இலக்கனாதிபதிக்கு ஐந்தாமிடம், அல்லது எட்டாமிடத்தில் நீசம் பெற்ற சனியும் இராகுவும் இருக்க, நான்காமிடம், ஏழாமிடம், பத்தாமிடம் ஆகியவற்றின் ஒன்றின் அதிபதி இவர்களைப் பார்த்தாலும் இச்சாதகனைப் பேயன் என்று கூறுவார்கள்.

## இதுவுமது

போற்றுமைந்துக் கிறையோனும் புதனுங்கே துவுங்கூடி
யாற்றன்மிக் காஞ்சாமிக்கே யைந்தெட்ட தனிலேயிருக்க
வேற்றுமித னுக்குடையோர் களிலக்கனத்துக் கைந்திநிற்கின்
மாற்றமில்லாப் பேயனென வகுத்துரைத்தார் மாமயிலே! (651)

(இ-ள்.) அழகான மயிலின் சாயலையுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்திற்கு அதிபதியும் புதனும் கேதுவும் ஒன்றுகூடி, இலக்கனாதிபதிக்கு ஐந்தாமிடம், எட்டாமிடம் இவற்றில் ஒன்றில் இருக்க, இந்த இடங்களுக்கு அதிபதிகள், சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடத்தில் நிற்க, இச்சாதகன் பேயன் என சோதிட வல்லவர்கள் வகுத்துரைத்துள்ளார்கள்.

## குன்ம நோய் உடையவன்

சொல்லியவைந் தினுக்கிறைவன் துர்ப்பலமே யாகிநிற்கச்
செல்லுமதி பாவமத்யம் சென்றிருக்க ஆறுடையோன்
மல்லுறவே தான்பார்க்க வன்னிய னேழிநிற்கிற்
சொல்லுநம னைப்போலும் குன்மரோ கந்தோன்றும். (652)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாம் இடத்திற்கு அதிபதி பலவீனமாகி, சந்திரன் பாவக்கோள்களுக்கு இடையே நிற்க, இதனை ஆறாம் இடத்திற்கு அதிபதி பார்க்க, சுக்கிரன், சனி ஆகிய இருகோள்களும் ஏழாமிடத்தில் இருக்க, இச்சாதகனுக்குக் குன்ம நோய் எமனைப் போல வந்து சேரும்.

## இதுவுமது

கண்டலக் கனத்திற் சனிரவி செவ்வாய்
கலந்திடப் பார்த்திடு மேனும்
தண்டிய உதயத் திராகுசேய் இருக்கச்
சத்துரு தான்பார்த் தாலும்
மண்டிய வாறுக் குடையவன் பாவ
மத்தியம் தன்னிலே இருக்கக்
கொண்டலார் சனியும் புதனுமே கூடிற்
குன்மரோகம்பலித் திடுமே. (653)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற் சனி, சூரியன், செவ்வாய் ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி இருந்தாலும் அல்லது இந்த மூன்று கோள்களும் சென்ம இலக்கனத்தைப் பார்த்தாலும் சென்ம இலக்கனத்தில் இராகு, செவ்வாய் ஆகிய கோள்கள் இருக்க, இவர்களைப் பகைக் கோள்கள் பார்த்தாலும், சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்திற்கு அதிபதி, பாவக்கோள்களுக்கு இடையே இருந்தாலும், இதனோடு சனி, புதன் ஆகிய இரண்டு கோள்களும் ஒன்றுகூடி இருந்தாலும் இச்சாதகனுக்குக் குன்மரோகம் உண்டாகும்.

## வைசூரி கண்டம்

தந்தலக் கனமும் இலக்கனா திபனுஞ்
சனிராகு சேய்வர்க்க முறினும்
அந்தமாம் எட்டினுக் கிறைநவாங்கி சாதி
தன்னுடன் செவ்வாய் கூடி
மந்தனோடி இராகு வர்க்கமுற் றிடினும்
வருஞ்சாமி இருந்தரா சியினும்
முந்தவங் சாதி சேய்சனி இராகு
முறஇரவி பார்க்கில்வை சூரி. (654)

(இ-ள்.) சென்ம இலக்கனமும், இலக்கனாதிபதியனும் சனி, இராகு, செவ்வாய் வர்க்கமுற்றாலும், எட்டாமிடத்திற்கு அதிபதி நவாங்கிசாதி செவ்வாய், சனி, இராகு ஆகியக் கோள்களின் வர்க்கமுற்றாலும், இலக்கனாதிபதி இருந்த இராசியின் அங்கிசாதியைச் செவ்வாய், சனி, இராகு, சூரியன் பார்க்க, இச்சாதகனுக்கு வைசூரி நோய் உண்டாகும்.

## இதுவுமது

சத்துமுத் தானத் திறையுடன் செவ்வாய்
சாற்றிய ராகுகூ டிடினும்
வைத்தவா றெட்டிற் சேயிரா குறினும்
மன்னுமொன் றேழெட்டில் இரவி

எத்துளச் சனிதான் இருந்திடச் செவ்வாய்
இராகுவும் பார்த்திட வேதான்
சித்துள வுடம்பில் வைசூரியே உண்டாம்
தேனினும் இனியசொல் அனமே ! (655)

(இ-ள்.) தேனைக் காட்டினும் இனிமையான சொற்களையும் அன்னம் போன்ற நடையினையும் உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்திற்கு அதிபதியுடன்செவ்வாய், இராகு ஆகிய இரண்டு கோள்களும் கூடியிருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில், எட்டாம் இடத்தில் செவ்வாயும், இராகுவும் ஒன்றாகக் கூடி இருந்தாலும், இலக்கனம், ஏழாமிடம், எட்டாமிடம் இவற்றில் ஒன்றில் சூரியனும் சனியும் இருந்திட, இவ்விரு கோள்களையும் செவ்வாயும் இராகுவும் பார்க்க, இச்சாதகனுக்கு உடலில் வைசூரி நோய் உண்டாகும்.

## தலைவலி, உட்காய்ச்சல்

வளருமொன் றெட்டுக் குடையவர் கதிரோன்
வர்க்கமே அடைந்திடு மேனும்
மளவிய எட்டில் இராகுவுற் றிடினும்
மாகிய வொன்றிரண் டைந்திற்
தழலுறு கதிரோன் இருந்திடிற் சுரமாம்
தலையினில் வேதனை யுண்டாம்
மொழியுமெட் டொன்றில் இரவிசேய் இருக்கில்
உட்காய்ச்சல் உடலத்தி சுரமே. (656)

(இ-ள்.) இலக்கனம், எட்டாமிடத்திற்கு அதிபதி ஆகியோர் சூரியனின் வர்க்கம் பெற்றிருந்தாலும், எட்டா மிடத்தில் இராகு இருந்தாலும், இலக்கனம், இரண்டாமிடம், ஐந்தாமிடம் இவற்றில் ஒன்றில் சூரியன் இருந்தாலும், இச்சாதகனுக்குச் சுரமும், தலையில் வேதனையும் உண்டாகும். சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் இலக்கனத்தில் சூரியன், செவ்வாய் இருக்க, இச்சாதகனுக்கு உட்காய்ச்சல், அத்திசுரம் முதலியவை உண்டாகும்.

## வெதுப்புநோய், மூலரோகம்

எட்டினில் இராகு புதனிருந் தாலும்
எட்டினுக் கிறையவ னுடனே
ஒட்டிய செவ்வாய் இரவிகே துவுமே
ஒன்றிடில் வெதுப்புநோய் உண்டாம்
பட்டமா மாறிற் சுக்கிர னுடனே
பாவிகள் கூடிநின் றாலும்
அட்டியாம் ஆறோன் இலக்கனத் திருக்க
அட்டமச் சனியுறின் மூலம். (657)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் இராகு, புதன் ஆகிய இரண்டு கோள்களும் ஒன்றுகூடி இருந்தாலும், எட்டாமிடத்திற்கு அதிபதியுடன் செவ்வாய், சூரியன், கேது ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி இருந்தாலும் இச்சாதகனுக்கு வெதுப்புநோய் உண்டாகும். சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் சுக்கிரனுடன் பாவக் கோள்கள் ஒன்றுகூடி நின்றாலும், சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்திற்கு அதிபதி, இலக்கனத்தில் இருந்தாலும், எட்டாமிடத்தில் சனி இருக்க, இச்சாதகனுக்கு மூலநோய் உண்டாகும்.

## மூலரோகம்

வாசமா மேழுக் கிறைவியத் திருக்க
வக்கிரன் பார்க்கஎட் டுடையோன்
நீசமாம் இரவி தன்னைக்கூ டிடினும்
நிலைபெறு சாமிக்கா றெட்டிற்
பூசலாம் பாவர் இருக்கினும் எட்டைப்
பொதிந்துறை நீசமூ டத்தைப்
பாசமாம் பாவ வர்க்குற எட்டிற்
பாவிகள் இருக்கினும் மூலம். (658)

(இ-ள்.) இலக்கனத்திற்கு ஏழாமிடத்திற்கு அதிபதி பன்னிரண்டாம் இடத்தில் இருக்க, செவ்வாய்பார்க்க,

எட்டாமிடத்திற்கு அதிபதி, நீசம் பெற்ற சூரியனோடு சேர்ந்து இருந்தாலும், இலக்கனாதிபதிக்கு ஆறாமிடத்தில் அல்லது எட்டாமிடத்தில் பாவக்கோள் இருந்தாலும் எட்டாமிடத்தில் நிற்கும் கோள் நீச, மூடத்தை அடைந்து பாவவர்க்கத்தை அடைந்தாலும் எட்டாமிடத்தில் பாவக் கோள்கள் நின்றாலும் இச்சாதகனுக்கு மூலநோய் உண்டாகும்.

## இதுவுமது

தாங்கிலக் கினத்தில் ஆறுள்ளோ இருக்கச்
சாமிசத் துருவைக்கூ டிடினும்
ஓங்கிய ஆறுக் கிறைபுக ராகி
உதயத்தில் இருந்தவே சாமி
ஏங்குசத் துருவைக் கூடினும் ஏழுக்
கிறைவனுக் கேயெட்டா மிடமாய்த்
தூங்குத யத்துக் காறுள னாகிச்
சுக்கிரன் பார்த்திடில் மூலம். (659)

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் ஆறாமிடத்திற்கு அதிபதி இருக்க, இலக்கனாதிபதி பகைக்கோள்களோடு கூடி இருந்தாலும், இலக்கனத்தில் ஆறாமிடத்திற்கு அதிபதி, சுக்கிரன் ஆகியவை ஒன்றுகூடி இருக்க, இலக்கனாதிபதி பகைக்கோள்களைக் கூடியிருந்தாலும், சென்ம இலக்கனத் திற்கு ஏழாமிடத்திற்கு அதிபதிக்கு எட்டாம் இடத்தில், சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்திற்கு அதிபதியாகிய கோளைச் சுக்கிரன் பார்க்க, இச்சாதகனுக்கு மூலநோய் உண்டாகும்.

## பவுத்திர ரோகம்

வெண்பிறைக் கெட்டிற் குசனுற சுபரே
விரைந்து பாராதிருந் தாலும்
பண்புறும் எட்டில் சனிதனைச் செவ்வாய்
பார்க்கினும் எட்டுடை யோனை

எண்பெறு செவ்வாய் சனியுமே பார்க்க
ஏழனுக் கிறைவ னீசமாய்த்
தண்பெறு முதய எட்டினுக் கிறைவன்
தனைப்பார்க்கிற் பவுத்திரம் என்பார். *(660)*

(இ-ள்.) சந்திரனுக்கு எட்டாமிடத்தில் செவ்வாய் இருக்க, இதனைச் சுபக்கோள்கள் பார்க்காமல் இருந்தாலும், எட்டாம் இடத்தில் உள்ள சனியைச் செவ்வாய் பார்த்தாலும், எட்டாமிடத்திற்கு அதிபதியைச் செவ்வாயும் சனியும் பார்த்தாலும், ஏழாமிடத்திற்கு அதிபதி நீசமாக, சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்திற்கு அதிபதியைப் பார்க்க, இச்சாதகனுக்குப் பவுத்திரம் உண்டாகும்.

**இதுவுமது**

அட்டமந் தன்னை அட்டமா திபனை
அருஞ்சனி பார்த்திடு மேனும்
எட்டினுக் கிறையும் புகருமே மதிக்கே
எட்டினில் அங்கிச மாகத்
திட்டமாம் எட்டுக் கிறைபலந் தாழ்ந்தே
தீயவர் வர்க்கமுற் றிடினும்
மட்டவிழ் குழலாய்! பவுத்திர நோயே
வருமென வகுத்தனர் புலவோர். *(661)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தை, எட்டாம் இடத்திற்கு அதிபதியைச் சனி பார்த்தாலும், எட்டாம் இடத்திற்கு அதிபதியும் சுக்கிரனும் சந்திரனுக்கு எட்டாமிடத்தில் அங்கிசமாக, எட்டாம் இடத்திற்கு அதிபதி பலம் தாழ்ந்து பாவர் வர்க்கமுற்று இருந்தாலும் இச்சாதக னுக்குப் பவுத்திர நோய் உண்டாகும்.

**இதுவுமது**

பகரிரண் டேழுக் கிறைவரும் புகரும்
பாவவர்க் கத்தினை எய்தி
இகல்சனி செவ்வாய் பார்த்திடு மேனும்
ஏழினுக் கிறைவன்தான் இருந்த

*தகைமையாம் இராசித் திரிகோணம் தன்னிற்*
*சனிபாம்பு இருக்கவே எட்டில்*
*நிகரிறை தன்னைப் பாவரே பார்க்கில்*
*நெருங்கிடும் பவுத்திர நோயே.* *(662)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம், ஏழாம் இடத்திற்கு அதிபதிகளும் சுக்கிரனும் பாவ வர்க்கத்தினை யடைந்து, இவர்களைச் சனி, செவ்வாய் ஆகிய இரண்டு கோள்களையும் பார்த்தாலும், சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்திற்கு அதிபதியிருந்த இராசி அல்லது அதற்கு ஐந்தாமிடம் அல்லது ஒன்பதாமிடத்தில் சனி, இராகு அல்லது கேது இருக்க, சென்ம இலக்கனத்திற்கு எட்டாமிடத்தில் உள்ள எட்டாமிடத்திற்கு அதிபரைப் பாவக்கோள் பார்க்க இச்சாதகனுக்குப் பவுத்திர நோய் உண்டாகும்.

**நாபி நோய், சயரோகம்**

*ஆறினிற் புதனைப் பாவரே பார்க்கில்*
*ஆனதோர் நாபிக்கீழ் வியாதி*
*மாறிய ஆறிற் புதன்செவ்வாய் இருக்க*
*மதிபார்க்கில் வருஞ்சய ரோகம்*
*விறுமொன் றாறுக் கிறைவரும் புதனும்*
*மிக்கரா குவும்உடன் இருக்க*
*கூறிய சுபரே நோக்கிலா ராகிற்*
*குறுகிடு மேசய ரோகம்.* *(663)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஆறாம் இடத்தில் உள்ள புதனைப் பாவக்கோள் பார்க்க, வயிற்றுக்குக் கீழ்ப் பகுதியில் நோய் உண்டாகும். சென்ம இலக்கனத்திற்கு ஆறாம் இடத்தில் புதனும் செவ்வாயும் இருக்க இவர்களைச் சந்திரன் பார்க்க, இச்சாதகனுக்குச் சயரோகம் உண்டாகும். சென்ம இலக்கனாதிபதி, ஆறாம் இடத்திற்கு அதிபதி, புதன், இராகு ஆகிய நால்வரும் ஒன்றுகூடியிருக்க, இவர்களைச் சுபக்கோள்கள் பாராமல் இருந்தால் இச்சாதகனுக்குச் சயரோகம் உண்டாகும்.

## சயரோகம்

வெண்மதி பாவ மத்திப மாகி
மெலிவுடன் ஆறினில் இருக்க
உண்மையாம் ஏழிற் சனியிருந் திடினும்
உதயத்திற் கதிர்சனி செவ்வாய்
வண்மையாய் இருக்கத் தேய்மதி பார்க்க
மற்றவன் கூடிநின் றாலும்
பெண்மையால் இனிய மடந்தையர்க் கரசே!
பிறந்திடு மேசய ரோகம். (664)

(இ-ள்.) பெண்மையில் சிறந்த பெண்களுக்கெல்லாம் அரசியாக விளங்கக்கூடிய பெண்ணே! சந்திரன் பாவக் கோள்களுக்கு மத்தியில் சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் இருக்க, சென்ம இலக்கனத்திற்கு ஏழாமிடத்தில் சனி இருந்தாலும், சென்ம இலக்கனத்தில் சூரியன், சனி, செவ்வாய் ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி இருக்க, இவர்களைத் தேய்பிறைச் சந்திரன் பார்க்க அல்லது கூடி நின்றாலும், இச்சாதகனுக்குச் சயரோகம் உண்டாகும்.

## இதுவுமது

தணப்பிலா இரண்டடேடா ரடைந்தினுக் கிறைவர்
சலஇராசி யாகிய ஆறில்
இணக்கமுற் றிருக்கப் புகருந்தேய் மதியும்
இனிதுடன் கூடியே பார்க்க
வணங்குறு சாமி பலம்குறைந் திருக்கில்
வருஞ்சய ரோகமென் றுரைப்பார்
குணங்குறி எட்டுந் தொழிலொடு நான்கும்
குறித்தறிந் தனருரைத் தனரே. (665)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமி இடத்திற்கு அதிபதி, ஐந்தாமிடத்திற்கு அதிபதி இருவரும் ஆறாமிடமாகிய சல இராசியில் ஒன்றுகூடி இருக்க,

இவர்களைச் சுக்கிரனும் தேய்மதியும் கூடிப்பார்க்க, இலக்கனாதிபதி பலம் குறைந்து இருக்கில், இச்சாதகனுக்குச் சயரோகம் உண்டாகும் என்று கூறுவார்கள். எட்டுக் குணங்கள், குறிகளையும், நான்கு தொழில்களையும் குறித்து அறிந்தவர்கள் இதனை உரைத்துள்ளார்கள்.

## இதுவுமது

*அணியுமொன் றாறுக் கிறைநவாங் கிசத்தோன்*
*அம்புவி வர்க்கமே அடைய*
*துணிவொடு மதியும் பாவரைக் கூடித்*
*துடிப்புடன் இருந்திடு மேனும்*
*தணிவுறும் ஆறுக் கிறைவனுஞ் சேயும்*
*சனியுமே கூடியே பாவர்*
*பணியுமங் கிசத்தின் மதிவெள்ளி கூடிப்*
*பார்த்திடில் வரும்சய ரோகம்.* (666)

(இ-ள்.) இலக்கனாதிபதி, ஆறாமிடத்திற்கு அதிபதி, நவாங்கிசத்தோன், சந்திரன் வர்க்கம் அடைய, சந்திரன் பாவக் கோளுடன் ஒன்றுகூடி இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்திற்கு அதிபதியும் செவ்வாயும் சனியும் ஒன்றுகூடி இருக்க, பாவக்கோளின் அங்கிசத்தில் சந்திரன், வெள்ளி ஆகிய இரண்டு கோள்களும் ஒன்றுகூடி பார்த்தாலும், இச்சாதகனுக்குச் சயரோகம் உண்டாகும்.

## இதுவுமது

*இசையும் ஆறிற் சனிகுளிகன்*
*இருக்க இராகு இரவிகூடி*
*விசையில் பார்க்க சாமிபல*
*மெலியு மேனும் இலாபத்திற்*
*பகையிற் கதிரோ னுறப்பாவர்*
*பார்க்கச் சாமி றேய்மதியை*
*வசைவில் ஆறோன் றேய்மதியை*
*அடைந்து பார்க்கிற் சயரோகம்.* (667)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் சனியும் குளிகனும் ஒன்றுகூடி இருக்க, சூரியனும், இராகுவும் இவர்களை ஒன்றுகூடி பார்க்க, இலக்கனாதிபதி பலம் குறைவாக இருந்தாலும், சென்ம இலக்கனத்திற்குப் பதினோராம் இடத்தில் சூரியன் இருக்க, இவனைப் பாவக்கோள் பார்க்க, இலக்கனாதிபதி, எட்டாமிடத்தில் நிற்க, ஆறாம் இடத்திற்கு அதிபதி, தேய்பிறைச் சந்திரனோடு சேர்ந்து இருந்தாலும் தேய்பிறைச் சந்திரனால் பார்க்கப் பட்டாலும் இச்சாதகனுக்குச் சய ரோகம் உண்டாகும்.

### தீர்க்க யோகம்

பலிக்கு மதிசேய் ஆறினிற்கப்
பாவர்பார்க்கில் நீர்ப்பாடு
கலிக்கும் இரண்டில் லோர்எட்டில்
கலக்கும் மதியைக் கொடும்பாவர்
அலக்க ணுறவே தான்பாற்கில்
அரிதாம் உடம்பிற் சதாவேதை
ஒலிக்கும் வளையாம்! காமுகருக்
குயிரே! குயிலே! ஓவியமே! (668)

(இ-ள்.) ஒலிக்கின்ற வளையல்களை அணிந்து, காமுகருக்கெல்லாம் உயிராக விளங்குபவளே! குயிலின் குரலையொத்த இனிய மொழியினை உடையவளே! வரையா ஓவியமாக விளங்கும் பெண்ணோவியமே! சென்ம இலக்கனத்திற்கு ஆறாம் இடத்தில் சந்திரனும் செவ்வாயும் ஒன்றுகூடி இருக்க, இவர்களைப் பாவக்கோள் பார்க்கில், இச்சாதகனுக்கு நீர்ப்பாடு நோய் உண்டாகும். சென்ம இலக்கனத்திற்கு இரண்டாம் இடத்தில் அல்லது எட்டாம் இடத்தில் உள்ள சந்திரனை கொடிய பாவக்கோள்கள் பார்க்க, இச்சாதகனுக்கு எப்பொழுதும் உடலில் துன்பம் இருந்து கொண்டே இருக்கும்.

## உடலில் நாற்றம்

பத்தினிலே புதன்செவ்வாய் யுடன்கூடச் சாமிதனைப்
பாவர் பார்க்கில்
உத்தசரீ ரந்தனிலே துர்க்கந்தம் காணவரு
உதயந் தன்னில்
வைத்தசனி யுறநீசர்ப் பார்க்கச்சா மியும்பாம்பும்
வந்து கூடி
சுத்தநீசாங் கிசத்தைப்பெ றிலுடம்பிற் றுர்க்கந்தம்
தோன்றுந் தானே. (669)

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்குப் பத்தாம் இடத்தில் புதன், செவ்வாய் ஆகிய இரண்டு கோள்களும் ஒன்றுகூடி இருக்க, இலக்கனாதிபதியைப் பாவக்கோள் பார்க்க, எந்நேரமும் இச்சாதகனில் உடல் நாற்றம் உடையதாக இருக்கும். சென்ம இலக்கனத்தில் சனி இருக்க, நீசக்கோள்கள் இதனைப் பார்க்க, இலக்கனாதிபதியும் இராகு அல்லது கேதுவும் வந்து கூடி நீசாங்கிசத்தைப் பெற்றாலும், இச்சாதகனின் உடலில் எந்நேரமும் நாற்றமடிக்கும்.

## உடலில் துர்நாற்றம்

தேசு ளுதய அங்கிசத்தோன்
திரேகா ணாதி பதிபாவ
நீச முடந்தனை அடையநிறை
லக்க னத்தில் நீசர்நிற்க
வாச முடனே எதிர்பார்க்க
மறையோர் வர்க்க மிலாதருக்கில்
வீசும் கதம்பம் அணிந்தாலும்
மிகவும் நாறும் துர்க்கந்தம். (670)

*(இ-ள்.)* இலக்கன அங்கிசத்தோன், திரேகாணாதிபதி ஆகியோர் பாவ, நீச, மூடம்தனை அடைந்து இருந்தாலும் இலக்கனத்தில் நீசக்கோள் நிற்க, அல்லது நீசக்கோள் பார்க்க, குருவர்க்கம் இல்லாமல் இருந்தாலும் மணம் வீசும் கதம்ப மலர்களை அணிந்தாலும் இச்சாதகனின் உடலில் துர்நாற்றம் வீசும்.

## சூலைக் கட்டு

*தந்த புருடாங் கிசராசி*
*தனிலே சத்துரே சனிற்கில்*
*அந்த வங்கசந் தனில்வருநோய்*
*அறிந்தே சொல்வ தடவாகும்*
*பந்த மான கேந்திரத்திற்*
*படியும் வெள்ளி தனைப்பாவர்*
*வந்து காணின் மடமானே!*
*வருமே சூலைக் கட்டென்பார்.* *(671)*

*(இ-ள்.)* மடப்பம் பொருந்திய மானின் சாயலை யுடைய பெண்ணே! புருடாங்கிச இராசியில் ஆறாமிடத்திற்கு அதிபதி நிற்கில், அந்த உறுப்பில் ஏற்படக்கூடிய நோயைக் கண்டறிந்து சொல்ல முடியும். சென்ம இலக்கனம், நான்காமிடம், ஏழாமிடம், பத்தாமிடம் இவற்றில் ஒன்றில் நிற்கும் சுக்கிரனை பாவக்கோள்கள் பார்க்க, இச்சாதகனுக்குச் சூலைக்கட்டு நோய் தோன்றும்.

## இதுவுமது

*நிறையும் ஆறில் உதயத்தோன்*
*நீச மாகி யேயிருக்க*
*அறையு நாலிற் சனிசெவ்வாய்*
*அடைந்தே இருக்கக் கொடும்பாவர்*
*முறையில் எதிரே பார்ப்பாரால்*
*மொழியும் சூலைக் கட்டென்பார்*
*நறையூற் றெடுத்த வெண்முல்லை*
*நகையாய்! அன்ன நடையனமே!* *(672)*

*(இ-ள்.)* மணம் நிறைந்த வெண்மையான முல்லை மலர்களைப் போன்ற பற்களைக் கொண்டு புன்னகை புரியக் கூடியவளே! அன்ன நடையைப் போன்று மென்மையாக நடக்கும் நடையுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் இலக்கனாதிபதி நீசமாக இருக்க, நான்காம்

இடத்தில் சனி, செவ்வாய் ஆகிய இரண்டு கோள்களும் ஒன்றுகூடி இருக்க, இவர்களைப் பாவக்கோள்கள் பார்த்தால், இச்சாதனுக்குச் சூலைக்கட்டு நோய் உண்டாகும் என்பர்.

## இதுவுமது

பலராகு நாலினிற்கப் பாவர்பார்த் திடச்சாமி
பலம்தாழ்ந் தாலும்
நலியுமெட்டிற் கேதுநிற்கப் பாவிகள் பார்த் தாலுமொரு
நாலு பத்துக்
கிலருமிறை யவராறுக் கதிபனுடன் துர்த்தானத்
திருக்கச் செவ்வாய்
வலியசனி பார்த்தாலும் வருஞ்சூலைக் கட்டென்று
வகுத்த வாறே! *(673)*

(இ-ள்.) பலம்பெற்ற இராகு சென்ம இலக்கனத்திற்கு நான்காம் இடத்தில் இருக்க, இவரைப் பாவர் பார்க்க, இலக்கனாதிபதி பலம் குறைந்து இருந்தாலும், எட்டாமிடத்தில் கேது நிற்க, பாவக்கோள்கள் இவரைப் பார்த்தாலும், நான்காமிடம், பத்தாமிடம் ஆகிய இடங்களுக்கு அதிபதிகள், ஆறாமிடத்திற்கு அதிபனுடன் ஒன்று சேர்ந்து ஆறு, எட்டு, பன்னிரண்டாம் இடங்களில் இருக்க, இவர்களைச் செவ்வாய், சனி ஆகிய கோள்கள் பார்த்தாலும், இச்சாதகனுக்குச் சூலைக்கட்டு நோய் உண்டாகும் என்று சோதிடநூல் வல்லவர்கள் வகுத்துரைத்துள்ளார்கள்.

## நாய்க்கடி, தீர்க்கரோகம்

நலியுமிரண் டினிற்சனியைப் பாபிகள்பார்த் தாலும்
நண்ணுமிரண் டுக்கிறையை யவனங்கசா திபனை
சவுரிதான் கூடிடினும் இரண்டுமிரண் டிறைவன்
சாருதிரே காணமவ னங்கிசங்கள் சனியன்
இவர்திருவாக் குற்றிடினும் நாய்க்கடியுண் டாகும்
இனியமந்தன் சேயாறில் இருக்கவே இராகு
தவரிலெதிர் பார்க்கவே சாமிபலந் தாழிற்
தருந்தீர்க்க ரோகியெனச் சாற்றுவர்செந் திருவே! *(674)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடத்தில் உள்ள சனியைப் பாவர்கள் பார்த்தாலும் இரண்டாமிடத்திற்கு அதிபதியை, இவன் அங்கிசாதிபனுடன் சனி ஒன்றுகூடி இருந்தாலும் இரண்டாமிடம், இரண்டாமிடத்திற்கு அதிபதி திரேகாணம், அவனுடைய அங்கிசங்கள், சனி, இரண்டா மிடத்தில் இருந்தாலும், இச்சாதகனை நாய் கடிக்கும். சனி, செவ்வாய் ஆகிய இரண்டு கோள்களும் சென்ம இலக்கனத் திற்கு ஆறாமிடத்தில் இருக்க, இராகு இவர்களைப் பார்த்திருக்க, இலக்கனாதிபதி பலமின்றி இருக்க, இச் சாதகனுக்கு தீராத நோய் உண்டாகும்.

## தீர்க்கரோகம், அன்னத்துவேஷம், வாந்திபேதி

போற்றுதயந் தனிற்சனியும் ஒருமூன்று நாலிற்
புதனிருக்க மேடந்தோ லானிற்செவ்வாய் இருக்கின்
மாற்றரிய தீர்க்கரோ கத்தையுள னாகும்
மன்னியகேந் திரத்திறைவன் துர்ப்பலமே யாகத்
தோற்றுமெட் டைச்சனிபார்க்க இலக்கனத்தைப் பாவர்
துண்ணெனப் பார்த் திடிலனது வேஷமே உண்டாம்
ஏற்றுமதி சேயாறில் இருந்திடவே பாவர்
எதிர்நோக்கி னால்வாந்தி பிராந்தியுமுண் டாமே. (675)

(இ-ள்.) சென்ம இலக்கனத்தில் சனி இருக்க, மூன்றாமிடம் அல்லது நான்காமிடத்தில் புதன் இருக்க, மேட இராசியில், விருட்சிக இராசியில் செவ்வாய் இருக்க, இச்சாதகனுக்கு நீக்குவதற்கு அரிய தீராத நோய் உண்டாகும். இலக்கனம், நான்காமிடம், ஏழாமிடம், பத்தாமிடம் ஆகியவற்றிற்கு அதிபதி பலவீனமாக இருக்க, சென்ம இலக்கனத்திற்கு எட்டாம் இடத்தைச் சனிபார்க்க, சென்ம இலக்கனத்தைப் பாவக்கோள் பார்க்க, இச்சாதகனுக்கு உணவைக் கண்டால் வெறுப்பு உண்டாகும். சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் சூரியனும், செவ்வாயும் இருக்க, இவர்களைப் பாவக்கோள் பார்க்க, இச்சாதகனுக்கு வாந்திபேதி நோய் உண்டாகும்.

## அன்ன துவேஷம், வாந்திபேதி, அபனரோகம், லிங்கரோகம்

எண்ணமாம் இரண்டுடன்மூன் றைந்துடனே ழெட்டுக்
கிறைவர்சனி யொடுராகு குளிகனுடன் கூட
வண்ணமதி துர்த்தானத் துறிலன்னத் துவேஷம்
வாந்திபிராந் தியுமுண்டாம் வாகான உதயம்
கண்ணனைய சாமியுடன் புதன்செவ்வாய் கூடிப்
கடும்பாவர் பார்த்திடினும் புதன்செவ்வாய் கூடிப்
பண்ணரிதாம் ஆறிநிற்கில் அபானத்தில் விரணம்
பகைவீட்டோ னுடன்புதனும் கூடில்லிங்க ரோகம். (676)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடம், மூன்றாமிடம், ஐந்தாமிடம், ஏழாமிடம், எட்டாமிடம் இவற்றிற்கு அதிபதிகள் சனியுடன் சேர்ந்திருக்க, இவர்களுடன் இராகுவும் குளிகனும் ஒன்றுகூடி இருக்க, சந்திரன், ஆறாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாமிடம் போன்ற தீய இடங்களில் ஒன்றில் இருக்க, இச்சாதகனுக்கு உணவைக் கண்டால், மிகுந்த வெறுப்பு தோன்றும். மேலும் வாந்தி பேதியும் உண்டாகும். சென்ம இலக்கனத்தில் இலக்கனாதிபதியுடன் புதன், செவ்வாய் ஆகியக் கோள்கள் ஒன்றுகூடி இருக்க, இவர்களைப் பாவக்கோள்கள் பார்த்தாலும், சென்ம இலக்கனத்திற்கு ஆறாம் இடத்தில் புதன், செவ்வாய் ஆகிய கோள்கள் ஒன்றுகூடி இருந்தாலும், இச்சாதகனுக்கு வயிற்றில் புண் உண்டாகும். புதன், பகை வீட்டிற்கு அதிபதியுடன் ஒன்றுகூடி இருக்க, இச்சாதகனுக்கு இலிங்க ரோகம் உண்டாகும்.

## சுவாச காசம், வெகுமூத்திரம்

கூர்க்கும் ஆறில் சனிகுளிகன்
கூட ராகு கதிர்செவ்வாய்
பார்க்கிற் சுவாச காசமெனப்
பகர்வர் மதிதான் சலராசி

ஓர்க்க இருக்க இவனங்சத்
திறைவர் ஆறி லுறவவரைப்
போர்க்குஞ் சலரா சியிலிருந்த
புதனும் பார்க்க வெகுமூத்திரம். (677)

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஆறாம் இடத்தில் சனியும், குளிகனும் ஒன்றுகூடி இருக்க, இவர்களை இராகு, சூரியன், செவ்வாய் ஆகிய மூன்று கோள்களும் பார்க்க, இச்சாதகனுக்குச் சுவாசகாச நோய் உண்டாகும். சந்திரன் சல இராசியில் இருக்க, இவனுடைய அங்கிசத்து அதிபதி, ஆறாமிடத்தில் இருக்க, அவரைச் சல இராசியில் இருந்த புதன் பார்க்க, இச்சாதகனுக்கு அதிக சிறுநீர் கழிக்கும் நோய் உண்டாகும்.

## குன்மம், விப்புருதி, முகவிரணம்

ஈட்டு மாறே ழினிற்செவ்வாய்
இருக்கப் பாவர் தான்பார்க்கின்
முட்டுங் குன்மம் விப்புருதி
முகத்தில் வியாதி விரணமதாம்
நாட்டு மாறுக் கிறைவனங்சம்
தானே யந்த அங்கிசத்திற்
கூட்டு வானே லவர்க்குள்ள
குணமு முரோக முஞ்சொல்வார். (678)

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் அல்லது ஏழாமிடத்தில் செவ்வாய் இருக்க, இவனைப் பாவக்கோள் பார்க்க, இச்சாதகனுக்குக் குன்மம், விப்புருதி, முகத்தில் நோய், புண் முதலானவை உண்டாகும். சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்திற்கதிபதியின் அங்கிசம், அந்த அங்கிசத்தில் கூடியுள்ளவர்களின் குணம் ஆகியவற்றைக் கொண்டு சோதிட வல்லவர்கள் நோயினைக் கூறுவார்கள்.

## பிரமை, பைத்தியம்

இருமையா யைந்திலேழில் இரவிசேய் இராகுகூடில்
வருஞ்சித்தப் பிரமையல்லால் வண்பயித் தியமுமெய்தும்
பொருஞ்செவ்வாய் திசையிலன்னோன் பொசிப்பினில்
அவனைக்கூடி
ஒருமையால் உடனிருந்தோர் உட்பொசிப்
பதனிலுண்டாம். *(679)*

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்திற்கு ஐந்தாமிடம், ஏழாம் இடம் இவற்றில் ஒன்றில் சூரியன், செவ்வாய், இராகு ஆகிய மூன்று கோள்களும் ஒன்றுகூடி இருக்க, இச்சாதகனுக்குச் சித்தப்பிரமை உண்டாகும். அல்லது பைத்தியம் பிடிக்கும். செவ்வாய் திசையில், செவ்வாய் புத்தியில் அல்லது செவ்வா யோடு உடனிருந்தவர்களின் புத்தியில் இச்சாதகனுக்குச் சித்தப்பிரமை உண்டாகும் அல்லது பைத்தியமும் பிடிக்கும்.

## அன்னரோகம்

ஆறினுக் குடையோ னோடே
அறிஞனும் இராகும் கூடி
பேறதாம் இலக்க னத்திற்
பெட்புற இருக்க வல்லால்
மேரதாம் ஒருரா சிக்குள்
மேவிடில் அன்ன ரோகம்
கூறிய புதன்தி சைக்குள்
கூர்புந்தி பொசிப்பிற் றானே. *(680)*

*(இ-ள்.)*சென்ம இலக்கனத்திற்கு ஆறாம் இடத்திற்கு அதிபதியுடன் புதனும் இராகுவும் ஒன்றுகூடி இலக்கனத்தில் இருக்க, அல்லது ஏதாவது ஒரு இராசிக்குள் இருக்க, இச்சாதகனுக்குப் புதன் திசையில் புதன்புத்தியில் அன்னரோகம் உண்டாகும்.

## கடன் கொடுத்தல்

இலக்கனே சனிருந்த நவாங்கிசத்தோன்
குருவின் பார்வை யற்றேதான்
அலைக்குங் குரூராங் கிசமேறி
ஆறா மிடத்திற் இருந்தக்கால்
நிலைக்கும் பழைய முதலெல்லாம்
நினைத்தோர்க் கெல்லாம் கடன்கொடுப்பன்
சிலைக்கே மதவேள் மணிமுடி போற்
சிறக்கும் களப முலைத்திருவே ! (681)

(இ-ள்.) கரும்புவில்லைக் கையில் ஏந்தியுள்ள மன்மதனின் மணிமுடியைப் போன்று சந்தனம் பூசப்பெற்று சிறந்து விளங்கும் கொங்கைகளையுடைய திருமகளை யொத்த அழகுடைய பெண்ணே ! இலக்கனாதிபதி இருந்த நவாங்கிசாதிபதி குருவின் பார்வை இன்றி, குரூர அங்கிசத்தில் ஏறி சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் இருந்தால், இச்சாதகன் தன்னுடைய பழைய சொத்துக்கள் அனைத்தையும் நினைப்போர்க்கெல்லாம் கடனாகக் கொடுப்பான்.

## கடன்கொடுத்து வறுமையை அடைபவன்

தனலா பத்துக் குடையோர்கள்
தங்கள் திரேகா ணாதிபதி
இனமாம் உத்த மாங்கிசத்தில்
இருக்க ஆறுக் கிறைகூட
வினவிப் பார்க்கிற் கடன்கொடுத்து
மெலிவாய் இருப்பன் மிகவும்தான்
கனக வரைபோல் இடங்கொண்டு
கனத்தே எழுந்த தனத்தாளே ! (682)

(இ-ள்.) பொன் மலையைப் போன்று பருத்த கனத்தெழுந்த கொங்கைகளையுடைய பெண்ணே ! சென்ம இலக்கனத்திற்கு இரண்டாமிடம், பன்னிரண்டாம்

இடத்திற்கு அதிபதிகளின் திரேகாணாதிபதி உத்தமாங் கிசத்தில் இருக்க, இவர்களுடன் ஆறாமிடத்திற்கு அதிபதி ஒன்றுகூட, இச்சாதகன், மற்றவர்களுக்குக் கடன்கொடுத்து வறுமையை அடைவான்.

## இதுவுமது

*ஆக்கும் உதயம் குடும்பத்தில்*
*ஆறுக் குடையோன் தான்நிற்க*
***வாக்கு மிகுந்த இலாபேசன்***
***மருவும் ஆறெட் டுடன்வியத்தில்***
*தேக்குற் றிருக்கத் தனத்திறைக்குத்*
*திகழும் ஆறோன் பலத்திருக்கில்*
*ஏக்குற் றலைந்து கடன்படுவன்*
*இலங்கும் பசுந்தா மரைத்திருவே !* *(683)*

(இ-ள்.) பொலிவுடன் தோன்றும் பசுமையான தாமரை மலரில் எழுந்தருளியுள்ள திருமகளைப் போன்றவளே! சென்ம இலக்கனம் அல்லது இரண்டாம் இடத்தில் ஆறாமிடத்திற்கு அதிபதி நிற்க, பதினோராம் இடத்திற்கு அதிபதி, ஆறாமிடத்திற்கு அதிபதி, எட்டாமிடத்திற்கு அதிபதி ஆகியோருடன் ஒன்றுகூடி பன்னிரண்டாம் இடத்தில் இருக்க, இரண்டாம் இடத்திற்கு அதிபதியைக் காட்டிலும் ஆறாம் இடத்திற்கு அதிபதி பலத்திருக்கில், இச்சாதகன் கடன்படுவான்.

## இதுவுமது

*முதிரும் தனத்துக் கிறைநீச*
*மூட மெய்த குடும்பத்தில்*
*அதிருந் தீயோர் தானிருக்க*
*ஆறுக் குடையோன் கேந்திரிக்கிற்*
*பதியில் இருந்த பழம்பொருள்போய்ப்*
*பலகால் புதியக் கடன்படுவன்*
*மதியை வருந்துஞ் சிலைநுதலாய் !*
*மானே ! கமல மலர்த்தேனே !* *(684)*

*(இ-ள்.)* நிலவைக் காட்டிலும் அழகுடையதான வில்லையொத்த நெற்றியை உடைய பெண்ணே! மான் போன்றவளே! தாமரை மலரில் உள்ள தேனைப் போன்று இனிமையான மொழியை உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு அதிபதி நீச, மூடம் பெற்று இருக்க, இரண்டாம் இடத்தில் பாவக்கோள்கள் இருக்க, ஆறாம் இடத்திற்கு அதிபதி இலக்கனம், நான்காமிடம், ஏழாமிடம், பத்தாமிடம் இவற்றில் மூன்றில் இருக்க, இச்சாதகனிடமிருந்த பொருள்கள் கையை விட்டுப் போய் கடன்படுவான்.

### இதுவுமது

பொன்னா ருதயந் தனலாபம்
பொருந்து மிவர்கள் தனிலொருவன்
மின்னார் சரரா சியிலிருந்து
மிகவுங் குருவங் கிசமேறி
இன்னார் இனியா ரென்னாமல்
எழுது முறிமேற் கடன்படுவன்
சொன்னார் கணிதத் தியற்கையெல்லாம்
தொடுத்தா ராய்ந்த பெரியோரே! (685)

*(இ-ள்.)* சென்ம இலக்கனத்தில் குரு இருக்க, இரண்டாமிடத்திற்கு அதிபதி பதினோராமிடத்திற்கு அதிபதி ஆகியோரில் ஒருவர் சர இராசியில் நின்று, குருவங்கிசம் ஏறி இருக்க, இச்சாதகன், நல்லவர் தீயவர் என்ற வேறுபாடு கருதாமல் மிகுதியான பொருளை எல்லோருக்கும் கொடுத்துக் கடன்படுவான். இதனைக் கணிதத்தின் இயல்புகளையெல்லாம் தொகுத்து ஆராய்ந்த பெரியோர்கள் கூறியுள்ளார்கள்.

### ஆறாம் பாவத்தில் சூரியன் நின்ற பலன்

ஆறா மிடத்தில் இரவிநிற்க
அநேக மைந்தர் காமிபலம்
வீறார் சூரன் அபிமானி
வேந்தர் பிரியன் கீர்த்திதனன்

மாறாப் பசியன் பிதாசித்தன்
வலியப் பகைஞன் விரோதிகுணம்
தேறாக் கடனில் பரபத்தியம்
செய்யுஞ் சமர்த்தன் எனமொழியே! (686)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் சூரியன் இருக்க, அதிகமான பிள்ளைகளைப் பெறுவான்; காமம் மிக்கவன்; பலம் பொருந்தியவன்; வீரம் மிக்க தைரியசாலி; அன்புமிக்கவன்; மன்னர்களால் விரும்பப் படுபவன்; புகழ் உடையவன்; பசி மிகுந்தவன்; தந்தையின் விருப்பப்படி நடக்கக்கூடியவன்; வலிய சென்று பகைவர் களைப் பகைப்பவன்; திரும்பி வர இயலாத கடனாக இருப்பினும், அதனை செய்யும் திறமை வாய்ந்தவன் என்று சொல்லவேண்டும்.

**ஆறாம்பாவத்தில சந்திரன் நின்ற பலன்**

திருடன் ஆறில் மதியமே இருக்கிற்
சலபயம் காரியம் தாழ்ச்சி
முதிர்சய ரோகி யுத்தியோ கத்தன்
முதற்கடன் கொடுக்கின்மீ ளாது
கதியொடு போக்கு வரத்துசஞ் செல்வம்
கலைநிறை மதியெனிற் செல்வம்
அதிகநீர்க் காயுள் தேய்மதி யாகில்
அற்பாயு ளுதரநோ யுளனே! (687)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் சந்திரன் இருக்க, ஓரிடத்தில் நில்லாது அங்குமிங்கும் அலைபவன், நீரில் கண்டம் உடையவன்; தாழ்வான காரியம் செய்பவன்; சயரோகம் கொண்டவன்; பணியில் அமரக்கூடியவன். இவனிடத்துப் பொருளோ, கடனோ கொடுப்பின் மீளாது. சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் நிறைந்த சந்திரன் இருக்க, இச்சாதகன் செல்வம் மிக்கவன்; தீர்க்காயுள் உடையவன்; ஆறாமிடத்தில் உள்ள சந்திரன் தேய்பிறைச் சந்திரனாக இருப்பின், வாழ்நாள் குறைவு உள்ளவன்; வயிற்றில் நோய் உள்ளவன்.

## ஆறாமிடத்திற் செவ்வாய் நின்ற பலன்

*சீராறிற் சேயிருக்கிற் சாமிப்பிர சித்தன்*
*தூய தேக னாவான்*
*சோராக்கினி சேருளபயம்பசிப்பு உடையன்*
*உற்றார்க்குற வானோன்*
*வீராதி வீரன் சேனாதி பதியாம்*
*பூலாபம் வெற்றிஉண்டாம்*
*காராரும் குழலணங்கே கணிதநூற் புலவர்*
*[illegible] (illegible)*

(இ-ள்.) கருமை மிக்க கூந்தலையுடைய பெண்ணே. சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் செவ்வாய் இருக்க, இச்சாதகன் அனைவராலும் அறியப்படுவனாக விளங்குவான்; உடல் தூய்மை உடையவன்; கள்வர்களாலும் தீயினாலும் கருவிகளாலும் கண்டம் உடையவன்; பசி மிக்கவன்; உற்ற மக்களுக்கு உறவு உடையவனாக இருப்பான்; வீரர்களுக்கெல்லாம் வீரனாக விளங்குபவன்; பூமி இலாபம் உடையவன். இதனைச் சோதிடநூல் வல்லவர்கள் கூறியுள்ளார்கள்.

## ஆறாமிடத்தில் புதன் நின்ற பலன்

*சாமனே ஆறி லுறின்மனோதுக்கன்*
*சத்துரு விரோதிதுர்க் காமி*
*பூமலா கலகப் பிரியன்அற் பாயுள்*
*புகலுந்துர் வாக்குமெய்ச் சோம்பல்*
*காமறு பந்து சனவிரோ தத்தன்*
*கருதிய வித்தியாவி னோதன்*
*வாமறு விஷமி புத்தியின் வாத*
*வாயுபீ டையுள னென்பார். (689)*

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் புதன் இருக்க, இச்சாதகன் மனதில் துக்கம் உடையவன்; பகைவர்களை வெல்பவன்; துர்க்காமம் உடையவன்; கலகம் செய்வதில் விருப்பம் மிக்கவன்; குறைந்த ஆயுளைக் கொண்டவன்; தீயமொழிகளைப் பேசக்கூடியவன்; சோம்பல்

உடையவன்; உறவினர்களைப் பகைத்துக் கொள்பவன்; விநோத வித்தைகளில் விருப்பம் உடையவன்; விஷம புத்தி கொண்டவன்; வாதவாயு துன்பம் உடையவன் என்பார்கள்.

## ஆறாமிடத்திற்கு குரு நின்ற பலன்

பொன்னவன் ஆறில் இருந்திடில் ஞானம்
பொருளுமே ஈனம தாகும்
**மன்னவர் மறையோர் புத்திரர் கலகம்**
வன்பொசிப் பினிலவ மானம்
சொன்ன சத்துரு வொன்றிற் நிற்பலங் காமி
சோம்பலற் பாயுளு ரோகி
பன்னுமா ரோகி சொல்லவ மானன்
பண்புகண் டுரைத்திட லாமால். (690)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் குரு இருக்க, இச்சாதகன் ஞானம் உடையவன்; பொருள் அழிவு உள்ளவன்; அரசர், அந்தணர், புத்திரர்கள் ஆகியோரைப் பகைத்துக்கொள்பவன்; கலகம் செய்பவன்; வேலையில் அவமானம் உடையவன்; ஆறாம் இடத்தில் இருக்கும் குருவோடு பகைக்கோள் ஒன்றுகூடி இருப்பின், இச்சாதகன் காமியாக இருப்பான். சோம்பல் உடையவன்; ஆயுள் குறைந்தவன்; நோயுடையவன்; அவமானத்தை அடைபவனாக இருப்பான்.

## ஆறாமிடத்திற் சுக்கிரன் நின்ற பலன்

சல்லியனே ஆறில் நிற்கில்வெகு காமி
மனோதுக்கந் தரித்திர மாகும்
சொல்லிய சத்துரு நாசம்வெகு பொசிப்பு
பந்துசனத் துரோகி யாகும்
அல்லியதோர் பயமுடை யன்விஷய ரோகத்
தனருட் புவியின் மீதே
கல்வியி னாலவ மான மனைவி
விரோதத் தனனெனக் கருத லாமே! (891)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஆறாம் இடத்தில் சுக்கிரன் இருக்க, இச்சாதகன் அதிகமான காமம் உடையவன்; மனத் துக்கம் கொண்டவன்; வறுமையுடன் வாழ்பவன்; இவனுடைய பகைவர்கள் அழிவார்கள்; இச்சாதகன் அதிக உணவை உண்பவன்; உற்றார் உறவினர்களுக்குப் பகைவனாக விளங்குபவன்; அச்சம் கொண்டவன்; பல விஷயங்களைத் தெரிந்தவன்; நோயை உடையவன்; அவமானம் அடைபவன்; மனைவியைப் பகைப்பவன்.

**ஆறாம் இடத்தில் சனி நின்ற பலன்**

நீலனே ஆறில் இருக்கிற்றுர்க் காமி
நீசரால் பயங்குட்ட ரோகம்
கோலமா ரூபந் தைரிய விடமாம்
குலத்துளோர் பகைவெகு பசியன்
சாலவே பொசிப்பன் தனமுளன் காமி
சத்துரு செயமுளன் துக்கி
நாலமே இலாப முடையவன் கனக
நளினமா மலருறை யனமே. (692)

(இ-ள்.) பொன்தாமரையில் வீற்றிருக்கும் திருமகளை யொத்த அன்ன நடையுடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் சனி இருக்க, காமம் மிக்கவன்; கீழானோரால் துன்பம் நேரிடுமென்ற அச்சம் உடையவன்; குட்டரோகம் ஏற்படக்கூடும்; அழகான தோற்றம் உடையவன்; தைரியம் மிக்கவன்; விஷமி; உறவினரிடம் பகை பாராட்டுபவன்; பசி மிகுந்தவன்; மிகுதியாக உண்ணக் கூடியவன்; செல்வம் உள்ளவன்; செயலாற்றுபவன்; பகைவர்களை வெல்பவன்; கவலை கொண்டவன்; இலாபம் உடையவன்.

**ஆறாமிடத்தில் இராகு நின்ற பலன்**

பேசிய ஆறில் இராகுவே நிற்கில்
பலந்தனம் கீர்த்திநல் வாக்கு
வீசிய பகைவர் கிலந்திக்கு விசயம்
மிகுதுரைத் தனம்பிர தாபி

வாசிலா வீரம் உடையனே வாளை
அரிபரந்துடன்மை தோய்ந்தே
மூசிய கயலைப் பேசிய கண்கள்
முகையவிழ் தவளவெண் ணகையே! (693)

(இ-ள்.) வாளைப் போன்று கூரிய செவ்வரிகளை யுடையதாக, மை பூசப்பட்ட, கயல்மீனை ஒத்த கண்களையும், முல்லையரும்பின் மொட்டு அவிழ்ந்ததைப் போன்ற வெண்மைமிக்க பற்களையுடைய வாயில் வெண்மையான புன்னகை புரியும் பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் இராகு இருக்க, மிகுந்த செல்வம், புகழ் உண்டாகும்; இச்சாதகன் நல்ல வாக்கு உடையவன்; பகைவர்களுக்குக் கலக்கத்தைத் தருபவன்; பல நாடுகளுக்கும் செல்பவன்; அதிகாரமுடையவன்; அனைவராலும் அறியப்படுபவன்; வீரம் மிக்கவன்.

## ஆறாம்பாவத்தில் கேது நின்ற பலன்

கேதுவே ஆறில் நிற்கில்
கீர்த்திசத் துருசெயத்தன்
ஏதுஞா றியர்வி ரோதம்
உதரவே தனைஇ லாபம்
மீதுள உற்றார் இன்பம்
வித்துவான் தைரி யத்தன்
ஏதுவாம் திடந்த னத்தன்
என்றனர் கணிதர் தாமே. (694)

(இ-ள்.) சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் கேது இருக்க, இச்சாதகன் புகழ் மிகுந்தவன்; பகைவர்களை வெல்லக்கூடியவன்; சகோதர விரோதன்; வயிற்றுவலி கொண்டவன்; உறவினர்க்கு இன்பத்தைத் தருபவன்; வித்தைகளில் வல்லவன்; தைரியம் உடையவன்; உறுதி உடையவன்; செல்வன் என்று சோதிட வல்லவர்கள் கூறியுள்ளார்கள்.

## ஆறாம்பாவத்தில் குளிகன் நின்ற பலன்

குளிகனே ஆறில் இருந்திடிற் கலகிக்
கொடியவர் உறவுமா ஞானம்
தெளிவினன் பகையன் விரோதிசத் துருவைச்
செயம்செயும் வல்லவன் என்பார்
பொழிவுறு குளிகப் பவனனே நிற்கிற்
பொருதலர் செயஞ்சதா மகிழ்ச்சி
அளியினம் தொடரும் மலர்குழல் வேற்கண்
அன்னமென் நடையிடைத் துடியே. (695)

(இ-ள்.) வண்டினங்கள் மொய்க்கின்ற தேன் நிறைந்த மலர்களைத் தன் கூந்தலில் சூடியவளும் வேல்போன்ற கூரிய கண்களையும் அன்னத்தையொத்த மெல்லிய நடையினையும் துடிபோன்ற சிறுத்த இடையினையும் உடைய பெண்ணே! சென்ம இலக்கனத்திற்கு ஆறாமிடத்தில் குளிகன் இருக்க, இச்சாதகன் கலகம் செய்பவனாக இருப்பான்; பாவக்கோள்கள் உறவு இருப்பின், ஞானம் உடையவன்; மனத்தெளிவு உடையவன்; மற்றவர்களைப் பகைத்துக் கொள்பவன்; தன்னைப் பகைத்த பகைவர்களை வெற்றி கொள்பவன். ஆறாமிடத்தில் குளிகப்பவனன் நிற்க, பகைவர்களை வெற்றி கொள்பவன்; எந்நேரமும் மகிழ்ச்சியுடன் விளங்குபவனாவான்.

**ஆறாம்பாவம் முற்றிற்று.**



# எமது நூலக வெளியீடுகள்
# சோதிட நூல்கள்

**ஆரூட நூல்** - *எஸ். சாமிநாத சாஸ்திரி*

**சாதக சந்திரிகை** - *தேதியூர் எஸ். கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள்*

**சாதக அலங்காரம்** - *சி. கோவிந்தராசனார்*

**சாதக நூல்** - *முனைவர் கா. சத்யபாமா*

**சாதக பாரிசாதம்** - *முனைவர் கா. சத்யபாமா*

**சாதக சிந்தாமணி பாகம்-1** - *முனைவர் கா. சத்யபாமா*

**குமாரசுவாமியம்** - *முனைவர் கா. சத்யபாமா*

**காலச்சக்கரம்** - *அடிகளாசிரியர்*

**காலவிதான பத்ததி** - *தேதியூர் எஸ். கிருஷ்ணசாமி சாஸ்திரிகள்*

**நட்சத்திர சிந்தாமணி -பாகம்-1, 2,** -*புலிப்பாணி சுந்தரவரதாச்சாரி*

**சகாதேவ நிமித்த சூடாமணி** -*சி. கோவிந்தராசனார்*

**சூடாமணி உள்ளமுடையான்** -*முனைவர் கா. சத்யபாமா*

**வாஸ்து வித்யை** -*தேதியூர் எஸ். கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள்*

**காலப்பிரகாசிகை** -*தேதியூர் எஸ். கிருஷ்ணமூர்த்தி சாஸ்திரிகள்*

# வேண்டுகோள்

கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள் அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும் பனை ஓலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவை பல்வேறு இடங்களில் முடங்கி உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்குமுன் சரசுவதி மகாலுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவை மக்களுக்குப் பயன்படும்.

மகாலுக்குக் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும் அழியாப்புகழை, பெருமைசால் சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின் சுவடி தந்தார் பெயர் இடம்பெறுவதோடு, அப்பதிப்பில் ஐந்து பிரதிகளும் பெறுவர்.

எனவே, நாம் பெற்ற பேறு பெறுக இவ்வையகம் என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளைச் சரசுவதி மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறேன்.

தஞ்சாவூர்

**மாவட்ட ஆட்சித்தலைவர்**
**மற்றும் இயக்குநர்**
சரசுவதி மகால் நூலகம்.